# ஸ்ரீமத் பகவத் கீதை

டாக்டர் என்.எஸ். ராமமூர்த்தி




திருமலை திருப்பதி தேவஸ்தானம்
திருப்பதி

# ஸ்ரீமத் பகவத் கீதை

டாக்டர் என்.எஸ். ராமமூர்த்தி




வெளியீடு :

செயலாட்சித்தலைவர்

திருமலை திருப்பதி தேவஸ்தானம்

திருப்பதி.

2007

**SRIMAD BHAGAVADGITAI**

*Tamil Commentary by :*

Dr. N.S. RAMAMURTHY



T.T.D. Religious Publications Series No. 734

Copies: 1,000

*Published by :*

**Sri A.P.V.N. SARMA,** I.A.S.,
Executive Officer,
T.T.Devasthanams, Tirupati.

*D.T.P. at :*

**Ads Print, Chennai.**

*Printed at :*

**T.T.Devasthanams Press,**
Tirupati - 517 507.

# பதிப்புரை

உலக மக்களைத் திருத்திப் பணி கொள்வதற்கு மகாபாரதப் போரில் கண்ணபிரான் திருவாய் மலர்ந்தருளிய ஸ்ரீமத் பகவத் கீதைக்கு இராமாநுஜர், ஆதிசங்கரர், மத்வர் ஆகியோர் விரிவுரைகளைத் தந்துள்ளனர். அவ்விரிவுரைகளை சாதாரண மக்கள் புரிந்து கொள்வது கடினமாகையாலே, அவர்கள் எடுத்தியம்பிய தத்துவ விளக்கங்கள் கையாளப்பட்ட எளிய நடையில் அனைத்து மக்களும் அறிந்துகொள்ளும் வகையில் இந்நூல் இயற்றப்பட்டு வெளிவருகிறது. குறிப்பாக படித்தவர் முதல் பாமரர் வரை இந்நூலைப் படித்து பயன்பெறலாம். இந்நூல் இதற்கு முன்பு 1992 முதல் 1999 வரை திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழான ஸப்தகிரியில் தொடர் கட்டுரைகளாக வெளியிடப்பட்டு அனைவரின் பாராட்டுதல்களையும் பெற்றது குறிப்பிடத்தக்கது. திரிவேணி சங்கமமாக சங்கமிக்கும் 'ஸ்ரீமத் பகவத் கீதை' எனும் இந்நூலை தி.தி. தேவஸ்தானம் வெளியிடுவதில் பெருமை கொள்கிறது. பக்தர்கள் அனைவரும் இந்நூலைப் படித்து கீதையால் ஆட்கொள்ளப்பட வேண்டும் என்பதே தேவஸ்தானத்தின் பேரவா.

**ஏ.பி.வி.என். சர்மா,**
செயலாட்சித்தலைவர்,
தி.தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

# பொருளடக்கம்

# முன்னுரை

தூங்கும் போது மட்டுமே மனிதன் மனிதனாக விளங்குகிறான். ஏனெனில் அப்போது தான் தன் உடலால் அவன் மற்றைய உயிர்களுக்கு நேரிடையாகவோ, மறைமுக மாகவோ ஒரு பிரச்சினையாக இருப்பதில்லை. இதுவும் ஒரு பொது இலக்கணம்தான். ஏனென்றால், தூங்கும் அவன் உயிருடன் இருப்பதே, விழித்திருக்கும் மற்ற எவர்க்கேனும் ஏதாவது ஒருவகையில் ஒரு பிரச்சனையாக இருக்கலாம்! விழித்திடும் அக்கணம் முதல், இரவு தூங்கப்போகும் வரை அவன் மற்றவர்க்கு ஒரு பிரச்சனையாக இருப்பது ஒருபுறம் இருக்கட்டும். அவனே அவனுக்கு ஒரு பிரச்சனையாக, குழப்பத்தின் மொத்த வடிவமாக இருப்பதுதான் கவலைக்குரிய ஒன்றாகும். அவனே ஒரு கேள்விக்குறியாக அமைந்திடும் போது மற்றவர்க்கு எப்படி எவ்வகையில் ஒரு பயனுள்ள உயிராகத் திகழமுடியும். இதுபோது, தான் யார், தன் கடமை என்ன, தன் பிறவியின் பயன் என்ன என்பன போன்ற கேள்விகளை எழுப்பிக் கொண்டு, அதற்கான விடைகளை அவன் காண்பதற்கு முன், அதற்கான முயற்சியை மேற்கொண்டானாகில், அதுவே அவனை மற்றையப் பிறவிகளிலிருந்து தனித்துக் காட்டும், ஏன் உயர்த்தியும் காட்டும். இவ்வாறு அவன் உயர, ஒரு சிறந்த வழிகாட்டியாக விளங்குவது 'பகவத் கீதை' யாகும்.

பகவத் கீதைக்கு சங்கரர், உடையவர், மத்வர் ஆகியோர் எழுதிய தத்துவ விளக்கங்களே ஆன்மப் பசியினைத் தீர்த்திடும்

அட்சயப் பாத்திரங்களாக என்றென்றும் விளங்கும் பெருமையுடையன. இப்பசி நமக்கு எடுக்க வேண்டுமானால் நாம் தத்துவக் கடலின் நடு ஆழத்திற்குச் செல்ல வேண்டும். ஆனால் கரையில் இருந்துக் கொண்டே கடலின் ஆழத்தைக் காண முடியாது. கடலில் குளித்தாலொழிய, அதன் தரையை அடைந்தாலொழிய கடற்களஞ்சியத்தின் அருமை பெருமைகளைக் காணவோ, அவற்றைத்துய்க்கவோ முடியாது. இவ்வகையில் கீதை எனும் பெரும் தத்துவக் கடலில், சாமான்யனான என்னால் மற்றவர்க்கு நீச்சல் கற்றுக் கொடுத்தல் என்பது ''கூரையேறி கோழி பிடிக்காதவன், வானம் ஏறி வைகுந்தம் சென்றவன்'' போலாகும். ஆகவே கரையில் இருந்து கொண்டே கடலை மட்டும் காட்ட முடியும். நீங்களும் என்னுடன் நெருங்கி இருந்தால் நா(ன்)ம் அக்கடல் நீரில் நம் கால்களைச் சற்றே நனைக்கலாம். ஆம் கீதையைப் பற்றிய இத்தொடர் கீதையைப் பற்றி ஓரளவுக்குத் தெரிந்தவர்களுக்குக் கூட அல்ல. கீதையைப்பற்றி வெறும் காதால் அறிந்தவர்களுக்கு மட்டுமேயாகும். நீரின் பயம் தெளிந்தால் நீந்துவதற்கு பயம் இருக்காது. நீச்சலைக் கற்றால், அந்நீரில் நீந்துவதுதான் எத்துணைச் சுகம்! சுகமா, சுமையா என்பது நமது முயற்சியை,ஆர்வத்தைப் பொறுத்தே அமையும்.

கண்ணில்லாத திருதராஷ்ட்ர மன்னனும், பாண்டு மன்னனும் அண்ணன் தம்பிகளாவர். இவர்களின் குமாரர்களான முறையே துரியோதனன் உள்ளிட்ட கௌரவர்களுக்கும் தருமராஜன் உள்ளிட்ட பஞ்ச பாண்டவர்களுக்கும் நாட்டு உரிமையின் பேரில் போர் ஏற்பட்டது. இப்போர் அதர்மத்திற்கும் தர்மத்திற்கும் ஏற்பட்ட போராகக் கருதப்பட்டது. குருக்ஷேத்ரம் எனும் போர்க்களத்தில் இருதரப்பு சேனையரும் எதிரெதிரே போரிடத் தயாராக இருந்தனர். இதுபோது, பஞ்ச பாண்டவர்களில் ஒருவனான அர்ச்சுனன், தன் தேரில் அமர்ந்து தன் தேரோட்டியான கிருஷ்ணனிடம் தான் போரில் எதிர்த்துப் போரிடவேண்டிய எதிர்தரப்பு சேனைத் தலைவர்கள் யாரென அறிந்து கொள்ள விருப்பமுள்ளதாகவும் அவர்களின் முன் தன்

தேரைக் கொண்டுசென்று நிறுத்துமாறு விண்ணப்பிக்கிறான். அங்கு எதிர் தரப்பில் தன்னுடன் போரிட வந்திருக்கும் கூட்டத்தில் தனக்கு வித்தைகள் பல கற்றுத் தந்த தன் ஆசிரியப் பெருமக்களையும், உற்றார் உறவினர் மற்றும் நண்பர்களைப் பார்த்து திகைத்து, அவர்களுடன் போரிட மறுத்து, வில் அம்புகளை தரையில் நழுவ விடுகின்றான். மனம் தளர்ந்து விடுகிறான். இதுபோது கிருஷ்ணன் அர்ச்சுனனுக்கு சீவாத்மா, பரமாத்மா இயல்புகளையும் அவற்றின் சங்கமத்தின் பெருமையினையும் கூறும் போது, கடமை தியாகம், கோபம் காமம், போன்றவற்றின் இயல்புகளை விரித்துக்கூறி, வாழ்க்கை இலக்கணங்களை விளக்குகின்றான். இவ்வறிவுரைகளின் தொகுப்பே கீதையாகும்.

இப் பகவத் கீதையானது வியாசர் எனும் மாமுனிவர் இயற்றிய மகாபாரதம் எனும் இதிஹாசத்தில் பீஷ்ம பர்வம் எனும் பகுதியின் கீழ் 25-வது அத்தியாயம் முதல் 42-ஆவது அத்தியாயம் வரை பதினெட்டு அத்தியாயங்களில் விளங்கிடும் பகுதியாகும். மகாபாரதம் எனும் உடலுக்கு இதயமாக கீதை விளங்குகின்றது என்பர் பெரியோர். இக்கீதையானது 700 பாசுரங்கள் எனும் செய்யுட்களைக் கொண்டு விளங்குகின்றது. இவற்றை கர்ம யோகம், ராஜயோகம், பக்தியோகம் மற்றும் ஞான யோகம் எனும் பகுதிகளாகப் பிரிக்கலாம். இப்பிரிவுகளை அரும்பு,பிஞ்சு, காய், கனி எனும் நிலைகளோடு ஒப்பிடலாம். அதாவது ஜீவாத்மாவாகிய மனிதனின் உள்ளநிலையின் பக்குவ மேம்பாட்டிற்கு ஏற்ப கீதைக் கருத்துக்கள் திகழ்கின்றன. இன்னும் விளக்கமாகச் சொல்லப் புகுந்தால் இப்பதினெட்டு அத்தியாயங்களில் முதல் ஆறு அத்தியாயங்களில் ஜீவாத்மாவின் தத்துவ நிலையை - ஜீவனாகிய மனிதனுள் அமைந்த குறைபாடுகள் அவன் இயல்புகள், திருத்திக்கொள்ள வேண்டிய அணுகு முறைகளைப் பார்க்கலாம். ஏழு முதல் பன்னிரண்டு வரை அத்தியாயங்களில் பரமாத்மாவாகிய அவ்விறைவனின் தத்துவ விளக்கங்கள் எங்கும், எதிலும், எப்போதும் பரந்து விளங்கிடும்

அவர்தம் இயல்புகள் விளக்கப்படுகின்றன. பதின்மூன்று முதல் பதினெட்டு அத்தியாயங்களான இறுதி ஆறு அத்தியாயப் பகுதியில் ஜீவாத்மா பரமாத்மா ஆகிய அதாவது மனிதனுக்கும் இறைவனுக்கும் உள்ள உறவு, அவ்வுறவு இணைய வேண்டியதன் அவசியம் விளக்கப்படுகிறது.

இனி, கீதைச் செய்யுட்களும் அவற்றின் பொருளுரைகளும் கூறப்படு கின்றன. இதனால் பொருளறிந்து ஸ்லோகங்களான அச்செய்யுட்களை தினப்படி பாராயணம் செய்ய எளிதாக அமையும். இதுவே இந்நூலின் நோக்கமுமாகும். இப் பொழிப்புரைகள் யாவும், சுவாமி சித்பவானந்தர் சுவாமிகளின் கீதை வியாக்யானத்தை மனதிற்கொண்டே எழுதப்பட்டுள்ளன.

திருப்பதி
27.8.2005

டாக்டர். என். எஸ். ராமமூர்த்தி

# தியான ஸ்லோகங்கள்

ஓம்பார்த்தாய ப்ரதிபோதிதாம் பகவதா
நாராயணனே ஸ்வயம்
வ்யாஸேன க்ரதிதாம் புராணமுனினா
மத்யே மஹாபாரதம் !
அத்வைதாம்ருதவர்ஷிணீம் பகவதீம்
அஷ்டாதசாத்யாயினீம்
அம்ப த்வாமனு ஸந்ததாமி பகவத்கீதே
பகவத் வேஷிணீம் !!

*ஓம் அன்னையே பகவத் கீதையே! அந்த பகவான் நாராயணனால், அர்ச்சுனனெனும் பார்த்தனுக்குக் கூறப்பட்டவளே! புராணக்காலத்து முனிவராம் வியாசரால் கூறப்பட்ட மகாபாரதம் எனும் இதிஹாசத்தில் இடம் பெற்றவளே! அத்வைதம் எனும் அமுதத்தைப் பொழிபவளே, பதினெட்டு அத்தியாயங்களில் இடம் பெறுபவளே, ஓ பகவதியே, உன்னயே வழிபடுகின்றோம்.*

நமோஸ்து தே வ்யாஸ விசாலபுத்தே
புல்லாரவிந்தாய தபத்ரநேத்ர
யேன த்வயா பாரததைலபூர்ண:
ப்ரஜ்வாலிதோ ஞானமய: பிரதீப:

*பேரறிவு படைத்தவரும், நன்கு மலர்ந்த தாமரை மலர் இதழ்களைப் போன்ற கண்களையுஷடயவரும் ஆகிய வியாசமுனிவரே, மகாபாரதம் எனும் எண்ணெய் நிரம்பிய ஞான தீபத்தை ஏற்றி வைத்த உங்களை வணங்குகிறேன்.*

ப்ரபன்னபாரிஜாதாய தோத்ரவேத்ரைபாணயே ।
ஞானமுத்ராய க்ருஷ்ணுய கீதாம்ருததுஹே நம: ॥

*சரணம் அடைந்தவர்களுக்கு எதனையும் வழங்கிடும் கற்பக மரம் போன்றவனும், பசுவைமேய்ப்பதற்காக ஒரு கையில்*

பிரம்பைப் பிடித்திருப்பவனும், கீதை எனும் தத்துவ அமுதத்தைக் கற்றவனும், ஞான முத்திரை தாங்கியிருப்பவனும் ஆகிய கண்ணபெருமானை வணங்குகின்றேன்.

**ஸர்வோபதிஷதோ காலோ தோக்தா கோபாலந்தன:।**
**பார்த்தோ வத்ஸ: ஸுதீர்போக்தா துக்தம்**
**கீதாம்ருதம் மஹத் ॥**

*(வேதங்களின் தேர்ந்த பகுதியாகக் கருதப்படும்) உபநிஷதங்கள் யாவும் பசுக்களாம். கண்ணபெருமான் அப்பசுக்களைக் கறப்பவனாம். பார்த்தன் கன்றுவான். பேரறிஞர்கள் அருந்துபவர்களாவர். கீதை எனும் அமுதம் ஒப்புயர்வற்ற பால் ஆகிறது.*

**வஸுதேவஸுதம் தேவம் கம்ஸசாணூரமர்த்தனம்।**
**தேவகீபரமானந்தம் க்ருஷ்ணம் வந்தே ஜகத்குரும் ॥**

*வசுதேவருடைய புத்திரனும், கம்சம் மற்றும் சாணூரன் எனும் அரக்கர்களைக் கொன்றவனும், தாயாகிய வசுதேவகிக்குப் பேரானந்தத்தைத் தருபவனும், ஜகத்குருவும், தேவனுமாகிய கிருஷ்ணனை வணங்குகிறேன்.*

**பீஷ்மத்ரோணதடா ஜயத்ரதஜலா காந்தார நீலோத்பலா**
**சல்யக்ராஹவதீ க்ருபேண வஹணீ**
**கர்ணேன வேலாகுலா ।**
**அச்வத்தாம விகர்ண கோரமகரா துர்யோதனா வர்த்தினீ**
**ஸோத்தீர்ணா கலு பாண்டவை ரணநதீ**
**கைவர்த்தக: கேசவ: ॥**

*குருக்ஷேத்ரப் போர்க்களத்தில் உள்ள ரணநதிக்குப் பீஷ்மரும் துரோணரும் கரைகளாவர்; ஜயத்ரன் அந்நதியின் நீராவான்; காந்தார மன்னன் நிவோத்பலம் எனும் புஷ்பமாவான்; சல்யன் என்பவன் சுறுமீனாவான்; கிருபன் என்போன் நதியின் ஓட்டமாவான். அசுத்தாமனும், விகர்ணனும் பயங்கரமான மகரமீன்களாவார். துரியோதனன் நதியில் விளங்கும்*

*நீர்ச்சுழலாவான். கிருஷ்ண பகவான் ஒரு படகோட்டியாக தாம் இருந்து, அந்நதி கடக்கப்படுகிறதாம்.*

பாராசர்யவச: ஸரோஜமமலம் கீதார்த்த கந்தோத்கடம்
நாநாக்யானககேஸரம் ஹரிகதாஸம்
போதனா போதிதம்
லோகே ஸஜ்ஜனஷட்பதை ரஹரஹ: பேபீயமானம்முதா
பூயாத்பாரதபங்கஜம் கலிமலப்ரத்வம்
ஸினை: ச்ரேயஸே ||

*இச்சுலோகத்தில் மகாபாரதத்தின் பெருமை பேசப்பெறுகிறது. பராசரரின் பிள்ளையாகிய வியாச முனிவரின் வாக்கு எனும் நீரில் உதித்ததும், பல கதைகளை மகாந்தமாகக் கொண்டதும்,ஹரிகதைச் சொற்பொழிவுகளால் மலர்ந்ததும், உலகத்திலுள்ள நல்லோர்கள் என்னும் தேன்வண்டுகளால் தினந்தோறும் மகிழ்ச்சியுடன் அருந்தப் பெறுவதும், கீதையின் காரணமாக நறுமணத்தை உடையதுமான, குற்றமற்ற மகாபாரதம் எனும் தாமரைப் பூவானது, கலியுகத்தில் வாழும்படியான மனிதர்களின் குறைபாடுகளைக் களைந்து நலம் விளைவிப்பதாகுக.*

மூகம் கரோதி வாசாலம் பங்கும் லங்கயதே கிரிம் |
யத்க்ருபா தமஹம் வந்தே பரமானந்த மாதவம் ||

*யாருடைய அருளானது ஊமையைக் கூடபேசவைக்கிறதோ, முடவனையும் மலையைத் தாண்டச் செய்கிறதோ, அந்த பேரானந்தச் சொரூபியான மாதவனை நான் வணங்குகிறேன்.*

யம் பிரும்மா வருணேந்திர ருத்ரமருத:
ஸ்துன்வந்தி திவ்யை ஸ்தவை:
வேதை: ஸாங்கபதக்ரமோபநிஷதைர்காயந்தியம்
ஸாமகா: |
த்யானா வஸ்திதததக்கதேன மனஸா
பச்யந்தியம் யோகினோ

**யஸ்யாந்தம் நவிது: ஸுராஸுர கணா**
**தேவாய தஸ்மை நம: ||**

*பிரம்மா, வருணன், இந்திரன், ருத்ரன் மற்றும் மருத் தேவதைகள் ஆகிய யாவரும் எவரை அழகான பாடல்களால் துதிக்கின்றார்களோ, ஸாமகானம் செய்கிறவர்கள் யாரை அங்கமும், பத்கிரமமும், உபநிஷதங்களும் கூடிய வேதங்களால் பாடுகின்றார்களோ, தவமுனிவர்கள் தங்கள் தியானத்தெளிவால் தங்கள் மனதையார்பால் மனம் லயித்து உணர்கின்றார்களோ, தேவதைகள் மற்றும் அசுரர்கள்! (இராக்கதர்கள்) யாருடைய இறுதியை அறிந்து கொள்கிறார்கள் இல்லையோ அத்தகு பெருமைமிகு இறைவனை வணங்குகிறேன்.*

# முதல் அத்தியாயம்

## அர்ஜுனவிஷாத யோகம்

### திருதராஷ்டிரரது கேள்வி

தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே ஸமவேதா யுயுத்ஸவ: ।
மாமகா: பாண்டவாஸ்சைவ கிமகுர்வத
ஸஞ்ஜய ।। (1)

*''ஓ சஞ்சயனே! தர்ம க்ஷேத்திரமாகிய குருக்ஷேத்திரத்தில் போர் செய்ய விரும்பி திரண்ட நம்மவர்களும், பாண்டவர்களும் என்னதான் செய்தார்கள்''.*

இங்கு சஞ்சய்யன் என்ற பெயருக்குப் பொருள் 'விருப்பு வெறுப்பு கடந்த நடுவு நிலை தவறாத நேர்மையாளன்' என்பதாகும். அதனால்தான் வியாசபகவான் சஞ்சய்யனுக்குப் போர்க்களத்தில் நடைபெறும் யாவற்றையும் உள்ளபடி காணும் வகையில் ஞானக்கண்ணைக் கொடுத்தருளினார். இதன் காரணமாக சஞ்சய்யன் வெகுதூரத்தில் நடைபெறும் போர்க்களக்காட்சிகளை உள்ளது உள்ளவாறு காணும் திறன் பெற்றார். ஆகவே திருதராஷ்டிரன் சஞ்சய்யனிடம் போர்க்களச் செய்திகளைக் கேட்கிறார்.

இங்குத் திருதராஷ்டிரன் ''நம்மவர்களும்'' என்று கூறுவதில் அவர்தம் பிள்ளைப்பாசமும், தன் தம்பி பாண்டுவின் பிள்ளைகளின் மீது கொண்ட வெறுப்பும் ஒரு சிறுகோடாக வெளிப்படுத்தப்படுகின்றது. மேலும், பஞ்சபாண்டவர்கள்,

அவர்கள் தம் நல்ல குணத்தால், மனம் இரங்கி நாட்டினை தன் பிள்ளைகளுக்குக் கொடுத்துவிட்டார்களா என்ற நப்பாசையும் திருதராஷ்டிரன் மனத்தில் ஒட்டியுள்ளது சற்றே தெரிகின்றது.

## சஞ்சய்யன் கூறியது

போர்க்களத்தில் கௌரவர்களும் பாண்டவர்களும் அணிவகுத்திருப்பதைக் கீழ்வரும் பத்தொன்பது செய்யுட்களில் சஞ்சய்யன் திருதராஷ்டிரனுக்குக் கூறுகிறான்.

**திருஷ்ட்வா து பாண்டவானீகம்**
**வ்யூடம் துர்யோதனஸ்ததா ||**
**ஆசார்யமுபஸங்கம்ய ராஜா**
**வசனமப்ரவீத் || (2)**

'அரசனாகிய துரியோதனன், பாண்டவர்களுடைய படையைப் பார்த்ததும், தன் ஆசார்யரான துரோணரைப் பார்த்து கீழ்வருமாறு கூறுகிறான்'.

துரியோதனன் என்றால் 'எளிதில் வெல்லமுடியாதவன்' என்று பொருளாகும். ஆனால் எதிரியின் படையைப் பார்த்ததும், அவனையறியாமல் அவன் உள்ளுக்குள் சற்றே கலக்கம் அடைகிறான். ஏனெனில் முறைதவறி தன் சகோதரர்களின் அரசை அடையும் அவன் நெஞ்சத்தைக் காட்டுவதால். அதனால்தான் எதிரியின் படையைப் பார்த்ததும், அதனை வெல்லுவதற்குரிய வழியை தன் படையின் தலைவராகிய பீஷ்மரிடம் சென்று தெரிவித்து, அதற்கான முயற்சியை மேற்கொள்ளாது தன் எதிரிகளுக்கு வித்தை சொல்லிக்கொடுத்தவரும், தனக்கு குருவுமான துரோணரைக் காண்கிறான். மறைமுகமாக, கற்றவித்தையால்தானே பாண்டவர்கள் தைர்யமாக தன்னுடன் போர் செய்யவந்திரு க்கிறார்கள் என்று, வித்தைக் கற்றுத் தந்த துரோணரை மனதிற்கொண்டு, அவரைக்காண வருகின்றான்.

**பச்யைதாம் பாண்டுபுத்ராணுமாசார்ய**
**மஹதீம் சமூம் |**

**வ்யூடாம் த்ருபதபுத்ரேண தவ**
**சிஷ்யேண தீம்தா ॥ (3)**

*'குருவே, உமது சிஷ்யனும், துருபதன் மகனுமாகிய அவ்வீரனால் அணிவகுக்கப்பட்டிருக்கும் இப்பெரிய பாண்டவப்படையைப் பாருங்கள்.'*

*(இச்செய்யுளில் எதிரிப்படையைப் பார்த்ததனால் ஏற்பட்ட துரியோதனனின் மனக்கலக்கத்தைப் பார்க்கலாம். இதுவே அவனுடைய தோல்வியை இனம் காட்டுகிறது.)*

**அத்ர சூரா மஹேஷ்வாஸா**
**பீமார்ஜுனஸமாயுதி ।**
**யுயுதானோ விராடஸ்ச த்ருபதஸ்ச**
**மஹாரத: ॥ (4)**

*''எதிரியான பாண்டவப்படையில் சிறந்த வீரர்களாகவும் தேர்ந்த வில்லாளிகளாகவும், போரில் பீமனுக்கும் அர்ச்சுனனுக்கும் நிகரான வீரமுடைய யுயுதானனும், விராடநாட்டு அரசனும், துருபதநாட்டு மன்னராக மகாரதனும் பங்கேற்று உள்ளார்கள்''.*

**த்ருஷ்ட கேதுஸ் சேகிதான:**
**காசிராஜஸ்ச வீர்யவான் ।**
**புருஜித் குந்திபோஜஸ்ச**
**சைப்யஸ்ச நரபுங்கவ: ॥ (5)**

*'திருஷ்டகேதுவும், சேகிதானனும், வீரத்தில் சிறந்த காசி மன்னனும், புருஜித் என்பானும், குந்திபோஜனும், மனிதருள் மேன்மைமிக்க சைபியன் என்பவனும் (இப்படையில் அணிவகுத்துள்ளனர்)'.*

**யுதாமன்யுஸ்ச விக்ராந்த**
**உத்தமௌஜாஸ்ச வீர்யவான் ।**
**ஸௌபத்ரோ த்ரௌபதேயாஸ்ச**
**ஸர்வ ஏவ மஹாரதா: ॥ (6)**

*'பேராற்றல் பெற்ற யுதாமன்யுவும், வலிமை பொருந்திய உத்தமௌஜஸ் என்பவனும், சுபத்ரையின் மகனும்,*

திரௌபதியின் பிள்ளைகளும் இப்படையில் ஒன்று சேர்ந்திருக்கின்றனர். அணியில் பங்கேற்றுள்ள அனைவரும் மகாரதர்களாவர்'.

*(இங்கு மகாரதர் என்று குறிப்பிட்டது, அவர்கள் ஒவ்வொருவரின் ஆற்றலைக்குறிப்பதாகும். அதாவது ஒவ்வொருவரும் தன்கீழ் பதினோராயிரம் விற்போர் புரியும் வீரர்களை நடத்திச்செல்லும் ஆற்றல் உடையவர்கள் என்று பொருளாகும்.)*

**அஸ்மாகம் து விசிஷ்டா யே**
**தாந்நிபோத த்விஜோத்தம ।**
**நாயகா மம ஸைன்யஸ்ய ஸம்ஞார்த்**
**தம் தான் ப்ரவீமி தே ॥** (7)

'மிகச்சிறந்த அந்தணரே, நம் படையில் இருக்கும் ஆற்றல் மிக்கவர்களையும் தெரிந்துகொள்ளுங்கள். என்னுடைய படையில் இருக்கும் தலைவர்களைப் பற்றி நீங்கள் அறியும் பொருட்டு, நான் அவர்களைப் பற்றிக் கூறுகிறேன். கேளும்''.

*(தனக்குத்தானே தைரியம் அளிக்கும் பொருட்டே, தன் படைத்தலைவர்களின் ஆற்றலை எல்லாம் தெரிந்த தன் குருநாதரிடமே துரியோதனன் கூறுகிறான் என்றே நாம் எண்ண வேண்டும்).*

**பவான் பீஷ்மஸ்ச கர்ணஸ்ச**
**க்ருபஸ்ச ஸமிதிஞ்ஜய: ॥**
**அச்வத்தாமா விகர்ணஸ்ச**
**ஸௌமதத்திர்ஜயத்ரத: ॥** (8)

*(துரோணராகிய)* தாங்களும், பீஷ்மரும், கர்ணனும், போர்க்களத்தில் வெற்றியின் மறுஉருவமாக விளங்கிடும் கிருபாசாரியாரும், அச்வத்தாமாவும், விகர்ணனும், சோமதத்தன் பிள்ளையாகிய பூரிசிரவஸூம், ஜயத்ரதனும் *(என்படையில்)* இருக்கின்றீர்கள்.

*(இச்செய்யுளில் சேனைத்தலைவரான பீஷ்மருக்கு முன்பாக துரோணரை வைத்து அழைத்தும், துரோணரின் மைத்துனரான*

*கிருபாசாரியாரை வெற்றியின் மறுஉருவம் என்று புகழ்ந்தும், தன் குருநாதரை பலவாறு மறைமுகமாக புகழ்ந்தும், தன் குருவை தன்னுடன் மேலும் இணைத்துக் கொள்ள துரியோதனன் முயற்சிக்கிறான்.)*

**அன்யே ச பஹவ: சூரா மதர்த்தே**
**த்யக்த ஜீவிதா: ।**
**நானாசஸ்த்ரப்ரஹரணா: ஸர்வே**
**யுக்தவிசாரதா ॥** (9)

மேலும் எல்லோரும் எனக்காகத் தங்கள் உயிரையும் கொடுக்கத் துணிந்தவர்களும், பலவகையான ஆயுதங்களையும் (ஆற்றல் பெற்ற) அம்புகளையும் உடையவர்களும், போரில் மிகத்தேர்ச்சிபெற்ற பல வீரர்களும் என்படையில் இருக்கின்றனர்.

**அபர்யாப்தம் ததஸ்மாகம்**
**பலம் பீஷ்மாபிரக்ஷிதம் ।**
**பர்யாப்தம் த்விதமேதேஷாம் பலம்**
**பீமா பிரக்ஷிதம் ॥** (10)

(நமது சேனைத்தலைவரான) பீஷ்மரின் கீழ் இருக்கும் நமது படை பரந்து அளவுகடந்து உள்ளது. பீமன் தலைமையில் இருக்கும் அவர்களின் (எதிரிகளின்) படையோ கட்டுக் கடங்கி உள்ளது.

*(துரியோதனனின் இக்கூற்றிலிருந்து தன் படை எண்ணிக்கையில் அதிகமாயிருந்தும் அது கட்டுப்பாடற்றதாக உள்ளது என்பது தெளிவாகிறது. மேலும் இவன் கூற்றிலிருந்தும் நாம் உணர்வது கட்டுப்பாடு கொண்ட எந்த ஒரு சமுதாயமும், அமைப்பும் ஆற்றலும் திறமையும் கொண்டு விளங்கும் என்பதாகும்.)*

**அயனேஷு ச ஸர்வேஷு**
**யதாபாகமவஸ்திதா: ।**
**பீஷ்மமேவாபிரக்ஷந்து பவந்த:**
**ஸர்வ: ஏவ ஹி ॥** (11)

*'படைப்பிரிவுகள் யாவும் தங்களுக்குரிய இடங்களில் நின்று கொண்டு, எல்லோரும் பீஷ்மரையே காப்பாற்றுங்கள்'*

*(இக்கூற்றிலிருந்து தானும் தன் படையும், தன் வெற்றியும் பீஷ்மரைச் சுற்றியே உள்ளது என்பதை அவன் எண்ணுகின்றானோ என்ற சந்தேகம் எழுகின்றது.)*

**தஸ்ய ஸஞ்ஜனயன் ஹர்ஷம்**
**குருவ்ருத்த: பிதாமஹ: ।**
**ஸிம்ஹநாதம் விநத்யோத்சை:**
**சங்கம் தத்மௌ ப்ரதாபவான் ॥** (12)

*'ஆற்றல் படைத்தவரும், குருகுலத்தில் அதிக வயது கொண்டவருமான பாட்டனார் (பீஷ்மர்) துரியோதனனுக்கு உற்சாகத்தை ஊட்ட உரக்க சிம்மநாதத்தை எழுப்பி, சங்கை ஊதினார்.*

*(எதிரிகள் பக்கம் உள்ள ஆற்றல் மிக்கோரைக் கண்டு, ஒரு கணம் உள்ளத்தில் கலக்கம் கொண்ட துரியோதனனின் மனநிலையை கருத்திற்கொண்டு, அவனுக்கும் மற்றைய படைப்பிரிவுகளின் தலைவர்களுக்கும் போர் வெறி ஏற்படும் வகையில் பிஷ்மர் சங்கொலித்து போர் மூள இடம் வகுத்தார்.)*

**தத: சங்காஸ்ச பேர்யஸ்ச**
**பணவானக கோமுகா: ।**
**ஸஹஸைவாப்ய ஹன்யந்த ஸ**
**சப்தஸ்துமுலோஸ்பவத் ॥** (13)

*பிறகு சங்குகளும், பேரிகைகளும், தாரைத் தப்பட்டைகளும், பறைகளும், கொம்புகளும் திடீரென ஒலித்தன. அதனால் அக்களத்தில் பேரொலி ஒன்று எழும்பியது.*

**தத: ச்வேதைர்ஹயைர்யுக்தே மஹதி**
**ஸ்யந்தனே ஸ்திதௌ ।**
**மாதவ: பாண்டவஸ்சைவ திவ்யௌ**
**சங்கௌ ப்ரதத்மது: ॥** (14)

*பின்னர் வெள்ளைக்குதிரைகள் பூட்டிய சிறப்புமிக்க தேரில் அமர்ந்திருந்த மாதவனும் (கிருஷ்ணனும்) பாண்டவனும்*

தங்களுடைய புனிதமிக்க சங்குகளை உரத்து ஒலிக்கச் செய்தார்கள்.

(மாதவன் என்ருல் திருமகளின் தலைவன் என்று பொருளாகும். பஞ்சபாண்டவரில் யார் ஒருவனும் பாண்டவன் என்றே அழைக்கப்படுகின்றனர். இங்கு பாண்டவன் என்பது அர்ச்சுனனைக் குறிக்கிறது.)

பாஞ்சஜன்யம் ஹ்ருஷீகேசோ
தேவதத்தம் தனஞ்ஜய: ।
பௌண்ட்ரம் தத்மௌ மஹாசங்கம்
பீமகர்மா வ்ருகோதர: ।। (15)

'ஹ்ருஷீகேசன் (கிருஷ்ணன்) பாஞ்சஜன்யம் எனும் சங்கினை ஊதினான். தனஞ்ஜயன் (அர்ச்சுனன்) தேவநத்தம் எனும் சங்கினை ஒலித்தான். அரும்பெரும் செயல்களை புரிபவனாகிய பீமன் பௌண்ட்ரம் என்றபெரிய சங்கினை ஊதினான். (ஐம்புலன்களை அடக்கியாளும் தலைவனாக இருப்பதில் கிருஷ்ணனுக்கு ஹ்ருஷிகேசன் என்ற பெயராகும். ஐம்புலன்களை அடக்குபவன் தான் நினைத்ததை முடிப்பவனாக இருப்பான். கலந்துகொண்ட போர்களில் எதிரிகளின் செல்வத்தை எல்லாம் வென்றவன் அர்ச்சுனன் ஆனதால், அவனுக்கு தனஞ்ஜயன் என்ற பெயராகும். ஒநாய் எனும் பிராணிகளுக்கு இருப்பது போன்ற ஒட்டிய வயிறு உடையவன் பீமன் என்பதால் அவனுக்கு வ்ருகோதரன் என்ற பெயர். அதாவது பீமன் எதையும் எளிதில் ஜீர்ணித்துக்கொள்ளும் ஆற்றல் உடையவன் என்று பொருளாகும். நல்ல ஜீரண ஆற்றல் உடையவன், நினைத்ததை நினைத்த வண்ணம் செய்து முடிக்கும் ஆற்றல் உடையவர்களாக விளங்குவார்களாம்).

அனந்தவிஜயம் ராஜா குந்தீபுத்ரோ
யுதிஷ்டிர: ।
நகுல: ஸஹதேவஸ்ச ஸுகோஷமணி
புஷ்பகௌ ।। (16)

*'குந்தியின் பிள்ளையான யுதிஷ்டிரன் (தர்மராஜன்) அனந்த விஜயம் எனும் சங்கினையும், நகுலன் மற்றும் சகாதேவனும் முறையே சுகோஷம் மற்றும் மணிபுஷ்பகம் எனும் சங்குகளையும் ஊதினார்கள்.*

**காச்யஸ்ச பரமேஷ்வாஸ: சிகண்டி**
**ச மஹாரத: |**
**த்ருஷ்டத்யும்னோ விராடஸ்ச**
**ஸாத்யகிஸ்சாபராஜித: ||** (17)

*'விற்போரில் தலைசிறந்த காசிமன்னனும், சிறந்த வீரனாகிய சிகண்டியும், விராட நாட்டு மன்னனான திருஷ்டத்யும்னனும் மற்றவர்களால் வெல்லமுடியாத சாத்யகியும் சங்கு ஊதினார்கள்'*

*(இங்கு சிகண்டி என்ற பெயர் வருகிறது. சிகண்டி என்றால் முகத்தில் மீசை இல்லாதவன் என்று பொருளாகும். இவன் பேடியாகத் தோற்றத்தில் தென்படுவதால் இவன் போரில் பீஷ்மருக்கு முன் நிற்க, அவர் அவனுடன் போர் புரியாது வாளா இருந்து தோற்கும்படியாயிற்று. திருஷ்டத்யும்னன் என்றால் எவராலும் எதிர்க்க முடியாத ஆற்றலுடையவன் என்பதாகும்.)*

**த்ருபதோ த்ரௌபதேயாஸ்ச**
**ஸர்வச: ப்ருதிவிபதே |**
**ஸௌபத்ரஸ்ச மஹாபாஹு: சங்கான்**
**தத்மு: ப்ருதக் ப்ருதக் ||** (18)

*நாடாள்பவனே! துருபதனும், (திரௌபதியின் தந்தை) திரௌபதியின் பிள்ளைகளும், பெருந்தோள்களையுடையவனாகிய சுபத்திரையின் மகனும் ஆக எல்லோரும் தங்களுடைய சங்குகளை ஊதினார்கள்.*

*(இங்கு 'நாடாள்பவனே' என்று கௌரவர்களின் தந்தையான திருதராஷ்டிரன் அழைக்கப்படுகிறான். அதாவது ஒரு நாட்டில் அமைதியோ, போரோ அது அந்நாட்டை ஆளும் மன்னனின் போக்கினைக் கொண்டே அமையப்பெறுவதால், இப்பாரதப்போர் திகழ அரசனே மறைமுகக் காரணமாக இருப்பதாக நமக்குத் தெரிவிக்கப்படுகிறது.)*

ஸ கோஷோ தார்த்தராஷ்ட்ராணாம்
ஹ்ருதயானி வ்யதாரயத் ।
நபஸ்ச ப்ருதிவீம்சைவ துமுலோ
வ்யநுநாதயன் ।। (19)

*(போர்க்களத்தில் எழுப்பப்பட்ட அச்சங்கொலிகளின்)* பெருமுழக்கமானது விண்ணிலும் மண்ணிலும் எதிரொலிக்கச் செய்தது. *(மேலும் அவ்வொலி)* திருதராஷ்டிரனின் சேனைப்ப டைகளின் நெஞ்சங்களை இருகூறுகப் பிளக்கச்செய்தது.

*(போரின் காரணமே கௌரவர்களின் மண்ணாசையால் வந்ததாகும். அதனால் ஏற்பட்ட அதர்மத்தின் நடுக்கம் தங்களது நெஞ்சத்தில் நிழலாடுவதால் தங்களுடைய சேனையைவிட குறைந்த அளவே கொண்ட பாண்டவர்களின் பக்கம் எழுப்பப்பட்ட சங்கொலி முழக்கமானது, பலர் கொண்ட கௌரவர்களின் படைவீரர்களின் பக்கம் பெரும் கலக்கத்தை ஏற்படுத்தியது.)*

அத வ்யவஸ்திதான்த்ருஷ்ட்வா
தார்த்தராஷ்ட்ரான் கபித்வஜ: ।
ப்ரவ்ருத்தே சஸ்த்ரஸம்பாதே
தனுருத்யம்ய பாண்டவ: ।।
ஹ்ருஷீகேசம் ததா வாக்ய
மிதமாஹ மஹீபதே । (20)

*'மன்னனே, அப்பக்கத்திலுள்ள குரங்குக் (அனுமன் உருவம் கொண்ட) கொடியுடையவனாகிய அர்ச்சுனன், போர் செய்ய தயாராக இருந்த திருதராஷ்டிரனின் சேனையைப் பார்த்து, அம்புகளை விடுக்கும்முன் கையில் வில்லை எடுத்துக் கொண்டு, கிருஷ்ணனுக்குக் கீழ்வருமாறு விண்ணப்பி க்கின்றான்.*

ஸேனையோருபயோர்மத்ய ரதம்
ஸ்தாபய மேஸ்ச்யுத ।। (21)
யாவதேதாந்நிரீ க்ஷேஸ்ஹம்
யோத்துகாமான வஸ்திதான் ।

கைர்மயா ஸஹ யோத்தவ்யமஸ்மின்
ரண ஸமுத்யமே ।। (22)

*அர்ச்சுனன் அச்சுதனை விளித்து இரண்டு படைகளு க்குமிடையே என் தேரை நிறுத்துக. இந்தப்போரில் நான்யாரை எதிர்த்துப்போரிடவேண்டும் என்பதையும், போர்விரும்பி எதிரணியில் முன் நிற்பார்கள் யார் யார் என்பதை அறியவும் விரும்புகிறேன்.*

*(இங்கு அச்சுதன் என்று திருமாலுக்கு ஒரு பெயர். அதாவது தனது பெருமைமிக்க உயர்ந்த நிலையிலிருந்து சற்றும் இறங்காதவன் என்று பொருளாகும்.)*

யோத்ஸ்யமானான வேக்ஷேஸ்ஹம்
ய ஏதேஸ்த்ர ஸமாகதா: ।
தார்த்தராஷ்ட்ரய்ய துர்புத்தேர்யுத்தே
ப்ரியசிகீர்ஷவ ।। (23)

*கெட்ட அறிவுடைய துரியோதனனை மகிழ்ச்சியூட்டும் வகையில் போர்புரிய இப்போர்க்களத்திற்குத் திரண்டு வந்திருப்போரை நான் காணவேண்டும் (என்று அர்ச்சுனன் கூறுகிறுன்).*

*(மனத்தத்துவ முறையில் ஒருவன் அளவுக்குமீறிய ஆர்வம் காட்டினால் விரைவில் அவன் சோர்வடைய வாய்ப்புண்டு என்று கூறப்படுகிறது. இவ்வகையில் அர்ச்சுனனும் தன் எதிரிகளைக் காண வேண்டும் என மிக்க ஆர்வம் கொள்கிறுன். இதுவே சிறிது நேரத்தில் கைகளிலிருந்து ஆயுதம் நழுவும் வகையில் அவனுள் மனத்தளர்ச்சி உருவாக வழி வகுக்கின்றது)*

## சஞ்சய்யன் கூறியது

ஏவமுக்தோ ஹ்ருக்ஷீகேசோ
குடாகேசேன பராத ।
ஸேனயோருபயோர்மத்யே
ஸ்தாபயித்வா ரதோத்தமம் ।। (24)

பீஷ்மத்ரோணப்ரமுகத:
ஸர்வேஷாம் ச மஹீக்ஷிதாம் ।
உவாச பார்த்த பச்யைதான்
ஸமவேதான் குரூனிதி ।। (25)

*திருதராஷ்டிரரே, குடாகேசனால் (அர்ச்சுனன்) இவ்வாறு கூறப்பட்ட ஹிருஷிகேசர் இரண்டு படைப் பிரிவுகளிடையில், பீஷ்மர் மற்றும் துரோணர் ஆகியோர்க்கு எதிரிலும், மற்றைய எல்லா அரசர்களுக்கு எதிரிலும், மேன்மைமிக்க தேரை இடை நிறுத்தி ''பார்த்தா, இங்குக் கூடியிருக்கும் கௌரவர்களின் சேனையைப் பார்'' என்று கூறினார்.*

*(இங்கு அர்ச்சுனனுக்கு குடாகேசன் எனும் மற்றொரு பெயர் கூறப்படுகிறது. குடாகேசன் என்றால் தூக்கத்தை வென்றவன் என்று பொருளாகும். அதாவது அர்ச்சுனனால் அவன் நினைத்தபோது தூங்கவும் விழித்திருக்கவும் முடியுமாம்.*

*மனத்தை அடக்கி ஆள்பவன் எந்நிலையிலும் குழப்பமோ, கலக்கமோ அடையமாட்டான். அத்தகு மனப்பக்குவத்தை, மன உறுதியை கொண்ட அர்ச்சுனனே கலங்கும்படியான ஓர் பெரிய போராட்டம் வரப்போகிறது என்பதை அர்ச்சுனனுக்கு உணர்த்தவே இங்கு அர்ச்சுனன் குடாகேசன் என்ற பெயரால் குறிக்கப்பெறுகிறான்.)*

தத்ராபச்யத் ஸ்திதான் பார்த்த:
பித்ரூனத பிதாமஹான் ।
ஆசார்யான் மாதுலான் ப்ராத்ரூன்
புத்ரான் பௌத்ரான் ஸகீன் ஸ்ததா ।।
ச்வசுரான் ஸுஹ்ருதஸ்சைவ
ஸேனயோருபயோரபி ।। (26)

*அங்கே (போர்க்களத்திலேயே) இரண்டு படைகளிலும் இருக்கும் தந்தையரையும், பாட்டன்மாரையும், குருமார்களையும், தாய்வழி மாமன்மார்களையும், அண்ணன் தம்பிகளையும், பிள்ளைகளையும், பேரன்மார்களையும் நண்பர்களையும் அவன் (அர்ச்சுனன்) பார்த்தான்.*

**தான்ஸமீக்ஷ்ய ஸ கௌந்தேய:**
**ஸர்வான் பந்தூனவஸ்திதான் ||**
**க்ருபயா, பரயாஸ்விஷ்டோ**
**விஷீத்ன்னிதமப்ரவீத் | (27)**

*குந்தியின் பிள்ளையான அர்ச்சுனன், தன் முன் நிற்கின்ற உறவினர்கள் எல்லோரையும் உற்றுப்பார்த்துப் பெரும்கருணை கொண்டவனாய், கவலையுடன் இவ்வாறு கூறினான்.*

*(பாண்டுவின் பிள்ளை என்று கூறுது, குந்தியின் பிள்ளை என்று கூறுவதன் மூலம், ஒரு தாயின் இரக்க குணமான பேதமை உணர்ச்சி அவனுள் தோன்றிவிட்டது. இது வரை அவனுள் இருந்த பகையை உணர்ச்சி மறைந்து பாச உணர்ச்சி தலை தூக்குகிறது. இது அவனுடைய ஆற்றலையோ, திறமையையோ குறிக்காது. அறியாமை எனும் இருளில் அவன் புகத்தொடங்கி விட்டான் என்றுதான் கொள்ள வேண்டும். இதுவே மனிதனின் வீழ்ச்சிக்கு வழி வகுக்கின்றது.)*

## அர்ச்சுனனது மனத்தடுமாற்றம்

**த்ருஷ்ட்வேமம் ஸ்வஜனம் க்ருஷ்ண**
**யுயுத்ஸும் ஸமுபஸ் திதம் ||**
**ஸீதந்தி மம காத்ராணி**
**முகம் ச பரிசுஷ்யதி || (28)**

## அர்ச்சுனன் கூறியது

*கிருஷ்ணு, போர் செய்வதற்காக இங்குக் கூடியுள்ள உற்றார் உறவினர்களைப் பார்த்தவுடன் என் உடல் உறுப்புக்கள் சோர்வடைகின்றன. என் வாயும் வறண்டு விட்டது.*

*(இங்கு கிருஷ்ணன் என்ற சொல்லுக்கு மூன்று பொருள்கள் உள்ளன.*

1. *கருநீல நிறமுடையவன்*
2. *கிருஷ்- சத்: ண - ஆனந்தம்- அதாவது - சச்சிதானந்த - பிரம்ம சொரூபம்.*
3. *பக்தர்கள்படும் துயரத்தைக் களைபவன்.*

**வேபதுஸ்ச சரீரே மே ரோமஹர**
**ஷஸ்ச ஜாயதே ||**
**காண்டீவம் ஸ்ரம்ஸதே ஹஸ்தாத்**
**த்வக்சைவ பரிதஹ்யதே | (29)**

என் உடம்பில் நடுக்கமும், மயிர்ச்சிலிர்ப்பும் தோன்றுகின்றன. என் கையிலுள்ள காண்டீவம் (வில்) நழுவுகிறது. உடம்பின் தோலும் எரியும் உணர்வு பெறுகின்றது.

**ந ச சக்னோம்யவஸ்தாதும் ப்ரமதீவ**
**ச மே மன: ||**
**நிமித்தானி ச பச்யாமி**
**விபரீதானி கேசவ || (30)**

கேசவா (கிருஷ்ணா) என்னால் பூமியின் மீது நிற்க முடியவில்லை. மனமானது சுழல்கின்றது. தீமை தரும் சகுனங்களையும் பார்க்கின்றேன்.

(இங்கு கிருஷ்ணன் கேசவா என்று குறிக்கப்பெறுகின்றான். கேசவா என்றால் கேசி என்ற அரக்கனைக் கொன்றவன் என்றும், அழகான கேசத்தை (மயிற்கட்டினை) உடையவன் என்றும், மும்மூர்த்திகளின்(க-பிரம்மா, அ- விஷ்ணு,ஈச-ருத்திரன்) இருப்பிடமாக இருப்பவன் என்றும் பொருள் உண்டு.)

சகுனம் என்பதில் இந்துக்களுக்கு அதிக நம்பிக்கையுண்டு. எடுக்கும் முயற்சி கைக்கூடுமா, கூடாதா என்பதை தன்னைச்சுற்றி நடக்கும் இயற்கை காட்டும் நிகழ்ச்சிகளை சகுனமாகக் கொள்வர். ஆனால் போர்க்களத்திலோ, தேர்வுக்கூடத்திலோ கடமையினை மேற்கொள்வர் சகுனங்களைப் பார்த்தால் விளைவுகள் தீமை பயக்கும்.

''எண்ணித்துணிக கருமம்; துணிந்தபின் துவள்வது துயரத்தின் துவக்கம்'' என்பதை அறிய வேணடும். இங்குப் போர்க்களத்தில் அர்ச்சுனனுக்குச் சகுனங்கள் தெரிவது, அவனது மனக்கலக்கத்தின் விளைவாகும். மனக்கலக்கம் போர்க்களத்தில் சிறிதும் பொருந்தா உணர்வாகும்.

**ந ச ச்ரேயோஸ்னு பச்யாமி**
**ஹத்வா ஸ்வஜனமாஹவே ||**

**ந காங்க்ஷே விஜயம் க்ருஷ்ண**
**ந ச ராஜ்யம் ஸுகானிச ||** (31)

*கிருஷ்ணா, போரிலே உற்றார் உறவினரைக் கொல்வதில் நான் சிறிதும் நன்மையைக் காணவில்லை. வெற்றியோ, அரச பதவியோ, இன்பங்களோ எனக்குத் தேவையில்லை.*

*(உற்றார் உறவினரைக் கண்டவுடன் அதனால் ஏற்பட்ட உறவுமாயையின் விளைவாக இந்த விரக்திமிக்க சொற்களைக் கூறுகின்றான் அர்ச்சுனன். அதனால் தான் ஏதோ பற்றற்றவனாக வேதாந்தம் பேசுகின்றான். இது கடமையினின்றும் பொறுப்பிலிருந்தும் நழுவும் மனப்பான்மையைத் தெரிவிக்கிறது.)*

**கிம் நோ ராஜ்யேன கோவிந்த கிம்**
**போகைர் ஜீவிதேன வா ||**
**யேஷாமர்த்தே காங்க்ஷிதம நோ**
**ராஜ்யம் போகா: ஸுகானி ச ||** (32)

**த இமேஸ்வஸ்திதா யுத்தே**
**ப்ராணும் - ஸ்த்யக்த்வா தனானி ச ||** (33)
**ஆசார்யா: பிதா: புத்ராஸ்ததைவ ச**
**பிதா மஹா: |**
**மா துலா: ச்வசுரா: பௌத்ரா:**
**ஸ்யாலா: ஸம்பந்தினஸ்ததா ||** (34)

*கோவிந்தா, யார் ஒருவர் மகிழ்ச்சிக்காக நாட்டையும், சுகங்களையும், இன்பங்களையும் விரும்புகிறோமோ, அவர்களாகிய குருமார்கள், தந்தையர், பிள்ளைகள் பாட்டன்மார்கள், தாய் மாமன்கள், மாமனார், பேரர், மைத்துனர், சம்பந்திகள் எனும் எல்லா உறவு வகையினரும் தங்கள் உயிரைப் பொருட்படுத்தாமல், உடைமைகளை விட்டவராய், இப்போர்க்களத்தில் நம் எதிரே உள்ளனர். ஆகவே இந்நிலையில் நாடோ, அரச பதவியோ, சுக போகங்களோ, நம் உயிரோ நமக்கு எவ்விதத்தில் பயன் தரும்?*

*(இங்கு கிருஷ்ணன் கோவிந்தன் என்று அழைக்கப்படுகிறான். அதாவது பசுக்கூட்டத்திற்குத் தலைவன், உயிர்களை அறிபவன்,*

சொற்களின் இருப்பிடம் என்று பலவாறு பொருள் கொள்ளலாம். அதாவது நடக்கவிருக்கும் போர்க்கள முடிவினை அவன் ஒருவன்தான் அறிந்திருக்க முடியும் என்பதாகும்.)

**ஏதான்ன ஹந்துமிச்சாமி**
**க்னதோபி மதுஸுதன ।**
**அபி த்ரைலோக்யாராஜ்யஸ்ய**
**ஹேதோ: கிம் நு மஹீக்ருதே ॥** (35)

மதுசூதனா, இப்போரில் நான் கொல்லப்படினும், இம் மூவுலகையும் ஆண்டு அனுபவிக்க வேண்டுமென்று இவர்களைக் கொல்வேனா? மண்ணுசைக்காக நான் இப்பாவத்தில் ஈடுபடுவேனா?

(மது என்ற அரக்கனைக் கொன்றதால், கிருஷ்ணனுக்கு மதுசூதன் என்ற பெயர் வந்தது.)

**நிஹத்ய தார்தராஷ்ட்ரான்ந:கா ப்ரீதி:**
**ஸ்யாஜ்ஜனார்த்தன ॥**
**பாபமேவாச்ரயேதஸ்மான்**
**ஹத்வைதானாததாயின: ॥** (36)

ஜனார்த்தனா, திருதராஷ்ட்டிரனது பிள்ளைகளைக் கொல்வதில் நமக்கு என்ன பயன் இருக்கப் போகிறது? இந்த ஆததாயிகளைக் கொல்வதால் நமக்குப் பாவம்தான் வந்து சேரும்.

(பொருள், வீடு எனும் பேறுகளை அடைவதற்காக பக்தர்களால் வணங்கப்படுவதால் கிருஷ்ணனுக்கு ஜனார்த்தனன் என்று பெயர். இங்கு ஆததாயினர் எனும் சொல் கையாளப்பட்டுள்ளது. ஆததாயினன் என்றால் மாபெரும் ஏழு பாவங்களைச் செய்தவன் என்று பொருளாகும். அதாவது வாழும் வீட்டிற்குத் தீயிடல், உண்ணும் உணவில் விடம் இடல், வாள்கொண்டு கொல்லப்பாய்தல், மற்றவருடைய பொருளை, நிலத்தை அல்லது மனைவியை திருடவும் கைப்பற்றவும் முயற்சித்தல் ஆகிய பாவங்கள் கொடுமையாகக் கூறப்படுகின்றன. கௌரவர்கள் இத்தகு பாவங்களை

*சாதாரணமாக செய்து வருபவர்கள். இத்தகு பாவங்கள் செய்யும் ஆததாயி, நல்ல கற்ற அறிஞனாக இருந்தாலும் அவனைக் கொல்லுதலே நன்று என்று கூறப்படுகிறது. ஆனால் கருணை உள்ளம் கொண்ட அர்ச்சுனன் கௌரவர்களைக் கொல்ல மனம் இசையவில்லை.)*

**தஸ்மாந்நார்ஹா வயம் ஹந்தும்**
**தார்தராஷ்ட்ரான் ஸ்வபாந்தவான் ।**
**ஸ்வஜனம் ஹி கதம் ஹத்வா ஸுகின**
**ஸ்யாம மாதவ ॥** (37)

*ஆகவே நம் உறவினர்களாகிய திருதராஷ்டிரனது பிள்ளைகளைக் கொல்வது நமக்குத் தகாது. மாதவ! உற்றார் உறவினர்களைக் கொன்று நாம் மகிழ்ச்சியுடன் விளங்குவது எவ்வாறு?*

*(பொருளுக்காகவும், பதவிக்காகவும் பெற்றவர்களையே பகைத்துக்கொள்ளும், ஏன்கொல்லவும் துணியும் மனிதர்கள் இம்மண்ணில் உள்ளனர். அவர்கள் ஒருகணம் தன் பிள்ளைகளால் தங்களுக்கும் தான் பெற்ற பிள்ளைகளே ஒருவருக்கொருவர் அழித்துக் கொள்ளும் அவலம் ஏன் ஏற்படாது என்பதைச் சற்றே சிந்தித்தால் அங்கு பாசத்திற்கும் அன்பிற்கும் பொருள் இருக்கும்.)*

**யத்யப்யேதே ந பச்யந்தி**
**லோபோபஹத'சேதஸ: ।**
**குலக்ஷயக்ருதம் தோஷம்**
**மித்ரத் ரோஹே ச பாதகம் ॥** (38)

**கதம் ந ஜ்ஞேய மஸ்மாபி:**
**பாபாதஸ்மாந்நிவர்திதும் ।**
**குலக்ஷயக்ருதம் தோஷம்**
**ப்ரபச்யத்பிர் ஜனார்தன ॥** (39)

*ஆசைமிகுதி காரணமாக மதி இழந்த கௌரவர்கள் குல நாசத்தில் விளையும் தீமைகளையும், நட்பு துரோகத்தால் விளையும் தீமைகளையும் ஆராய்ந்து பார்க்காவிட்டாலும், குலநாசத்தால் உண்டாகும் தீய விளைவுகளை நன்கு அறிந்த*

*நாமும் ஏன், ஜனார்தனா, இப்போரில் பங்கேற்கும் பாவத்தை மேற்கொள்ள வேண்டும்?*

*(பொருளாசையால் கௌரவர்கள் உற்றுரை அழிக்க போரில் முன்னேறவும், உறவினர் பாசத்தால் போரிலிருந்து பின் வாங்கவும் செய்கின்றனர். இரு கூட்டத்தாருமே மயங்குவது மனித வாழ்க்கையின் போக்கைக் கோடிட்டுக்காட்டுகிறது.)*

**குலக்ஷயே ப்ரணச்யந்தி**
**குலதர்மா: ஸநாதனா: ।**
**தரமே நஷ்டே குலம்**
**க்ருத்ஸ்னமதர்மோபிபவத்யுத ॥ (40)**

*குலம் அழிந்தால் என்றுமுள்ள அறப்பண்புகள் அழிகின்றன. அறம் அழிவதால் குலம் முழுவதும் அதர்மம் எனும் தீப்பண்புகளால் சூழப்படுகிறது.*

**அதர்மாபிபவாத்க்ருஷ்ண**
**ப்ரதுஷ்யந்தி குலஸ்த்ரிய: ।**
**ஸ்த்ரீஷு துஷ்டாஸு வார்ஷ்ணேய**
**ஜாயதே வர்ணஸங்கர: ॥ (41)**

*அதர்மம் அதிகமாவதால் குலப்பெண்கள் தங்கள் கற்புநிலை இழக்கின்றனர். கிருஷ்ணா, பெண்கள் கற்பிழக்கும் போது, அங்கே வர்ணக் கலப்பு உண்டாகின்றது.*

**ஸங்கரோ நரகாயைவ குலக்நானாம்**
**குலஸ்யச ।**
**பதந்தி பிதரோ ஹ்யேஷாம்**
**லுப்தபிண்டோகக்ரியா: ॥ (42)**

*கலப்பினால் குலத்தார்க்கும், அதனை அழிப்பார்க்கும் நரகமே கிடைக்கின்றது. அவர்களுடைய முன்னோர்கள் பிண்டத்தையும் நீரையும் இழந்து விடுகின்றனர்.*

*(மரணமடைந்தவர்கள் சிறிது காலம் மேலுலகத்தில் இருப்பதாகக் கூறப்படுகிறது. அங்கு அவர்களைக் குறித்து*

*மண்ணுலகத்தில் எண்ணப்படும் நற்சிந்தனையானது இறந்தவர்களுக்குப் பெரிதும் துணையாக இருப்பதாகக் கருதப்படுகிறது. அதனால் அவர்தம் பாவங்களின் வீர்யம் சற்றே குறைவதாகவும் நம்பப்படுகிறது. இறந்தவர்களைப் பற்றி நினைக்கப்படும் நற்சிந்தனையானது. பிண்டம், நீர் போன்ற பொருட்களைக் கொண்டு தெரிவிக்கப்படுகிறது. மேலும் மண்ணில் உள்ளோரில் ஒருசிலரது நல்வாழ்த்துக்களும் இறந்தவர்க்குப் பயன்பட வேண்டுமென்று, ஏழைகளுக்கும் மற்றவர்க்கும், சிரார்த்தம் (நீத்தார் நினைவுச் சடங்குகள்) எனப்படும் சமயச் சடங்கின் போது உணவும், தானமும் அளிக்கப்படுகிறது. இச்செய்கை ஒருவரது மகிழ்ச்சியும், அமைதியும் மற்றவரது அன்பிலும், மகிழ்ச்சியிலும் மறைமுகமாக ஆதாரப்படுகிறது என்பது தெரிவிக்கப்படுகிறது.)*

**தோஷை ரேதை: குலக்நானாம்**
**வர்ணஸங்கரகாரகை: ।**
**உத்ஸாத்யந்தே ஜாதிதர்மா:**
**குலதர்மாணச சாச்வதா: ॥** (43)

குலத்தைக் கெடுக்கும் மனிதர்களால் செய்யப்படும் வர்ணக் கலப்பினால் ஏற்படும் இக்கேடுகளால் போற்றப்படவேண்டிய ஜாதி தர்மங்களும், குல தர்மங்களும் அழிந்துபோகின்றன.

**உத்ஸன்ன குலதர்மாணும்**
**மனுஷ்யானாம் ஜனார்தன ।**
**நரகே நியதம் வாஸோ**
**பவதீத்யனுசுச்ரும ॥** (44)

ஜானார்த்தனா, குலதர்மத்தை இழந்தவர்கள் நரகம் எனும் கொடிய உலகத்தில் அதிக காலம் தங்குகின்றனர் என்று சொல்லக்கேட்டிருக்கிறோம்.

**அஹோ பத மஹத்பாபம் கர்த்தும்**
**வ்யவஸிதா வயம் ।**
**யத்ராஜ்யஸுகலோபேன ஹந்தும்**
**ஸ்வஜன முத்யதா: ॥** (45)

*நாடாளும் ஆசையினால், உற்றார் உறவினரை அழிக்கத்துணிதல் என்றபெரும் பாவத்தை மேற்கொள்ள துணிந்து விட்டோம்: ஐயோ!*

**யதி மாமப்ரதீகாரமசஸ்திரம்**
**சஸ்த்ரபாணய: ।**
**தார்தராஷ்ட்ரா ரணே ஹன்யுஸ்**
**தன்மே க்ஷேமதாரம் பவேத் ॥** (46)

*எதிர்க்கும் எண்ணம் இன்றி, கையில போர் ஆயுதமும் இன்றி இருக்கும் என்னை, கையில் கருவி ஏந்தி திருராஷ்ட்டிரரின் பிள்ளைகள் போரில் கொன்றால் அதுவே எனக்கு மிக்கப் பயனுள்ளதாக அமையும்.*

## சஞ்சய்யன் கூறியது

**ஏவமுக்த்வார்ஜுன, ஸங்க்யே**
**ரதோபஸ்த உபாவிசத் ।**
**விஸ்ருஜ்ய ஸசரம் சாபம்**
**சோகஸம் விக்ன மானஸ ॥** (47)

*இவ்வாறு கூறி, அம்பையும் வில்லையும் போர்க்கள மண்ணில் எறிந்துவிட்டு, கவலைகொண்ட உள்ளத்தனாய் அரச்சுனன் தேர்த்தட்டில் உட்கார்ந்தான்.*

**இதிஸ்ரீமத்பகவத்கீதாஸூபநி**
**ஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்**
**யோகசாஸ்த்ரே ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன**
**ஸம்வாதே**
**அர்ஜுனவிஷாதயோகோ நாம**
**ப்ரதமோத்யாயம் ॥**

*பிரம்மவித்தையை அறிவிப்பதும், யோகசாஸ்திரமானதும், ஸ்ரீகிருஷ்ணன் மற்றும் அர்ச்சுனன் ஆகியோர்க்கு இடையே நடைபெறும் உரையாடலாக விளங்கப்பெறுவதுமான பகவத் கீதை என்னும் உபநிஷத்தின் கண் 'அர்ச்சுன விஷாத யோகம்' எனும் முதல் அத்தியாயம் இத்துடன் முடிவுற்றது.*

*(முதல் அத்தியாயம் முற்றிற்று)*

# இரண்டாம் அத்தியாயம்

## ஸாங்க்கிய யோகம்

### சஞ்சய்யன் கூறியது:

தம் ததா க்ருபயாSSவிஷ்டம
ச்ருபூர்ணாகுலேக்ஷணம் ।
விஷீதந்தமிதம் வாக்யமுவாச
மதுஸூதன: ॥ (1)

*''அதுபோன்று கருணைமிகுந்து, கண்களில் நீர்மறைக்க, பார்வை தடைபட கவலைப்பட்ட அர்ஜுனனுக்கு, மதுசூதனன் கீழ்வரும் வார்த்தைகளைக் கூறினார்''.*

*(இவ்வரிகள், பாசம் எனும் வலையுள் அகப்பட்டு, தடுமாற்றம் எனும் உணர்ச்சிக்குப் பலியான அர்ச்சுனனது மனநிலையை படம் பிடித்துக் காட்டுகின்றன.)*

### ஸ்ரீ கிருஷ்ணபகவான் கூறியது

குத்ஸ்த்வா கச்மலமிதம் விஷமே
ஸமுபஸ்திதம் ॥
அனார்யஜுஷ்டமஸ்வர்க்யம
கீர்த்திகரமர்ஜுன ॥ (2)

'அர்ச்சுனா, ஆரியனுக்குச் சிறிதும் பொருந்தாததும், சுவர்க்கத்தை தடுப்பதும், புகழைக் கெடுப்பதுமான இந்த உள்ளச் சோர்வானது, இந்த நெருக்கடியான (போர் புரியக் கூடிய) சூழ்நிலையில் எப்படி உன் மனதில் தோன்றியது'?

(இப்பொழுதுதான் முதன்முதலாக பகவான் வாய் திறந்து பேசியுள்ளார். இந்தச் செய்யுளிலும், அடுத்து வரும் செய்யுளிலும் கீதையின் அடிப்படைத் தத்துவம் கோடிட்டுக் காட்டப்படுகிறது. எந்த ஒரு சிறந்த நூலும், அந்நூலின் அடிப்படைக் கொள்கை, நீதி, பாடம் ஆரம்ப நிலையிலேயே காட்டப்படும் இலக்கணத்தைப் பெற்றிருக்கும். ஆம் குழம்பிய மனம் எதையும் சாதிக்காது என்பது இச்செய்யுட்களில் குறிப்பிடப்படுகிறது. மனக் குழப்பத்தின் பின்னணியில் கூறும் வார்த்தைகளுக்கும் எடுக்கும் செயல்களுக்கும் சிறிதும் பயன் இருக்காது. ஆகவேதான் போர்க்களத்தில் உற்ருர் உறவினரைக் கண்டவுடன் மனம் தளர்ந்து இது வரை அர்ச்சுனன் பேசிய பேச்சுக்களை 'கச்மலம்' அதாவது வெறும் குப்பை என்று பகவான் கூறுகிருர். மனத் தடுமாற்றம் இருப்பவன் வாழ்க்கையில் இன்பமோ, அமைதியோ, புகழோ வந்தமையாது. இத்தகு மனக்குழப்பம் உடையவன் ஆரியன் ஆகான் என்று பகவான் கூறுகிருர்.

இங்கு 'ஆரியன்' என்ற சொல்வருகிறது. இந்தச் சொல் நம் சாஸ்திரங்களில் பல இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஆனால் 'ஆரியன்' என்பது ஒரு குறிப்பிட்ட ஜாதியையோ, இடத்தையோ குறிப்பதாக எங்கும் கூறப்படவில்லை என்பது சிந்தித்தற்குரியது. சிறந்த பண்பாடும், சீரிய வாழ்க்கையும் கொண்டவன் எவனோ அவனே ஆரியன் எனப்படுகிருன். தரும வழியில் நடப்பவன் ஆரியனாகிருன். அத்தகுபெருமை பெற்றவர்களே ஆரியன் ஆவர். அதாவது ஆரியன் என்ருல் உயர்ந்தவன் என்ற பொருளாகும், எவரும் எக்காலத்தும் 'ஆரியன்' ஆகலாம். இங்கு அர்ச்சுனன், பண்பட்ட மனத்தினின்று இழிந்து, மனத் தடுமாற்றம் அடைவதால் அது ஆரியனுக்குரிய பண்பாடாகாது என்று பகவான் கூறுகிருர்.)

க்லைப்யம் மா ஸ்ம கம: பார்த்த
நைதத்த்வய்யுபபத்யதே ।
க்ஷுத்ரம் ஹ்ருதயதௌர்பல்யம்
த்யக்த்வோத்திஷ்ட பரந்தப ॥ (3)

*பார்த்தா (அர்ச்சுனா) அலியின் இயல்பை கொள்ளாதே. அது உனக்குச் சிறிதும் சரியாகாது. பகைவர்களை கலக்குபவனே! உள்ளத்தில் ஏற்பட்டுள்ள இழிவான உன் தளர்ச்சியினை விட்டு எழுந்திருப்பாய்!''*

*(போர்க்களத்தில் அர்ச்சுனனின் உள்ளத்தில் குடிகொண்டுள்ள மனத் தளர்ச்சியினைக் களைவதற்காக கண்ணன் அர்ச்சுனனை ஆண்மையை இழந்த அலி என்று இழித்து அழைக்கின்றான். வீரனான அர்ச்சுனன் உள்ளத்தில் எந்த வகையிலும் குழப்பமோ, தளர்வோ ஏற்படக்கூடாது என்பதுதான் கிருஷ்ணனின் கருத்தாகும். இதன் மூலம் கூறப்படுவது யாதெனின் ஒருவனின் ஆத்மாவானது எந்த நிலையிலும் பலவீனப்படக்கூடாது என்பதுதான். உடல் உறுதி, உள்ளத்தின் தெளிவு, ஆத்ம சக்தி ஆகியன சேர்ந்து இருப்பதின் பொறுத்தே ஒருவனின் வெற்றி நிச்சயிக்கப்படுகிறது.)*

## அர்ச்சுனன் கூறியது.

கதம் பீஷ்மமஹம் ஸங்க்யே
த்ரோணம் ச மதுஸூதன ।
இஷுபி: ப்ரதியோத்ஸ்யாமி பூஜார்
ஹாவரி ஸூதன ॥ (4)

*''எதிரிகளை அழிப்பவரே! மதுவைக் கொன்றவரே! வணங்குதற்குரிய பீஷ்மரையும், துரோணரையும், நான் எவ்வாறு போரில் எதிர்த்து, அம்புகளால் தாக்குவேன்?''*

*(''பகைவர்களை அழிப்பதால் தவறு ஒன்றும் இல்லை. ஆனால் உறவினரும், மரியாதைக்குரியவருமான என் பாட்டனார்களை நான் எதிர்த்துப்போர் செய்தால், எனக்கு தீராத அவப்பெயர் அல்லவா கிடைக்கும்'' என்பதே அர்ச்சுனனின் பயம். இந்த உணர்வை இச்செய்யுளில் நாம் காணலாம்.)*

குரூன ஹத்வா ஹி மஹாநுபாவான்
ச்ரேயோ போக்தும் பைக்ஷ்யம பீஹ லோகே ।
ஹத்வாடர்த்தகாமாம்ஸ்து குரூனிஹைவ
புஞ்ஜீய போகான்ருதிரப்திக்தான் ॥ (5)

*''உயர்ந்த குணங்களையுடைய குருமார்களைக் கொல்வதை விட்டு இந்த உலகத்தில் கையேந்தி பிச்சை எடுத்து உண்பதே மிகச் சிறந்ததாகும். ஆனால், ஆசார்யர்களான பெரியோரைக் கொன்றால் ரத்தம் தோய்ந்த பொருளையும், போக உணர்வுகளையும் இப்பிறவியிலேயே அநுபவிக்கும் இழிநிலைக்குள்ளாவேன்''.*

*(ஒழுக்கத்திலும் குணத்தாலும் கல்வியாலும் உயர்ந்த மேன்மக்களுக்குக் கெடுதி செய்வதன் மூலம், ஒருவனுக்கு ஏற்படுவது இன்பமல்ல, வாழ்க்கை முழுவதும் அனுபவிக்கும்படியான துயரவாழ்க்கைதான் என்று கூறப்படுகிறது.)*

ந சைதத்வித்ம: கதரந்நோ கரீயோ
யத்வா ஜயேம யதி வா நோ ஜயேயு: ।
யாநேவ ஹத்வா ந ஜிஜீவிஷாம
ஸ்தேடவஸ்திதா: ப்ரமுகே தார்தராஷ்ட்ரா: ॥ (6)

*'' (இப்போரில்) நாம் இவர்களை (கௌரவர்களை) வெல்வது அல்லது அவர்கள் நம்மை வெற்றிக் கொள்வது, ஆகிய இவ்விரண்டில் எது நன்மை பயக்கும் என்பது விளங்க வில்லை. எவரைக் கொன்றபின் நாம் உயிர்வாழ விரும்ப மாட்டோமோ, அந்த திருதராஷ்ட்டிரக் கூட்டத்தைச் சார்ந்த கௌரவர்கள் போரில் நம்முடன் போரிட இங்கு நம் முன் நின்று கொண்டுள்ளனர்''*

கார்பண்யதோஷோபஹதஸ்வபாவ:
ப்ருச்சாமி த்வாம் தர்மஸம்மூடசேதா: ।
யச்ச்ரேய: ஸ்யாந்நிஸ்சிதம் ப்ரூஹி தன்மே
சிஷ்யஸ்தேடஹம் காதி மாம் த்வாம்
ப்ரபன்னம் ॥ (7)

''சிற்றின்பம் நாடுவதில் மதிகொண்டு அலைந்து, தற்போது நான் நல்லியல்புகளை இழந்து, நல்வழி தெரியாது மயங்கி இப்போது உன்னை நாடுகின்றேன். எனக்குச் சிறப்பு செய்யும் வழிமுறையைக் கூறவும், நான் உனது தொண்டன், உன்னையே பணிந்துள்ளேன். எனக்கு உபதேசித்து அருளவும்''.

(இச்செய்யுளில் 'கார்ப்பண்ய தோஷம்' என்ற சொல் வருகின்றது. அதாவது, ஏதாவது ஒரு சூழ்நிலையில் ஏற்படும் இடையூறுகளின் காரணமாக மனத்தளவில் தளர்வும் துயரமும் ஏற்பட அதனால் உள்ளம் வறண்டு விடுகிறது. இதற்கு 'கார்ப்பண்ய தோஷம்' என்று பெயர்.

இதுவரை அர்ச்சுனன், 'பிரேயஸ், எனப்படும் கலைச்சிறப்பு, செல்வம்,மனைவி, நாடு, புகழ், மக்கள் ஆகியன தரும் மயக்கத்தில் மூழ்கியிருந்தான். இதனின்று விடுபட்டால்தான் அவன் 'சிரேயஸ்' எனும் உள்ளச் சிறப்புக்கு உள்ளாவான். அதற்கான பக்குவத்தை அர்ச்சுனன் பெறவே, கிருஷ்ணன் விரும்பினான். ஆகவேதான், பெற்ற புகழும், வீரமும், பதவியும் தனக்கு ஒரு தெளிந்த தேர்ந்த வழிகாட்ட முடியாத போது தடுமாறிய நிலையில் அவன் கிருஷ்ணனை சரணடைகிறுன். மயக்கம் ஒழிந்த நிலையில்தான் மனிதனுக்கு, நல்லது கெட்டதைப் பிரித்தறிந்து, தெளிந்த மனநிலையை பெறமுடியும். ஆம் பகவத் கீதையை அறிந்து தெளிய, அதைப் படிப்பதற்குமுன் மனத்தைக் குழப்பமில்லாததாகக் கொண்டு தூயதாக்கி வைத்துக் கொள்ளவேண்டும் 'என்பதே இச்செய்யுளிலிருந்து நாம் பெற வேண்டிய ஒரு செய்தியாகும்.)

ந ஹி ப்ரபச்யாமி மமாபனுத்யாத்
யச்சோக முச்சோஷணமிந்த்ரியாணும்
அவாப்ய பூமாவஸபத்னம்ருத்தம்
ராஜ்யம் ஸுராணுமபி சாதிபத்யம் ॥ (8)

''உலகத்தில் ஒத்துமை இல்லாததும், பேறுகள் பல தரவல்லதுமான நாடாளும் உரிமையைப் பெற்றிடினும், தேவர்களுக்குத் தலைவனாக இருந்திடினும், அவையாவும், என் (ஐம்) புலன்களால் பெறப்படும் துன்பத்தைத் தீர்த்திடும் என்று கருதவில்லை''.

டம் கூறுகின்றான். உனக்கு என்ன மனக்கவலை என்று ஒரு தாய் கேட்கும் விதத்தில், 'உன் மனத்தளர்வுக்கு காரணம் என்ன?' என்று பரிவுடன் அர்ச்சுனனைப் பார்த்து கிருஷ்ண பகவான் கேட்டவுடன், தன்னுடன் எல்லா வகையிலும் உறவுகொண்டுள்ள பகவானிடம் தன் மனக் குமுறல்களை யெல்லாம் வெளிக்காட்டுகிறான். இது சரணாகதி தத்துவத்தின் ஒரு வெளிப்பாடு).

## சஞ்சய்யன் கூறியது

ஏவமுக்த்வா ஹ்ருஷீகேசம் குடாகேச:
பரந்தப:।
ந யோத்ஸ்ய இதி கோவிந்த
முக்த்வா தூஷ்ணீம் பபூவ ஹ ॥ (9)

''பகைவர்களை சாம்பலாக்கிடும் குடாகேசனாகிய அர்ச்சுனன், ஹ்ருஷிகேசனாகிய கோவிந்தனுக்கு இவ்வாறு கூறிப் 'போர்செய்யமாட்டேன்' என்று அறிவித்துப் பேசாது இருந்து விட்டான்'.

தமுவாச ஹ்ருஷிகேச: ப்ரஹஸன்னிவ பாரத ।
ஸேயனயோருபயோர்மத்யே விஷீதந்தமிதம் வச: ॥ (10)

''திருதராஷ்ட்டிரரே, இரண்டு படைகளுக்குமிடையில் மனத்தளவில் துன்பம் அடைந்துள்ள அர்ச்சுனனுக்கு புன்னகை புரிந்தவாறே, ஹ்ருஷீகேசன் (கிருஷ்ண பகவான்) கீழ்வரும் சொற்களைக் கூறலானார்''.

(இச்செய்யுளில், திருதராஷ்ட்டிரர், பரத வம்சத்தில் பிறந்தவர் என்று குறிப்பிடப்படுகிறார். இந்தியா பரதன் எனும் மன்னன் ஆட்சியில் இருந்ததால் அது 'பாரதம்' என்று அழைக்கப் பெற்றது. கண்ணபெருமான் புன்னகை புரிந்து பதில் அளிப்பதாகக் கூறப்படுகிறது. இம்மையில் (இப்பிறவியில்) பயன் தரும் உலாகாயுத ஆசைகளிலிருந்தும், பற்றுகளிலிருந்தும் சிறிதே தன்னை விடுவித்துக் கொண்டு, மறுமைக்கு உயர்வு தரும் யோகம், ஞானம் எனும் உயர் நெறிக்கு வழிகாட்டக்கூடிய வகையில் மனப்பக்குவம் பெறுதற்குறிய நிலையை அர்ச்சுனன் பெற்று விட்டான் என்பதை அறிந்தே பரமாத்மா, அதைப் பாராட்டும் வகையில் புன்னகை பூக்கின்றார்.)

## பகவான் கூறியது

அசோச்யானன்வசோசஸ்த்வம்
ப்ரக்ஞாவாதான்ஸ்ச பாஷஸே ।
கதாஸூனகதாஸூன்ச்ச
நானுசோசந்தி பண்டிதா: ॥ (11)

*''கவலைப்படாதவர்களை நினைத்து நீ கவலைப்படுகின்றாய். பேரறிஞர்களைப் போன்றும் பேசுகின்றாய். இறந்தவர்களை நினைத்தோ, இருப்பவர்களைப் பார்த்தோ பண்டிதர்கள் (அறிஞர்கள்) கவலைப்படுவதில்லை.''*

*(''இச்செய்யுளில் அறிஞன் எனும் பொருளில் 'பண்டிதன்' என்னும் சொல் வருகின்றது. அறிஞன் என்றால் மொத்தம் படித்தவன் என்று பொருளாகும். ஆனால் கிருஷ்ண பகவானின் கருத்தில் அறிஞன் என்றால் இயற்கையை உள்ளது உள்ளவாறு அறிந்தவன் என்றாகிறது. அதாவது மாயையினின்று விடுபட்டு, பிறப்பு இறப்பு தத்துவத்தை நன்கு அறிந்தவனாகிறான். இச்செய்யுளில் அர்ச்சுனன் பேசும் போது ஒரு ஞானியாக தன்னைக் காண்பித்துக் கொள்கிறான். ஆனால் உற்றார் உறவினர் மரணத்தைப் பற்றி அவன் துன்பப்படுகிறான். ஆம் மனம், மொழி, மெய் ஒன்றித்த மனப்பக்குவமோ, யோக நிலையோ அர்ச்சுனன் பெறவில்லை என்பதைக் கண்ணன் சுட்டிக் காட்டுகிறான்.)*

ந த்வேவாஹம் ஜாது நாஸம் ந தவம்
நேமே ஜனாதிபா: ।
ந சைவ ந பவிஷ்யாம: ஸர்வே
வயமத: பரம் ॥ (12)

*''முன்பு நானோ, நீயோ இவ்வரசர்களோ இவ்வுலகில் எப்போதாவது இல்லாமல் இருந்ததில்லை. இந்த உடம்புகள் அழிந்தாலும், நாம் இல்லாது போகமாட்டோம்''.*

*(இச்செய்யுளில் உயிர்களின் உடம்பு அழிந்தாலும் அவற்றுள் உறையும் ஆத்மாவுக்கு எந்த நிலையிலும் எந்த காலத்திலும் இறப்பில்லை என்று உணர்த்தப்படுகிறது.)*

**தேஹினோऽஸ்மின்யதா தேஹே கௌமாரம்**
**யௌவனம் ஜரா ।**
**ததா தேஹாந்தரப்ராப்திர்தீரஸ்த்த்ர**
**ந முஹ்யதி: ॥** (13)

"ஆத்மாவுக்கு எவ்வாறு இவ்வுடல் மூலமாக இளமையும், அழகும், வயோதிகமும் உண்டாகிறதோ, அதே போன்று வேறு ஒரு உடம்பும் அதற்கு வந்தமைகிறது. ஆனால், ஞானியர் இம்மாற்றத்தைக் கண்டுதன்னை ஒரு போதும் இழக்க மாட்டார்".

(இச்செய்யுளில் நாம் பெறப்படுவது, மாற்றங்கள் உடலுக்கே அன்றி அதனுள் உறையும் ஆத்மாவுக்கு இல்லை என்பதாகும்)

**மாத்ராஸ்பர்சாஸ்து கௌந்தேய**
**சீதோஷ்ண ஸுகது:கதா: ।**
**ஆகமாபாயினோऽநித்யாஸ் தாம்ஸ்**
**திதிக்ஷஸ்வ பாரத ॥** (14)

"குந்தியின் புதல்வனே, (ஐம்) பொறிகளும் (ஐம்) புலன்களிடத்தும் சார்ந்திருப்பதால், குளிரும், உஷ்ணமும், இன்பமும், துன்பமும் போன்றன உண்டாகின்றன. தோன்றுதல், மறைதல், போன்ற நிலையாமை அவற்றின் இயற்கையான இயல்பாகும். பாரதா! அவற்றைப்பொறுத்துக் கொள்".

(மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற உறுப்புகளாகிய ஐம்பொறிகளின் வழியாக முறையே தொடு உணர்ச்சி, வெளி உலகில் உலவும் வடிவம், சுவை, மணம், ஒலி போன்றவற்றை அனுபவிக்கின்றோம். இதுபோது அந்த ஐம்பொறிகளின் வழியாகப் பெறப்படும் இன்பமும், துன்பமும் அனுபவமும் சூழ்நிலைக்கேற்ப மாறுபடுகின்றன. மழைக்காலத்தில் உணரப்படும் குளிர், துன்பம் தரும் போது, வெய்யில் காலத்தில் அதுவே இன்பத்தைத் தருகின்றது. ஆகவே ஐம்பொறி அனுபவங்கள் நிலையானவை அல்ல. இதனை எதிர்பார்த்து, அவ் அனுபவங்களை ஒரு நிலையாகக் கொண்டு ஓர்

*உணர்வாகக் கொண்டு பொறுமையுடன் இருப்பவனே ஞானி ஆகின்றான்).*

**யம் ஹி ந வ்யதயந்த்யேதே**
**புருஷம் புருஷர்ஷப ।**
**ஸமது:கஸுகம் தீரம் ஸோ஽ம்ருத-**
**த்வாய கல்பதே ॥** (15)

*''சிறந்தவனே! யார் ஒருவன் இவைகளினால் இன்னல்கள் பெறாமல் இருக்கின்றானோ, இன்ப துன்பங்களை! ஒன்றாக ஏற்றுக் கொள்கிறானோ, ஷன்' என்னும் சொல்லுக்குப்பொருள் உடல் எனும் புரியிலே வாழ்பவன் என்றாகும். ஐம்பொறிகளினால், உலகத்தை அனுபவிப்பதில் அதனால் துன்பங்களையும் பெறவும் வழிவகுக்கப்படுகிறது. உடலுக்கு முக்கியத்துவம் தருபவன் அத்துன்பங்களை அனுபவிக்கவும், இன்னலுறவும் செய்கின்றான். ஆனால், இன்ப துன்பங்களைக் கண்டு துவளாமல், அமைதியான ஒரு நிலையை அவன் பெறுவானேயானால், அதனால் தெளிவு பெறவும், பேரறிவும் அடைவான். அவனே இறவாநிலையாகிய முக்திக்குத் தகுதியுடையவனாகின்றான். நம்மை நாமே திருத்திக் கொண்டு, உயர்வு பெற்று, பேரறிவு உடையவர்களாக விளங்கவே நாம் மனிதர்களாக இம்மண்ணில் பிறந்துள்ளோம்.)*

**நாஸதோ வித்யதே பாவோ**
**நாபாவோ வித்யதே ஸத: ।**
**உபயோரபி த்ருஷ்டோ஽ந்தஸ்த்வன**
**யோஸ்தத்வதர்சிபி ॥** (16)

*'இல்லாத ஒன்றுக்கு இருப்பு என்று ஏதும் இல்லை. இருக்கும் ஒன்று இல்லாமல் போவதும் இல்லை. உண்மையை நன்கு உணர்ந்தவர் மட்டுமே இவ்விரண்டினுடைய முடிவையும் அறியும் ஆற்றல் உடையவராவர்.'*

*(இருப்பதைத் தங்களுக்கு சாதகமாக்கிக் கொண்டு வாழ்வதே வாழ்க்கையாகும். வெய்யில் காலத்தில் ஆற்று நீர் வற்றிவிடும். அப்போது பரந்த ஆற்றில் நீரானது ஓர் ஓடையாகத் தெரியும்.*

அவ்வோடையை அடுத்த இருபக்கங்களும் நனைந்த பூமியாக இருக்கும். ஆனாலும் அப்பூமியைப் பயிர்த்தொழில் செய்ய பயன்படுத்திக் கொள்ள முடியாது. ஏனெனில், நாளை மழை வரும் போது ஆற்றில் கரைபுரண்டு வெள்ளம் வழிந்தோடக்கூடும். ஆகவே நாளை பயன்படாத அப்பூமி இன்றும் (அது பயன்பட்டாலும்) பயனற்றதாக விளங்கி விடுகிறது. அதுபோல, நனைந்த பூமியாக இந்த உடலை நினைக்கின்றனர், தத்துவ ஞானிகள். அது நிலையற்றது.

நிலையற்ற அந்த உடலால் வரும் இன்ப துன்பங்களைக் கண்டு மயங்காது இருக்கவேண்டும். ஆனால் அந்த உடலில் மறைந்துள்ள ஆத்மாவோ உண்மையானது. நிலையானது. (உணர்வுகளை உடையது)

**அவிநாசி து தத்வித்தி யேன**
**ஸர்வ மிதம் ததம்: ।**
**விநாச்மவ்யயஸ் யாஸ்ய ந**
**கஸ்சித்கர் துமர் ஹதி: ॥** (17)

'உலகமெல்லாம் பரந்து விரிந்துள்ள பொருளுக்கு முடிவு என்பது இல்லை. அது அழிவதில்லை. அழிக்கமுடியாத அதனை எவராலும் அழிக்க முடியாது'.

(ஆகாயத்தில் தோன்றும் மேகங்களால் அவ்ஆகாயம் எந்த நிலையிலும் பிரியாது. அதாவது பிளவுபடாது. அது போன்று அறிவு ஒளியில் எந்த வகையிலும் பிரிவுகள் ஏற்படா.)

**அந்தவந்த இமே தேஹா நித்யஸ்**
**யோக்தா சரீரிண: ।**
**அநாசிநோऽப்ரமேயஸ்ய தஸ்மாத்**
**யுத்யஸ்வ பாரத ॥** (18)

''நிலையானதும், அழிவற்றதும், அளவிடமுடியாததுமான ஆத்மாக்களைக் கொண்ட இவ்வுடல்கள் மட்டுமே அழியும் இயல்பைக் கொண்டவையாகும். ஆகையால் பாரதா (அர்ச்சுனா) போர் செய்க''

*(ஆவியாகவும், நதிகளாகவும், பனிக்கட்டிகளாகவும் இடம் மாறக்கூடிய நீரினை உடையது கடல் ஒன்றுதான். ஆத்மா அதுபோல, தன் நிலைமாறுது. ஆகவே அது நிலையானது. குட்டையில் உள்ள நீர் ஆவியாக, அதனால் குட்டையானது வற்றி, தன் நிலை கெடுகின்றது. பின் மறைவதால் அழிந்து விடுகின்றது. அதுபோல், ஆத்மாவை கொண்ட உடலுக்கு இறப்பு மற்றும் எரித்தல், புதைத்தள் காரணமாக அழிவு வரலாம். ஆனால் உடலுள் உள்ள ஆத்மாவுக்கு அழிவு இல்லை. உடலை அதன் மனத்தைக் கொண்டோ, அறிவைக் கொண்டோ, மற்றொரு உடலுடன் ஒப்பிட்டோ அளந்து விடலாம். ஆனால் அதனுள் உறையும் ஆத்மாவை மனம் மொழிகளால் எடைபோட முடியாது. ஆகையால் அது அளவைக் கடந்தது)*

**ய ஏனம் வேத்தி ஹந்தாரம்**
**யஸ்சைனம் மன்யதே ஹதம்: ।**
**உ பௌதௌ ந விஜாநீதோ**
**நாயம் ஹந்தி ந ஹன்யதே: ॥** (19)

*'ஆத்மா ஒரு கொலைகாரன் என்றோ, கொலை செய்யப்படு வான் என்றோ கூறும் இருவர்க்கும் ஒன்றும் தெரியாது. ஏனெனில் ஆத்மா கொலை செய்வதும் இல்லை. கொலையாவதும் இல்லை'.*

*(பதவி வெறிப்பிடித்தவனின் பதவி பறிபோகும் போது, அவன் ''நான் ஒழிந்தேன்'' என்று கூவிப் புலம்புகின்றான். பதவி அவனது இயல்பாகாது. தன் ஆசை அழியும் போது, தான் அழிந்து விட்டதாகக் கருதுகின்றான். தன்னுடையது எனும் போது அது மமகாரம் என்றழைக்கப்படுகிறது. அந்த மமகாரமே அதிகமாகும் போது, அதுவே அவனுடைய ஆணவமாக மாறுகின்றது. அழியும் தன் உடலை 'தான்' என்று அழைத்துக் கொள்வது அவனது ஆணவத்தைக் காட்டும். உடல் அழிந்தாலும் அதனுள் இருக்கும் ஆத்மாவின் எழுச்சிக்கு அழிவு கிடையாது. அது நிலையானது. கருமேகங்கள் மறைந்தாலும், அதன்பின் இருக்கும் ஆகாயம் எப்படி மறைவதில்லையோ, அது போன்று உடல் அழிந்தாலும் அதனுள் இருக்கும் ஆத்மாவுக்கு மறைவு இல்லை, அழிவும் இல்லை.)*

**ந ஜாயதே ம்ரியதே வா கதாசிந்**
**நாயம் பூத்வா பவிதா வா ந பூய: ।**
**அஜோ நித்ய: சாச்வதோ஽யம் புராணோ**
**ந ஹன்யதே ஹன்யமானே சரீரே ॥ (20)**

'' இந்த ஆத்மாவுக்கு ஒருபோதும் பிறப்பு என்பது இல்லை. அது போன்றே இறப்பு என்பதும் இல்லை. மேலும் ஆத்மாவானது முன்பு எப்போதாவது இல்லாது இருந்து பிறகு இப்போது பிறந்தது இல்லை. (அதுபோன்றே இருந்து, பிறகு இறந்து போனதன்று) (ஆகையால்) ஆத்மாவுக்குப் பிறப்பில்லை, மரணம் இல்லை, குறைவு இல்லை, வளர்ச்சி இல்லை (இந்த) உடல் கொல்லப்பட்டாலும், அதனுள் உள்ள ஆத்மா கொல்லப்படுவதில்லை''.

*(பிறப்பு, இருப்பு, வளர்ப்பு, மாறுதல், தேய்தல் மறைதல் எனும் ஆறு பாவமாற்றங்கள் ஐம்பூதங்களாலாகிய இந்த உடலுக்கே அன்றி ஆத்மாவுக்கு இல்லை.)*

**வேதா஽விநாசினம் நித்யம்**
**ய ஏனமஜமவ்யயம் ।**
**கதம் ஸ புருஷ: பார்த்த கம்**
**காதயதி ஹந்திகம் ॥ (21)**

*''பார்த்தா (அர்ச்சுனா) இவ் ஆத்மாவுக்கு அழிவில்லை, மாற்றம் இல்லை, பிறப்பில்லை, குறையும் குணம் இல்லை என்பவனவற்றை தெரிந்து கொண்டவன், எவ்வாறு எவரைக் கொல்வான், யாரைக் கொல்விப்பான்''*

*(இச்செய்யுளில் ஞானப்பயிற்சி மேற்கொள்பவன், தனக்கு ஒப்பிவிக்கப்பட்ட செயலை செய்து கொண்டிருக்கும்போது, தன்னை ஒரு கர்த்தாவாக நினைக்கக் கூடாது என்பதும், அவன் ஒரு கருவி மாத்திரமே என்பதையும் நினைவிற்கொள்ள வேண்டும் என்று அறிவுறுத்தப்படுகிறது.)*

**வாஸாம்ஸி ஜீர்ணாணி யதா விஹாய**
**நவானி க்ருஹ்ணாதி நரோ஽பராணி ।**
**ததா சரீராணி விஹாய ஜீர்ணான்யன்யானி**
**ஸம்யாதி நவானி தேஹீ ॥ (22)**

*''நைந்து போன, பழையது ஆகிவிட்ட துணிகளைக் களைந்துவிட்டு, புதிய துணிகளை உடுத்திக் கொள்வது போன்று, (மரணத்திற்குப் பிறகு) ஆத்மாவானது பழைய உடல் களை விட்டு, புதிய உடல்களில் புகுகின்றது''.*

*(எவ்வாறு ஒரு பாம்புக்குப் புதிய தோல் உருவாகின பிறகு பழைய தோல் உரிந்து விடுகிறதோ, அவ்வாறே, வினைகளுக்கேற்றவாறு புதிய உடல்கள் தயாரானபிறகு (சூக்ஷ்ம சரீரம்) ஆத்மாவானது பழைய உடலைத் துறக்கிறது.)*

**நைநம் சிந்தந்தி சஸ்த்ராணி**
**நைநம் தஹதி பாவக: ।**
**ந சைனம் க்லேதயந்த்யாபோ**
**ந சோஷயதி மாருத: ॥** (23)

*''கருவிகளால் ஆத்மாவை வெட்டமுடியாது. தீயினால் ஆத்மாவைப் பொசுக்க முடியாது. நீரினால் ஆத்மாவை நனைக்க முடியாது. காற்றினால் ஆத்மாவை உலர்த்த முடியாது.*

*(ஐம் பூதங்களில் செயலற்ற ஆகாயத்தைத் தவிர்த்த மற்றைய நான்கு பூதங்களால் ஆத்மாவுக்கு எந்தவிதமான பாதிப்பும் இல்லை. அப்பூதங்களால் ஆகாயமே தாக்கப்படாத போது அதற்கும் மேலேயுள்ள ஆத்மாவை எவ்விதத்திலும் சிதைக்க முடியாது).*

**அச்சேத்யோऽயமதாஹ்யோऽயமக்**
**லேத்யோऽசோஷ்ய ஏவ ச ॥**
**நித்ய: ஸர்வகத: ஸ்தாணுரசலோயம்**
**ஸநாதன: ॥** (24)

*''இவ்வாத்மா எனப்படுவோனை வெட்ட முடியாது. வேக வைக்க முடியாது. நனைக்க முடியாது. உலர்த்த முடியாது. இவன் நித்யமானவன், நிறைவானவன், நிலையானவன், அசைவற்றவன், என்றும் இருப்பவன்''.*

*(அர்ச்சுனன் உள்ளத்தில் எந்த வகையிலும் ஆத்மாவைப் பற்றிய சந்தேகங்கள் எழக்கூடாது என்பதற்காக ஆத்மாவின் இயல்புகளை பலவாருக விளக்கிக் கூறுகிருர் பகவான்.*

*அறியாமை காரணமாக மனிதன் தானே துன்பத்தை ஏற்படுத்திக் கொள்கிறான். அதனால் தன் மேன்மைகளை இழக்கின்றான். அந்த அளவு மனிதன் தாழ்ந்து விடக்கூடாது என்பதற்காக அர்ச்சுனனை இருத்தி, ஆத்மா எல்லா இடத்திலும், வியாபித்துள்ளது அதனால் அதற்கு அசைவு இல்லை. அது ஏற்கனவே இருப்பதால் அதற்குப்போக்கும் வரவும் இல்லை, எப்போதும் எங்கும் இருக்கிறது, என்று பலவாறாக ஆத்மா விளக்கப்படுகிறது.)*

**அவ்யக்தோSயம சிந்த்யோSயம**
**விகார்யோSயமுச்யதே: ।**
**தஸ்மாதேவம் விதித்வைனம் நானு**
**சோசிதுமர்ஹஸி: ॥** (25)

''இவ்வாத்மாவானவன் (ஐம்)பொறிகளுக்குக் காணப்ப டாதவன்; சிந்தனைக்கு அப்பாற்பட்டவன், மாறுபடாதவன். ஆகவே( இத்தகு இயல்புகளைக் கொண்ட) இவ்வாத்மாவை இவ்வாறு அறிந்து துன்பத்தை நீப்பாயாக'

*(இந்திரியங்களான உறுப்புகளுக்கு உட்படாத எந்தப் பொருளும் மனதில் படியாது. மாறுபடும் குணமுள்ள காற்று, நீர், நெருப்பு, நிலம் நம் கண்களுக்குத் தெரிவது போன்று, ஆகாயம் நமக்குத் தெரிவதில்லை. ஏனெனில் அதற்கு உறுப்புக்கள் இல்லை. அது போன்றே ஆத்மாவுக்கு மாறுபடும் தன்மை இல்லை.)*

**அத சைனம் நித்யஜாதம் நித்யம்**
**வாமன்யஸே ம்ருதம்: ।**
**ததாபி த்வம் மஹாபாஹோ நைனம்**
**சோசிதுமர் ஹஸி ॥** (26)

''ஒருவேளை இந்த ஆத்மா எனப்படுவோனுக்குப் பிறப்பும் இறப்பும் இருக்கும் என்று நீ கருதினாலும், அகன்ற தோள்களை உடையவனே (அர்ச்சுனனே) அந்த ஆத்மாவுக்காக நீ வருத்தப்படுதல் உனக்குச் சிறிதும் பொருந்தாது''

*(ஒருவனுக்குப் பல வசதிகள் வாழ்க்கையில் வாய்த்திரு ந்தாலும், அவனிடம் வருத்தம் எனும் உணர்வு இருந்தால் அவ்வசதிகளை அவனால் அனுபவிக்க முடியாது. அவ்வரு த்தமும் அவனாலாயே அவனுக்குக் கிடைக்கப்பெறுகிறது.)*

**ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யுர்த்ருவம்**
**ஜன்ம ம்ருதஸ்ய ச ।**
**தஸ்மாதபரிஹார்யேர்த்தே ந த்வம்**
**சோசிதுமர்ஹஸி ॥** (27)

*''பிறந்தவன் இறந்து விடுவான், இறந்தவன் மறுபடியும் பிறப்பான் எனும் நம்பிக்கை உண்மையானால் தவிர்க்கமுடியாத இந்த விஷயத்தில் நீ துன்பம் கொள்வது சிறிதும் பொருந்தாது'.*

*(உலகத்தில் ஆசை எனும் உணர்வு இருக்கும் வரை பிறப்பும் இறப்பும் அமையும். கர்மா எனும் வினையின் காரணமாக வரும் மரணத்தைத் தடுப்பது என்பது இயலாத ஒன்றாகும்.)*

**அவ்யாக்தாதீனி பூதானி வ்யக்த**
**மத்யானி பாரத ।**
**அவ்யக்தநிதனான்யேவ தத்ர**
**கா பரிதேவனா ॥** (28)

*''பார்தா, காணப்படும் உயிர்கள், முதலில் கண்களுக்குத் தெரிவதில்லை. இடையில் காணப்படுகின்றன. கடைசியில் மறைந்து கண்களுக்குத் தெரிவதில்லை. இவ்வாறு இருக்க, இந்த விஷயத்தில் (பிறப்பு, மரணம்) நீ வருத்தப்படுவது எதற்காக!''*

*(உற்றார், பெற்றார் எனும் உறவு இடையில்தான் வந்தது. மேலும் இவ்வுறவு நிலை கனவில் காணும் காட்சிநிலை போன்றது. ஏனெனில் கனவில் வரும் நபர்கள் முன்பிருந்ததில்லை. கனவு கலைந்ததும் அவர்களும் மறைந்து விடுவர். ஆகவே கனவு காணும் போது தெரியும் அவர்கள் இருந்தும்இல்லாதவர்களாக இருந்தும் மில்லாத காட்சியாக ஆகிறார்கள். இடையில் வந்து போகும் அவர்களை நினைத்து வருத்தப்படுவது பொருளற்றது என்று இச்செய்யுளில் விளக்கப்படுகிறது.)*

**ஆஸ்சர்யவத்பச்யதி கஸ்சிதேனம்**
**ஆஸ்சர்யவத்வததி ததைவ சான்ய: ।**
**ஆஸ்சர்யவச்சைனமன்ய: ச்ருணோதி**
**ச்ருத்வாப்யேனம் வேத ந சைவ கஸ்சித் ॥** (29)

''இவ்வாத்மாவை ஒருவன் வியப்புடன் பார்க்கிறான். மற்றொருவன் ஆச்சரியத்துடன் அவ்ஆத்மாவைப் பற்றிப் பேசுகின்றான். மற்றொருவனோ மிகவும் விந்தை உணர்வுடன் ஆத்மாவைப் பற்றிக் கேட்கின்றான். இன்னொருவனோ, அவ்வாறு கேட்டபிறகும் ஆத்மாவைப் பற்றி அறிந்து கொள்ள முடியாத நிலையில் இருக்கின்றான்.

*(சாதாரண கண்களுக்கு ஆத்மா தெரிவதில்லை. ஆத்ம விசாரணை எனும் ஆத்மாவைப் பற்றிய தேடும் உணர்வு, தேடும் சிந்தனை எனும் போக்கே வியப்பிற்குரியது. ஏனெனில் ஆத்மாவைப் பற்றித் தெரிந்து கொள்ள விரும்புகிறவர்கள் அதற்கான தேவையான மனப்பக்குவத்தைப் பெற்றார் இல்லை: அதனால், தூசுபடிந்த கண்ணாடியில் தெரியும் பிம்பம் போன்று, அவர் மனதில் அத்மாவைப் பற்றிய தெளிவு விளங்கியும் விளங்காமலும் இருக்கிறது.)*

தேஹீ நித்ய மவத்யோऽயம்
தேஹே ஸர்வஸ்ய பாரத ।
தஸ்மாத்ஸர்வாணி பூதானி ந த்வம்
சோசிதுமர்ஹஸி ॥ (30)

*'பாரதா எல்லா உடல்களுக்குள்ளே இருக்கும் ஆத்மாவுக்கு எப்போதும் மரணம் இல்லை. ஆகையால் உயிர்களின் காரணமாக நீ துயரப்பட வேண்டாம்.'*

ஸ்வதர்மமபி சாவேக்ஷ்யந
விகம் பிதுமர்ஹஸி ।
தர்மயாத்தி யுத்தாச்சரேயோऽன்யத்
க்ஷத்ரியஸ்நய வித்யதே ॥ (31)

*''ஸவதர்மத்தைப் பார்க்கும் போதும் நீ மனம் நடுங்கத் தேவையில்லை. அறப்போரைக் காட்டிலும் வேறு எவ்விதமான சிறப்பும் ஒரு அரசனுக்கு இல்லை'.*

*(ஓவ்வொருவரும் அவரவர்குரிய தகுதிகளுக்கேற்றவாறு அளிக்கப்பட்ட கடமையை முடிப்பதே அவரவர்களுடைய ஸ்வதர்மமாகும்.*

*இங்கு அரசனாகிய அர்ச்சுனனின் கடமை, அறத்தைக் காப்பதாகும். அதற்காக அவன் ஸ்வதர்மமான போரில் ஈடுபடவேண்டும் என்பதை கண்ணன் இங்கு அர்ச்சுனனுக்கு அறிவுறுத்துகிறார்)*

**யத்ருச்சயா சோபபன்னம்**
**ஸ்வர்கத்வாரமபாவ்ருதம் ।**
**ஸுகின: க்ஷத்ரியா: பார்த்த**
**லபந்தே யுத்த மீத்ருசம் ॥** (32)

*''பார்த்தா, எதிர்பாராது கிடைத்ததும், திறந்துவிட்ட சொர்க்க வாயிலை அடைவதற்கொப்பதுமான இந்தப்போர் வாய்ப்பு, கொடுத்து வைத்தவர்களான (பாக்கியவான்கள்) க்ஷத்திரியர்களுக்கு மட்டுமே கிடைக்கிறது.''*

*(ஒவ்வொருவருடைய வாழ்க்கையிலும் சாதாரணமாக அனுகூலமான ஒரு கட்டம் வந்தமையலாம். உடனே அதனைத் தங்களுக்குச் சாதகமாக்கிக்கொண்டு தன் காரியத்தை முடித்துக் கொள்ள வேண்டும். இதுபோது அவனுடைய காரிய முயற்சி ஓரளவு எளிதாக அமைகின்றது. இதனைத்தான் 'காற்றுள்ள போதே தூற்றிக்கொள்' என்று கூறுகிறார்கள் போலும். விண்ணோரும் மண்ணோரும் புகழ, பேரும், சிறப்பும் கிடைப்பதற்கான ஒரு வாய்ப்பு இந்தப்போரினால் (தீயோரை அழிப்பதனால்) அர்ச்சுனனுக்குக் கிடைத்துள்ளது. இவ்வாய்ப்பு துரியோதனனே அர்ச்சுனனுக்கு ஏற்படுத்திக் கொடுத்துள்ளான். இதனைப் பயன்படுத்திக் கொள்ளுமாறு அர்ச்சுனனை நெறிப்படுத்துகிறார் பகவான்.)*

**அத சேத் த்வமிமம் தர்ம்யம்**
**ஸங்க்ராமம் ந கரிஷ்யஸி ।**
**தத: ஸ்வதர்மம் கீர்த்திம் ச ஹித்வா**
**பாபமவாப்ஸ்யஸி ॥** (33)

*''நீதிக்காகப் போராடப்படும் இவ் அறப்போரினை நீ மேற்கொள்ளாவிடில், நீ (உனக்கு விதிக்கப்பட்ட) ஸ்வதர்மத்தையும், (உனக்குக் கிடைக்கப்பெறும்) சிறப்பையும் இழந்து, பாவத்தை அடையப்பெறுவாய்!''.*

*(ஒருவன் அநீதியை செய்வானாயின் அவனுக்கு கேடு நடப்பது உறுதி. ஒருவன் தனக்குக் கடமையாக விதிக்கப்பட்ட நீதி நெறியை கடைப்பிடிக்காவிட்டால் அவனுக்கு அதைவிட பெரிய கேடு வந்து சேரும். அதாவது செய்யக் கூடாத ஒன்றினை செய்யும் போது கிடைக்கும் கேட்டைவிட செய்ய வேண்டிய ஒன்றினை செய்யாது வாளா இருந்தால் அதனால் எதிர்படும் கேடு பெரியதாம்.)*

**ஆகிர்த்திஞ்சாபி பூதானி**
**கதயிஷ்யந்தி தேஸவ்யயாம் ।**
**ஸம்பாவிதஸ்ய சாகீர்த்திர்**
**மரணாததிரிச்யதே ॥** (34)

*("நீ உன்னுடைய கடமையை ஆற்றுவிட்டால்) இந்த உலகம் உன்னை எப்போதும் இகழ்ந்து பேசும். போற்றுதலுக்கு உரிய ஒருவன் இகழப்படுவதால் வரும் இழிவு அவன் மரணத்தை விட அதிகமானது"*

*(ஒரு மிருகமானது எப்படியாவது வாழலாம். ஆனால் மனிதன் இப்படித்தான் வாழவேண்டும் என்பது நியதி. புகழுக்காக மனிதன் தன் உயிரினையும் தருவான். பழிக்குப்பயந்து கடமை தவறினால், அவன் வாழ்வுக்குப் பொருளில்லை.)*

**பயாத்ரணாதுபரதம் மம்ஸ்**
**யந்தே த்வாம் மஹாரதா: ।**
**யேஷாம் ச த்வம் பஹுமதோ**
**பூத்வா யாஸ்யஸி லாகவம் ॥** (35)

*"அச்சத்தின் காரணமாக நீ போர்க்களத்திலிருந்து பின்வாங்கினாய் என்று மகாரதிகள் (சிறந்த வீரர்கள்) கருதுவார்கள். யார்யார் உன்னைப் பெருமைப்படுத்தினார்களோ அவர்களே உன்னை இகழவும் செய்வார்கள்".*

*(ஒருபொழுது அர்ச்சுனனை, துரியோதனன் உள்ளிட்ட கௌரவர் கூட்டத்தைச் சார்ந்த பலர் வீரன், தீரன் என்றும் ஒரு கட்டாயச் சூழலில் புகழ்ந்துள்ளார்கள். இப்போது, போரில்*

*பாசத்தின் காரணமாக போர் புரியாது வாளா இருந்தால் புகழ்ந்த அவர்களே, இதுவே தகுந்த தருணம் எனக் கருதி, அர்ச்சுனனை கோழைஎன்றும், பயந்தவன் என்றும் பலவாறு கூறி இகழ்வார்கள். இதனை அர்ச்சுனனுக்கு நினைவுறுத்தி ' அச்சம் வீரனுக்கு அழகல்ல, அது அவன் பெருமையைக் குலைக்கும்' என்று கூறி, அரச்சுனன் மனதில் போர் வெறி ஏற்படுத்துகிறார் பெருமான்).*

**அவாச்யவா தாம்ஸ்ச பஹூன்**
**வதிஷ்யந்தி தவர்ஹிதா: ||**
**நிந்தந்தஸ்தவ ஸாமார்த்யம் ததோ**
**து:கதரம் நு கிம் ||** (36)

*'உன் எதிரிகள் உன் ஆற்றலைப் பழித்துக் கூறவும் முடியாத கடுஞ்சொற்களைப் பயன் படுத்துவார்கள். இதைவிட பெரிய துன்பம் உனக்கு வேறென்ன வேண்டும்?''*

*(ஒருவன் தன் வாழ்க்கையில் செல்வத்தை இழந்தால் பின்னர் மறுபடியும் அதனைப் பெறலாம். பதவி இழந்தால், மீண்டும் பெறலாம். ஆனால் ஒரு முறை புகழ் இழந்தால், அவன் வாழ்க்கை முடிந்த கதையாகவே அமையும். அந்நிலையை ஒருவனால் தாங்க முடியாது. இப்போரில் அர்ச்சுனன் பின்வாங்கினால் முன்பு, புகழ்ந்தவர்கள் இன்று தூற்றுவார்கள். அது அவன் உள்ளத்தில் ஆறாப்புண்ணாக அமைந்து விடும். அதனால் பெறப்படும் வலியானது, மரணத்தை விட பெரியது என்று கண்ணன் பலவாறு அர்ச்சுனனுக்குக் கூறுகிறார்.)*

**ஹதோ வா ப்ராப்ஸ்யஸி ஸ்வர்க்கம்**
**ஜித்வா வாக்ஷ்யஸே மஹீம் |**
**தஸ் மாதுத்திஷ்ட்ட கௌந்தேய**
**யுத்தாய க்ருதநிஸ்சய: ||** (37)

*''போரில் மரணத்தைத் தழுவினால் நீ சுவர்க்கத்தை அடையலாம். பகைவர்களை வென்றால் அரசாட்சி புரிந்து அனுபவிக்கலாம். ஆகவே, கௌந்தேயா, போரில் பங்கேற்க, உறுதியுடன் எழுவாயாக!''*

(போர் செய்யாவிட்டால் அர்ச்சுனன் பெறும் அவல நிலையை பற்றிப் பலவாருகக் கூறிய கண்ணபெருமான், நீதிக்காகப் போர் செய்தால் அதனால் இப்பிறவியிலும், மறுபிறவியிலும், புகழே கிடைக்கும் என்று விளக்குகிருர்.)

ஸுகது: கே ஸமே க்ருத்வா
லாபாலாபௌ ஜயாஜயௌ ।
ததோ யுத்தாய யுஜ்யஸ்வ
பாபமவாப்ஸ்யஸி ॥ (38)

''இன்பத்தையும் துன்பத்தையும், லாபத்தையும் நஷ்டத்தையும், வெற்றியையும் தோல்வியையும் சமமாகக் கருதி போரில் இறங்குவாயாக. அதனால் உனக்கு பாவம் சேராது.'

(லாபம் வரும்போது மகிழ்ச்சியுறுவதும், நஷ்டம் வரும்போது துன்பப்படுவதும் மனித இயல்பு. அது போது அவனைத் தொடர்ந்து கருமங்கள் கூடுமே தவிர குறையாது. ஆகவே, கருமத்தை (காரியத்தை) செய்யும் போது, அதன் பயனில் கருத்தைச் செலுத்தக் கூடாது. இந்த மனநிலையே முக்திக்கு வழிகாட்டுகிறது.)

ஏஷா தேடபிஹிதா ஸாங்க்யே
புத்திர்யோகே த்விமாம் ச்ருணு ।
புத்த்யா யுக்தோ யயா பார்த்த
கர்மபந்தம் ப்ரஹாஸ்யஸி ॥ (39)

''(இதுவரை) ஆத்ம தத்துவதைப் பற்றிய அறிவு போதிக்கப்பட்டது. பார்த்தா, இனி யோகதத்துவத்தைப் பற்றித் தெரிந்துகொள். யோகத்தைப் பற்றிய அறிவை நீ பெற்றேயேயானால் கர்மம் எனும் தளையிலிருந்து விடுதலை பெறுவாய்''.

(எந்த ஒரு கலையைப் பற்றியபாடத்திலும் இரு அணுகுமுறைகள் உள்ளன. ஒன்று அறிதல், மற்ருென்று செயல்படுதல். எவ்வளவுக்கெவ்வளவு அறிகின்ருேமோ, அவ்வளவுக்கவ்வளவு செயல்திறன் மேன்மை அடைகின்றது. மோட்டார் வாகனத்தைப் பற்றிய அறிவு அதிகமாக இருக்கும்

*அளவு, அதனை ஒட்டும் வகையில் அதன் திறமை வெளிப்படும். அவ்வகையில் வாழ்க்கை பற்றிய அடிப்படை உண்மைகளை நன்கு அறிந்து கொண்டால்தான் ஒரு நல்ல வாழ்க்கையை ஒருவன் நடத்திட முடியும். இல்லாவிட்டால் அவநம்பிக்கை, தோல்வி, ஏமாற்றங்களே அவன் வாழ்வில் மிகுந்து விளங்கும்.)*

**நேஹாபிக்ரம நாசோஸ்தி**
**ப்ரத்யவாயோ ந வித்யதே ।**
**ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே**
**மஹதோ பயாத் ॥** (40)

''இதில் (கரும யோகத்தினை அறியும் விஷயத்தில்) மேற்கொள்ளும் முயற்சிகள் பயனற்று போகாது. இதனால் தீங்கொன்றும் வராது. இந்த யோகத்தைப் பற்றிய அறிவு சிறிது பெற்றாலும் நாம் அச்சம் எனும் உணர்விலிருந்து விடுபடலாம்''.

*(கரும யோகத்தில் பெறும் பயிற்சி சிறிது இருந்தாலும்கூட அந்த அளவு பயன் என்பது உறுதியாகும். சிறிது கற்றாலும் அது ஆத்ம ஸ்வரூபத்தை விளக்கும் சிறப்பு உடையது. அந்த ஸ்வரூபத்தை அறிந்தவர்களுக்கு பிறப்பு, இறப்பு தொடர்பான அச்சம் என்பது இருக்காது.)*

**வ்யவஸாயாத்மிகா புத்திரேகேஹ**
**குருநந்தன ।**
**பஹுசாகா ஹ்யனந்தாஸ்ச**
**புத்தயோஸவ்யவஸாயினாம் ॥** (41)

''குருகுலத்தில் தோன்றியவனே, இந்த யோகத்தில் உறுதியாய் இருப்பவனுக்கு புத்தி என்பது ஒன்றாகும். உறுதி இல்லாதவர்களுக்கு புத்தி என்பது பல கிளைகளாகப் பிரிந்தும் இறுதி என்பது இல்லாதும் அமையும்.''.

*(இச்செய்யுளில், அர்ச்சுனன் துரோணாசாரியாரின் மாணவனாக இருந்த போது, ஒரே அம்பால் ஒரே முயற்சியால், மரத்திலிருந்து ஒரு குறியைத் தாக்கினான். இது மற்ற*

மாணவர்களால் முடிய வில்லை. இது அர்ச்சுனனின் மன உறுதியையும் ஒருமுகப்படுத்தும் ஆற்றலையும் காண்பிக்கும். ஆகவே இந்த யோகப்பயிற்சி அவனுக்கு ஒரு பொருட்டல்ல என்பதை அர்ச்சுனனுக்கு மறைமுகமாக அறிவுறுத்துகின்றார் பகவான். உலகாயுத நன்மைகளை மனதிற்கொண்டு செயல்புரிகின்றவனுக்கு அறிவுப் பூர்வமாக ஒரு முனைப்போடு செயல்பட முடியாது. ஆனால் எல்லாம் ஆண்டவனுக்கு உரியது. எல்லாம் அவனால்தான் நடைபெறுகின்றன என்பன மனதிற்கொண்டு, பிற உணர்ச்சிகளுக்கு ஆட்படாமல் தன் மனதையும் அறிவையும் ஒரு முனைப்போடு ஆண்டவனிடம் சேர்ப்பித்தால், அப்போது அவன் குறிக்கோள் எளிதில் வெற்றியடையும். இந்த ஒருமுனைப்பு எனும் மனதையும், அறிவையும் ஒருமுகப்படுத்தும் பயிற்சியானது உலக வாழ்க்கை மேம்பாட்டிற்கும் பயன்படும். அதுவே இறுதியில் பக்தி வாழ்க்கைக்கும் பயனளிக்கும். இப்பயிற்சிதான் நம்மாழ்வார்க்கு 'உண்ணும் சோறும், பருகு நீரும் தின்னும் வெற்றிலையும் எல்லாம்' கண்ணனாகத் தோன்றியது.)

யாமிமாம் புஷ்பிதாம் வாசம்
ப்ரவதந்தய விபஸ்சித: ।
வேதவாதரதா: பார்த்த
நான்யதஸ்தீதி வாதின: ॥ (42)

லொமாத்மான: ஸ்வர்கபரா:
ஜன்மகர்மபலப்ரதாம் ।
க்ரியாவிசேஷபஹுலாம்
போகைச்வர்யகதிம் ப்ரதி ॥ (43)

போகைச்வர்யப்ரஸக்தானாம்
தயாபஹ்ருதசேதஸாம் ।
ஸ்யவஸாயாத்மிகா புத்தி:
ஸமாதௌ ந விதீயதே ॥ (44)

''வேதங்களில் அமைந்திருக்கும் சொற்களின் சுவைகளில் மட்டுமே மூழ்கியிருப்பவர்கள், சுவர்க்கத்திற்கு வழிகாட்டும் வேத கருமத்திற்கும் மேலானது இல்லை என்பவர்கள்,

காமத்தையே உயர்வாக நினைப்பவர்கள், சுவர்க்கமே இப்பிறவியின் இறுதி இலட்சியம் என்று கூறுபவர்கள் ஆகியோர் அறியாமையின் இருப்பிடமாவர். அத்தகையோரின் மனதை மயக்கிடும் வார்த்தைகளைக் கேட்டு அறிவுக் குழப்பம் கொள்பவர்க்கும் இம்மை உலகாயுத இன்பங்களில் ஈடுபாடு கொண்டிருப்பவர்க்கும், உறுதியான அறிவுணர்ச்சி அவர்கள் உள்ளத்தில் ஏற்படுவதில்லை. அத்தகையோரின் மனதை மயக்கிடும் வகையில் கூறிடும் விஷயங்கள், அழிந்து போகும் உலகாயுத உணர்ச்சிகளைக் கொண்டதாகவும், மறுபடியும் பிறவிகள் வந்தமையவும் வழிகாட்டும்''.

*(வேதங்களில் காணப்படும் கரும காண்ட விஷயங்கள் இப்பிறவியில் மகிழ்வதற்குரிய ஆசைகளின் இருப்பிடமான மாய உலகில் மூழ்கக்கூடிய வகையில் சிற்றின்பக் கருத்துக் களைக் கூறும் வகையில் விளங்குகின்றன. ஆனால், பிறவியின் நோக்கம் இவற்றை எதிர்பார்த்து, அனுபவித்தல் அல்ல. அவ் இறைவனை அறிந்து, அவனுடன் கலப்பதே மனித வாழ்க்கையின் இறுதி இலட்சியமாகும். அதுவே முழு வாழ்க்கையாக ஒருவனுக்கு அமையும். அதற்கு ஞானமும், யாகமுமே இறுதிவரை துணைபுரிவனவாகும்.)*

**த்ரைகுண்ய விஷயா வேதா**
**நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுன ।**
**நிர்த்வந்த்வோ நித்யஸத்வஸ்தோ**
**நிர்யோகக்ஷேம ஆத்மவான் ॥** (45)

*''அர்ச்சுனா, வேதங்கள் யாவும் முக்குணங்களை உடைய இந்த வாழ்க்கையைப் பற்றியதாகும். நீ இருநிலைகளிலிருந்து விலகி, என்றும் நடுநிலைமையில் நின்று, யோக க்ஷேமங்கள் அற்று, ஆத் சொரூபத்தில் லயித்து, முக்குணங்களையும் கடந்து விளங்க வேண்டும்.''*

*(ஸத்வம், ரஜஸ், தமஸ் எனும் மூன்று குணங்களை உடையது இந்த உலக வாழ்க்கையாகும். இம்மை இன்பங்கள் எல்லாவற்றையும் அளிக்க வல்லது இந்த உலகம். இவற்றைப் பெறத்தான் வேதங்கள் நமக்கு வழிகாட்டுகின்றன. ஆனால்*

அப்பாதையே நமக்கு உண்மையான இன்பத்துக்கு அழைத்துச் செல்லாது. அந்த வேதங்களையும் கடந்து நிற்கும் அந்த பரம்பொருளை நாம் அறிந்து தெளிதல் வேண்டும். அவனை அறிவதே உண்மை இன்பமாகும். இங்கு இரு நிலைகள் என்பது வெற்றி - தோல்வி, லாபம்- நஷ்டம், இன்பம்- துன்பம் என்பபடும் உணர்வுகளின் இருநிலையாகும். இந்த உணர்வுகளுக்கு ஆட்பட்டு இன்பத்தில் மூழ்குவதும், துன்பத்தில் துவள்வதும் விடுத்து, சமநோக்கில் உணர்வுகளைக் கட்டுப்படுத்துபவனே ஆத்ம சாதகன் ஆவான். இந்தப் பயிற்சியில் தவறியவன் யோக க்ஷேமம் என்று கூறப்படும் பொருள்களுக்காகத் தேடித்திரிந்து அவற்றைக் காப்பாற்றிக் கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டு தன்னையே இழந்தவனாவான். அவன் உள்ளத்தில் பிரச்சனைகள்தாம் நாளுக்குநாள் அதிகமாகுமே ஒழிய அவன் ஒருபோதும் ஆத்ம சொரூபத்தைக் காணவே முடியாது. இந்த உணர்வுகளிலிருந்து விடுபடுபவனே சிறந்த யோகியாகின்றான்.)

**யாவானர்த்த உதபானே ஸர்வத:**<br>
**ஸம்ப்லுதோதகே ।**<br>
**தாவான்ஸர்வேஷு வேதேஷு**<br>
**ப்ராஹ்மணஸ்ய விஜானத: ॥** (46)

''எங்கும் நீர் நிறைந்திருக்கும் போது, ஒருவனுக்கு கிணற்றுநீர் எவ்வகையில் சிறிதும் பயன்படாதோ, அந்த வகையில் எல்லாம் அறிந்த மெய்ஞானத்தை உடைய பிரம்ம நிஷ்டனுக்கு வேதங்கள் பயன்படும்''.

*(இம்மை மறுமை இன்பங்களை அடைய வழிகாட்டுபவன வேதங்கள். ஆனால் பரம்பொருளைப் பற்றிய பேரறிவை பெற்றவனுக்கு, சிற்றின்பங்களைத் தரும் வேதங்கள் ஒரு பொருட்டல்ல.)*

**கர்மண்யேவாதிகாரஸ்தே மா**<br>
**பலேஷு கதாசன ।**<br>
**மா கர்மபலஹேதுர்ப்பூர்மா தே**<br>
**ஸங்கோடஸ்த்வகர்மணி ॥** (47)

''செயலாற்றுதல் மட்டுமே உனது கடமையாகும். அந்தச் செயல்களால் வரும் பயன்களின்மீது ஒருபோதும் உரிமை கொள்ளாதே, வினைப்பயனை உண்டாக்குபவன் நீ என்று எண்ணாதே!'.

(உலகில் எவரும் பயன் எதிர் பார்த்துத்தான் செயல்புரிகின்றனர். பயன் இல்லை என்றால், எந்தச் செயலையும் செய்யமாட்டார்கள். ஆனால் இங்கு இறைவன் பயன் எதிர்பார்த்து செயல்புரியாதே என்று அறிவுறுத்துகிறான். ஏனென்றால் பயன் எனும்போது அது தன்னலம் எனும் உணர்வுடன் தான் இருக்கும். தன் ஆசைகளை நிறைவேற்றத்தான் செயல்புரிகின்றான் மனிதன். ஆனால், அது அவனை மேலும் வாழ்க்கை எனும் கடலில் மூழ்கடிக்கவே செய்யும். பயன் எதிர்பார்க்காது செயல்புரியும் போது, பிறர் நலம் தோன்றும். ஆசைகள் எனும் தளைகளிலிருந்து விடுபடலாம். ஆசைகளை வென்றவன்தான் ஞானத்தைப் பெற தகுதியாகின்றான். அப்பொது அவனுடைய மன ஆற்றலும் மேம்படுகின்றது.)

யோகஸ்த: குரு கர்மாணி ஸங்கம்
த்யக்தவா தனஞ்ஜய ।
ஸித்த்யஸித்த்யோ: ஸமோ பூத்வா
ஸமத்வம் யோக உச்யதே ॥ (48)

''தனஞ்சயா( அர்ச்சுனா) யோகத்தில் நிலை நின்று, பற்றுக்களைக் கடந்து, வெற்றி தோல்விகளை சமமாகக் கொண்டு, செயல்புரிவாயாக. (இதுவே) நடுவுநிலை யோகம் என்று அழைக்கப்படுகிறது.)

(செயலாற்றும் போது, பயன்களை எதிர்பார்க்க ாது, எல்லாம் இறைவன் செயல் என்று எண்ணிடும்போது, அவனுள் பற்றுகள் ஏற்படுவதில்லை. அவன் மனம் ஓரம் சேராது நடுவுநிலையில் இருந்திடும் போது, இன்பமும் துன்பமும் அவனுக்கு ஒன்றுகின்றது. தெளிந்த நீரில் உருவம் நன்கு தெரிவது போன்று, தெளிந்த மனதில், உறுதியான மனதில் மெய்ப்பொருள் காட்சிநன்கு புலனாகும்.)

**தூரேண ஹ்யவரம் கர்மபுத்தி**
**யோகாத் தனஞ்ஜய ।**
**புத்தெள சரணமன்விச்ச**
**க்ருபணா: பலஹேதவ: ॥** (49)

''சமபுத்தியோடு செயல்புரிவதைவிட, ஆசைகளோடு செயல் ஆற்றுவது என்பது மிகவும் கீழானதாகும். சமமான அறிவு உணர்வுடன் சரணமடைவாயாக: பயன் எதிர்பார்ப்பவர்கள் கீழானவர்களாவர்''.

**''புத்தியுக்தோ ஜஹாதீஹ உபே**
**ஸுக்ருத துஷ்க்ருதே ।**
**தஸ்மாத்யோகாய யுஜ்யஸ்வ**
**யோக: கர்மஸு கௌசலம் ॥** (50)

''நடுவுநிலைமை உள்ள மனதை உடையவன், இப்பிறவியில் நன்மை தீமை எனும் உணர்வுகளிலிருந்து விடுபடுகிறான். ஆகையால் யோகத்தை நீமேற்கொள். அவ்யோகமானது ஆற்றலுடன் செயல்புரிய உதவுகிறது''.

*(சுயநலம் இல்லாதவனை இன்பம் துன்பம் எனும் உணர்வுகள் தாக்கா. அதனால் அறியாமை எனும் இருளில் அவன் தள்ளப்படமாட்டான். ஆகவே கருமயோகியானவன் கட்டுப்பாடுகளுக்கு அப்பாற்பட்டவனாகின்றான்.)*

**கர்மஜம் புத்தியுக்தா ஹி பலம்**
**த்யக்த்வா மனிஷிண: ।**
**ஜன்மந்த வினிர்முக்தா:**
**பதம் கச்சந்த்யனாமயம் ॥** (51)

''நடுவு நிலைமையுடன் கூடிய மனதை உடைய அறிஞர் வினைப்பயனை எதிர்பார்க்கா தவர்களாவார்கள். (அத்தகைய வர்கள்) பிறவி எனும் சுழற்சியிலிருந்து விடுபட்டவர்களாவார்கள். (அவர்களே) தீமை இல்லாத பெருநிலையை அடைவார்கள்.''

**யதா தே மோஹகலிலம்**
**புத்திர் வயதிதரிஷ்யதி ।**

ததா கந்தாஸி நிர்வேதம்
ச்ரோதவ்யஸ் ச்ருதஸ்ய ॥ (52)

''உன் அறிவானது என்று அவிவேகம் (உயிருள்ளது உயிரற்றது என்றவற்றிற்கு வேற்றுமை பாராட்ட முடியாத நிலையான) என்னும் குற்றத்தைத் தாண்டுமோ அப்போது தான் இதுவரை கேட்டதிலும், இனிமேல் கேட்பதிலும் பற்றற்ற நிலைமை கொண்டவனாவாய்''

ச்ருதிவிப்ரதிபன்னா தே யதா
யதாஸ்யதி நிஸ்சலா ।
ஸமாதாவசலா புத்திஸ்ததா
யோகமவாப்ஸ்யஸி ॥ (53)

''பல விஷயங்களைப் பற்றி கேட்டதனால் கலங்கிய உன் அறிவானது, என்று ஆத்மாவின்கண் கலங்காது உறுதியுடன் இருக்கிறதோ, அன்றே நீ யோகத்தைப் பற்றி அறிவாய்''.

(என்று மனமானது கட்குட்பட்டு ஆத்ம சொரூபத்தில் நிலைத்திருக்குமோ அன்றுதான் ஆத்ம ஞானமும் யோக நெறியும் நம் வசம் அமையும்)

## அர்ச்சுனன் கூறியது:

ஸ்திதப்ரக்ஞஸ்ய கா பாஷா
ஸமாதிஸ்தஸ்ய கேசவ ।
ஸ்திததீ: கிம் ப்ரப்ராஷேத
கிமாஸீத வ்ரஜேத கிம் ॥ (54)

''கேசவனே! சமாதியில் ஈடுபட்டுவிட்ட ஒரு முழு ஞானியின் இயல்புகள் என்ன? உறுதியான அறிவுடையவன் எதைப் பேசுவான், எப்படி அமர்வான், எவ்வாறு நடப்பான்?''

(இந்தச் செய்யுளில் ஒரு முழுமையான ஞானியின் இயல்புகள் கேட்கப்படுகின்றன. சமாதியில் இருக்கும் போது, அவ்ஞானியின் மனம் எந்நிலையில் இருக்கும். தன் சமாதிநிலை கலைந்தபிறகு ஞானியின் செயல்பாடுகள் எவ்வகையில் அமையும் என்று பலவாறாக அலசப்படுகிறது.)

*இனித் தொடர்ந்து வரும் 18 செய்யுட்களில் ஒரு ஞானியின் இயல்புகள் விளக்கப்படுகின்றன. சித்திரம் ஒன்றினை வரையவிரும்பும் ஒருவன் தன் சித்திரம் அழகாகத் திகழவேண்டியதன்பொருட்டுத் தன் எதிரில் அழகிய படம் ஒன்றினை வைத்துக் கொள்வதைப் பார்க்கலாம். அது போன்று, சிறந்த கால கட்டுப்பாடும், ஆன்மீக சாதனையும் அடைய விரும்புபவனுக்குக் கீழ்வரும் செய்யுட்களின் கருத்துக்கள் மிகவும் பயனுள்ளதாகவும், ஒரு சிறந்த வழிகாட்டியாகவும் அமையக் கூடியனவாக உள்ளன.)*

## கண்ணன் கூறியது

**ப்ரஜஹாதி யதா காமான் ஸர்வான்**
**பார்த்த மனோகதான் ।**
**ஆத்மன்யேவாத்மனா துஷ்ட:**
**ஸ்திதப்ரக்ஞ்ஸ்ததோச்தே ॥** (55)

*''பார்த்தா, உள்ளத்தில் எழுகின்ற ஆசைகள் எல்லாவற்றையும் நீக்கி, ஆத்மாவில் ஆத்மதிருப்தி அடைந்தவன் ஸ்ததப் பிரக்ஞன் (நிறைஞானி) என்று கூறப்படுகிறான்''.*

*(குட்டை ஒன்று கலங்கிய நிலையில் அதன் தரைப்பகுதி நம் கண்களுக்குத் தெரியாது. அதுபோன்று ஆசை எனும் மாசு கொண்டு மனம் விளங்கும் போது ஆத்மாவின் தெளிந்த நிலை கலங்கிவிடும். அது போது அவ்ஆத்மா நல்கிடும் ஆனந்த சொரூபத்தை நம்மால் அனுபவிக்கமுடியாது. அதனால் நாம் ஆத்ம இன்பத்தை நுகரமுடியாது. ஆகவே அதுபோன்ற மனமயக்கத்தை நீக்கி உள்ளத்தைத் தெளிவாக வைத்துக் கொள்பவனே நிறைஞானி என்று அழைக்கப்படுவான்.)*

**து: கேஷ்வனுத்விக்னமனா:**
**ஸுகேஷு விகதஸ்ப்ருஹ: ।**
**வீதராகபயக்ரோத:**
**ஸ்திததீர்முனிருச்யதே ॥** (56)

*''துன்பம் வந்தபோது துவண்டுவிடாத, மகிழ்ச்சியில் ஈடுபாடு கொள்ளாத, பற்றற்ற, பயமில்லாத, கோபம் இல்லாத*

உறுதியுள்ள மனத்தை உடையவனே முனி என்று அழைக்கப்படுகிறான்.''

(கோபம் உள்ளவனிடத்து பயம் இல்லாது இருக்கலாம். பயம் இல்லாதவனுக்குப் பொருள்கள் மீது பற்று இருக்கலாம். பற்று இல்லாதவனிடத்து கோபம் இருக்கலாம். ஆகவே மனிதர்கள் உணர்ச்சிகளுக்கு அடிமையாகும் சாதாரண மானவர்கள். இவற்றைக் கடந்தவர்கள் முனிவர்கள் என்று போற்றப்படுகிறார்கள்.)

**ய: ஸர்வத்ராநபிஸ்நேஹஸ்**
**தத்தத்ப்ராப்ய சுபாசுபம் ।**
**நாபிநந்ததி ந த்வேஷ்டி தஸ்ய**
**பிரக்ஞா ப்ரிதிஷ்டிதா ॥** (57)

''எங்கும் எதிலும் பற்றற்று, நலம் பெற்றபோது மகிழ்ச்சியில் மூழ்காதும், தீமை வந்தடைந்த போது உள்ளம் உடைந்து விடாதும் யார் விளங்குகிறார்களோ, அவர்களது அறிவானது வலுவுள்ளதாக சிறந்து அமைகின்றது''.

(பற்றற்ற நிறைஞானிக்குத் தன்னை அண்டிடும் துன்பமும் இன்பமும் ஒரு பொருட்டல்ல. அதனால் அவன் உணர்ச்சிகளுக்கு அடிமையாவதில்லை.)

**யதா ஸம்ஹரதே சாயம்**
**கூர்மோடங்கானீவ ஸர்வச: ।**
**இந்த்ரியாணீந்த்ரியார்த்தேப்ய-**
**ஸ்தஸ்ய பிரக்ஞா ப்ரதிஷ்டிதா ॥** (58)

''ஆமையானது தன் உறுப்புகளை தன்னுள் அடக்கிக் கொள்வதைப்போன்று, பொருள்களின் மீது தன் ஐம்புலன் களினால் ஏற்படும் இச்சையை அடக்கிக் கொள்பவனது முழு அறிவுநிலையுள்ளதாக அமைகின்றது.''

(மற்றைய உயிர்களினால் தனக்கு ஆபத்து ஏற்படும் போது, ஆமையானது விரைவாக தன்முதுகின் மீது உள்ள உறுதியான ஓட்டின் உள்ளே தன் உறுப்புக்களை இழுத்துக்கொண்டு தன்னைக் காப்பாற்றிக்கொள்கிறது. அதுபோன்று, மெய், வாய்,

கண், மூக்கு, காது முதலிய ஐம்பொறிகளை நிறைஞானியாவான் மிக எளிதில் விரைவில் தனக்கு அடிமையாக்கிக் கொள்கிருன். அந்த நிலையில் சமாதிநிலை என்பது அவருக்கு எளிதான சாதனமாகும்.)

**விஷயா வினிவர்த்தந்தே**
**நிராஹாரஸ்ய தேஹின: ।**
**ரஸவர்ஜம் ரஸோடப்யஸ்ய**
**பரம் த்ருஷ்ட்வா நிவர்த்ததே ॥** (59)

''ஐம்பொறிகளை செயலாக்க முடியாதநிலையில், ஒருவனால் அவற்றில் பெறப்படும் இன்பங்களை தூய்க்கமுடியாது. ஆனால் மனதில் அவ்இன்பங்களை அநுபவிக்க ஆசை இருக்கும். பரமாத்மாவை தரிசித்த பின் அத்தகு ஆசையும் மறைந்துவிடும்.''

(பார்வை தெரியாதவன், கண் அறுவை சிகிச்சைக்கு முன், கண்ணுல் கண்டு மகிழும் புலன் இன்பத்தை அனுபவிக்கமுடியாது. ஆனால், பார்வை பெற்றபின் கண்டுமகிழ அவன் மனம் துள்ளும். அந்த ஆசையும் அவனுள் மறைய வேண்டும். அதற்கு அவன் மனம் வறுத்த விதை போன்ற நிலையை அடையவேண்டும். அதற்கு, தான் காணும் பொருள்களிலெல்லாம் அந்த இறைவனைக்காண வேண்டும். இறைமையை அனுபவிக்க வேண்டும்.)

**யததோ ஹ்யபி கௌந்தேய**
**புருஷஸ்ய விபஸ்சித: ।**
**இந்த்ரியாணி ப்ரமாதீனி ஹரந்தி**
**ப்ரஸபம் மன: ॥** (60)

''நன்னெறியில் ஒழுகும் நல்ல அறிஞனுடைய மனதையும், அலைகழிக்கும் இயல்புடைய பொறிகள் வலுக்கட்டாயமாக தங்கள் பக்கம் இழுக்கும்''

(நன்குப் படித்தவர்களே, அறிஞர்களே புலனின்பக் கவர்ச்சிகளால் படாதபாடுபடுகிருர்கள்; படுகுழியில் வீழ்ந்து தீமையை அனுபவிக்கிருர்கள். இப்படியிருக்க, சாதாரண மனிதர்கள் கதிஎன்ன? ஆகவே புலன்களை அடக்கி

*வாழ்பவனே, மனமயக்கங்கள் அற்று விளங்குபவனே உண்மையான நாகரீகம் உள்ள மனிதனாகக் கருதப்படுவான்)*

**தானி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த**
**ஆஸீத. மத்பர: ।**
**வசே ஹி யஸ்யேந்த்ரியாணி தஸ்ய**
**ப்ரக்ஞா ப்ரதிஷ்டிதா ॥** (61)

*''மனஉறுதி உடையவன் அவற்றையெல்லாம் (ஐம்பொறி இன்பங்களை) அடக்கி என்னையே தன் கதியாகக் கொள்கிறான். புலனின்பங்களை அடக்கியவனுடைய அறிவு என்றும் நிலையான உறுதி பெறுகின்றது.''*

*(மருந்து உண்ணும் போது, குரங்கை நினைத்துக்கொள்ளாதே என்று கூறினால், மருந்து என்று கூறும்போதெல்லாம், கேட்கும் போதெல்லாம், காணும் போதெல்லாம் குரங்குதான் மனிதனின் மனதில் நிழலாடும். அத்தகைய மனத்தை, இறைவழிபாடு பக்தி ஒன்றினால் தான் கட்டுப்படுத்தமுடியும்.)*

**த்யாயதோ விஷயான்பும்ஸ:**
**ஸங்கஸ்தேஷ பஜாயதே ।**
**ஸங்காத் ஸஞ்ஜாயதே காம:**
**காமாத்க்ரோதோऽபிஜாயதே ॥** (62)

*''பொருள்களைப் பார்க்கும் போதெல்லாம், நினைக்கும் போதெல்லாம் மனதில் அப்பொருள்களின்மேல் பற்று ஏற்படுகிறது. அந்தப்பற்றே பிறகு ஆசையாக உருவெடுக்கிறது. அந்த ஆசையே பின்னர் கோபமாக மாறுகிறது''*

*(தேடிய பொருள் கிடைக்காவிட்டால் மனதில் வெறுப்பும் பின்னர் கோபமும் ஏற்படுகிறது. அதுவே அவனை இழிநிலைக்கு இட்டுச் செல்கிறது.)*

**க்ரோதாத்பவதி ஸம்மோஹ:**
**ஸம்மோஹாத்ஸ்ம்ருதி விப்ரம: ।**
**ஸ்ம்ருதி ப்ரம்சாத்புத்திநாசோ**
**புத்திநாசாத்ப்ரணச்யதி ॥** (63)

''கோபத்தால் மனம் குழப்பம் அடைகின்றது. அக்குழப்பத்தால் நினைவுகள் சிதறுகின்றன. அதனால் அறிவு தடுமாறுகின்றது. பலவீனமடைகின்றது. அந்த அறிவு இழிவினால், மனிதன் கேடு அடைகின்றான்.''

(பொதுவாக மனிதனிடம் குறைகள் இருந்தாலும் கோபம் என்பதே மிகவும் ஆபத்தாக அமைகின்றது. ஏனெனில் அது பலகுறைகளுக்கு வழிவகுக்கின்றது. கோபத்திற்கு ஆளாகும்போது, மனம், குழப்பத்தின் உச்சிக்குப் போகின்றது. குழம்பிய மனதில் சிந்தனை உயர்வாக அமையாது. அதனால் அறிவு பேதலிக்கிறது. நல்லது கெட்டது அறிய தவறுகின்றது. அந்தத் தவறினால் எடுக்கப்படும் செயல்முறைகளினால் மனிதன் தன் அழிவுக்குத் தானே வழிதேடுகின்றான்.)

ராகத்வேஷவியுக்தைஸ்து
விஷயானிந்த்ரியைஸ்சரன் ।
ஆத்மவச்யைர்விதேயாத்மா
ப்ரஸாதமதிகச்சதி ॥ (64)

''விருப்பு வெறுப்பு இல்லாததும், மனத்தின்கீழ் கட்டுப்பட்டதுமான ஐம்பொறிகளைக் கொண்டு, வெளிவிஷயங்களின்பால் திரியும் மனத்தை அடக்கியாளுபவன் மனத்தெளிவை அடைவான்''

(மனம் விரும்பும் வகையில் ஐம்பொறிகள் செயல்படுகின்றன. ஆகவே ஐம்பொறிகளின் வாயிலாகப் பெறப்படும் தீமைகளுக்கு அடிப்படைக்காரணமாக, இட்டுச் செல்லும் பாதையாக ஒருவாறு மனம் செயல்புரிகின்றது. அதனால் மனம் சுத்தமாக - புனிதமாக இருந்தால் ஐம்பொறிகளின் செயல்பாடுகளும் நன்மையே தருவனவாக அமையும்.)

ப்ரஸாதே ஸர்வது:கானாம்
ஹானிரஸ்யோபஜாயதே ।
ப்ரஸன்ன சேதஸோ ஸ்யாசு
புத்தி: பர்யவதிஷ்டதே ॥ (65)

*''மனம் அமைதியாக இருக்கும் போதுதான் மனிதனது கவலைகள் யாவும் மறையும். மனயமைதி கொண்டால்தான், அறிவு எளிதில், விரைவில் (இறைவனைக் காணும்படியான) ஆத்மசொரூபத்தில் நிலையாக விளங்கும்''.*

*(மனயமைதி என்பது புறச்சூழ்நிலையின் மீதுதான் ஆதாரப்பட்டுள்ளது என்று பலர் நினைக்கின்றனர். அது தவறு. மஞ்சள் கண்ணுடி மூலம் பார்க்கும் யாவும் மஞ்சளாகத்தான் தெரியும். அதுபோன்று மனம் அமைதியற்று இருக்கும்போது,காண்பதும், கேட்பதும், பேசுவதும் யாவும் பிரச்சனைக்குரியதாகவும், கவலை கொள்வதாகவும் விளங்கும். ஆகையால் காணும் யாவையும் இறைமையின் அம்சமாகக் கருதுவார்களேயானால், மனம் அமைதியின் இருப்பிடமாகத் திகழும். அப்போது உள்ளத்தில் இறைஉருவம் தென்படுகிறது. பிறகு அதுவே இறைவன் அமரும் இடமாக மாறிவிடுகின்றது.)*

**நாஸ்தி புத்திரயுக்தஸ்ய ந**
**சாயுக்தஸ்ய பாவனா ।**
**ந சாபாவயத: சாந்திரசாந்தஸ்ய**
**குத: ஸுகம் ॥** (66)

*''மனதை அடக்கத் தெரியாதவன் (ஐம்பொறிகளை அடக்கமுடியாதவன்) ஆத்மாவைப் பற்றிய அறிவை பெறமுடியாது. அதனால் ஆத்மத் தியானம் செய்யமுடியாது. அதனால் ஆத்மாவைக் காணும் ஞானத்தைப்பெறமுடியாது. அதனால் அவனுள் அமைதி என்பது வந்தமையாது. அமைதியிழந்தவனுக்கு ஆனந்தம் ஏது''?*

*(புலனடக்கமே இறுதியான இன்பத்தைத் தரவல்லது.)*

**இந்த்ரியாணும் ஹி சரதாம்**
**யன்மனோனுவிதீயதே ।**
**ததஸ்ய ஹரதி ப்ரக்ஞாம்**
**வாயுர்நாவமிவாம்பஸி ॥** (67)

*''எவ்வாறு கடல்மேல் செல்லும் கப்பலை, காற்ருனது (தன் ஆற்றலால்) அலைகழிக்குமோ, அவ்வாறு அலையும் இயல்பு கொண்ட பொறிகளின் பின் செல்லும் மனமானது ஒருவனது அறிவினை அலைகழிக்கும்.''*

*(புறத்தாக்குதல்களுக்கு அடிமைப்பட்டவை நம் இந்திரியங்கள். ஆகவே தடுமாறும் அவ் இந்திரியங்களின்வழி நம் மனம் பல வகைகளில் செல்கினறது. அத்தகு தடுமாறும் இயல்பினது அறிவானது மிகவும் பலவீனமடைகின்றது; இழிந்த நிலையை அடைகின்றது. அதனால், உள்ளத்தில் இருக்கும் இறைவன் பற்றி அரியும் உயர்ந்த ஞானம் என்பது அவனைப் பொறுத்தவரை கிடைக்காததாகிறது.)*

**தஸ்மாத் யஸ்ய மஹர்பாஹோ**
**நிக்ருஹீதானி ஸர்வச: ।**
**இந்த்ரியாணீந்த்ரியார்த்தேப்யஸ்**
**தஸ்ய ப்ரக்ஞா ப்ரிதிஷ்டிதா ॥** (68)

*''ஆகவே, தோள்வலிமையுடையவனே! (அர்ச்சுனனே) யாருடைய பொறிகள் (அவை அனுபவிக்கும்), புலன்களிடமிருந்து வேறுபடுத்தப்படுகின்றதோ, (அப்போதுதான்) அவனது அறிவு நிலைபெறுகின்றது''.*

*(இயற்கைத் தந்திட்ட ஐம்பொறிகளைக் கொண்டு நல்லவற்றைக் காணல், கேட்டல், கூறல், செய்தல் போன்றவற்றை மேற்கொள்ளலும், புறத்தோற்றங்களின் வழி காணப்பெறுபவைகளையே இறைத்தோற்றமாக ஏற்றுக் கொள்ளலும் சிறந்த மெய்ஞானத்திற்கு வழிகாட்டும்.)*

**யா நிசா ஸர்வபூதானாம்**
**தஸ்யாம் ஜாகர்தி ஸம்யமீ ।**
**யஸ்யாம் ஜாக்ரதி பூதானி**
**ஸா நிசா பசயதோ முனே: ॥** (69)

*''இவ்வுலக உயிர்கள் தூங்கிக்கொண்டிருக்கும் இரவில் முனிவர்களாகிய யோகிகள் விழித்திருப்பர். அதே சமயத்து அவ்வுயிர்கள் விழித்திருக்கும் வேளைதான் தத்துவ ஞானிகளுக்கு இரவாகும்''.*

*(பகல் வேளையில் தான் சாதாரணமாக உலக உயிர்கள் பலவகைகளில் ஐம்பொறிகளின் வழியாக புலனின்பங்களை அனுபவிக்கின்றன. ஆகவே மனிதர்க்கு இரவை விட பகல்*

*பொழுதுதான் இன்பம் தரும் வேளையாகும். ஆனால், அவ் இந்திரியங்களை அடக்கி எங்கும் எதிலும் இறைவனைக் காணும் யோகிக்கு இரவுகூட பகலாகின்றது.)*

**ஆபூர்யமாணமசல ப்ரதிஷ்டம்**
**ஸமுத்ரமாப: ப்ரவிசந்தி யத்வத் ।**
**தத்வத்காமா யம் ப்ரவிசந்தி ஸர்வே**
**ஸ சாந்திமாப்னோதி ந காமகாமீ ॥** (70)

*''புரண்டோடும் ஆறுகள் யாவும், அசைவற்ற கடலில் கலக்கின்றன. அதுபோன்று எந்த ஞானியின் இடத்து ஆசைகள் யாவும் சென்று ஒடுங்கிவிடுகின்றனவோ, அவரே அமைதியுடன் விளங்குவார். ஆசைகள் கொண்டு விளங்குவோர் அமைதியுடன் இருக்கமாட்டார்கள்''.*

*(ஆறுகள் இறுதியில் சேருமிடம் கடலாகும். அத்தகு ஆறுகள் பெருக்கெடுத்து ஓடினாலும், ஓடையாக மாறினாலும் அதனால் கடலில் எந்தவித மாற்றமும் இருக்காது. அது போன்றே, ஐம்பொறிகளை அடக்கிய முனிவனது உள்ளத்தையும் புறமயக்கங்கள் யாவும் ஒன்றும் செய்திடமுடியாது. கடல்போன்றே அவரது உள்ளமும் அமைதியின் மறுஉருவமாக விளங்கும்.)*

**விஹாய காமான் ய: ஸர்வான்**
**புமாம்ஸ்சரதி நிஸ்ப்ருஹ: ।**
**நிர்மமோ நிரஹங்கார: ஸ**
**சாந்திமதிகச்சதி ॥** (71)

*''எந்த மனிதன் ஆசைகள் அற்று, பற்றற்று, (நான், எனது என்ற) மமதைகளை விட்டுத் திகழுகின்றானோ, அவனே அமைதி அடைகின்றான்''.*

*(நான், எனது எனும் மமதைகுணம் கொண்டவன் பற்று எனும் காந்தத்தால் இழுக்கப்பட்டு கருமத்தளைகளுக்கு உட்படுகின்றான். அந்நிலையில் அவன் மனதில் பிரச்சனைகளும், குழப்பங்களும் மட்டுமே குடிகொள்ளுமே தவிர அமைதி என்பது சிறிதும் இருக்காது.)*

ஏஷா ப்ராஹ்மீ ஸ்திதி: பார்த்த
நைநாம் ப்ராப்ய விமுஹ்யதி ।
ஸ்தித்வா஽ஸ்யாமந்தகாலே஽பி
ப்ரஹ்மநிர்வாணம்ருச்சதி ॥ (72)

*''பார்த்தா! இதுதான் பிரம்மத்தின் நிலையான முடிவாகும். இதனை அடையப் பெற்றவனுக்கு (பொருள்களின் மீது கொள்ளும்) மோகமில்லை. (வாழ்நாளின்) இறுதிக்காலத்தி லாவது இதில் நிலைபெற்றவனுக்கு பிரம்ம நிர்வாணம் எளிதில் கைகூடும்''.*

*(இங்கு பிரம்ம நிர்வாணம் என்பது, கனவில், நினைவில் அனுபவிக்கப்பெறும் இன்பங்களைக் கடந்த பேரானந்தப் பெருநிலையாகும். இதைத்தான் மோட்சம் என்று கூறுவர். ஒருவன் தான் சாகும் சமயத்திலாவது, இந்த நிலையை அடையும் வகையில் தன்னை மனம், மெய், மொழிகளால் பக்குவப்படுத்திக் கொள்ள வேண்டும்.)*

இதிஸ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸு
ப்ரஹ்மவித்யாயாம் ।
யோகசாஸ்த்ரே ஸ்ரீகிருஷ்ணார்ஜுன
ஸம்வாதே ।
ஸாங்க்யயோகோ நாம
த்விதீயோ஽த்யாய: ॥

*''பிரம்ம அறிவை அருளுவதும், யோக சாத்திரமானதும் 'ஸ்ரீகிருஷ்ணன் அர்ச்சுனன் ஆகிய இருவரிடையே நடந்த உரையாடலானதும் ஆகிய இந்த பகவத்கீதை என்னும் உபநிஷத்தின் கண்' இது இரண்டாம் அத்தியாயமாகிய ஸாங்கிய யோகமாகும்.*

*(இரண்டாம் அத்தியாயம் முற்றிற்று)*

# மூன்றும் அத்தியாயம்

## கர்ம யோகம்

### அர்ச்சுனன் கூறியது:

ஜ்யாயஸீ சேத்கர்மணஸ்தே
மதா புத்திர்ஜனார்தன ।
தக்கிம் கர்மணி கோரே மாம்
நியோஸஜயஸி கேசவ ॥ (1)

*"ஜனார்த்தனா, கர்மத்தைவிட ஞானம் சிறப்பானது என்பது தங்களுடைய கருத்தானால் கேசவா, என்னை ஏன் கொடுவினையில் சம்பந்தப்படுத்துகிறீர்கள்."*

வ்யாமிச்ரேணேவ வாக்யேன
புத்திம் மோஹயஸீவ மே ।
ததேகம் வத நிஸ்சித்ய யேன
ச்ரேயோஸஹமாப்னுயாம் ॥ (2)

*"ஒன்றுக்கொன்று முரண்பாடான வார்த்தைகளால் என் அறிவைக் குழப்பத்தில் ஆழ்த்துகிறீர்கள் என்று எண்ணுகிறேன். எனக்கு நலம் தருவதான ஒன்றை மட்டுமே உறுதியாக கூறவும்".*

(வினை ஆற்றுவதை ஒரு கடமையாகக் கொள்ளாமல், ஒரு சிறந்த யோகசாதனமாக மனிதன் மேற்கொள்ள வேண்டும்

என்பது பகவானின் பெரு விருப்பமாகும். அவ்வாறு விருப்பு வெறுப்பற்று, பயன் கருதாது தன் கடமையைச் செவ்வனே செய்பவனால்தான் அவன் எதையும் நிறைவேற்றும் ஆற்றல் பெற்றவனாகிறான் இந்த நிலையே அவனை சிறந்தயோகியாக மாற்ற உதவும். ஆகவேதான் கர்ம மார்க்கத்தையும், ஞான மார்க்கத்தையும் இங்கு பகவான் குறிப்பிடுகிறார். இந்த நிலையில் அர்ச்சுனனுக்கு எது சிறந்தது எனும் ஐயம் வந்து விடுகிறது. அதனை அடுத்து செய்யுளில் பகவான் விளக்க முற்படுகிறார்.)

**கண்ணன் கூறுகிறார்:**

லோகே஽ஸ்மின்த்விவிதா
நிஷ்டா புரா ப்ரோக்தா மயானக ।
ஞானயோகேன ஸாங்க்யானாம்
கர்மயோகேன யோகினாம் ॥ (3)

''குற்றமற்றவனே, ஆத்ம விசாரணை செய்பவர்களுக்காக ஞானயோகம் என்றும், அதனைக் கடைப்பிடிப்பவர்களுக்காக கர்ம யோகம் என்றும் இரு வகையான நல்ல வழிகள் என்னால் முன்பேயே கூறப்பட்டுள்ளன''.

(நுண்மான் நுழைபுலம் (நுண்ணறிவு) மனத்திட்பம், துறவு ஆகியவற்றின் மூலம் பண்பட்ட அறிவினால் ஆத்ம சொரூபத்தை (இதய கமலத்தில் வீற்றிருக்கும் அப்பரம் பொருளை) நேரிடையாக உணர்ந்து கொள்ள முடிந்தால் அப்பயிற்சிக்கு ஞான யோகம் என்று பெயராகும். விதிக்கப்பட்ட நல் வினைகளை முறையாகச் செய்து வரும்போது அறிவானது மேம்படுகிறது. அதனைக் கொண்டு ஆத்ம சொரூபத்தை அறியலாம். ஆகவேதான் ஞானயோகமும், கர்மயோகம் எனப்படும் வினையாற்றுதல் ஆகியன இரண்டும் அந்த ஆத்ம சொரூபத்தை அறிந்துகொள்ள இரண்டு வழிகளாக விளங்குகின்றன.)

ந கர்மணா மனாரம்பாந்நைஷ்கர்ம்யம்
புருஷோ஽ச்னுதே ।

**ந ச ஸந்யஸனாதேவ ஸித்திம்**
**ஸமதிகச்சதி ॥** (4)

*''மனிதன் (தனக்கு விதிக்கப்பட்ட) வினைகளை முழுவதுமாகச் செயலாற்றுவதற்கு முன்பேயே அவனுக்கு வினை விடுதலை கிடைப்பதில்லை. வெறும் துறவு மனப்பான்மையினால் அவன் நிறைவான ஒரு நிலையை அடையமுடியாது.''*

*(கற்க வேண்டிய கல்வியைக் கற்பதற்கு முன்பேயே ஒருவன் கல்விச் சாலையை (பள்ளிக்கூடத்தை) விட்டு வெளியேறுவது என்பது அவனுக்கு அரைகுறை அறிவினைத்தான் அளிக்கும். அதனால் பயனில்லை. அதுபோல்தான் உலக வாழ்க்கை என்னும் பள்ளியும் விதிக்கப்பட்ட கடமைகளை முழுவதுமாக ஒருவன் ஆற்ற வேண்டியது கட்டாயமாகும். பூ ஒன்று கனியாக வேண்டுமென்றால், அப்பூவானது பிஞ்சு, காய், முதிர்ந்த காய் எனும் நிலைகளைக் கடந்தாக வேண்டும். அப்போது தான் கனிக்குச் சுவை இயற்கையாகும்.)*

**''ந ஹி கஸ்சித் க்ஷணமபி ஜாது**
**திஷ்டத்யகர்மக்ருத் ।**
**கார்யதே ஹ்யவச: கர்ம ஸர்வ:**
**ப்ரக்ருதிஜைர்குணை: ॥** (5)

*''ஒருவினாடிப்பொழுதும் யாராலும் செயலாற்றுமல் இருக்கமுடியாது. ஏனென்றால், இயற்கையினால் பெறப்பட்ட பண்புகளினால் எல்லா உயிர்களும் தங்களையறியாமலேயே வினையாற்றும் வகையில் திகழுகின்றன''.*

*(சத்வம் (நல்ல உயர் பண்புகள் கொண்டு அமைவது) ரஜஸ் (எப்போதும் செயலாற்றிக் கொண்டிருப்பது) தமஸ் (தீய குணங்களைக் கொண்டு விளங்குவது) எனும் மூன்று குணங்களைக் - கொண்டு திகழ்வது இயற்கை. இக்குணங்களினால் இயக்கப்படும் மனிதன் வினையாற்றுவது என்பது தவிர்க்கமுடியாத ஒன்றுகும். உறங்கும்போதும் கூட மூச்சுவிடுதல் எனும் வினையை நாம் நம்மை அறியாமல் செய்து கொண்டிருக்கின்றேம்.)*

**கர்மேந்த்ரியாணி ஸம்யம்ய ய**
**ஆஸ்தே மனஸா ஸ்மரன் ।**
**இந்த்ரியார்த்தான்விமூடாத்மா**
**மித்யாசார: உச்யதே ॥** (6)

*''புலன்களை அடக்கினாலும், அப்புலன்களினால் பெறப்படும் இன்பங்களை மனதால் அசைபோடும் அறிவற்ற ஒருவன், பொய்யான ஒழுக்கத்தை உடையவனென்றே அழைக்கப்படுவான்''.*

*(மனமானது எப்போதும் எதையாவது எண்ணிக் கொண்டிருக்கும். அது அதன் இயல்பு. கற்பனைக்குக்கூட எட்டாத விஷயங்களையும் மனம் எண்ணி அசைபோடும் இயல்பினதாகும். அத்தகைய மனம் கொண்டவர்கள், தங்கள் ஐம்புலன்களை மட்டும் செயலாற்ற முடியாமல் செய்வது என்பது நம்மைநாமே ஏமாற்றிக்கொள்வதற்கு ஒப்பாகும். அசிங்கத்தைத் தொட்ட கையைக் கழுவிக் கொள்ளலாம். ஆனால் மனம் அசிங்கமானால் அதனால் விளையும் செயல்களும் அசிங்கப்படும். மனத்தை அடக்காமல் ஐம்பொறிகளை அடக்குபவன் பொய்வாழ்க்கை வாழ்பவனாவான். அதுபோன்று, அறியாமையில் இருந்து கொண்டு தனக்கு விதிக்கப்பட்ட கர்மங்களை- வினைகளை ஆற்றுவதிலிருந்து ஒருவன் தவறுவானாயின், அவன் ஒரு போலிவாழ்க்கை வாழ்வானாவான்.)*

**யஸ்த்விந்த்ரியாணி மனஸா**
**நியம்யாரபதேऽர்ஜுன ।**
**கர்மேந்த்ரியை: கர்மயோகமஸக்த:**
**ஸ விசிஷ்யதே ॥** (7)

*''அர்ச்சுனா, ஆகவே ஐம்பொறிகளை மனதைக் கொண்டு அடக்கி, பற்றுகளைவிட்டு, ஐம்பொறிகளைக் கொண்டு வினை செய்பவனே சிறந்தவனாவான்''.*

*(அறிவை தூயதாக்கிக் கொண்டு தெய்வீக சிந்தனையுடன் நமக்கு விதிக்கப்பட்ட கடமைகளைச் செயலாற்றுவதினால் நாம் கொண்டுள்ள ஐம்புலன்களும் மேலானதாக விளங்கிடும்.)*

**நியதம் குரு கர்ம த்வம் கர்ம**
**ஜ்யாயோஹ்யகர்மண: |**
**சரீரயாத்ராபி ச தே ந**
**ப்ரஸித்த்யேதகர்மண: ||** (8)

*''நாளும் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்வாயாக! செயலாற்ருமல் இருப்பதைவிட செயல்புரிவதுதான் சிறந்தது. செயல்புரியாமல் இருப்பவனால் தன் உடம்பைக்கூட பாதுகாத்துக்கொள்ளமுடியாது.''*

*(ஒருவனுக்கு வாழ்க்கை நடக்க வேண்டுமென்ருல் நாளும் தனக்குத் தேவையானவற்றிற்காக அவன் செயல்புரிந்தே ஆகவேண்டும். செயல்புரியாவிட்டால், அவன் உடம்பே அவனுக்கு ஒரு பிரச்சனையாக ஆகிவிடும். மனிதன் வளர வளர வாழ்க்கையில் அவன் செயல்கள் அதிகமாகின்றன, மாறிவிடுகின்றன. அப்போதுதான் அவனுக்கு வாழ்க்கையில் ஒரு பிடிப்பு இருக்கும்.)*

**யக்ஞார்த்தாத்கர்மணோsன்யத்ர**
**லோகோsயம் கர்மபந்தன: |**
**ததர்த்தம் கர்ம கௌந்தேய**
**முக்தஸங்க: ஸமாசர ||** (9)

*''யக்ஞ கர்மத்தைத் தவிர, மற்றைய கர்மங்களெனும் வினைகளால் இந்த உலகமானது கட்டப்படுகிறது. குந்தியின் புதல்வனே(அர்ச்சுனனே) யக்ஞத்திற்கான வினையை எந்தவித பற்றும் இன்றி நன்ருகச் செய்துமுடி''.*

*(யக்ஞ கர்மம் என்பது உயர்ந்த நோக்கத்திற்காகச் செய்யப்படும் வினையாற்றலாகும். மிருகமானது தன் பசிக்காகத் தன் இனத்தையே அழித்திடும் பண்புடையது. மனிதனானவன் தன் இன்பத்தை முதலிலும் பிறகும் பார்க்கும் இயல்புடையவன். ஆனால் மக்கள் சேவையே மகேசன் சேவை எனக் கொண்டு, செய்திடும் சமுதாயத்தொண்டு, வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் தாம் வாடிய வள்ளலாரைப்போன்று பொதுநலம், தியாகம், பக்தி உணர்வில் செய்திடும் இறைத் தொண்டு போன்ற உணர்வுகளின்*

அடிப்படையில் ஆற்றிடும் கர்மங்கள் (வினையாற்றல்கள்) யாவும் பெரும் வேள்வியாகக் கருதப்படும். இந்த வேள்வித் தீயில் குளிப்போர்க்குக் காலப்போக்கில் வினைகளால் எந்த விதமான எல்லைகளும் ஏற்படா. கட்டுப்பாடுகளும் விதிக்கமுடியாது. இந்த 'யக்ஞகர்மம்' எனும் அறவேள்வியைச் செய்யும் அளவு அவன் அறிவாலும், உணர்ச்சிகளாலும் பண்படுத்தப்படுகின்றான். உயர்வு பெறுகின்றான்).

ஸஹயக்ஞா: ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா
புரோவாச ப்ரஜாபதி: |
அனேன ப்ரஸ விஷ்யத்வமேஷவோs
ஸ்த்விஷ்டகாமதுக் || (10)

''படைப்பின் ஆரம்பத்தில், பிரம்ம தேவன், யக்ஞத்துடன் (யக்ஞமனப்பான்மையுடன்) மக்களையும் படைத்து, இதனைக் கொண்டு முன்னேறுங்கள். இதுவே உங்களுக்கு (எதனையும் தரும்) காமதேனுவாக அமையட்டும்.''

(படைப்பின் ரகசியமே மனிதன் ஆண்டவனை அடைவதுதான். ஆண்டவனை அடைவது என்பது துறவு கொண்டு, ஊண், உறக்கம் மறந்து எப்பொழுதும் தியானத்தில் அமர்ந்து விட்டால் அடையப்பெறும் பேறு அல்ல. இறைவனை அடைவதற்கு முன்பாக, மனிதன் மனிதனாக விளங்கிடல் வேண்டும். அதற்கான முதல் தகுதி தனக்கு நன்மை தருவன பிறர்க்கும் செய்தல்: தனக்குக்கேடு விளைவது எதுவோ அதனைப் பிறர்க்குச் செய்யாதிருத்தல். ஆகவேதான் செய்யும் வினைகளை, அதன் பயன் எதிர்பார்க்காது செய்பவர்களிடம், அவர்கள் கேட்காமலேயே, எதிர்பார்க்காமலேயே பிறர்க்குப் பயன்படும் விஷயங்கள் அவர்களிடம் வந்துசேரும். எனவே பொதுநலத்துடன் தன் கர்மாக்களைச் செய்பவனிடம், யக்ஞமானது (தூயவினைகள் ஆற்றும் ஆற்றல்) எல்லாம் தரும் 'காமதேனு' எனும் பசுவாக விளங்குமாம்.)

தேவான் பாவயதானேன தே தேவா
பாவயந்து வ: |
பரஸ்பரம் பாவயந்த: ச்ரேய:
பரமவாப்ஸ்யத || (11)

''இந்த யக்ஞத்தால் தேவர்களைக் காப்பாற்றுங்கள். தேவர்கள் உங்களைக் காப்பாற்றட்டும். ஒருவருக்கொருவரைப் பாதுகாத்துக்கொண்டு, அதிக நன்மைகளைப் பெறுவீர் களாகுக.''

(இங்கு யக்ஞம் என்பதற்கு மேலும் சிறப்பு சேர்க்கப்படுகிறது. மேலும் இச்செய்யுளில் வரும் தேவர்கள் என்பதற்கு மேலான குணம் கொண்ட மனிதர்கள் என்று பொருள் கொள்ளலாம். அத்தகைய மனிதர்களை நாம் வளர ஆவன செய்யவேண்டுமாம். அவர்களுக்கு நேரடியாகவோ, மறைமுகமாகவோ ஒத்துழைப்பும் உதவியும் செய்ய வேண்டுமாம். தன்னலம் கருதாது வாரி வழங்கும் வள்ளல் சிறந்த 'யக்ஞகர்மம்' (தெய்வீக வினையாற்றுதல்) செய்கின்றான். அதனால் ஏழைகள் பாதுகாக்கப்படுகிறார்கள். அத்தகு சிறப்பு வள்ளல் தன்மை கொண்ட அவர்களுக்கு நாம் ஏதேனும், சிறிதேனும் கொடுத்தால் அது அவ்வள்ளல்களைக் காப்பாற்றுவதற்கு (தொடர்ந்து அவர்கள் தொண்டு செய்யும் வினை ஆற்றுவதற்கு) நாம் துணையாகின்றோம். ஆம் நம்பொருளே அவர் மூலமாக நம்மிடையே உள்ளோர்க்குப் பங்கிடப்படுகிறது. இவ்வகையில் இறைவனை நற்பண்புகளோடு வழிபடும்போது, நம்முள்ளேயும் இறைமைப்பண்புகள் மேலும் உருவாக, திடமாக அமைய வழிவகுக்கப்படுகிறது.)

**இஷ்டான் போகான்ஹி வோ**
**தேவா தாஸ்யந்தே யக்ஞபா விதா: ।**
**தைர்தத்தானப்ரதாயைப்யோ யோ**
**புங்க்தே ஸ்தேன ஏவ ஸ: ॥** (12)

''யாகத்தால் (யக்ஞத்தால்) காப்பாற்றப்பெற்ற தேவர்கள் (மேன்மக்கள்) உங்களுக்குத் தேவையான விருப்பமான போகங்களை அளிப்பார்கள். அவ்வாறு அவர்களால் அளிக்கப்பெற்று அவற்றை அனுபவித்துக் கொண்டு பிறகு அவர்களுக்கு கைம்மாறு (மறுஉதவி) செய்யாது இருப்பவர்கள் திருடர்களாவார்கள்''

(ஓர் இனிமையான கனியை மாமரத்திலிருந்து பறித்து உண்ணுகிறபோது, அத்தகைய மரத்தை நட்டவன், அவன் செய்த யாகத்தின் பலனாகும். ஒருவன் செய்த யாகத்தின் பலனை மற்றொருவன் அனுபவிக்கிறான். எதிர்காலத்தில் பலர் பயன்பெறுவார்கள் என்று ஒரு சிறு மாஞ்செடியை பல ஆண்டுகளுக்கு முன்பு, பரந்த, பொது நலமனப்பான்மையால் ஒருவன் நடுகின்றான். மரம் கனி கொடுக்கும் போது அவன் உயிருடன் இருந்திருக்கமாட்டான். ஆனால் அவனுடைய சமுதாயத்தினர் எதிர் காலத்தில் அவன் செய்த திருத்தொண்டால் பயனுறுகின்றனர். ஒருவன் செய்த யாகத்தின் பலனை மனதிற்கொண்டு அவன் வழியில், இன்று அநுபவிக்கும் ஒருவன், நாளை இம்மண்ணில் வாழ்வோர் பயனுற தம் வாழ்க்கையில் ஒரு 'யோககர்மா' வை -புனித வினையாற்றலை மேற்கொள்ள வேண்டும். அவ்வாறு செய்யாது தவறும் ஒருவன் திருடனைவிட மோசமானவனாகக் கருதப்படுவான். ஒருவர்க்கொருவர் காப்பாற்றிக் கொள்ளும் முயற்சியே இறைமை உணர்வுகளை நம்மிடையே வளர்க்கின்றது. அதனால் ஒரு நல்ல சமுதாயம் உருவாகின்றது.)

யக்ஞசிஷ்டாசின: ஸந்தோ
முச்யந்தே ஸர்வகில்பிஷை: ।
புஞ்ஜதே தே த்வகம் பாபா யே
பசந்த்யாத்மகாரணாத் ॥ (13)

''யாகத்தின்போது மீதமாவதை உண்ணும் நல்லவர்கள் அவர்கள் செய்த எல்லா பாவங்களிலிருந்து காப்பாற்றப்படு கின்றனர். ஆனால் சுயநலத்தோடு தங்களுக்காகவே சமைத்திடும் பாவிகள் பாவத்தையே அறுவடைசெய்கின்றனர்.''

(எந்தவிதமான வினையை ஆற்றும் போதும் (எந்தவிதமான கர்மாவை செய்தபோதும்) அதில் பொதுநலமும், கடவுள் சிந்தனையும் அடங்கியிருக்க வேண்டும். தான், தனது, தனக்கு எனும் உணர்வுகளினால் செய்யும் எந்தசெயலும் அவனைப் பற்றுள்ள வாழ்க்கைக்கே இட்டுச் செல்லும். அது அவனை மேலும் பாவக்குழியில் தள்ளவே செய்யும்.)

அன்னாத் பவந்தி பூதானி
பர்ஜன்யாதன்னஸம்பவ: |
யக்ஞாத்பவதி பர்ஜன்யோ யக்ஞ:
கர்மஸமுத்பவ: || (14)

"உணவிலிருந்து உலக உயிர்கள் தோன்றுகின்றன. மழையிலிருந்து உணவு கிடைக்கின்றது. யாகத்திலிருந்து மழை பெய்கிறது. யாகத்திற்கு பிறப்பிடமாக கர்மா விளங்குகிறது".

'இச்செய்யுளுக்குரிய பொருளைப் பின்னிருந்து படிக்க வேண்டும். யாகத்தின் பயன் சிறப்பாக அமைய வேண்டுமாயின் செய்யும் வினை (கர்மா) புனிதமாக இருக்கவேண்டும். அவ்வாறு வினையாற்றுபவர்கள் உயர்ந்தோராக-மேன்மக்களாகக் கருதப்படுவர். அதுபோன்ற அறவோர் இருப்பதால் மழை அவர்கள் வேண்டிய மட்டும் பெய்கிறது. மாதம் மும்மாரி பெய்யும் போது, உணவு வகைகள் தடையின்றி விளைகின்றன. அத்தகைய உணர்வின் உதவியால் உலக உயிர்கள் தோன்றுகின்றன. ஆகவே, முறைப்படி பொதுநலமனப்பான்மையுடன் வினையாற்றல் வேண்டும் என்பது இங்கு மேலும் வலியுறுத்தப்படுகிறது.

கர்ம ப்ரஹ்மோத்பவம் வித்தி
பிரஹ்மாக்ஷர ஸமுத்பவம் |
தஸ்மாத் ஸர்வகதம் ப்ரஹ்ம
நித்யம் யக்ஞே ப்ரதிஷ்டிதம் || (15)

"கர்மமானது (வினையானது வேதத்தினின்று தோன்றியது என்பதை அறிவாயாக. அந்த வேதம் பரம்பொருளான இறைவனிடமிருந்து வந்தது. ஆகவே எங்கும் பரந்துள்ள வேதமானது எப்பொழுதும் யாகத்தில் நிலைகொண்டுள்ளது".

(வேதம் அல்லது பிரம்மா என்பது முக்குணங்களின் இருப்பிடமாய்,. இடம், பொருள், ஏவல் எனும் எல்லைக்குட்பட்டதாய் உள்ளது. அதாவது இயற்கையின் கூறுகளைக் கொண்டு விளங்குகிறது. இந்த இயற்கையாம் வேதமானது, ஆதிநாதனாகிய இறைவனிடமிருந்து தோன்றியது. வாழ்க்கையே வினை வடிவமாகத் திகழ்வதால்,

செய்யும் எந்த கர்மாவும்( வினையும்) வாழ்க்கையை மாற்றுகிறது. வினை உயர்ந்த நோக்கத்துடன் விளங்கும்போது எண்ணம் சிறந்தோங்கியிருக்கும்போது யாகமும் பெருமைக்குரியதாக விளங்குகிறது. அதனால் அந்த யாகப்பலனும் பன்மடங்கு உயர்ந்ததாகத் திகழ்கிறது. ஆகவே பயன் கருதாதகருமமே, பின்னால் பலர் பயன்பெற வழிவகுக்கிறது. இதுதான் படைப்பின் குறிக்கோளுமாகும்.)

**ஏவம் ப்ரவர்த்திதம் சக்ரம்**
**நானுவர்தயதீஹ ய: ।**
**அகாயுரிந்த்ரியாராமோ மோகம்**
**பார்த்த ஸ ஜீவதி ॥** (16)

''இந்த மண்ணுலக வாழ்கையான இகத்தில் இவ்வாறு சுழலப்பட்டுள்ள (கர்ம) சக்கரத்தைப் பின்பற்றுதவன், பார்த்தனே! பாவத்தைக் கொண்ட வாழ்க்கையைக் கொண்டவனாவான். ஐம்புலன் இன்ப நுகர்ச்சிகளிலேயே மூழ்கி, வீணுகத்தான் நாட்களைக் கழிக்கின்ருன்.''.

(இறைவன் மனித உயிர்களைப் படைத்தது தூய்மையான வினைகளை ஆற்றித் தன் பிறவிக்குப் பெருமை சேர்த்து, இறைவனின் அருமை பெருமைகளை அறியவேதான். அதனை மறப்பவன், ஒரு மிருகவாழ்க்கையை மேற்கொள்கின்ருன். அவன் பிறப்பு மற்றவர்க்குப் பயனில்லை.)

**யஸ்த்வாத்மாதிரேவ ஸ்யாதாத்**
**மத்ருப்தஸ்ச மானவ: ॥**
**ஆத்மன்யேவ ச ஸந்துஷ்டஸ்தஸ்ய**
**கார்யம் ந வித்யதே ॥** (17)

''ஆனால் ஆத்மாவின்கண் இன்பத்தை அனுபவித்து, ஆத்மாவிலேயே முழுமனநிறைவு அடையப்பெற்று, ஆத்மாவிலேயே மனமகிழ்ச்சி கொள்பவனுக்கு 'வினை செய்தல்' எனும் கடமை கிடையாது.''

(இயற்கையானது எப்போதும் வினையாற்றும் இயல்புடையது. ஆத்மாவிடம் எந்தவித வினை இயல்பும்

கிடையாது. ஆனால் மனமானது இயற்கையின் ஒரு கூறுகும். அம்மனம் தான் நினைக்கும் யாவையும் ஐம்புலன்களின் வழியாக அனுபவிக்கும் இயல்புடையது. அதனால் மனத்தின் கர்மம் ஆசையின் அளவு அதிகரிக்கும் இயல்புடையது. அந்த மனம் இந்திரியங்களை விட்டு, ஆத்மாவுடன் கலந்துவிட்டால், அப்போது வினைஎன்பதும் எதுவும் நிகழாது. ஏனெனின் மனதின் இறுதிவினை ஆத்மாவுடன் கலப்பதே ஆகும். நதி பூமிமீது ஓடும் வரை ஓடுதல் அதன் வினை ஆகிறது. எப்போது அந்நதி கடலுடன் கலந்து விடுகிறதோ, நதி வினையிலிருந்து விடுதலை பெறுகின்றது. அதுபோன்று மனமானது ஆத்மாவை அடைந்து ஆத்மாவுடன் ஒன்றித்துப் போய்விடும்போது, அதுவே மனதின் உயர்வான வினையாகிறது. மனித உயிர்களின் இறுதி இலட்சியம் இந்த ஆத்ம லயம் தான்.)

**நைவ தஸ்ய க்ருதேனார்த்தோ**
**நாக்ருதேனேஹ கஸ்சன ।**
**ந சாஸ்ய ஸர்வபூதேஷு**
**கஸ்சிதர்த்தவ்யபாச்ரய: ॥** (18)

''ஆத்மாவுடன் கலந்தவனுக்கு ஏதாவது வினையொன்று செய்து மற்றொன்றைப் பெறுவதோ, அல்லது வினை ஆற்றுததால் இழப்பது என்பதோ கிடையாது. ஆகவே ஏதாவது ஒரு பொருளுக்காக அவன் பிற உயிர்களின் மீது ஆதாரப்படுவதும் இல்லை''.

(ஆத்மாவுடன் கலந்துவிட்ட ஒருவன் பரிபூரணமான இன்பத்தைப் பெற்றவனாகி விடுகிறான். அதற்குப்பிறகு அவனுக்குப் பெற வேண்டியதோ, அவனால் இழக்கப்பெறுவதோ எதுவும் கிடையாது. மேலும் எந்த உயிர்களை, எதிர்பார்த்தும் அவன் வாழத்தேவையில்லை. அதனால்தான் அவன் ஆத்ம ஞானி என்றழைக்கப்பெறுகிறான்.)

**தஸ்மாதஸக்த: ஸததம் கார்யம்**
**கர்ம ஸமாசர: ।**
**அஸக்தோ ஹ்யாசரன்கர்ம**
**பரமாப்னோதி பூருஷ: ॥** (19)

*''ஆகவே எங்குமே எந்த விதமான பற்றும் கொள்ளாமல் செய்யவேண்டிய கர்மாவை செய்க, ஏனெனில் பற்றின்றி வினைபுரியும் மனிதனே பெருமைக்குரிய நிலையை அடைகின்றான்''.*

*(இதயத் துடிப்பு இல்லாவிட்டால் உடல் இயக்கம், சிந்தனையாவும் இருக்காது. இருந்தாலும், ஓடிக்கொண்டிருக்கும் மனிதனோ, படித்துக்கொண்டிருக்கும் மனிதனோ, தன் இதயத்துடிப்பைப்பற்றி சிறிதும் நினைத்துக் கொள்வதில்லை. அதுபோன்றே மனிதனும் பற்றின்றி வினையாற்ற வேண்டும். பற்றின்றி வினையாற்றும் போது மனிதனுக்கு மனயமைதி கிடைக்கும். பற்றுடன், விருப்பு வெறுப்புடன் வினையாற்றினால், வினைப்பயனை மனதிற்கொண்டே அவனுடைய இன்பமும் துன்பமும் ஆதாரப் படுகின்றன. அதுபோது மனயமைதி என்பது அரிதாகின்றது. வினை செய்யாது மனயமைதி பெறமுடியாது. எனவே அம்மனயமைதிக்குப் பற்றற்ற வினையாற்றல் அமைதல் அவசியம்.)*

**கர்மணைவ ஹி ஸம்ஸித்தி**
**மாஸ்திதா ஜனகாதய: ।**
**லோகஸங்க்ரஹமேவாபி ஸம்பச்யன்**
**கர்த்துமர்ஹஸி ॥** (20)

*''ஜனகர் போன்றோர் வினையாற்றியே முக்தி பெற்றனர். இந்த உலகமானது அறவழியில் நன்முறையில் செல்லவேண்டுவதை நன்குணர்ந்தாவது வினையாற்றுதலை (கர்மம் செய்ய) ஒரு கடமையாகக் கொள்வாயாக'*

*(ஜனகர், அசுவபதி போன்றவர்கள் வெறும் நாடாளும் மன்னர்களாக மட்டும், அரசியல் அறம் தெரிந்தவர்களாக மட்டும் விளங்கவில்லை. வாழ்க்கை தர்மமும் நன்கு அறிந்துவைத்திருந்தார்கள். அதனால்தான் மக்களின் உடல்வளர்ச்சி - மனமகிழ்ச்சி மட்டுமின்றி அவர்களின் உள்ள உயர்வு, மனமுதிர்ச்சி ஆகியவற்றையும் மனதிற்கொண்டு தங்கள் கடமையினை ஆற்றினார்கள். அதனால் அவர்களுக்கு முக்தி எளிதானது.)*

**யத்யதாசாதி ச்ரேஷ்டஸ்தத்ததே**
**வேதரோ ஜன: ।**
**ஸ யத்ப்ரமாணம் குருதே**
**லோகஸ்ததனுவர்ததே ॥** (21)

''*உயர்ந்தவன் அல்லது மேலோன் எதைச் செய்கிறனோ அதனையே மற்றவர்களும் பின்பற்றுவார்கள். அவன் எதைச் சரியென்று கூறுகின்றனோ அதனையே இந்த உலகமும் பின்பற்றுகின்றது.*''

*(திருவருளால் மனிதன் மற்றைய உயிர்களைவிட ஏன், தன் இனத்தாரிலும் மேம்பட்டவனாக உயரலாம். அத்தகை யோரிடம் தெய்வத்திருவருளும் மிளிரும். அத்தகு மனிதர்களே குருவாகவும் ஆசார்யனாகவும் போற்றப்படுகின்றனர். அதே நேரத்து, அவர்தம் பொறுப்பும் அதிகமாகிறது. ஒரு சமூகத்தை நல்வழியில் நடத்தவும், அல்லது தீவழியில் தள்ளவும் கூடிய ஆற்றல் அவரிடம் அமைகின்றது. எனவே அத்தகு மனிதர்கள் இந்த உலகத்தை நன்னெறியில் நடத்திட முன்மாதிரியாகத் திகழ வேண்டும். இந்த ஆற்றல் அந்த ஆண்டவன் அளித்த ஒரு பேருக மனிதன் நினைக்க வேண்டும். இதனை மறந்தவன் அந்த ஆண்டவனையே மறந்தவனாகக் கருதப்படுவான். இந்த வகையில்தான் அரசியல் தலைவர்களும் ஆன்மீகத் தலைவர்களும் கருதப்படுகிறுர்கள்.)*

**ந மே பார்த்தாஸ்தி கர்தவ்யம்**
**த்ரிஷு லோகேஷு கிஞ்சன ।**
**நானவாப்தமவாப்தவ்யம் வர்த**
**எவ ச கர்மணி ॥** (22)

''*பார்த்தா (அர்ச்சுனா) மூவுலகத்திலும் எனக்கென்று எந்த விதமான கடமையும் இல்லை. பெருத ஒன்றை இனிமேல் பெற்றுக வேண்டும் என்னும் நிலமையும் இல்லை. இருந்தாலும், நான் வினையாற்றிக்கொண்டே இருக்கின்றேன்*''.

*(எவரும் எதிலும் எப்போதும் இருந்துகொண்டு இந்த உலகத்தை இறைவன் இயக்கிக்கொண்டிருக்கின்றுன். மகாபாரதப் போரினால் கிருஷ்ணனுக்குக் கிடைத்திடும் நன்மை தீமை எதுவும் கிடையாது. ஆயினும், அந்தப் போரின் போது,*

*மற்றைய எல்லோரையும் விட அவன்தான் (இறைவன்) அதிகமாக பல வகைகளில் நேரிடையாகவும் மறைமுகமாகவும் வினையாற்றியுள்ளான்.)*

**யதி ஹ்யஹம் ந வர்தேயம் ஜாது**
**கர்மண்யதந்த்ரித: |**
**மம வர்த்மானு வர்தந்தே**
**மனுஷ்யா: பார்த்த ஸர்வச: ||** (23)

*''அர்ச்சுனா, தளர்வில்லாமல் ஒய்வில்லாமல் நான் என் வினையை (கர்மாவை) செய்யாவிட்டால், மனிதர்கள் என் வழியையே எங்கும் பின்பற்றிவிடுவார்கள்.''*

*(தலைவன் என்பவன் மற்றவர்களிடமிருந்து உயர்ந்தவனாக இருப்பவனாகும். அவர்களிடம் நல்ல பண்புகள் பல இருந்தாலும், முறையற்ற பண்பு ஒன்றிருந்தாலும் அதுதான் பெருமளவில் பலருக்குத் தெரியும். ஆகவே குறையொன்றும் இல்லாது இருத்தலே தலைவனுக்கு அப்போது தான் அவன் ஒரு சிறந்தவழிகாட்டியாக அமைவான்.)*

**உத்ஸீதேயுரிமே லோகா ந குர்யாம்**
**கர்ம சேதஹம் |**
**ஸங்கரஸ்ய ச கர்த்தா ஸ்யாமு-**
**பஹன்யாமிமா: ப்ரஜா: ||** (24)

*''நான் வினையாற்ருவிடில் இந்த உலகங்கள் யாவும் அழிந்து போய்விடும். ஜாதி கலப்புக்கும் நானே காரணமாகி, மக்களை கெடுத்தவனாவேன்.''*

*இருவர்க்கும் உள்ள வேற்றுமை கண்ணுக்குத் தெரியும் சும்மா இருப்பவர்களின் உடல்தான். முறையாக அவரவர்களுக்குரிய தொழில் செய்தால் தான் (வினையாற்றினால்தான்) அவர்களுடைய பெருமை சிறப்பு மற்றவர்களுக்குத் தெரியவரும். இல்லாவிட்டால், அவர்கள் தங்கள் குலம் அழிய அவர்களே வழி செய்தவர்களாவார்கள்.)*

**ஸக்தா: கர்மண்யாவித்வாம்ஸோ**
**யதா குர்வந்தி பாரத |**

**குர்யாத்வித்வாம்ஸ்ததாஸக்தஸ்சி-**
**கீர்ஷுர்லோக ஸங்க்ரஹம் ||** (25)

''பார்த்தா, பற்றுடன் (பயனை எதிர்பார்த்து) படிக்காதவர்கள் வினையாற்றுதலைப் போன்று, (நன்குப் படிக்க) அறிஞர்கள் (அவ்வாறு) பற்றில்லாது உலகத்தில் நன்னெறி காட்டுவதற்காக வினையாற்றுகின்றனர். ஆனால் உலகத்திற்காக அறிஞர்கள் வினையாற்ற வேண்டும் என்றும் அறிவுறுத்தப்படுகிறது. அதனால்தான் அவர்கள் ஞானிகள் என்று அழைக்கப்படுகிறார்கள்.)

## பகவான் கூறியது

**ந புத்திபேதம் ஜனயேதக்ஞானாம்**
**கர்மஸங்கினாம் |**
**ஜோஷயேத்ஸர்வகர்மாணி வித்வான்**
**யுகத்: ஸமாசரன் ||** (26)

''ஞானியானவன், வினையாற்றுவதில் மிகுந்த பற்றுள்ள பாமரர்களிடத்து மனக்கலக்கத்தை ஏற்படுத்தக்கூடாது. எல்லாவிதமான வினைகளிலும் தானே ஈடுபட்டுக்கொண்டு, மற்றவர்களையும் அதில் ஈடுபடுத்த வேண்டும்''.

'பிறவி ஒன்று வந்து வாய்த்தபின், அம்மனிதன் வீணாக வாழ் நாளை கழிப்பதைவிட சிறந்தது, அவன் பற்றுடன் வினையாற்றுவதாகும். பற்றில்லாது வினையாற்றுவது என்பது ஞானியர்க்குமட்டுமே முடியும். சாதாரண மனிதர்கள் தங்கள் சுயநன்மைக்காவது பற்றுடன் விளங்குவதால்தான், அவர்கள் தொடர்ந்து வினையாற்றிக் கொண்டிருக்கின்றனர். அவர்களிடம், 'இம்மை மறுமை பயன் பெற பற்றற்று வினை புரியுங்கள்' என்று அறிவுரை கூறுவது முழு அளவில் வெற்றியைத் தராது.

இம்மைப் பயன் (இப்பிறவியில் பயனடைய) பெறவாவது மனிதர்கள் பற்றுடன் செயல் புரிய வேண்டும். ஞானியரைப் போன்று பற்றற்று வினையாற்ற அவர்களால் முடியாது போகலாம். ஆகவே அவரவர்களுக்கு இடப்பட்ட

வினையாற்றவாவது, ஞானிகள் அவர்களுக்கு ஓர் முன்னுதாரணமாக விளங்கிட நாளும் தீவிரமாக வினையாற்றுவதில் ஈடுபடவேண்டும்.)

**ப்ருக்ருதே: க்ரியமாணனி குணை:**
**கர்மாணி ஸர்வச: ।**
**அஹங்காரவிமூடாத்மா கர்த்தா**
**ஹமிதி மன்யதே ॥** (27)

*''இயற்கையின் குணநலன்களால் எங்கும் (கர்மங்கள் எனப்படும்) வினைகள் செய்யப்பட்டுவருகின்றன. மமதையால் தன்னை இழந்தவன் 'நான்தான் செய்பவன்' என்று கூறிக்கொள்கிறான்''*

*(இயற்கையானது சத்வம், ரஜஸ், தமஸ் எனும் மூன்று குணங்களைக் கொண்டு, வினையின் வடிவாக விளங்குவது. இயற்கை வேறு, தன்னுள் இருக்கும் ஆத்மா வேறு என்று அரியாதவன் புத்தியற்றவன். தன்னைக் கடந்து வெளியில் இருக்கும் ஒன்றைத் தானாகக் கருதுவது மமதையின் அடையாளமாகும்.)*

**தத்த்வவித்து மஹாபாஹோ குணகர்ம**
**விபாகயோ: ।**
**குணா குணேஷு வர்தந்த இதி**
**மத்வா ந ஸஜ்ஜதே ॥** (28)

*''ஆனால், அகன்ற தோள்களை உடையவனே! குணகர்மத்தை அறிந்த தத்துவ ஞானியானவன், குணங்கள் குணங்களில் வெளியிடப்படுகின்றன என்பதை அறிவதால், அவர்கள் பற்றற்று இருக்கின்றனர்''*

*(ஐம்பொறிகளின் குணங்கள், அப்பொறிகள் வெளிப்படுத்தும் உணர்ச்சிகளில் (குணங்களில்) அடங்கியுள்ளன. ஒலியை எழுப்புவது காற்றின் குணம். அவ்வொலியை நாம் நம் காதால் கேட்கிறோம். ஆகவே காற்றின் குணம் குணமாகிய ஒலியைக் கேட்கிறது. இதுபோலவே மற்றைய பொறிகளும். ஆனால் இந்தப் புறத்தாக்குதல்களை*

ஞானியானவன் பொருட்படுத்துவதில்லை. ஏனெனில் அவருடைய ஆத்ம உயிரோட்டத்தை அக்குணங்கள் தாக்குவதில்லை. ஆகவே இதை அனுபவித்து அறிந்த ஞானிக்கு பற்று என்பது இல்லை.)

**ப்ரக்ருதேர்குணஸம்மூடா: ஸஜ்ஜந்தே**
**குணகர்மஸு ।**
**தானக்ருத்ஸ்னவிதோ மந்தான்**
**க்ருத்ஸ்னவின்ன விசாலயேத் ॥** (29)

''இயற்கையின் குணங்களின் தாக்குதல்களினால் மயக்குண்டு, அக்குணங்களின் செயல்களில் பற்றுவைக்கும் சாதாரண மனிதரின் சிந்தனையை, தெளிந்த அறிவுள்ளவர்கள் கலங்கச்செய்யக்கூடாது''.

(வினையாற்றுதல் என்பது இயற்கை விதியாகும். சிந்தனை தெளிவற்றவர்களுக்கு இவ்வுண்மை தெரியாது. மேலும் ஆத்மாவுக்கு வினையாற்றுதல் எனும் நியதி இல்லை என்பது தெரியாது. இச்சமயத்தில் ஆத்மா, அநாத்மா ஆகியவற்றின் விளக்கங்கள் மனிதனை மேலும் குழப்பும். ஆகவே அவர்கள், அவர்கள்தம் மனமுதிர்ச்சி பெறும் வரையில், தெளிந்த அறிவுபெறும் வரை அவர்கள் தங்களுக்குரிய வினையாற்றவே அனுமதிக்கப்படவேண்டும்.)

**மயி ஸரவாணி கர்மாணி**
**ஸம்ன்யஸ்யாத்யாத்மசேதஸா ।**
**நிராசீர்நிர்மமோ பூத்வா யுத்யஸ்வ**
**விகதஜ்வர: ॥** (30)

''வினைகளையெல்லாம் (கர்மங்கள்) எனக் கொப்புவித்து, அறிவை, நடக்கும் செய்கைகளில் ஈடுபடுத்தி, ஆசை மற்றும் ஆணவத்தை விடுத்து, மனப் போராட்டம் இன்றி போரில் ஈடுபடுவாயாக''.

(நடக்கும் நிகழ்ச்சிகள் யாவும் இறைவனின் எண்ணமே, நாம் வெறும் கருவி மாத்திரமே, நடக்கும் நல்லதும் கெட்டதும் அவனால்தான் என்று நாம் நினைத்து, நம் கடமைகளை, வினைகளை ஆற்றுவோமேயானால் நம்முள் மனசஞ்சலம்

என்பது ஏற்படாது. அப்போது கடமையினை மிகவும் செம்மையாகச் செய்யவும் முடியும்.)

**யே மே மதமிதம் நித்யமனு**
**திஷ்டந்தி மானவா: ।**
**ச்ரத்தாவந்தோSனஸூயந்தோ**
**முச்யந்தே தேSபி கர்மபி: ॥** (31)

''என்னுடைய இந்த அறிவுரையை எந்த மனிதர்கள் ஆர்வத்துடனும், பொறாமையின்றியும் பின்பற்றுகின்றார்களோ, அவர்களும் வினையிலிருந்து விடுதலை பெறுகிறார்கள்''.

(இச்செய்யுளில் ஆர்வம், பொறாமை எனும் இரு சொற்கள் பேசப்படுகின்றன. இங்கு ஆர்வம் என்பது முயற்சி, பணிவு, நம்பிக்கை, உழைப்பு எனும் பண்புகளின் மீதே ஆதாரப்படுகின்றது. கடவுள் பற்றிய செய்திகளை ஒருவர் நமக்குக் கூறும் போது, அதில் நம்மளவில் புரியும் விஷயங் களைக் கண்டு மகிழ்கிறோம். அவற்றை அனுபவிக்கின்றோம். புரியாத போது, கேட்கும் செய்திகள் மிகவும் உயர்ந்தவை என்று நம்புகிறோம். அதற்கு மதிப்பளிக்கின்றோம். அதனால் நம் அடைவது உயர்வேயாகும். அதுபோன்று, நமக்கு ஏமாற்றம் ஏற்படும்போது, மற்றவன் அதனால் பயன்பெறும்போது நம்முள் அவன் மீது கோபம் ஏற்படுகிறது. இதுவே பொறாமை ஆகும். மற்றவனை உயர்வாக நினைக்குமளவு நாம் நம் வாழ்வில் உயர்கின்றோம். அப்போது அங்கு பொறாமை என்பதற்கு இடம் வராது, அங்கு அன்பு, அமைதி, வளர்ச்சி ஆகியனவே மலரும்.)

**யே த்வேததப்யஸூயந்தோ நானு**
**திஷ்டந்தி மே மதம் ।**
**ஸர்வஞானவிமூடான்ஸ்தான்வித்தி**
**நஷ்டானசேதஸ: ॥** (32)

''என்னுடைய இந்த அறிவுரையை மற்ற யார் பழித்துப் பின்பற்றத் தவறுகிறார்களோ, அவர்கள எந்தவித ஞானமும், அறிவும் அமையப்பெறுதமுட்டாள்களாக விளங்கி அழிந்துபோவார்கள் என்பதை அறிவாயாக''

*(சொல்லும் அறிவுரைகளை தக்க தருணத்தில் தக்க முறையில் பயன்படுத்திகொள்ள வேண்டும். தவருகப் பயன்படுத்து பவர்கள் தீமையையே அடைவார்கள். கத்தி கொண்டு பழங்களையும் நறுக்கலாம். தவருக பயன்டுத்தினால் அதனால் உயிர்க்கும் உடலுக்கும் தீமை ஏற்படலாம். அதுபோன்றே ஆத்ம தத்துவ விசாரங்களை அறிந்து கொண்டு, அவற்றிற்குத் தக்கவாறு வாழ்க்கையை அமைத்துக் கொள்ளாதவர்கள் துன்பத்தையும் இழப்பையும் எதிர்கொள்கிருர்கள்.)*

**ஸத்ருசம் சேஷ்டதே ஸ்வஸ்யா:**
**ப்ரக்ருதேர் ஞானவானபி ।**
**ப்ருக்ருதிம் யாந்தி பூதானி நிக்ரஹ:**
**கரிஷ்யதி ॥** (33)

*''ஞானியும் தன்னுடைய மன இயல்புக்குத் தக்கபடி நடந்துகொள்கிருன். மற்றைய உயிர்களும் அதனதன் இயல்புகளையே பின்பற்றுகின்றன. இவற்றைத் தடுப்பதால் நடப்பதென்ன? (ஒன்றுமில்லை.)''*

*(மனிதன் உள்ளிட்ட எல்லா உயிர்களுக்கும் அவ்வற்றிற்கென பல இயல்புகள் இயற்கையிலேயே அமைந்துள்ளன. சில மலர்கள் மணம் வீசும். ஒருசில மலர்களுக்கு மணம் இருக்காது. மலர்களிடையே பல நிறமுண்டு. அதுபோலவே ஞானியர்களின் குணங்களிலும், இயல்புகளிலும் மாறுபாடு உண்டு. ஒருவர் கடவுளை தன் மனத்திலேயே கண்டு தெளியலாம். மற்றவர் பார்க்கும் வெளிப்பொருட்களில் இறைவனைக் காணலாம், அவர்களுடைய வழிமுறைகள், குண இயல்புகள், உள்ளப்போக்குகள் வேறுபட்டாலும், இறைவனைக் காண்பதுதான் அவர்கள் தம் குறிக்கோளாகும். இயற்கைக்குக் கட்டுப்பட்ட மனிதர்கள், எடுத்திட்ட பலபிறவிகளின் வினைகளுக்கேற்ப விளங்குபவர்கள். அவர்கள் தம் இயற்கை இயல்புகளை தடுப்பதோ, மாற்றுவதோ அவர்களது வளர்ச்சிக்குக் கேடு விளைவிக்கலாம். அவர்கள் தம் இயல்புகளுக்கேற்ப வளர்வதே, அவர்களை முன்னேற்றமடையச் செய்யும். இந்துமத தத்துவங்கள் எவரையும் எந்த*

வகையிலும் கட்டுப்படுத்தவில்லை. அதில் அதற்கு நம்பிக்கையும் இல்லை.)

**இந்த்ரியஸ்யேந்த்ரியஸ்யார்த்தே**
**ராகத்வேஷௌ வ்யவஸ்திதௌ ||**
**தயோர்ந வசமாகச்சேத்தௌ**
**ஹ்யஸ்ய பரிந்தினௌ ||** (34)

*''ஐம்பொறிகளுக்கு அவைகாணும், உணரும் விஷயங்களில் விருப்பு வெறுப்பு ஏற்படுவதுண்டு. அவ்விஷயங்களுக்கு அடிமை கொள்ளலாகாது. அவ்விஷயங்களே அவனுக்கு எதிரிகளாவர்.''*

*(உயிர்களிடையே பல வகைகளில் இயற்கையாக வேற்றுமைகள் உள்ளன. சத்வ, ரஜோ, தமோ குணங்களின் அடிப்படையில் மக்களின் இயல்புகள் மாறுபடுகின்றன. அதே போன்று ஐம்புலன்களின் வழியாக அனுபவிக்கப்படும் விஷயங்களின் காரணமாக பெறப்படும் விருப்புவெறுப்பு பயனாக மனிதர்களின் மன இயல்புகள் மாறுபடுகின்றன. பாகற்காய் ஒருவர்க்கு பிடிக்கலாம். மற்றவர் அதனை கசப்பென்று ஒதுக்கலாம். இது போன்ற புலன் நுகர்ச்சியால் மாறுபட்டுள்ள மனிதர்களை மாற்றுவதே சாஸ்திரத்தின் வேலையாகும். இது போது மனிதர்களின் சுயசிந்தனையும் பெரிதும் முக்கியத்துவம் பெறுகிறது. மனிதனிடம் உள்ள விருப்பு வெறுப்பு உணர்வுகளை நினைத்தபோது மாற்றிட முடியாது. மனிதன் விருப்பு வெறுப்புகளை மறந்து இறைவனிடம் தன்னை ஒப்படைத்தால், ஐம்புலன்களின் இன்ப துன்பங்கள் அவனை ஒன்றும் செய்யாது.)*

**ச்ரேயான் ஸ்வதர்மோ விகுண:**
**பரதர்மாத்ஸ்வனுஷ்டிதாத் |**
**ஸவதர்மே நிதனம் ச்ரேய:**
**பரதர்மோ பயாவஹ: ||** (35)

*''நல்ல முறையாக பிற தர்மத்தைப் பின்பற்றுவதைவிட, குண மொன்றுமில்லாத தன்னுடைய தர்மத்தை*

மேற்கொள்வதே சிறந்தது. தனக்கு இடப்பட்ட தர்மத்தால் இழப்பதும் நல்லது. பிறருடைய தர்மம் பயத்தை தருவதாகும்.''

*(விருப்பு வெறுப்பு காரணமாக மனிதன் இயல்பான தன்தொழிலை மாற்றிக் கொள்வதால் அவனுக்குக் கிடைத்திடும் உறுதியான பயன் ஏதும் இருக்காது. அது ஆற்றில் ஒரு கால், சேற்றில் ஒருகால் எனும் நிலையில்தான் இருக்கும். லாப நஷ்டம், வெற்றி தோல்வி, விருப்புவெறுப்பு காரணமாக ஒருவன் மற்றொரு சமயத்தைத் தழுவுவானேனாயின் அது அவனது உறுதியற்ற மனதையே காட்டும். பக்குவமற்ற உள்ளத்தையே குறிக்கும். பிறதர்மத்தை பின்பற்றும்போது அச்சமே அவனைப் பின்தொடர்ந்து வரும். அதுபோது அவன் நாளும் செத்து செத்து வாழ்க்கையை மேற்கொள்கிறான். அரச குலத்தில் பிறந்த அர்ச்சுனனது தர்மம் சூழ்நிலைவரின் போர்புரிவது ஆகும். அதுபோது விருப்பு வெறுப்போ, அச்சமோ அவனுக்கு வரக்கூடாது. அதுபோது துறவறம் மேற்கொள்ள அவன் நினைப்பது, அவன் தன் கடமையிலிருந்து தவறும் வீர்னென்றே, பயந்தோடும் வீரனென்றே அழைக்கப்படுவான். உறுதியற்ற மனப்போக்கு இறுதியில் துன்பத்திற்கே வழிகாட்டும்.)*

## அர்ச்சுனன் கூறியது:

**''அத கேன ப்ரயுக்தோsயம் பாபம்**
**சரதி பூருஷ: ।**
**அனிச்சன்னபி வார்ஷ்ணேய**
**பலாதிவ நியோஜித: ॥** (36)

*''விருஷ்ணி குலத்தைச் சார்ந்தவனே, மனிதனானவன் தான் விரும்பாவிட்டாலும், வலுக்கட்டாயமாகச் செயல்படு பவனாய் எதற்காக வலிந்து பாவத்தைச் செய்கின்றான்?''*

## பகவான் கூறியது:

**''காம ஏஷ க்ரோத ஏஷ**
**ரஜோகுண ஸமுத்பவ: ।**

மஹாசனோ மஹாபாப்மா
வித்த்யேனமிஹ வைரிணம்: ॥ (37)

''ரஜோ குணத்திலிருந்து பிறந்த இந்த காமம் எனும், பொறுமை எனும், உணர்வுகள் தான் எதனையும் அழித்துவிடக் கூடியன. பெரும் பாவத்திற்கு இட்டுச்செல்வன. இவைகளே நம்முடைய பகைவர்கள் என்பதை அறிக''

(மனிதனின் துன்பம், அவனுடைய ஆசையின் காரணமாகத் தான் பிறக்கின்றது. ஆசை பேராசையாகும்போது விளைவுகளும் விபரீதமாகின்றன. ஏற்படும் பிரச்சனைகளும் தீவிரமடைகின்றன. தன்னைப் பிறரோடு ஒப்பிட்டுக்கொண்டு, தன் வசதிகளை உயர்த்திக் கொள்ள ஆசைப்படுகின்றான். இது சாதாரண மனிதனின் மன இயல்பு- வாழ்க்கை நீரோட்டம்- ஆசை நிறைவேறும்போது பெரும் மகிழ்ச்சி அடையும் அவன், அவ் ஆசையே நிறைவேறாத போது, முதலில் துவண்டு விடுகின்றான். பின்பு ஏமாற்றத்தின் விளைவால் பொறுமை அடைகின்றான். அதன்பயன் அவனுள் அமைதியின் எதிரியான கோபம் என்பது உண்டாகிறது. கோபத்தின் காரணமாகக் குணத்தை, பண்பை இழக்கின்றான். அதுவே அவனுடைய வீழ்ச்சிக்கு அடிகோலுகின்றது. கோபத்திற்கு எந்த விதத்திலும் குறையானது அல்ல காமம் எனும் உணர்வு. இவ்வுணர்வானது அளவு, காலம் ஆகியவற்றை கடந்து எதனையும் பொசுக்கிவிடும். நெருப்புக்குச் சமமானது. இவ்விரு உணர்வுகளே மனிதனின் ஆரம்ப, இறுதி எதிரிகளாகும். இவற்றை அடக்குபவன் ஞானியாகத் திகழ்வான்.)

தூமேனாவ்ரியதே வஹ்னிர்யதா-
தர்சோ மலேன ச: ।
யதோல்பேனாவ்ருதோ கர்பஸ்ததா
தேனேதமாவ்ருதம்: ॥ (38)

''நெருப்பானது புகையினாலும், கண்ணாடியானது தூசு எனும் அழுக்கினாலும், குழந்தையானது கருப்பையினாலும் எவ்வாறு மூடப்பட்டிருக்கின்றனவோ, அதுபோன்று, ஞானமானது ஆசையினால் மூடப்பட்டுள்ளது.''

(இச்செய்யுளில் புகை, தூசு, கருப்பை எனும் மூன்று சொற்கள் கையாளப்பட்டுள்ளன. நெருப்பு, கண்ணாடி, குழந்தை ஆகியவற்றை மனமாக கொண்டால், மேற்கூறிய மூன்று பொருள்களும் ஆசையாகக் கொள்ளலாம். ஆம் ஆசையானது மூன்று நிலைகளாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. நெருப்பைச் சுற்றி புகை மூண்டு இருக்கும் போது, அப்புகையினைச் சற்றே காற்று கொண்டு (புகை மூட்டத்தின் அடர்த்தி கொண்டு காற்று வேறுபடும்.) விலக்கினால், உடனே உள்ளே இருக்கும் நெருப்பு சுடர்விட்டு எரிகின்றது. சூழ்ந்திருக்கும் புகையும் மறைகின்றது. இப்புகையானது சத்வ குணத்தோடு கூடிய ஆசையாகக் கூறப்படுகிறது. ஆம் அறிவு எனும் விவேகத்தால் ஆசையை விலக்கினால், அங்கே மனம் எனும் மறைந்து கொண்டிருந்த ஆத்ம சொருபத்தைக் காணலாம். இரண்டாவது ஆசையினை விலக்குவதற்குச் சிறது முயற்சி அதிகம் தேவை. ரஜோகுணம் எனும் ஆசையைப்போக்க, எவ்வாறு கண்ணாடிமீது உள்ள தூசினைக் கையினால் துடைக்க நம், உடல் உறுப்பு இயக்கத்தைப் பயன்படுத்துகிறோமோ (நாமே நகர்ந்து சென்று நம் கைகொண்டு தூசியைத் துடைக்க வேண்டுமல்லவா) முயற்சி சற்று அதிகமாக, பயிற்சி சற்றுக் கூடுதலாக இருக்கவேண்டும். மூன்றுவது ஆசை தமோ குணம் எனும் வகையைச் சார்ந்தது. இது காலம் கனியும் போதுதான் விலக்கமுடியும். குழந்தையானது கருப்பையிலிருந்து தானாக வெளிவர ஒருகுறிப்பிட்ட காலம் உள்ளது. அதுபோன்று தமோகுண ஆசையைப் போக்க காலமும் தகுந்த முயற்சியும் அடிப்படை அவசியமாகிறது.)

"ஆவ்ருதம் ஞானமேதேன ஞானினோ
நித்ய வைரிணா ।
காமருபேண கௌந்தேய
துஷ்பூரேணானலேன ச ॥ (39)

"குந்தியின் புதல்வனே, ஞானியின் நிரந்தர, (நாளும் எதிர்கொள்ளும்படியான) எதிரியும் காமத்தின் உருவாக இருப்பதும், எப்போதும் நிரம்பாததும், போதும் எனும் பண்பு இல்லாததும் ஆகிய ஆசையினால் ஞானம், (எனும் பேரறிவு) மூடப்பட்டுள்ளது."

(ஆசை எனும் பெரும் நோய் உலகம் முழுவதும் உள்ள ஒரு தொற்றுநோயாகும். ஆசை இல்லாத மனிதனே இல்லை. மனக்கட்டுப்பாடு இல்லாத அக்ஞானியானவன், ஆசைக்கு அடிமையாக இருக்கும்போது, ஆசையின் விளைவுகள் நன்மையாக இருக்கும் போது, ஆசையின் மீது அவனுக்குக் காதலே ஏற்படுகின்றது. அவ் ஆசையே அவனுக்குத் தீமை ஏற்படுத்தும் போது, அதனை சற்றே அடக்க முயற்சிக்கின்றான். அதில் வெற்றியும் அடைகின்றான். ஆனால், அக்கட்டுப்பாடு அவனிடம் நிரந்தரமாவதில்லை. மறுபடியும் ஆசைக்கு அடிமைப்படுகிறான். ஆனால் ஞானி எனும் துறவியானவர், ஆசையின் விளைவுகளை நன்கறிந்தவர். ஆகவே அதனை ஒரு பரம எதிரியாகவே நினைக்கின்றார். அதனால் அதற்கு எந்த நிலையிலும் அவர் வசப்படுவதில்லை. மேலும் ஆசையின் வெளிப்பாடு ஒன்றல்ல. அது எடுக்கும் உருவங்கள் பலப்பலவாகும். தீர்க்க தீர்க்க வந்துகொண்டேயிருக்கும் இயல்புடையது ஆசை. அதுபோன்று, ஆசைக்குப் போதும் என்ற அளவு இல்லை. காமத்தின் வசம் ஈடுபடும் ஆசை, உடல் வலுவுள்ள வரை ஏன், மனம் தள்ளாடும் வரை தொடர்ந்துவரும். காமத்தை அடக்கினால் எதனையும் ஆளமுடியும்.)

"இந்த்ரியாணி மனோபுத்திரஸ்யா
திஷ்டானமுச்யதே ।
ஏதைர்விமோஹயத்யேஷ
ஞானமாவ்ருத்ய தேஹினம் ॥ (40)

''ஐம்புலன்களும், மனமும், அறிவும் ஆசைக்கு இருப்பிடமாக விளங்குகின்றன. இவற்றால் ஞானமானது மறைய, மனிதன் மயக்கத்தில் மூழ்குகிறான்.''

(மனிதனைப் படைத்திட்ட இறைவனை, அவன் புகழை எண்ணித் தன் பிறவியை உயர்த்திக்கொள்ள மனிதனுக்கு உறுதுணை செய்யவே ஐம்புலன்கள் கொடுக்கப்பட்டன. ஆனால் மனிதன் தன் ஆசையின் காரணமாக, சிற்றின்ப வாழ்விற்காக அந்த ஐம்புலன்களையே தவறாகப் பயன் படுத்திக்கொள்ளும் அவலத்தில் வீழ்ந்து விடுகிறான். எதிரியின்

*பலவீனங்களைத் தெரிந்து கொண்டால்தான், ஒருவனால் அவனை எளிதில் வெற்றிகொள்ளமுடியும். அதுபோன்று மனிதனின் எதிரியான ஆசையானது தான் வாழும் கோட்டையான உடலில் உள்ள ஐம்புலன்களின் பலவீனங் களை அறிந்துகொண்டு, அவற்றின் மூலம் தன் விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ளுகின்றது. பலவீனங்களுக்கு வசப்படாது இருத்தலே உண்மையான ஆண்மையாகும்.)*

**"தஸ்மாத்தவமிந்த்ரியாண்யாதௌ**
**நியம்ய பரதர்ஷப ।**
**பாப்மானம் ப்ரஜஹி ஹ்யேனம்**
**ஞானவிக்ஞான நாசனம் ॥** (41)

*"ஆகவே, பரத வீரனே, நீ முதலில் ஐம்புலன்களை அடக்கி, அறிவையும் பேரறிவையும் அழித்திடும் பாவத்தின் உருவமான ஆசையை பூண்டோடு அழித்துவிடு".*

*(மணிதனானவன் ஆசைக்கு உதவிடும் ஐம்புலன்களை அடக்கிப் பழகினால் அவனால், ஆசையை வெல்வது எளிதாகும். கற்றதனால் வரும் அறிவையும், இறைமையைப் பற்றித் தெரிந்து கொள்ளும் பேரறிவையும் அழித்திடும் ஆசையை, (இதனைச் செய்வதால் அவ்ஆசை பாவத்தின் மொத்த உறைவிடமாகக் கருதப்படுகிறது) அடக்குபவனே சிறந்த வீரன் என்று இங்கு அறிவுறுத்தப்படுகிறது.)*

**இந்த்ரியாணி பராண்யாஹு**
**ரிந்த்ரியேப்ய: பரம் மன: ।**
**மனவஸ்து பரா புத்திர்யோ**
**புத்தே: பரதஸ்து ஸ: ॥** (42)

*"ஐம்புலன்கள் (அவை இருக்கும்) உடலைவிட பெரியனவாகும். அவற்றைவிட பெரியது மனம். அறிவானது அந்த மனத்தைவிட பெரியதாகும். அந்த அறிவைவிட ஆத்மாவானது சிறந்ததாகும் (பெறியதாகும்)".*

*(பெரிய உடலைவிட அவ்வுடல் பெற்று இருக்கும் ஐம்பொறிகள் பெரியன. ஏனென்றுல், இயக்கம் எனும் போது, செயல்திறன் எனப்படும் போது, உடலைவிட அதிக அளவில்*

பரந்த அளவில் ஐம்பொறிகள் செயல்படுகின்றன. கண்ணுக்குத் தெரியாத மணத்தை மூக்கு நுகர்கிறது. எங்கோ கேட்கும் ஒலியை காது கேட்கிறது. எங்கோ இருப்பதை இங்கிருந்தே, இடத்தை விட்டு நகராதே பொருளை கண் பார்க்கின்றது. தூரத்திலிருக்கும் பொருளை கை தொடுகிறது. ஆகவே பரந்த அளவில் அவை செயல்படுவதால் அவை உடலைவிட பெரியவனாகக் கருதப்படுகின்றன. இந்த ஐம்பொறிகளைவிட, மனமானது பெரியது. ஏனென்றால், கண்ணுக்குத் தெரியாத, காதுக்குக் கேட்காத, கைக்கு அகப்படாத பொருளை, ஒலியை அது இங்கிருந்தபடியே எண்ணி இன்புற முடிகிறது. அதுபோது அந்த மனதின் எல்லை அதிகமாவதால், அது பொறிகளை விட பெரியதாகும். அறிவோ அந்த மனதைவிட பெரியதாகும். ஏனென்றால் அறிவுக்கு நல்லது கெட்டது அறியும் ஆற்றல் உண்டு. மனம் அலைபாயும் இயல்புடையது. அதனை ஒரு இடத்தில் ஒரு எண்ணத்தில் நிறுத்தமுடியாது. அது பலவீனமானது. ஆனால், அறிவுக்கு அந்த மெய்ப்பொருளின் இயல்பையும் அறிந்து கொள்ளக்கூடிய திறன் உள்ளது. ஆனால் அது (அறிவு) மனதைவிட பெரியது. ஆனால், ஆத்மாவானது, அந்த அறிவைவிட பெரியது. ஏனென்றால் அது அறிவுக்கு எட்டாதது. உடல், புலன்கள், மனம், அறிவு ஆகியவற்றை ஆசையானது உதவியாகக் கொண்டு ஆத்ம சொரூபத்தை மறைக்கின்றது. சூட்சுமம் எனப்படும் நுண்ணியதை அடைய, ஆசையும் தன் வலிமையை அதிகரிக்கும் தன்மை உடையது. பெரும் தூசி படிந்த காற்றும் இடிமின்னலும் அடிக்கும் போது, உடல்மீது அழுக்கு படிகின்றது. ஆனால் அவ் உடலில் உள்ள கண், காது போன்றவை தூசிலிருந்தும், ஒலியிலிருந்தும், ஒளியிலிருந்தும் தங்களைக் காப்பாற்றிக் கொள்கின்றன. மேலும் பார்க்கும் நிலை கண்ணுக்குப் போய்விடும் தருணத்து, மனதானது, தனது பிற புலனின்பங்களின் காரணமாக அக்கண்ணையே பறிக்கக்கூட சம்மதிக்கிறது. மேலும், தன் அறிவை பெருக்குவதற்காக மனமானது அடக்கப்படுகிறது. அதாவது மனம் தன் இஷ்டப்படி செல்ல தடை விதிக்கப்பட்டு அது சிறை வைக்கப்படுகிறது. அதுபோது புத்தியின் காரணமாக ஏற்படும் ஆசையானது, மனதின் மீது உள்ள ஆசையைவிட பெரியதாகிறது. அதாவது ஆசையின் வலிமை அதிகமாகிறது.)

"ஏவம் புத்தே: பரம் புத்த்வா
ஸம்ஸ்தப்யாத்மானமாத்மனா ।
ஜஹி சத்ரும் மஹாபாஹோ
காமரூபம் துராஸதம் ॥ (43)

"மகாபாகுவே, இவ்வாறு அறிவைவிட மேலான ஆத்மாவால் ஆத்மாவை அடக்கி வெற்றிகொள்ள முடியாததும், ஆசை வடிவுடையதுமான எதிரியை அழித்து விடுவாயாக".

*(பெரிய கைகளை உடைய அர்ச்சுனன் மகாபாகு என்று இங்கு அழைக்கப்படுகிறான். ஆசையெனும் நோய் புலன்களையும், மனதையும், அறிவையும் தன் வசத்தில் கொள்ளும்வரை, மனிதனின் உலகப்பற்று அதிகமாகவே விளங்கும். இந்த நிலையே ஒருபோது அவனது சிறு ஆசைகூட நிறைவேறாத போது, அவனுக்குப் பெரும் துன்பங்களையே தரும். ஆம் ஒவ்வொரு சிற்றின்ப இன்பமும் துன்பத்திற்கே பிறகு வழிகோலுகின்றது. இதற்கு மாறாக உடலும் ஐம்புலன்களும், மனமும், அறிவும் இறை நினைப்பில் செயல்படுமானால், உள்ளத்தில் அருள் வேட்கை பெருக, நிலையற்ற இவ்வுலக மாய ஆசைகளில் பற்று அறுந்து விடுகிறது. பிறகு துன்பம் என்பதே அவனது வாழ்க்கையில் ஏற்படுவதில்லை.)*

"இதி ஸ்ரீமத்பகவத்கீதாஸூபநிஷத்ஸூ
ப்ரஹ்ம வித்யாயாம் ।
யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுன
ஸம்வாதே கர்மயோகோ நாம
த்ருதீயோऽத்யாய: ॥ (44)

"இது பிரம்ம அறிவை சொல்வதும், யோக நூலானதும், ஸ்ரீகிருஷ்ணன் மற்றும் அர்ச்சுனன் ஆகிய இருவர்க்குமிடையே நடைபெறும் உரையாடலுமாகிய ஸ்ரீபகவத்கீதை எனும் உபநிடதத்தில் உள்ள கர்மயோகம் என்ற மூன்றாவது அத்தியாயம் ஆகும்".

*(மூன்றாம் அத்தியாயம் முற்றிற்று)*

# நான்காம் அத்தியாயம்

## ஞான யோகம்

### கண்ணன் கூறியது

இமம் விவஸ்வதே யோகம்
ப்ரோக்தவானஹமவ்யயம் ।
விவஸ்வான்மனவே ப்ராஹ
மனுரிக்ஷ்வாகவேடப்ரவீத் ॥ (1)

''அழியாத இந்த யோகத்தை (ஞானகர்ம ஸந்யாஸ யோகம்) நான் விவஸ்வானுக்குக் கூறினேன். விவஸ்வான் அதனை மனுவுக்குச் சொன்னான். மனுவானவன் (இந்த யோகத்தை) இக்ஷ்வாகுவுக்குப் பகர்ந்தான்''.

*(சூரியனுக்கு விவஸ்வான் என்று பெயர். மனு என்பார் ஸ்மிருதியை இயற்றியவராவர். (மனுஸ்மிருதி) மனுவின் புதல்வன் இக்ஷ்வாகு. மேலும் அவன் சூர்ய குலத்தின் முதல் அரசனுமாவான். பெருமைமிகு இந்த யோகத்தைக் கற்றவர்க்கு இம்மை மறுமை இன்பம் எல்லாம் வந்தடையும் என்று கூறப்படுகிறது.)*

ஏவம் பரம்பராப்ராப்தமிமம்
ராஜர்ஷயோ விது: ।

**ஸ காலேனேஹ மஹதா யோகோ**
**நஷ்ட: பரந்தப ||** (2)

*''இவ்வாறு தலைமுறை தலைமுறையாக வந்துள்ள இந்த யோகமானது ராஜரிஷிகளுக்குத் (மாமுனிவர்கள்) தெரிந்திருந்தது. (ஆனால்) பரந்தப! காலப்போக்கில் இந்த யோகமானது இந்த மண்ணில் மறைந்துவிட்டது''.*

*(சரியாகச் சொல்பவர்கள் மறைந்ததாலும், அல்லது இல்லாததாலும், கேட்போர் இல்லாததாலும் யோகமானது மறைந்து விட்டது. வல்லவர்களும், நல்லவர்களும் இருந்தால்தான் நல்ல திட்டங்கள் உருவாகும். அதனால் சிறப்பும் பெருமையும் பயனும் எல்லோரும் அடைவர்).*

**ஸ ஏவாயம் மயா தேடத்ய யோக:**
**ப்ரோக்த: புராதன: |**
**பக்தோடஸி மே ஸகா சேதி**
**ரஹஸ்யம் ஹ்யேததுத்தமம் ||** (3)

*''நீ (அர்ச்சுனன்) என் (கண்ணன்) பக்தனாகவும் நண்பனாகவும் இருப்பவனாகையால் அந்த பழைய யோகமானது இன்று உனக்குக் கூறப்படுகிறது. இந்த யோகமே மிகச் சிறந்த மறை எனப்படும் ரகசியமாகும்.''*

*(மறைந்து வைக்கப்பட்டது இரகசியம் என்று கூறப்படும். மறை என்று அழைக்கப்படும். இதனை மறைத்து வைப்பதால் மற்றவர்க்கு அது தெரிவதில்லை. காலப்போக்கில் அது வழக்கொழிந்துபோக வாய்ப்பு உண்டு. ஏனென்றால், இரகசியத்தைக் கற்றுத்தரும் அறிஞர்களும், அதனைக் கேட்க வேண்டிய தகுதி கொண்ட மக்களும் இல்லாததால்தான். ஆகவே தகுந்தவற்றை, தேர்ந்தவற்றைத் தெரிந்துகொள்ள தன்னைத் தகுதி கொண்டவனாக ஆக்கிக் கொண்டால் தான், இயற்கையும் அவனுக்குச் சரிசமமாக உதவி செய்யும். இச்சுலோகத்தின் மூலம், தகுதியுடையவனாக அர்ச்சுனன் இருப்பதையும், அந்த ஒரு காரணத்தால் இந்த யோகம் வெளியுலகிற்குத் தெரிய வாய்ப்பு ஏற்பட்டுள்ளது என்பதும் கூறப்படுகிறது. ஒரு அகல் விளக்கின் மூலம் பல விளக்குகள்*

ஒளிபெற முடியும் என்பதைப்போன்று, ஒருவனுடைய ஆற்றலால் அவனைச் சூழ்ந்துள்ள இடமும் ஆற்றல் பெறுகின்றது என்பது அறிவுறுத்தப்படுகிறது.)

## அர்ச்சுனன் கூறியது

அபரம் பவரோ ஜன்ம பரம்
ஜன்ம விவஸ்வத: ।
கதமேதத்விஜானீயாம் த்வமாதௌ
ப்ரோக்தவானிதி ॥ (4)

''உமது (கண்ணனது) பிறப்பு பிந்தியது. (ஆனால்) விவஸ்வானுடைய பிறப்போ முந்தியது. நீர் அன்று அவர்க்குக் கூறியதாகக் கூறுவது எப்படி?''

(இந்த உலகம் தோன்றிய போது விவஸ்வான் தோன்றினான். ஆனால் துவாபர யுகத்தில்தான் வசுதேவனுக்குப் பிள்ளையாகக் கண்ணன் பிறந்தான்.ஆகவே பல ஆண்டுகளுக்கு முன்பு பிறந்த ஒருவனுக்கு, இப்போது பிறந்த ஒருவனால் எப்படி அறிவுறுத்தமுடியும், கற்பிக்கமுடியும் என்பதே அர்ச்சுனனது ஐயம்).

## பகவான் கூறியது

பஹூனி மே வ்யதீதானி ஜன்மானி
தவ சார்ஜுன ।
தான்யஹம் வேத ஸர்வாணி ந
த்வம் வேத்த பரந்தப ॥ (5)

''நீயும் நானும், அர்ச்சுனா, பலபிறவிகளை எடுத்துவிட்டோம். பரந்தபா, அவற்றை (அப்பிறவிகளை) நான் அறிவேன். நீ அறியவில்லை''.

(இறைவன் ஒவ்வொரு யுகத்திலும், ஒவ்வொரு நிலையிலும் தன்னைப் பல உருவங்களில் பிறவியெடுத்து வெளிப்படுத்துகின்றான். இறைவன் தன்னுடைய முன் பிறவிகளை என்றும் மறப்பதில்லை. ஏன் என்றால் அவன்

*இவ்வுயிர்களுக்கு நல்வழி காட்டவே தன்னை வெளிப்படுத்துகின்றான். ஆனால், பந்தபாசத்தால் வினை காரணமாக பிறவியெடுத்த மனிதன் தன் முன்பிறவிகளைப்பற்றி நினைக்கமுடியவில்லை. தன்னுடைய இரண்டு மூன்று வயதில் நடந்த நிகழ்ச்சிகளையே மனிதன் தன் நினைவில் கொண்டுவரமுடியாதபோது, முன்பிறவி நிகழ்ச்சிகள் என்பதற்குப் பேச்சே இல்லை. ஆகவே இறைவனான கண்ணன் தன் முன்பெடுத்த ஒருபிறவியின் போது, வேறு வடிவில் விளங்கி விஸ்வானுக்கு இந்த யோகத்தைக் கற்பித்தார் என்பதே பொருள்.)*

**அஜோऽபி ஸன்னவ்யயாத்மா**
**பூதானாமீச்வரோऽபி ஸன் ।**
**ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய**
**ஸம்பவாம்யாத்மமாயயா ॥** (6)

*''நான் பிறப்பில்லாதவன், அழிவில்லாதவன். உயிர்களுக்கெல்லாம் நான் ஈசன் (தலைவன்). என்றாலும், இயற்கையை என்வசம் கொண்டு, ஆத்மாவின் மாயையினால் நான் அவதாரம் எடுக்கின்றேன்''.*

*(இயற்கைக்குட்பட்டு உயிர்கள் பிறக்கின்றன. அந்த இயற்கையோ இறைவனுக்கு அடிமைபுரிகின்றது. தன்னுடைய மாயா வினோதத்தால் தனக்கு ஒரு பிறவி கொண்டு இம்மண்ணில் இறைவன் பிறக்கின்றான். தானே தனக்கு ஒரு வினையை (கர்மாவை) ஏற்படுத்திக்கொள்கிறான். தன் வினையின் மூலம், அப்பிறவியின் போது ஒரு செய்தியை அறிவிக்கின்றான் அவ்விறைவன். அதாவது மனிதனின் மேம்பாட்டிற்காக ஒரு வினையை அவன் மேற்கொள்வதே அச்செய்தியில் காணக்கிடக்கும். அந்த வினையை, இறைவன் மிகச் சுலபமாக ஏதோ ஒரு விளையாட்டாக மேற்கொள்கிறான்.)*

**யதா யதா ஹி தர்மஸ்ய**
**க்லவானிர்பவதி பாரத ।**
**அப்யுத்தானமதர்மஸ்ய**
**ததாத்மானம் ஸ்ருஜாம்யஹம் ॥** (7)

''பாரதா! எப்பொழுதெல்லாம் அறம் நீங்கிப்போய் (அழிந்தபோது) மறம் தோன்றுகின்றதோ அப்பொழுதெல்லாம் நானே என்னைப் பிறப்பித்துக் கொள்கிறேன்''.

(பாரத வம்சத்தில் பிறந்ததால், அர்ச்சுனன் 'பாரதா' என்று அழைக்கப்பெறுகின்றான். மனிதர்களைப் பெருமைப்படுத்தவே இறைவன் தன் முக்கியக் கடமையாகக் கொண்டுள்ளான். ஆகவே, அத்தகுமனிதன் வாழும் சமுதாயத்தில், அவனைக் கெடுப்பதற்காக தோன்றும் தீமைகளை அழிக்கவே, அவற்றினின்று மனிதர்களைக் காக்கவே இறைவன் கருணை கொண்டு இம்மண்ணில் பிறக்கின்றான்.)

பரித்ராணாய ஸாதுனாம் வினாசாய
ச துஷ்க்ருதாம் ।
தர்ம ஸம்ஸ்தாபனார்த்தாய
ஸம்பவாமி யுகே யுகே ॥ (8)

''நல்லவர்களைக் காப்பாற்றுவதற்காகவும், தீயோரை அடியோடு அழிப்பதற்காகவும், தர்மத்தை நிலைநிறுத்துவதற்காகவும், ஒவ்வொரு யுகம்தோறும் நான் பிறக்கிறேன்.''

(கனி கொடுக்கும் செடிகள் நன்கு வளரவேண்டுமாயின், பயிர்கள் நல்ல விளைச்சல் தரவேண்டுமாயின், செடிகளின் பயிர்களின் ஊடே இருக்கும் வேண்டாத செடிகளை, களைகளை அவ்வப்போது பிடுங்கி எறிய வேண்டும். மேலும் தக்க உரங்களை மண்ணில் போடவேண்டும். இல்லாவிட்டால் பயன்தரும் செடிகள், பயிர்கள் நாளடைவில் பட்டுப்போகவோ, தரமற்ற விளைச்சல்களுக்கோ இடம் தரும். ஆகவே வேண்டாத செடிகளை எப்படிப்பிடுங்கி எறிவது அவசியமோ, சமுதாயத்தில் நல்லவர்களுக்கிடையே, நல்லவர்களைக் கெடுத்துவிடும் தீயவர்களையும் உடனடியாகக் களைய வேண்டும். மரணத்தின் மூலமாகத்தான் அவர்களது ஆதிக்கத்தை, எண்ணிக்கையை குறைத்திட முடியும். ரஜோகுணம், தமோகுணம் மிக்குள்ளவர்களை ஒடுக்கினால்தான் சத்வகுணம் உள்ளோர் பெருகிட முடியும்.

*இந்தக் களையெடுக்கும் பணியைத்தான், இறைவன் தன் அவதாரங்களில் (நன்மை பெருக, தீமை அழிய) மேற்கொள்கிறான்.)*

**ஜன்ம கர்ம ச மே திவ்ய மேவம்**
**யோ வேத்தி தத்வத: |**
**த்யக்த்வா தேஹம் புனர்ஜன்ம**
**நைதி மாமேதி ஸோऽர்ஜுன ||** (9)

*"அர்ச்சுனா, இவ்வாறு எனது தெய்வீகமான பிறப்பையும், செயலையும் யார் ஒருவன் அறிகின்றானோ அவனுக்கு உடலை விட்டுச் சென்றபின் மறுபிறவி என்பது இல்லை, அவன் என்னையே வந்தடைகின்றான்."*

*(இறைவன் தன் மாயையினால் பிறப்பில்லாத தனக்கு ஒரு பிறப்பை ஏற்படுத்திக்கொள்கிறான். வினைகளுக்கு அப்பாற்பட்டு விளங்கும் அவன், நல்ல வினைகளை செய்பவனாகத் தன்னைக் காட்டிக் கொள்கிறான். இந்த கடவுட் பேருண்மையை அறிபவர்கள், பிறவியாகிய பெருங்கடலை வெகு எளிதாகக் கடந்து விடுவர். தெரியாத ஒரு விஷயத்தை மற்றவரிடம் சென்று அவர் கூற நாம் அறிந்து கொள்வது என்பது சற்றுக் கடினமான பயிற்சியாகும். அதே நேரத்து அந்த விஷயங்களை நல்ல நெறிகளை ஒருவர் வாழ்ந்து காட்டும் போது, அதை உடனிருந்து அல்லது அவ்வாழ்க்கையை நினைந்து நினைந்து அறிந்து கொள்வது என்பது மிகவும் எளிமையாகும். உடனடியாக பின்பற்றக்கூடியதுமாகவும் விளங்கும்.)*

**வீதராகபயக்ரோதா மன்மயா**
**மாமுபாச்ரிதா: |**
**பஹவோ ஞானதபஸா பூதா**
**மத்பாவமாகதா: ||** (10)

*"ஆசை, பயம், கோபம் அற்றவர்களாய், என் வசமாய், என்னையே அடைக்கலமாகக் கொண்டு, ஞானதத்வத்தால் புனிதர்களாகப் பலர், என்குணநலன்களைக் கொண்டவர்களாக விளங்கினர்."*

*(மனிதப் பிறவியின் நோக்கம் மனித இயல்பு மறைந்து இறை இயல்பு பெறவேண்டும் என்பதே. அதாவது மனிதன் மனதாலும், உணர்வாலும், உடலாலும் புனிதம் அடையவேண்டும். மனிதன் சிந்தனையாலும், செயலாலும் இறைபற்றிய நினைவுகளுடன் திகழ்வானேயானால் அவனுள் இறைப்பண்புகள் தானாகவே வந்து குடிகொள்ளும். காந்தத்துடன் கூடிய இரும்புத்துண்டு எவ்வாறு காந்த சக்தி பெறுகிறதோ, அதே போன்று இறைமைப் பண்புகளுடன் கூடிய மனிதனும் இறைவனுடன் ஒன்றித்து விடுகின்றான். இந்த நிலை ஏற்படவேண்டுமாயின் முதலில் மனிதன் தன்னை உயர்த்திக் கொள்ளவேண்டும். அதற்கு அவன் தன்னுள் உலவிடும் மறப்பண்புகளை அறவே களைய வேண்டும். மனிதனை இழிநிலைக்கு அழைத்துச் செல்லும் பண்புகளாக ஆசை, பயம், கோபம் போன்றன விளங்குகின்றன. இவற்றை விட்டொழிவதே மனிதன் உயர்நிலைக்கு இட்டுச் செல்லும் முதல் படியாகும்.)*

**யே யதா மாம் ப்ரபத்யந்தே**
**தாம்ஸ்ததைவ பஜாம்பஹம் ।**
**மமவர்த்தமானு வர்த்தந்தே**
**மனுஷ்யா: பார்த்த ஸர்வச: ॥** (11)

*''யார்யார் என்னை எவ்வாறெல்லாம் வணங்குகின்றார்களோ, அவர்களுக்கு நான் அவ்வாறே அருள் செய்கின்றேன். பார்த்தா, (அர்ச்சுனா) மக்கள் எப்போதும் என் வழியைத்தான் பின்பற்றுகின்றனர்''.*

*(மண்ணுலக இன்பத்திற்கும் போக வாழ்விற்கும், விண்ணுலக இன்பத்திற்கும் (முக்தி இன்பம்) அடிப்படைக் காரணமாக இருப்பவன் இறைவன். தன் மாயையினால் அவன் மக்களை அவர்களுடைய வினைப்பயன்களுக்கேற்ப மனம் மற்றும் அறிவு நிலைகளுக்கு ஏற்ப நடத்திச் செல்கின்றான். அதனால், மக்களும் தங்களுடைய மனம் மற்றும் அறிவு முதிர்ச்சிக்கேற்றவாறு, காலம் மற்றும் முயற்சியின் பின்னணியில், இறைவனை அடைகின்றனர். இதுபோது, அவர்கள் போக்கிலேயே இறைவனும் உடன் இருந்து, அவர்களைத் திருத்துகின்றான்.)*

**காங்க்ஷந்த: கர்மணாம் ஸித்திம்**
**யஜந்த இஹ தேவதா: ।**
**க்ஷிப்ரம் ஹி மானுஷே லோகே**
**ஸித்திர்ப்வதி கர்மஜா ॥** (12)

''வினைப்பயனை (அப்போது புரியும் கர்மங்களினால், விளையும் பயன்களை) பெற விரும்புபவர்கள் இம்மை வாழ்வில் (மண்ணுலக வாழ்க்கையில்) சிறுகடவுளர்களை வேண்டுகின்றனர். எனென்றால் வினையினால் பெறப்படும் பயன்களை இந்த மண்ணில் உடனே பெற முடிகின்றது.''

(மனிதர்களுடைய விருப்பங்கள் அவரவர்களுடைய மனமுதிர்ச்சிக்கேற்றவாறு அறிவின் மேன்மைக்கேற்றவாறு அமைகின்றன. புலனின்பங்களிலேயே அதிகமாக நாட்டம் கொண்டுள்ளவர்கள், தற்காலிகமான பயன்களையே எதிர்பாக்கின்றனர். அவற்றை அனுபவிப்பதையே தங்கள் பிறவியின் காரணமாகக் கருதுகின்றனர். அதற்காகச் சிறுசிறு தெய்வங்களையே நாடுகின்றனர். இன்றைய கண்ணோட்டத்தில் பார்ப்போமேயானால் ஒரு மாநில முதல்வருடன் சாமான்யன் நட்பு கொள்வது என்பது கடினம். ஒருவாறு நட்பு ஏற்படுமாயின் அதன் விளைவால் சாமான்யன் எதிர்பார்க்கும் பயன்களும் பெரியதாக அமையும். அவற்றை அம்முதல்வரும் தரக்கூடிய தகுதியும் பெற்றிருப்பார். ஆனால் அவ் அமைச்சரின் கீழ்ப் பணிபுரியும் அலுவலர்களிடமும் சாமான்யன் நட்புகொள்ளலாம். அதனால் அச்சாமான்யன் பெறுவதும், அவ் அலுவலர் தருவதும் சிறு சிறு பயன்களாகத்தான் அமையும். அது போன்றே அப்பரமனைத் தொழுவோர் பக்தி, ஞானம், முக்தி பெறலாம். சிறு சிறு தெய்வங்களை வழிபடுவோர், அவரவர்களுடைய மன, அறிவுநிலைக்கேற்றவாறு பயன்பெறுவர்.)

**சாதுர்வர்ணயம் மயா ஸ்ருஷ்டம்**
**குணகர்மவிபாகச: ।**
**தஸ்ய கர்த்தாரமபி மாம்**
**வித்த்யகர்த்தாரமவ்யயம் ॥** (13)

''குணங்களுக்கும், வினைகளுக்கும் தக்கவாறு நான்கு வர்ணங்களை (பிரிவினரை) நான் படைத்துள்ளேன். அதற்கு நான்தான் காரணம் (கர்த்தா) என்றாலும் என்னை அவிகாரி என்றும், அகர்த்தா என்றும் அறிவாயாக''.

(குணங்களுக்கிடையே நிலவும் வேறுபாடுகளைக் கொண்டு இறைவன் உயிர்களைப் படைக்கின்றான். முக்குணங்களுக்கிடையே உள்ள பிரிவால் நான்கு ஜாதிகள் (வர்ணங்கள்) ஏற்படுத்தப்பட்டுள்ளது. சத்துவகுணம் நிறைந்து விளங்குபவன் பிராம்மணன் என்றழைக்கப்படுகின்றான். சத்துவ குணம் சிறிதுடன் ரஜோ குணமும் கொண்டு விளங்குபவன் க்ஷத்திரியன் என்று சொல்லப்படுகிறான். சத்துவ, தமசு குணங்களுடன் ரஜோ குணம் அதிகமாகக் கொண்டு இருப்பவன் வைசியன் என்று பெயர் பெறுகின்றான். தமோ குணம் அதிக மாகவும் ரஜோ குணம் சிறிதும் கொண்டு இருப்பவன் சூத்திரன் என்று அழைக்கப்பெறுகின்றான். சத்துவத்தின் நிறம் வெள்ளை. ரஜோ குணம் சிவப்பு நிறம் கொண்டது. கருப்பு தமோ குணத்திற்குரியது. இவ்வகையில் பிராம்மணனுடைய நிறம் வெள்ளையாகவும், க்ஷத்திரியன் நிறம் சிவப்பாகவும், வைசியனுடைய நிறம் மஞ்சளாகவும், சூத்திரனின் நிறம் கருப்பாகவும் வந்தமைகிறது. ஆனால் இந்நிறங்கள் கண்ணுக்குத் தெரியும் உடல்மேல் (தோல்மேல்) கொண்டு விளங்குவன அல்ல.

வெள்ளைநிறம் கொண்டோரெல்லாம் பிராம்மணராக கருதப்படமாட்டார். கருப்பு நிறம் கொண்டோரெல்லாம் சூத்திரரும் அல்ல. இந்நிற வேறுபாடுகள் அவரவர்களுடைய குணநலன்களுடன் கூடிய மனத்தைப் பொறுத்தது ஆகும். அவ்வவ்குண இயல்புகளை ஒரு இலக்கணமாகக் கொண்டு விளங்கிட்ட போது அம்மக்கள் குறிப்பிட்ட ஜாதிகொண்டு அழைக்கப்பட்டனர். ஆனால் இன்றைய சமூக அமைப்பில் அந்த அளவுமுறை ஜாதிபிரிவுக்கு அடிப்படையாக அமையாது. ஒரே குடும்பத்தில் இருக்கும் நான்கு பேர், மேற்குறிப்பிட்ட குணங்களைக் கொண்டு வேறுப்பட்டிருப்பின் அக்குடும்பம் நான்கு ஜாதிகளைக் கொண்ட நபர்களைக் கொண்டு

விளங்குகிறது என்றே பொருளாகும். ஆம் குணநலன்கள் உயிர்ந்தோங்கும் அளவு, கீழ்நிலைக்கு போகும் அளவு சூத்திரன் பிராம்மணனாகவும், பிராம்மணன் சூத்திரனாகவும் மாறுவர். ஆகவே பிறப்பால் ஒருவன் தன்னை உயர்ந்த ஜாதி என்று அழைத்துக் கொள்ள முடியாது. குணங்களின் மேன்மை கொண்டு விளங்கும் எவரும் பிராம்மணனே. குணத்தில் கீழானவர் எவருமே சூத்திரனே)

**ந மாம் கர்மாணி லிம்பந்தி நமே**
**கர்மபலே ஸப்ருஹா ।**
**இதிமாம் யோடபிஜானாதி**
**கர்மபிந ஸ பத்யதே ॥** (14)

''வினைகள் யாவும் என்னைச் சேராது. எனக்கு வினைப்பயனில் ஆசை இல்லை. இவ்வாறு (இதை) என்னை அறிபவன் வினைகளுக்கு அடிமையாகமாட்டான்''.

*(இறைவன் எல்லாம் கடந்து இருப்பவன். அதே சமயத்து எல்லாவற்றையும் தமக்குள் கொண்டு விளங்குபவன். அதனால் மனிதனே ஆசைகளுக்குப் பிறப்பிடமானவன். தன்னிடம் இல்லாததை அவன் அடைய ஆசைப்படுகின்றான். வாழ்நாளில் அவன் அடைய முடியாத இவ்வுலக இன்பங்கள் ஏராளம். அவற்றை அடையவே அவன் பெரிதும் எப்போதும் முயற்சிப்பதால், ஆசைகளே அவனது வாழ்நாளை முடித்துவிடுகிறது. அவ்வாறு மனதை ஆசைகளுக்கு அடிமையாக்காமல், ஆசையற்ற, கர்வமற்ற வினைகளுக்கு அப்பாற்பட்ட இறைவனை அவன் நினைந்து வாழ்ந்தானே யானால் இறைவனைத் தன்னுள் காண முயற்சித்தானாயின், வினைகளின், ஆசைகளின்வழி அவன் தன்னை இழக்கமாட்டான்.)*

**ஏவம் ஞாத்வா க்ருதம் கர்ம**
**பூர்வைரபி முமுக்ஷிபி: ।**
**குரு கர்மைய தஸ்மாத்தவம்**
**பூர்வை: பூர்வதரம் க்ருதம் ॥** (15)

''முன்பிருந்த முமுக்ஷுக்களும் இவ்வாறு அறிந்துதான் வினையாற்றினர். ஆகவே நீயும் முன்பு முன்னோர்கள் செய்த படியே வினையாற்றுவாயாக''.

(அறிவுள்ளவன் வினைப்பயனை எதிர்பார்க்க மாட்டானே தவிர, வினையைதொடர்ந்து செய்தவனாகவே இருப்பான். ஏனெனில் அவன் கர்வம், ஆசை ஆகியவற்றைத் தன்னிடமிருந்து ஒழித்துவிடுகிறான். இறைவனைக் காணவேண்டுமென்று நினைத்த முன்னோர்கள் யாவரும் இந்த வழியைத்தான் பின்பற்றினார்கள்.)

**கிம் கர்ம கிமகர்மேதி கவயோऽப்யத்ர**
**மோஹிதா: ।**
**தத்தே கர்ம ப்ரவக்ஷ்யாமி**
**யஜ்ஞாத்வா மோக்ஷ்யஸேऽசுபாத்: ॥** (16)

''கர்மம் எது அகர்மம் எது என்று அறிவதில் அறிவாளிகளே தடுமாற்றம் கொள்கின்றனர். எது கர்மம் என்று அறிந்து, தீயவற்றிலிருந்து விடுபடுவர்யோ அதனை உனக்குக் கூறுவேன்''.

(தீயவற்றில் மிகவும் மோசமானது பிறவி எனும் நோயாகும். விலக்கமுடியாத இந்தப் பிறவி எனும் நோயிலிருந்து விடுதலை அடைவதற்குமுன், வினைகளைப்பற்றி அறிதல் அவசியம். உடலால் செய்யப்படும் பயிற்சிதான் வினை என்று கருதக்கூடாது.)

**கர்மணோ ஹ்யபி போத்தவ்யம்**
**போத்தவ்யம் ச விகர்மண: ।**
**அகர்மணஸ்ச போத்தவ்யம் கஹனா**
**கர்மணோ கதி: ॥** (17)

''கர்மத்தின் இயல்பை தெரிந்து கொள்ள வேண்டும். தள்ளப்படவேண்டிய கர்மம்(வினை) எது என்பதை அறிதல் அவசியம். கர்மத்தைக் கடந்த நிலையினையும் தெரிந்துகொள்ள வேண்டும். கர்மத்தின் இயல்பு அறிதல் எளிதல்ல''

(இவற்றையெல்லாம் செய்வாயாக என்று சாத்திரங்கள் கூறியிருப்பன யாவும் கர்மமாகும். (வினையாகும்)

இவ்வாறெல்லாம் செய்யாதே என்று சாத்திரங்கள் கூறுவதெல்லாம் விகர்மமாகும். (வினையல்லாதது)

**கர்மண்யகர்ம ய: பச்யேத கர்மணி**
**சகர்ம ய: ।**
**ஸ புத்திமான் மனுஷ்யேஷு ஸயுக்த:**
**க்ருத்ஸ்னகர்மக்ருத்: ॥** (18)

''கர்மத்தில் அகர்மத்தையும் (வினையில் வினையல்லாததை) அகர்மத்தில் கர்மத்தையும் அறிபவன் மனிதர்களுள் பேரறிஞனாவான். அவனே சிறந்த யோகியுமாவான். அவனே எல்லாவற்றையும் செய்துமுடிக்க ஆற்றல் மிக்கவனாவான்.''

(கர்மம், அகர்மம் எனும் சொற்களுக்குப் பல்வேறு தத்துவ அறிஞர்கள் பலவாறு விளக்கங்கள் தந்துள்ளனர். இவற்றை நன்கு அறிந்து செயல்படுபவன் சிறந்த யோகியும், அறிஞனும் ஆவான். இங்கு கர்மம் என்பது செயல்புரிவதும், அகர்மம் என்பது செயலற்றுதோன்றுவதும் என்பது பொருளாகின்றது. தேரில் அமர்ந்துள்ள அர்ச்சுனன் தன் கையிலிருந்து வில்லையும், அம்பையும் பூமியில் நழுவவிட்டு, மனதில் குழப்பமும், அச்சமும் கொண்டு கவலையை முகத்தில் காட்டி விளங்குகின்றான். அதாவது போர்புரியும் கர்மத்தை விட்டு அகர்மத்தில் விளங்குகின்றான். ஆனால் அதே தருணத்து மனப்போராட்டம் ஒன்று அவனுள் நிகழ்ந்து கொண்டிருக்கின்றது. ஆம், மனத்தால், உணர்வால் அவன் வினை செய்து கொண்டிருக்கின்றான். அவன் நிலை அகர்மத்தில் கர்மம் ஆகிறது. அதேபோன்று தேரோட்டியான கண்ணன் தேரில் இருந்துகொண்டு ஒரு கையால் குதிரைகளின் கடிவாளங்களைப் பிடித்துக்கொண்டும் மற்றொரு கையில் சின்முத்திரை கொண்டும் விளங்குகின்றான். வெளியுலகில் ஒரு தேரோட்டி செய்யவேண்டிய கர்மாவை செய்து கொண்டிருந்தாலும், மனத்தளவில் போர்பற்றிய விளைவுகளை சிறிதும் எதிர்பார்க்காமல் சஞ்சலமற்று விளங்கினான் பகவான். இது கர்மாவில் அகர்மாவாகிறது.)

**யஸ்ய ஸர்வே ஸமாரம்பா:**
**காமஸங்கல்பவர்ஜிதா: ॥**

ஞானாக்னிதக்தகர்மாணம் தமாஹுஃ:
பண்டிதம் புதா: ॥ (19)

''யாருடைய வினைகள் யாவும் ஆசையற்று, சங்கல்பமற்று விளங்குகின்றதோ, யாருடைய வினைகள் ஞானம் எனும் தீயினால் அழிக்கப்பட்டனவோ, அவனை அறிஞன் என்று ஞானிகள் கூறுகின்றனர்.''

(பயன் எதிர்பார்த்து, ஒருவன் வினையாற்றும் போது, அவனையறியாமலேயே அவன் அவ்வினைகளுக்குக் கட்டுப்பட்டவனாகின்ருன். அதாவது வினையினால் ஏற்படும் இன்பதுன்ப விளைவுகளுக்கு அவன் உட்படுகிருன். ஒரு வினையை மேற்கொள்ளும்போது எதிர்பார்த்த பயன் அவன் அடையாத போது, தொடர்ந்து வினையாற்றுகின்ருன். அதற்குமாருக நாம் வெறும் கருவி மாத்திரமே, நம்மை இயக்குபவன், அவ்இறைவனே எனும் எண்ணத்துடன் அவன் செயல்படும் போது, அவன் தாம் செய்யும் வினையால் எள்ளளவும், என்றும் கட்டுப்படமாட்டான்.)

த்யக்த்வா கர்மபலாஸங்கம்
நித்யத்ருப்தோ நிராச்ரய: ।
கர்மண்யபிப்ரவ்ருத்தோऽபி நைவ
கிஞ்சித்கரோதிஸ: ॥ (20)

''வினைப்பயன்களில் சிறிதும் பற்றற்று, என்றும் எதிலும் திருப்தி கொண்டும், எதனையும் சார்ந்து இல்லாது இருப்பவன் வினை ஆற்றினாலும், அவன் வினை ஆற்ருதவனாகவே கருதப்படுவான்''.

(நாளும் தபால்காரர் ஒருவர் நூற்றுக்கணக்கான தபால்களை பட்டுவாடா செய்கின்ருர். அத்தபால்களில் (கடிதங்களில்) பல்வேறு விஷயங்களில் இருக்கும் திருமணம், மரணம், எதிர்பார்ப்பு போன்ற இன்பமும் துன்பமும் விளைவிக்கும் செய்திகள் அடங்கியிருக்கும். இந்த உணர்வுகளை அக்கடிதங்களை பெறுபவர்கள் மட்டுமே அடையவர். ஆனால் இந்த உணர்வுகளைத் தாங்கிநிற்கும் கடிதங்களை விநியோகிக்கும் தபால்காரரை இந்த உணர்வுகள் தாக்காது. இந்த

*நிலையில் அவர் வினை ஆற்றிக்கொண்டிருந்தாலும், அவ்வினையினால் சற்றும் பாதிக்காது பற்றற்று விளங்குவார். இவ்வகையில் விளைவுகளை எதிர்பார்த்தோ அல்லது அவற்றால் தாக்குண்டோ அமையாது ஒருவன் தன் கர்மாவை (வினையை) செய்வானாயின் அவன் ஒரு யோகியாக கருதப்படுவான். கர்மத்தில் அகர்மா எனும் நிலையை அவன் கொண்டிருப்பதால் ஆசையற்று விளங்கும் அவன் எதற்கும், எங்கும், எவர்க்கும் அஞ்சத்தேவையில்லை.*

**நிராசீர்யதசித்தாத்மா**
**த்யக்தஸர்வபரிக்ரஹ: ।**
**சாரீரம் கேவலம் கர்ம**
**குர்வன்னாப்னோதி கில்பிஷம் ॥** (21)

*''ஆசையில்லாதவன், உள்ளத்தையும் உடலையும் அடக்கியவன், தன் உடமைகளைத் துறந்தவன், உடலளவில் மட்டுமே வினையாற்றுபவன் பாவம் செய்வதில்லை''*

*(ஆன்மீக வளர்ச்சிக்கு இடையூறு விளைவிக்கும் பந்த பாசங்களை உருவாக்கும் வினைகள் யாவும் பாவம் என்றே கருதப்படுகின்றன. மனதிலிருந்து ஆசை என்பதை அழித்துவிட்டால், பாவம் செய்யவாய்ப்பில்லை. அப்போது தான் அவன் ஒரு யோகி நிலைக்கு உயரமுடியும். ஆசை அழியும் போது மனிதன் உடலாலும், உள்ளத்தாலும், அறிவாலும் மேம்படுகின்றான். இந்த உடம்பு உழைக்கத்தான் இருக்கிறது. மனிதன் தெய்வீக நிலையை அடையவே இறைவன் உயிருக்கு இந்த உடலைக் கொடுத்தான். உடல் புனிதமாக வைத்துக்கொண்டால் ஆன்மா சுத்தமடைகிறது: ஒப்பற்றதாகிறது. அந்த உடலைக்கொண்டு உழைக்கும் போது நான் எனது என்ற தன்னல பற்றுக்களை விட்டு விடுவதே, ஒருவனை உண்மையான மனிதனாக உருவாக்க வழிவகுக்கிறது. இறை அவதாரங்களும் உத்தம புருஷர்களும் இதைத்தான் நமக்கு மறைமுகமாக வாழ்ந்து காட்டிக்கூறியுள்ளார்கள்.)*

**யத்ருச்சாலாப ஸந்துஷ்டோ**
**த்வந்த்வாதீதோ விமத்ஸர: ।**

**ஸம ஸித்தாவஸித்தௌ ச க்ருத்வாபி**
**ந நிபத்யதே ॥** (22)

"எதிர்பாராது கிடைப்பதில் மகிழ்ச்சி கொள்பவன், இருநிலைகளைக் கடந்தவன், பொறாமை அற்று விளங்குபவன், வெற்றியிலும் தோல்வியிலும் ஒரே நிலையில் இருப்பவன் வினையாற்றினாலும் அவன் அவ்வினைகளுக்கு அடிமையாகமாட்டான்."

*(தான் அடைவதெல்லாம், அடையப்போவதெல்லாம் தன் பெரும் முயற்சியால்தான் என்று நினைக்கும்வரை தான் செய்யும் வினைகளுக்கு அவன் அடிமையாக விளங்குகின்றான். இது அறியாமையால் எழும் எண்ணமாகும். தன் ஆசைகளை நிறைவேற்றத் துடிக்கும் வரை அவன் மன உயர்வு பெறுவது என்பது சாத்யமாகாத ஒன்றாகும். தன் தேவைகளை அந்த இறைவனே உடன் இருந்து அருள்வான் என்ற உறுதியான நம்பிக்கையே அவனது ஆன்ம உயர்வுக்கு வழிவகுக்கும். வெற்றி தோல்வி, இன்பம் துன்பம் உயர்வு தாழ்வு போன்ற எதிர்மாறான இருநிலைகளிலும் தன்னை இழக்காது, அவற்றைப் பொருட்படுத்தாது அவையாவும் இறைவன் தீர்ப்பே என்று எண்ணுபவனே சிறந்த சாதகன் என்று அழைக்கப்பெறுகிறான். அதேபோன்று மற்றவர்களது நிலைகளை தன் நிலையோடு ஒப்பிட்டுக்கொண்டு பொறாமை கொள்ளாது, கிடப்ப வையாவும் இறைவனது கருணையே என்று நினைப்பவன் குழப்பமோ, ஏமாற்றமோ அடைவதில்லை. அதேதருணத்து எல்லாம் இறைவன் தீர்ப்பே என்று நினைத்துக் கொண்டு தனக்கு இடப்படும் வினைகளுக்குரிய முயற்சிகளை மேற்கொள்ளாது வாளா (சும்மா) இருக்காது,தனக்குரிய வினைமுயற்சிகளை மேற்கொள்பவனே சிறந்த சாதகனாகின்றான். அத்தகு முயற்சிகளால் விளையும் பயன்களை அவன் பொருட்படுத்து வதில்லை. அத்தகைய அவனை வினைகளானது எந்த நிலையிலும் தங்களுக்கு அடிமை கொள்வதில்லை.)*

**கதஸங்கஸ்ய முக்தஸ்ய**
**ஞானாவஸ்திதசேதஸ: ।**

**யக்ஞாயாசரத: கர்ம**
**ஸமக்ரம் ப்ரவிலீயதே: ||** (23)

*"பற்றற்று இருப்பவனாய், முக்தியடைந்தவனாய், ஞானமார்க்கத்தில் மனம் உறுதியாக இருப்பவனாய், (செய்யும்) வினையை ஒரு வேள்வியாகக் கருதுபவனாய் இருந்து செய்யும் வினையானது (அவனைத் தாக்காது) கரைந்து விடுகிறது."*

*(ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் கூறியது போன்று, கைகளில் எண்ணெய் தடவிக்கொண்டு, பலாபழத்தினை அறுத்து உள்ளிருக்கும் சுளைகளை எடுக்கும்போது, பழத்தின் பிசின் கைகளில் ஒட்டாது. அவ்வகையில் உள்ளத்திலிருந்து உலகாயுத பொருள்களின்மீது வைத்துள்ள ஆசை எனும் பற்றுகளை விட்டொழித்தபோது, நாம் செய்யும் வினைகளினால் ஏற்படும் விளைவுகள் நம்மை எந்த நிலையிலும் தாக்காது.)*

**ப்ரஹ்மார்ப்பணம் ப்ரஹ்மஹவிர்**
**ப்ரஹ்மாக்னௌ ப்ரஹ்மணா ஹுதம் |**
**ப்ரஹ்மைவ தேன கந்தவ்யம்**
**ப்ரஹ்ம கர்ம ஸமாதினா ||** (24)

*"அர்ப்பணம் (கொடுக்கப்படுவது) செய்வது பிரம்மம்; தீயில் இடப்படும் நெய் போன்ற பொருட்களும் பிரம்மம்மாகிய தீயில் பிரம்மத்தால் அளிக்கப்படுகிறது. பிரம்ம மாகிய வினையில் (செயலில்) மனதை ஒருமுகப்படுத்தி யவனுக்கு பிரம்மமே கிடைக்கிறது".*

*(நாம்தாம் வினையாற்றுகின்றோம் என்று 'நாம்' எனும் மமதை கொள்பனிடம் வேறுபாடு உணர்வு உள்ளது. அதாவது வேள்வியாகிய வினையை நாம்தாம் செய்கிறோம், நாம்தான் அவ்வினைக்குத் தலைவன் என்றும் அந்த வேள்விக்குரியது தீ, அதில் இடப்படுவன நெய் போன்ற பொருட்கள், இந்த வேள்வி குறிப்பிட்ட அந்த தேவதைக்காக செய்யப்படுகிறது என்று வேற்றுமை காணுகின்றான். ஆனால் அதே சமயத்து தான் செய்யும் வினையானது மேலான ஒரு ஞான வேள்வியாகும். அந்த வேள்வியை மேற்கொள்ளும் தானும், அவ்வேள்விக்காக ஏற்படுத்தப்படும் தீயும், அத்தீயில் இடப்படும் பொருட்களும்,*

*அவ்வேள்வியை ஏற்றுக்கொள்ளும் தேவதையும் ஆகிய அனைவரும் பிரம்ம சொரூபமே ஆவர். அதாவது நாளும் செய்யும் நித்ய கர்மாவையே ஞான கர்மமாக ஒரு ஞானி கருதுகின்றான். இந்த ஞானகர்மாவை நடத்தும் அவ்ஞானி இறுதியில் அந்த பிரம்மத்தையே அடைகின்றான்.)*

**தைவமேவாபரே யக்ஞம் யோகின:**
**பர்யுபாஸதே ।**
**ப்ரஹ்மாக்னாவபரே யக்ஞம்**
**யக்ஞேனை வோபஜுஹ்வதி ॥** (25)

*''சில ஞானிகள் தேவதைகளுக்கு வேள்விகள் செய்கின்றனர். மற்றும் சிலர் பிரம்மமாகிய தீயில் ஆன்மாவைக் கொண்டு ஆன்மாவையே ஆகுதி (ஹோமம்) செய்கின்றனர்.''*

*(நதியானது கடலில் சங்கமமாகும்போது, அது தன் தனித்தன்மையை இழந்துவிடுகிறது. அதே போன்று பல்வேறு உணர்வுகளைக் கொண்ட ஜீவாத்மாவானது எங்கும் எதிலும் நிறைந்துள்ள பரமாத்வாவுக்கு ஆகுதியாக்கப்படுகிறது. அங்கு ஜீவபேதம் மறைந்து பரபோதம் ஏற்படுகிறது. இதுவே ஞான வேள்வியாகக் கருதப்படுகிறது.*

## பகவான் சொன்னது

**ச்ரோத்ராதீனிந்த்ரியாண்ய யன்யே**
**ஸம்யமாக்னிஷு ஜுஹ்வதி ।**
**சப்தாதீன்விஷயானன்ய இந்த்ரியாக்-**
**னிஷு ஜுஹ்வதி ॥** (26)

*''அடக்குதல் (கட்டுப்படுத்தல்) எனும் நெருப்பினில் சிலர், கண், செவி முதலிய பொறிகளை ஆகுதி (ஹோமம்) செய்கின்றனர். மற்ற சிலர் காட்சி (கண்ணில் தெரிவது) ஒலி (செவியால் கேட்கப்படுவது) போன்ற விஷயங்களை பொறிகள் எனப்படும் நெருப்பினில் ஆகுதி (ஹோமம்) செய்கின்றனர்''.*

*(இங்கு இந்த்ரியங்களை (பொறிகளை) அடக்குதல், அவற்றின்வழி செல்லல் எனும் இரண்டு கருத்துக்கள்*

கூறப்படுகின்றன. கண், வாய், மூக்கு போன்ற ஐம்புலன்களை அப்புலன்களினால் பெறப்படும் (பார்த்து ரசித்தல், ருசித்து மகிழ்தல், முகர்ந்து இன்பம் காணல் போன்ற) இன்பங்களின் வழி செல்லாமல், அந்த ஐம்புலன்களை அவற்றின் இன்பங்களிலிருந்து விலக்கிக்கட்டுப்படுத்தல் எனும் செய்கை ஒரு வேள்வியாகக் கருதப்படுகிறது. இவ்வாறு புலன்கள் கட்டுப்படும்போது, மனம் தடுமாறுவதில்லை. அது ஞான நிலை பெறுகின்றது. அதே போன்று புலன்களை அதன்வழி விடுத்து இன்பங்களை நுகர வழி வகுத்தும் அறிவை, மனதை மேம்படுத்தலாம். அதாவது புலன்களால் பெறப்படும் இன்பத்தைத் துய்க்கும் போது, அவ் இன்பத்தைத் துய்க்கும் போது, அவ் இன்பத்தை கடவுளாகவே, இறை உணர்வாகவே உணர்தல் வேண்டும். அதாவது பார்க்கும் காட்சிகளில் இறை உருவத்தையும், கேட்கும் ஒலியில் எல்லாம் இறைவன் திருநாமப் புகழையும், வாய் திறந்திடும் போதெல்லாம் இறைவனின் பெருமைக்குரியன பாடுவதையும் புலனின்பங்களாகக் கொள்ளவேண்டும். ஆகவே முந்தைய இரு வழிகளாகிய அடக்குதல், அனுசரித்தல் ஆகியன இறுதியில் இறை இன்பத்தையே தந்து, அறிவை ஞானத்திற்கு இட்டுச்செல்கின்றன.)

**ஸர்வாணீந்த்ரியகர்மாணி**
**ப்ராணகர்மாணி சாபரே ।**
**ஆத்மஸம்யமயோகாக்னௌ**
**ஜுஹ்வதி ஞானதீபிதே ॥** (27)

''மற்றும் சிலர் புலன் வினைகளையும், பிராண வினைகளையும், மனதை ஆத்மாவிடம் அடக்குதல் எனும் ஞானப்பேரொளி வீசிடும் யோகத்தீயில் ஆகுதியாகத் தருகின்றனர்''.

(மனமானது வெளியுலக இன்பங்களுக்கு அடிமையானது அல்ல. அது ஆன்ம உயர்வுக்கே வழிவகுக்க வேண்டும் என்ற சிந்தனையே விவேகமாகும். எண்ணெய் ஊற்றுமிடத்து விளக்கானது பிரகாசிக்கும். அதே போன்று விவேகம் எனும்

எண்ணெய் ஊற்றுமிடத்து, ஞானம் எனும் பெருவிளக்கு சுடர்விட்டுப் பிரகாசிக்கும். எப்படி ஊற்றப்படும் எண்ணெய்யானது விளக்கின் ஒளியாக மாறுகிறதோ, விவேகமும் ஆத்மாவுடன் ஒன்றாகக் கலந்து ஆத்ம ஞானம் உண்டாகின்றது. அங்கு ஐம்புலன் வினைகளும், பிராண வினைகளும் தங்கள் செயல்திறன் இழந்து அவையும் ஆத்ம சொரூபமாக மாறி விடுகின்றன. அதுபோது கீழான மன இயல்புகளும், செயல்களும் மேன்மை அடைகின்றன. இங்கு பிராண வினை என்பது, உடலெங்கும் மறைந்து ஆனால் செயல்பட்டுக் கொண்டிருக்கும் உயிர்ச்சக்தியாகும்.)

த்ரவ்யயக்ஞாஸ்தபோயக்ஞா
யோகயக்ஞாஸ்ததாபரே ।
ஸ்வாத்யாய ஞானயக்ஞாஸ்ச
யதய: ஸம்சிதவ்ரதா: ॥ (28)

''பொருள் வேள்வி, தவ வேள்வி, யோக வேள்வி ஆகியன செயவர் சிலர். தன்னடக்கமும், உறுதியுடன் கூடிய விரதமும் கொண்ட மற்ற சிலர் கற்றல், அறிதல் போன்றவற்றையும் வேள்வியாகச் செய்வர்''.

(நேர்மையான முறையில் சம்பாதித்து, அதனை நல்ல கார்யங்களுக்காகச் செலவிடுதல் போன்ற செய்கைகள் பொருள் வேள்வியாகும். எவ்வாறு இரும்பை உருக்கிப்புது ப்பிக்கின்றோமோ அதே வழியில் மனதை தெய்வ சிந்தனையில் செலுத்தி அதனைப் பக்குவப்படுத்தி, அதனை தெய்வீகமாக்க வேண்டும். இது ஒரு தவம் செய்வதற்கு ஒப்பாகும். இது போன்ற தவங்களை மேற்கொள்வதே ஒரு புனித வேள்வியாகும். அஷ்டாங்கம் எனப்படும் எட்டுவகை யோகங்களை மேற்கொள்ளுவதை ஒரு வேள்வியாகக் கொள்வர் ஒரு சிலர். அறவழியில் நின்று சாத்திர நூல்களையும் படிக்கும் அளவு ஒருவன், தன்னடக்கத்தைப் பெற்றவனாகின்றான். மேலும் தன்னுடைய வாழ்க்கையை செம்மையாக நடத்திடவேண்டுமென்ற உறுதியை ஒரு விரதமாகக் கொள்ளவேண்டும். "கற்றோர் இயற்றிய நூல்களைப்

படிப்பதையும், அப்படிப்பினால் தான் பெற்றகல்வியை அறிவை பிறர்க்கு வழங்குவதையும் ஒரு வேள்வியாக மேற்கொள்ள வேண்டும். அதுபோது அவனிடம் நூலறிவும், அனுபவ அறிவும் வளருகின்றன. இதுவே யாகத்தின் பெருமையும் உண்மையும் ஆகும்.)

**அபானே ஜுஹ்வதி ப்ராணம்**
**ப்ராணேऽபானம் ததாபரே ।**
**ப்ராணாபானகதீ ருத்த்வா**
**ப்ராணாயாமபராயணா: ॥** (29)

*''அபான வாயுவில் பிராணனையும், பிராண வாயுவில் அபனனையும் ஆகுதி (ஹோமம் செய்பவர்கள் பிராண அபான வாயுக்களின் வழியைத் தடுத்து பிராணாயாமத்தை மேற்கொள்கின்றனர்''.*

*(மனத்திற்கும் மூச்சுக் காற்றின் இயல்புக்கும் மிகுந்தத்தொடர்பு இருக்கிறது. ஆகையால், மனம், தெளிவாக அமையும் போது மூச்சுக்காற்று சீராக அமையும். ஒருவன் மனதில் தீய உணர்வுகள் (பயம்கோபம்) தோன்றிடும் போது அவனுடைய மூச்சுக்காற்றின் போக்கும் தடுமாற்றம் பெறுகிறது. மனதில் நல்ல உணர்ச்சிகள் (மகிழ்ச்சி, அமைதி) அமைந்திடும் போது, அவனுடைய மூச்சுக்காற்றின் போக்கு ஒழுங்காக இருக்கின்றது. ஆகவே மனநிலையின் அமைதிக்கேற்ப, ஒருவனுடைய மூச்சுப்போக்கும் விளங்குகின்றது. இதனால் மூச்சுப்போக்கினை ஒழுங்காக, சீராக, அமைதியாக வைத்துக்கொண்டால், மனமும் அமைதியாக தடுமாற்றம் இல்லாமல் விளங்கும் என்பது பெறப்படுகின்றது. இதனை நான்கு அறிந்தவர்களால் மட்டுமே பிராணயாமம் எனும் யோகத்தினை மேற்கொள்ள முடியும். மூக்கின் வழியாதப் பெறப்படும் மூச்சுக்காற்றிற்கு அபானன் என்று பெயர். வெளியேற்றப்படும் காற்றிற்கு பிராணன் என்று பெயர். மூச்சுக்காற்றினை உள்ளுக்குள் இழுத்தப்பிறகோ, வெளியில் விடப்பட்டப்பிறகோ, (அக்காற்றினை) அடக்கும் முறைக்கு 'கும்பகம்' என்று பெயர். இக்கும்பகம் எனும்*

பயிற்சியினை ஒழுங்கான, அமைதியான மனநிலை உள்ளோர் மட்டுமே எளிதில் மேற்கொள்ள முடியும். அபானனையும், பிராணனையும் ஒன்ருகச் சீராகக் கலந்து மூச்சுவிடுதலே பிராணுயாம் என்று பெயர். இப்பயிற்சியினை, சாப்பிடுபோது கையும் வாயும் எவ்வாறு, சாப்பிடும் ஒருவனுக்கு, அவை வேலை செய்கின்றன என்ற நிலையில்லாமல், தானாக இயங்குகின்றதோ அதே போன்று, இப்பிராணுயாமம் செயல்படவேண்டும். ஆகவே இதற்கு மனத்தெளிவு, கட்டுப்பாடு மிகவும் அவசியம்.)

அபரே நியதாஹாரா: ப்ராணுன்
ப்ராணேஷு ஜுஹ்வதி ।
ஸர்வேப்யேதே யக்ஞவிதோ
யக்ஞக்ஷபிதகல்மஷா: ॥ (30)

''முறையாகப் சாப்பிடுபவர்கள் சிலர் பிராணனில் பிராணனை உண்டாக்குகின்றனர். வேள்வியை (யாகத்தை) அறிந்தவர்களான இவர்கள், வேள்வியால் பாவத்தை அழித்தவர்களாவார்கள்''.

(விபத்தில் அடிப்பட்டு இரத்தம் அதிகமாக வெளியேறிவிட்ட நிலையில், அவன் ஆற்றலும், உணர்வும்பெற, உடனடியாக மற்ருெரு நபரின் இரத்தம் கொடுக்கப்படுகிறது. இங்கு இரத்தம் அடிப்பட்டவனுக்கு உணவாகிறது. இந்த இரத்தம் சாப்பிடும் உணவில் உள்ளது. உடலில் உயிர்வாழ வெளியிலிருந்து உணவெனும் உயர் அவ்வுயிருடன் சேர்க்கப்படுகிறது. ஆகவே உயிரைக் கொண்டு உயிர் வளர்க்கப்படுகிறது. மனிதனின் இந்த வளர்க்கும் பணி அவன் வாழ்க்கையில் ஒரு யாகமாக (வேள்வியாக) எண்ணப்படுகிறது. மனிதனின் மன இயல்புக்கேற்றவாறு இது போன்ற பல்வேறு யாகங்கள் மேற்கொள்ள வேண்டியுள்ளது. உலகப்பற்றிலிருந்து விடுதலை பெற, இதுபோன்ற வேள்விகளை மேற்கொள்வதே சிறந்த வழியாகும்.)

யக்ஞசிஷ்டாம்ருதபுஜோ யாந்தி
ப்ரஹ்ம ஸநாதனம் ।

**நாயம்லோகோsஸ்த்யயக்ஞஸ்ய**
**குதோsன்ய: குருஸத்தம் ॥** (31)

''குருகுலத்தலைவனே (சிறந்தவனே) வேள்வியில் (இறுதியில்) மீதியாகும் அமுதத்தை உண்பவர்கள் அழியாத பொருளாகிய பிரம்மத்தை அடைகிறார்கள், வேள்வி செய்யாதவர்களுக்கு இந்த உலகமே இல்லை என்னும்போது, அந்த உலகம் (மேலுலகம் எனும்) ஏது?''

(மனிதப்பிறவி பிறர்க்கு நன்மை ஏற்படும் வகையிலேதான் அமைய வேண்டும். இல்லையெனில் மற்றைய உயிரினங்களுக்கும் அவனுக்கும் வேறுபாடு இருக்காது. இந்த உதவும் உணர்வானது தான், தனது எனும் தன்னல உணர்வுகள் மறையும் போதுதான் உருவாகும். இந்த தன்னல உணர்வுகளை விட்டுவிடுவதே ஒரு வேள்வி செய்வதற்கொப்பாகும். இங்கு அவன் தன்னையே ஆகுதியாகக் கொடுக்கின்றான். இதனால் அவன் அடையப்பெறுவது பிரம்மம் ஆகும். ஆகையால் அந்தப் பிரம்மத்தையே அடையும் போது, அதனைவிடக் கீழானதாகக் கருதப்படும் எதனையும் அந்த யாகத்தால் பெறலாம் என்பது முடிவு.)

**ஏவர் பஹுவிதா யக்ஞா விததா**
**ப்ரஹ்மணோ முகே ।**
**கர்மஜான் வித்தி தான்ஸர்வானேவம்**
**ஞாத்வா விமோக்ஷ்யஸே ॥** (32)

''இவ்வாறாக வேதத்தில் பல்வேறு வேள்விகள் விளக்கப்பட்டுள்ளன. அவை யாவும் வினையில் தோன்றினவென்று அறிந்து விடுதலை பெறுவாயாக''.

(வாழ்க்கையின் இலக்கணங்களை இயற்கைப் படம் பிடித்துக் காட்டுகிறது. இயற்கையை அறிந்தவன் வேதத்தை அறிந்தவனாகின்றான். இயற்கை வினை வடிவாக இருக்கின்றது. அந்த வினையும் ஒரு குறிக்கோளுடன்தான் முடிக்கப்படுகிறது. செய்யும் வினைகளை ஒரு புனித வேள்வியாகக் கொண்டு செய்து முடிப்பவர்கள் அந்த இயற்கையின் வேதத்தின் குறிக்கோளை அறிந்தவர் களாகின்றனர். வினைமனிதனை

பாசம், பற்று எனும் உணர்வுகளுக்கு அடிமையாக்கக் கூடியது. அதே வினையை ஒரு புனித வேள்வியாகச் செய்யும்போது தளைகளிலிருந்து நம்மை விடுவிக்கின்றது.)

**ச்ரேயான் த்ரவ்ய மயாத்யத்-**
**ஞாஜ்ஞானயக்ஞ: ।**
**ஸர்வம் கர்மாகிலம் பார்த்த**
**ஞானே பரிஸமாப்யதே ॥** (33)

''பரந்தபா (எதிரிகளைத் துன்புறுத்துபவனே), பொருளைக்கொண்டு ஆற்றும் வேள்விகளைவிட ஞானவேள்வியே சிறந்ததாகும். பார்த்தா! வினையாவும் ஞானத்தில் (பேரறிவில்) முடிவு பெறுகின்றது''.

(ஒருவன் பொருள் ஈட்டுமளவு, தன் பிரச்சனைகளுக்கும் இறுதியில் துன்பத்திற்கும் தானே காரணமாகின்றான். தான் சேர்த்து வைக்கும் தங்கமோ, மனைகளோ ஒருவனுடைய தாகத்தையோ ஒருவேளை பசியையோ தீர்த்துவிடாது. ஒரு குவளை நீரும், ஒரு வாய்சோறுமோ அவனுடைய மேற்கூறிய பிரச்சனையை தீர்த்திடும். ஆம், குறிப்பிட்ட அளவுக்குமேல் சேர்த்துவைக்கும் பொருள் அவனுக்கு தனிப்பட்ட விதத்தில், தேவையற்றதாகும். அதே சமயத்து ஞானமோ அதன் வளர்ச்சியோ வினைக்குக் கட்டுபடாத ஆத்ம வளர்ச்சிக்கு அடிகோலுகின்றது. ஆகவே செய்யும் வேள்வி யாவும் ஞான வேள்வியாகச் செய்யப்படவேண்டும். இதுவே மனித உயர்வுக்கு இட்டுச் செல்லும் அணுகு முறையாகும்.)

**தத்வித்தி ப்ரணிபாதேன**
**பரிப்ரச்னேன ஸேவயா ।**
**உபதேக்ஷ்யந்தி தே ஞானம்**
**ஞானினஸ்தத்வதர்சின: ॥** (34)

''பணிவாக இருந்தும், கேட்டறிந்தும், தொண்டு புரிந்தும் அதனை நீ அறிவாயாக உண்மையை அறிந்த ஞானிகள் உனக்கு அந்த ஞானத்தைப் புகட்டுவார்கள்''.

*(ஞானமாகிய பேரறிவை எவராலும் பொருள் கொடுத்துப் பெறமுடியாது. அல்லது மற்றொரு பொருள் கொடுத்தும் பெறமுடியாது. ஞானத்தைப் புகட்டும் ஞானியான குருவின் பால் பணிவு இருக்கவேண்டும். வீடுபேறு எனும் மோட்சம், பற்று, ஆத்மா, ஆத்மா அல்லாதது என்பனப் பற்றியே சந்தேக விளக்கக் கேள்விகளை ஒருவன் எழுப்புதல் வேண்டும். ஆம் அவற்றைப் பற்றி அறிய அவன் ஆவல் கொள்ள வேண்டும். அப்போதுதான், கேட்பவனுடைய மனநிலை,அறிவுநிலை ஏற்றவாறு குருவானவர் அவனுக்கு விளக்குவார். குருவுக்குத் தொண்டு புரிவதன் மூலம், அவனுடைய வாழ்க்கை புனித வேள்வியில் தன்னை ஆகுதியாக்கிக் கொள்கின்றான். ஆகவே சிஷ்யனானவன் தன் குருவுக்கு மனம், மொழி, உடலால் சேவை செய்யவேண்டும். அப்போது, குருவானவர் தான் கற்றதை, தான் கண்டதை தன் சிஷ்யனுக்குக் கருணை கொண்டு கற்பிக்க முடியும்.முழுஞானமும், கருணையும் கொண்டவர்தான் சிறந்த குருவாக ஏற்கப்படுவார். குருவானவர் எரியும் (ஞான) விளக்கு. அவ்விளக்கால் தான் மற்றொரு விளக்கை (சிஷ்யனை) ஏற்றிடமுடியும்.)*

**யஜ்ஞாத்வா ந புனர்மோஹமேவம்**
**யாஸ்யஸி பாண்டவ ।**
**யேன பூதான்யசேஷேண**
**த்ரக்ஷ்யஸ்யாத் மன்யதோ மயி ॥** (35)

*''அந்த குருவால் வழங்கப்பட்ட ஞானத்தைப் (மெய்யறிவை) பெற்றபின் நீ இவ்வாறு குழப்பமடைய மாட்டாய். அந்த மெய்யறிவால் இந்த உலகத்தின் எல்லா உயிர்களையும் உன்னிடத்திலும் என்னிடத்திலும் பார்ப்பாய்''.*

*(சாதாரண உலகாயுத ஆசையில் மூழ்கியிருப்பவனால், பந்தபாசங்களால் சூழப்பட்டவனால் பொருள்களை உள்ளதை உள்ளவாறு காணமுடியாது. ஆகையால் மனதில் மயக்கமும், குழப்பமும் உண்டாகிறது. அதே சமயத்து, (குருவினால்) மெய்யறிவு பெற்றவனால், எல்லா உயிர்களிடத்தும்*

பொருள்களிடத்தும் அந்தப் பரம்பொருளைக் காணமுடியும்.)

**அபி சேதஸி பாபேப்ய: ஸர்வேப்ய:**
**பாரக்ருத்தம: ।**
**ஸர்வம் ஞானப்லவேனைவ**
**வ்ருஜினம் ஸந்தரிஷ்யஸி ॥** (36)

''பாவம் செய்தவர்களிலெல்லாம் நீ அதிகமான பாவம் செய்தவனாக இருந்தாலும், (அந்த) பாவங்களையெல்லாம் ஞானம் (எனும்) தோணி கொண்டு நீ கடந்துவிடலாம்''.

(ஞானம் இல்லாதவன் வினைகளை முறைதவறி செய்யும் போது அவன், அவ்வினைகளைப் பாவமாக மாற்றிக்கொள்கிறான். ஞானம் உடையவன் அவ்வினைகளை முறையாகச் செய்து புண்ணியமாக்கிக் கொள்கின்றான். மேலும் வினைப்பற்றுவிருந்தும் தன்னை விடுவித்துக் கொள்கின்றான்.)

**யதைதாம்ஸி ஸமித்தோடக்னிர்**
**பஸ்மஸாத்குருதேர்ஜுன ।**
**ஞானாக்னி: ஸர்வகர்மாணி**
**பஸ்மஸாத்குருதே ததா ॥** (37)

''கொழுந்துவிட்டு எரியும் நெருப்பானது விறகுகளைப் பொசுக்குவது போன்று, அர்ச்சுனா, ஞானத்தீயானது வினைகளையெல்லாம் சாம்பலாக்கி விடும்''

(வெந்துபோன விதை எவ்வாறு முளைக்காதோ, ஞானத்தீயின் முன் பழைய வினைப்பயன் ஒன்றும் செய்யாது. ஆனால் மற்றைய வினைகள் ஞானத்தீயில் வெந்து போகும். ஆகையால் பழைய வினைப்பயன்கள் எதுவும் ஞானத்தை உடைய ஞானியை ஒன்றும் செய்யாது.)

**ந ஹி ஞானேன ஸத்ருசம்**
**பவித்ரமிஹ வித்யதே ।**
**தத்ஸ்வயம் யோகஸம்ஸித்த:**
**காலேனாத்மனி விந்ததி ॥** (38)

''ஞானத்துக்குச் சமமானதும், பரிசுத்தம் செய்யும் ஆற்றலுடையதும் இந்த உலகில் வேறு ஏதும் இல்லை. யோக

சித்தி பெற்றவன் போகப்போக தன்னுள்ளே இந்த ஞானத்தை அடைகிறான்''.

(தன் பிறவி பற்றிய உண்மை ஞானத்தை ஒருவன் அடையும் போது, அவன் பிறப்பு இறப்பு பற்றிய மயக்கத்திலிருந்து விடுபட்டுத் தன்னைத் தூய்மையாக்கிக் கொள்கின்றான். ஆகவே முறையாக தன் வினைகளைப் பற்றற்று, ஒரு ஞான வேள்வியாக மேற்கொண்டு செய்பவன் காலப்போக்கில் ஞானத்தைப் பெற்றவனாகின்றான்.)

**ச்ரத்தாவான்லபதே ஞானம் தத்பர:**
**ஸம்யதேந்த்ரிய: ।**
**ஞானம் லப்த்வா பராம் சாந்திமசி-**
**ரேணாதிகச்சதி ॥** (39)

''ஈடுபாடு உடையவன், பரத்தைச் சார்ந்திருப்பவன் (ஞானத்தில் நாட்டம் உடையவன்.), புலன்களைக் கட்டுப்படுத்தியவன் ஞானத்தை அடைகின்றான். அந்த ஞானத்தை அடைந்தபிறகு விரைவாக, சிறந்ததான அமைதியைப்பெறுகின்றான்''.

(இந்தச் செய்யுளில் மேலான மெய்யறிவாம் ஞானத்தைப்பெற ஒருவனுக்கு இடைவிடாத முயற்சியும் ஈடுபாடும் தேவை என்று அறிவுறுத்தப்படுகிறது. எவ்வளவுக்கெவ்வளவு ஈடுபாடுதீவிரமாக சிறந்ததாக விளங்குகிறதோ, அந்த அளவு ஞானத்தை எளிதில் பெறமுடியும் ஞானத்தைப் பெற்றவுடன் விடுபேறு எனும் அமைதியை அவன் அடைகின்றான்.)

**அக்ஞஸ்சாச்ரத்ததானஸ்ச**
**ஸம்சயாத்மா விநச்யதி ।**
**நாயம் லோகோऽஸ்தி ந பரோ**
**ந ஸுகம் ஸம்சயாத்மன: ॥** (40)

''அறிவில்லாதவன், ஈடுபாடு இல்லாதவன், சந்தேகம் கொண்டவன் அழிவை அடைகின்றான். சந்தேகம்

கொள்பவனுக்கு இந்த உலகமும் (இம்மை) அந்த உலக (மறுமை) மகிழ்ச்சியும் இல்லை''.

(ஆத்மாவின் இயல்பைத் தெரியாதவன் மூடன் ஆகின்றான். தன்னைத்தானே நம்பாது, தன் ஆசிரியரையும் (குரு) நம்பாது, தான் கற்கும் பாடங்களையும் (சாத்திரங்கள்) நம்பாது ஒருவன் இருந்தால் அவன் மனமும், அறிவும் எதிலும் ஈடுபடாது. அவனால் இந்த மண்ணுலக வாழ்க்கையே ஒரு தோல்வியாக அமையும். பிறரை நம்பாது தன்னம்பிக்கை இல்லாது ஒருவன் மகிழ்ச்சியைப் பெறுமுடியாது. வாழ்க்கையில் பிடிப்பு ஒருவனுக்கு, பிறரை நம்பும்போதும், உதவும் போதும்தான் அமையும். அப்போதுதான் ஞானம் அவன் வாழ்க்கையில் கைகூடும்.)

**யோகஸந்யஸ்தகர்மாணம்**
**ஞானஸம்சின்னஸம்சயம் ।**
**ஆத்மவந்தம் ந கர்மாணி**
**நிபத்னந்தி தனஞ்ஜய: ॥** (41)

''யோகம் மூலம் வினைகளை அகற்றி, ஞானத்தால் (மெய்யறிவால்) சந்தேகங்களைத் துடைத்து, ஆத்மபோதத்தில் மூழ்குபவர்கள் வினைகளால் கட்டப்படுவதில்லை''.

(சேற்றில் இருந்தாலும் எவ்வாறு மீன் மீது சேறனது ஒட்டிக்கொள்ளாதோ, அவ்வாறே வினை ஆற்றும் யோகிகளை அவ்வினைகள் கட்டுப்படுத்தாது. இந்த வாழ்க்கைப் பற்றிய உண்மையை அறிந்த ஞானியானவன் எதன் மீதும் சந்தேகம் கொள்வதில்லை. அந்த நிலையில் தன்னைத்தானே தெரிந்துகொண்ட முழு ஞானியாக அவன் திகழ்கின்றான். அதுபோது அவன் வினைகளால் தாக்குறுவதும் அதே சமயத்து, அவன் வினையாற்றாமல் இருப்பதும் இல்லை.)

**தஸ்மாதக்ஞானஸம்பூதம்**
**ஹ்ருத்ஸ்தம் ஞானாஸினாத்மன: ।**
**சித்த்வைனம் ஸம்சயம் யோகமா-**
**திஷ்டோத்திஷ்ட பாரத ॥** (42)

''ஆகவே, அறியாமையால் (அஞ்ஞானத்தால்) ஏற்பட்ட, உள்ளத்தில் உறைந்துள்ள ஆதமாவைப் பற்றிய, சந்தேகத்தை, மெய்யறிவு (ஞானம்) எனும் வாளால் வெட்டி, யோகத்தை மேற்கொண்டு, பாரதா, எழுவாயாக''

(இங்கு ஞானமெனும் மெய்யறிவின் சிறப்பு வலியுறுத்தப்படுகிறது. மெய்யறிவின் இறுதிப்பயன் ஆத்ம போதம் எனும் விழிப்பினை உணர்வினை தோற்றுவிப்பதுதான். சூரியன் உதித்தவுடன் எவ்வாறு இருள் மறைகிறதோ, விழிப்பு தோன்றுகின்றதோ, செயலாற்றும் ஆற்றல் வந்தமைகிறதோ, அவ்வாறு ஆத்ம ஞானம் வரப் பெற்றவுடன் அரியாமை எனும் இருள், சந்தேகம் எனும் கேடு, தவறுகள் எனும் இடையூறுகள் யாவும் விலகிவிடுமாம்.)

**இதி ஸ்ரீமத் பகவத்கீதா ஸூபநிஷத்ஸு**
**பரஹ்ம வித்யாயாம் ।**
**யோகசாஸ்த்ரே ஸ்ரீகிருஷ்ணார்ஜுன-**
**ஸம்வாதே ।**
**ஞானகர்ம ஸந்யாஸ யோகோ நாம**
**ச துர்த்தோ஽த்யாய: ॥**

''பிரம்ம அறிவை சொல்லித்தருவதும், யோக சாத்திரமானதும், ஸ்ரீகிருஷ்ணனுக்கும் அர்ச்சுனனுக்கும் இடையே ஏற்பட்ட உரையாடலுமாகவும் அமைந்துள்ள பகவத்கீதை எனும் உபநிடத்தின்கண் அமைந்துள்ள ஞானகர்ம ஸந்யாஸ யோகம் என்ற இந்த நான்காம் அத்தியாயம் முடிவுற்றது.

(நான்காம் அத்தியாயம் முற்றும்)

# ஐந்தாம் அத்தியாயம்

## ஸந்யாஸ யோகம்

### அர்ச்சுனன் கூறியது

ஸந்யாஸம் கர்மணும் கிருஷ்ண
புனர்யோகம் ச சம்ஸஸி ।
யச்சரேய ஏதயோரேகம் தன்மே
ப்ரூஹி ஸுநிஸ்சிதம் ॥ (1)

*''கிருஷ்ணு, வினையை (கர்மத்தை) கைவிடவும் கூறுகிருய், பிறகு வினையை மேற்கொள் என்றும் அறிவுறுத்துகின்ருய். இந்த இரண்டு வழியில் எது சிறந்தது என்பதை எனக்குக் கூறுவாயாக''*

*(நான்காம் அத்தியாயத்தில் இடைப்பகுதியில், வினையை விடுமாறும், பிறகு அவ் அத்தியாயத்தின் இறுதியில் வினையை பின்பற்றுமாறும் பகவான் அர்ச்சுனனுக்கு அறிவுரை கூறுகின்ருன். இதனால் அர்ச்சுனனுக்குக் குழப்பமும், சந்தேகமும் தோன்றுகின்றன. அதனால் பகவானிடம் அர்ச்சுனன் விளக்கம் கேட்கிருன்.)*

பகவான் கூறியது.

ஸந்யாஸ: கர்மயோகஸ்ச
நி:ச்ரேயஸகராவுபௌ ।
தயோஸ்து கர்மஸந்யாஸாத்கர்ம
யோகோ விசிஷ்யதே ॥ (2)

''*(வினையை விடும்படியான) கர்ம ஸந்யாசம், (வினை ஆற்றும்படியான) கர்மயோகம் ஆகிய இரண்டும் சிறப்புக்குரியன ஆனாலும் கர்ம ஸந்யாஸத்தைவிட கர்ம யோகமே மிகவும் மேலானது.*''

*(பனி படர்ந்த இமய மலையில் இருக்கும் பத்ரிகாசரம் எனும் திருத்தலத்திற்கு விமானம் மூலமும் செல்லலாம். நடந்தும் செல்லலாம். விமானத்தில் செல்வதால் எளிதில் அந்த இடத்தை அடையலாம். 'ஆனால் நடந்து செல்லும்போது, வழியில் பலதரப்பட்ட மக்களின் நட்பு, நடப்பதால் உடல்ஆரோக்யம், இமயமலையின் இயற்கை அழகினை நேரிடையாக உணர்ந்து பெறப்படும் அனுபவம் ஒருவர்க்கு கிடைக்கப்பெறும். ஆகவே விமானத்தில் செல்வதற்கு ஒப்பானது கர்ம ஸந்யாஸம். நடந்து செல்வதற்கு ஈடானது கர்மயோகம். இரண்டாவது முறையால் மனிதனின் மனமும், உடலும் பக்குவப்படுகிறது. உடலின் பயன் உழைப்பதேயாகும் உழைப்பே உயர்வைத் தரும்.)*

ஜ்ஞேய: ஸ நித்யஸந்யாஸீ யோ ந
த்வேஷ்டி ந காங்க்ஷதி ।
நிர்த்வந்த்வோ ஹி மஹாபாஹோ
ஸுகம் பந்தாத்ப்ரமுச்யதே ॥ (3)

''*அகன்ற தோள்களை உடையவனே! (வீரனே) விருப்புவெறுப்பு இல்லாதவனே நித்ய துறவி (ஸந்யாஸி)யாகக் கருதப்படுகிறுன். ஏனென்றுல், (அதுபோன்ற) இருநிலைகளை இல்லாதவனே பற்று எனும்*

தளைகளை விடுத்து எளிதில் தன்னை விடுவித்துக் கொள்பவனாகின்றான்''.

(மனிதனைக் கட்டுப்படுத்துவது அவன் செய்யும் வினையல்ல. பணி செய்யாது, சோம்பேறியாக ஒருவன் இருப்பானாகில் அவன் உடலாலும் உள்ளத்தாலும், இன்பத்தையும் துன்பத்தையும் என்றென்றும் அனுபவிக்கவே விரும்பும் மனிதனாகவே இருப்பான். அதே நேரத்து கடமை உணர்வில் நேர்மை வழியில் விருப்பம், வெறுப்பு என்ற உணர்வுகளுக்கு ஆட்படாது, தன்பணிகளை செய்யும் துறவியானவன், எந்தப் பற்றிலிருந்தும் எந்த ஆசையிலிருந்தும் துன்பத்திலிருந்தும் எளிதில் தன்னை விடுவித்துக் கொள்ளும் ஆற்றல் உடையவனாவான். அவனுடைய மனமும், அறிவும் குழப்பத்திற்கோ, தவறுகளுக்கோ இடம் கொடுப்பதில்லை. இந்த நிலையில் அவன் நாளும் ஒரு துறவியாகவே வாழ்கின்றான். மனத்தளவில் துறவியாக இருப்பவனுக்கு முக்தி எளிதில் வந்தமைகிறது.)

ஸாங்க்யயோகௌ ப்ருதக்பாலா:
ப்ரவதந்தி ந பண்டிதா: ।
ஏகமப்யாஸ்தித: ஸம்யகுபயோர்
விந்ததே பலம் ॥ (4)

''சாங்க்யமும் (வினை ஆற்றுதலை கைவிடுதல்) யோகமும் வேறு வேறு என்று சிறுமதியுடையோர் கூறுவார்கள். அறிவாளிகள் அவ்வாறு கூறமாட்டார்கள். இந்த இரண்டினுள் ஒன்றை உறுதியாகப் பின்பற்றுவன் இரண்டினுடைய பயன்களையும் பெறுவான்''.

(முன் செய்யுளில் கூறிய கர்ம ஸந்யாசத்தையும் கர்மயோகத்தையும் வேறு வேறு என்று சொல்லுபவர்கள் இச்செய்யுளில் அறிவற்றவர்களாகக் கூறப்படுகிறார்கள். ஏன் என்றால் அவர்களது செய்கை குழப்பத்திற்கும் தவறுகளுக்கு இட்டுச் செல்வதால்.)

**யத்ஸாங்க்யை: ப்ராப்யதே ஸ்தானம்**
**தத்யோகைரபி கம்யதே ।**
**ஏகம் ஸாங்க்யம் ச யோகம் ச ய:**
**பச்யதி ஸ பச்யதி ॥** (5)

*''ஸாங்க்யத்தைப் பின்பற்றுபவர்களும், (கர்ம) யோகத்தைப் பின்பற்றுபவர்களும் ஒரேவிதமான பேற்றையே (சிறப்பையே, பயனையே) அடைகின்றனர். ஸாங்க்யத்தையும், யோகத்தையும் ஒன்ருகப் பார்ப்பவர்கள் சத்தியத்தையே பார்க்கின்றனர்''.*

*(அறிவின் துணையால் இயற்கையின் இயல்பை ஆராய்வது சாங்க்யம் ஆகும். இதுவே ஞான உயர்வுக்கு வழிகாட்டுகிறது. யோகம் என்பது வினை ஆற்றுவதன் மூலம் இயற்கையுடன் தொடர்பு கொள்ளுவதாகும். எந்தவிதமான பற்றும் இல்லாது, வினை கொள்பவனுக்கு இயற்கையானது பலவகைகளில் துணை நிற்கின்றது. இதனால், அவனுடைய அறிவும், ஆற்றலும், ஆனந்தமும் பெருகவே செய்கின்றது. தளைகளிலிருந்து விடுபட்டவனால்தான் முக்தி எனும் பேற்றை அடையமுடியும். ஆகவே, சாங்க்யமும், யோகமும் இரு பாதைகளாக இருக்கின்றன. இதனை அறிபவனே உண்மையை உணர்ந்தவனாவான்.)*

**ஸந்யாஸஸ்து மஹாபாஹோ**
**து:கமாப்துமயோகத: ।**
**யோகயுக்தோ முனிர்ப்ரஹ்ம**
**நசிரேணுதிகச்சதி ॥** (6)

*''அகன்ற தோள்களை உடையவனே! கர்ம யோகத்தை மேற்கொள்ளது கர்ம ஸந்யாஸம் பெறுவது என்பது எளிதல்ல. கர்ம யோகம் புரியும் முனிவன் விரைவாக பிரம்மத்தை அடைகிருன்.''*

*(இச்செய்யுளில் கர்ம யோகத்தின் சிறப்பு பேசப்படுகிறது. அதைப் பின்பற்றுபவர்களுக்கு மேலான முக்தி எனும் பதவி*

எளிதாக வந்தமைவதாக உறுதி கூறப்படுகிறது. பிஞ்சில் பழுத்தது இனிக்காது. அதே நேரத்து, மரத்திலுள்ள மாங்காய் ஒன்று நன்கு முதிர்ந்து அதனுடைய இயற்கையான சுவையை தன்னுள் வாங்கிக் கொண்டு, நன்கு பழுத்துப் பின் மரத்திலிருந்து விழும்போது, அதனைச் சுவைக்கும் போது அதன் சுவையே தனியாகும். இந்தப் பக்குவம் மனிதனிடமும் இருக்கவேண்டும். தனக்குரிய வினைகளை ஆற்றி, இயற்கைக் காட்டும் உண்மை அனுபவமாகக் கொண்டு வாழும் போது ஞானம் என்பது அவனுக்கு எளிதாக வந்தமைகிறது. அப்போதுதான் அந்த பிரம்மம் எனும் பேரொளியை அவன் காணமுடியும். இதுவே முறையான கர்மஸந்யாஸம் என்று கூறப்படுகிறது. இம்முறைதான் மனிதர்களுக்குச் சிறந்த மார்க்கமுமாகும்.)

**யோகயுக்தோ விசுத்தாத்மா**
**விஜிதாத்மா ஜிதேந்த்ரிய: ।**
**ஸர்வபூதாத்மபூதாத்மா**
**குர்வன்னபி ந லிப்யதே ॥** (7)

''கர்ம யோகத்தில் நாட்டமுள்ளவன், தெளிந்த மனத்தை உடையவன், உடலை (உடலின்பங்களை) வெற்றி கொண்டவன், ஐம்பொறிகளை அடக்கியன், தன்னுள் இருக்கும் ஆத்மாவே மற்றைய உயிர்களுக்கும் ஆத்மா என்று நினைப்பவன் (தன் ஆத்மாவில் மற்றைய ஆத்மாக்களைக் காண்பவன்) ஆகியோர் வினைகள் (கர்மா) செய்தாலும், அவற்ருல் அவர்கள் கட்டப்படுவதில்லை. (அவற்றிற்கு அடிமையாவதில்லை)''.

(சாதாரண மனிதர்களாகிய ஜீவர்கள் - வினைகள் ஆற்றும்போது, அவற்ருல் விளையும் இன்ப துன்பங்களுக்கு ஆளாகின்றனர். அவற்றாள் அவர்கள் பாதிக்கப்படும் அளவு, துன்பத்திற்கே தங்களைத் தாங்களே இட்டுச்செல்கின்றனர். அதே சமயத்தில் வினையாற்றும் யோகி அல்லது துறவியானவன் எவ்வளவு வினைகள் ஆற்றுகின்ருனோ (கர்மம் செய்கின்ருனோ) - அந்த அளவு அவ்வினைகளின்

*பந்தத்திலிருந்து - பற்றிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ளும் நிலையை, பக்குவத்தைப் பெறுகின்றான். ஏன் என்றால், யோகியானவன், வினையாற்றும் போது எந்தவித எதிர்பார்ப்புகளையும் மனதில் கொண்டு செய்வதில்லை. அதாவது ஆசையற்று, பற்றற்று செய்கின்றான். அதனால் அவன் சொல்லும் வழியில் நிளைக்கும் வகையில் அவன் உடலும், ஐம்பொறிகளும் அவனுக்கு உட்பட்டு நடக்கின்றன. இந்த அடக்கியாளும் திறத்தால் அவன் ஞானம் எனும் பேரறிவை காலக்கிரமத்தில் பெறுகின்றான். அந்த நிலையில் எல்லா உயிர்களிடத்தும், தன்னிடத்தும் உள்ள பரமாத்மா என்பவன் ஒருவனே என்ற உண்மையை- அனுபவத்தை அறிகின்றான். ஆகவே வினைப்பற்று அகலுவதால் வினைப்பபிற்சியானது வினைத்துறவுக்கு வழிகாட்டுகிறது.)*

**நைவ இஞ்சித்கரோமீதி யுக்தோ**
**மன்யேந் தத்வவித் ।**
**பச்யஞ் ச்ருண்வன் ஸ்ப்ருசஞ்**
**ஜிக்ரன்னச்னன்**
**சச்சன் ஸ்வபஞ் ச்வஸன் ॥** (8)

*''தத்துவம் அறிந்த யோகியானவன் பார்ப்பதும், கேட்பதும், தொடுவதும், முகர்வதும், அருந்துவதும், நடப்பதும், தூங்குவதும், சுவாசிப்பதும் --- (இச்செய்யுளின் கருத்து அடுத்தச் செய்யுளிலும் தொடர்கிறது.)*

**ப்ரலபன் விஸ்ருஜன் க்ருஹ்ணன்னுன்**
**மிஷந் நிமிஷன்னபி ।**
**இந்த்ரியாணீந்திரியார்த்தேஷு**
**வர்தந்த இதி தாரயன் ॥** (9)

*''பேசுவதும், கழிப்பதும், பிடிப்பதும், கண் திறப்பதும், கண் மூடுவதும் ஆகிய ஐம்பொறி உணர்வுகளும், செயல்களும், புலன்களின், உறுப்புகளின் பயனாக நடக்கின்றன என்பதே உண்மை என்று கொண்டு ''நான் எதனையும் செய்வதில்லை'' என்றே நினைத்திடுவான்''.*

*(காலை எழுந்ததும் மனிதன் தன் அன்றாடத்தேவை களுக்காகத் தன் உடல் கொண்டு உழைக்க வேண்டியிருக்கிறது. இதுபோது செயல்கள் அனைத்தும் இந்த உடல்தான் செய்கின்றது. 'என்னுள் இருக்கும் ஆத்மாவுக்கு செயல் இல்லை' என்று நினைக்கும் ஒருவனுக்கு தான் செய்யும் செயல்களுக்கு 'நான்தான் செய்கிறேன், நான்தான் காரணம்'' என்ற எண்ணமில்லை. ஆகவே ஆத்மானுபவத்தில் மூழ்கியிருப்பவன் ஞானேந்திரியங்கள் (உடம்பு, கண், செவி, மூக்கு, நாக்கு), கர்மேந்திரியங்கள் (வாய், கை, கால், சிறுநீர் துவாரம், மலஜல துவாரம் பிராணன் (உயிர்) ஆகியற்றின் வினைகளைத் தன் செயல்களாகக் கருதமாட்டான்.)*

**ப்ரஹ்மண்யாதாய கர்மாணி ஸங்கம்**
**த்யக்த்வா கரோதி ய: ।**
**லிப்யதே ந ஸ பாபேன**
**பத்மபத்ரமிவாம்பஸா ॥** (10)

*''பிரம்மத்தை சரணடைந்து, பற்றுகளை விட்டொழித்து, வினைகளை மேற்கொள்பவன், தண்ணீரில் தாமரையிலையைப் போன்று பாவங்களால் பந்தப்படுவதில்லை (தாக்கப்படு வதில்லை)''*

*(இங்குத் தாமரை இலையின் இயல்புக்கு நிகராகத் துறவியின் நிலை பேசப்படுகிறது. இவ்வாறு தாமரையானது தண்ணீரில் தோன்றி வளர்ந்து, மலர்ந்தாலும் நீரால் அத்தாமரை எவ்வாறு நனைவதில்லையோ அவ்வாறே பல நிலைகளில் வினையாற்றினாலும், துறவியானவன் அவ்வினைப் பற்றினால் தாக்கப்படுவதில்லை.)*

**காயேன மனஸா புத்த்யா**
**கேவலைரிந்த்ரியைர்பி ।**
**யோகின: கர்ம குர்வந்தி ஸங்கம்**
**த்யக்த்வாத்மசுத்தயே ॥** (11)

*''துறவிகள் பற்றை விடுத்து, ஆத்ம சுத்திக்காக (தூய்மையான ஆத்மாவுக்காக) வெறும் உடம்பாலும், மனத்தாலும், அறிவாலும், ஐம்பொறிகளாலும் வினை ஆற்றுகின்றனர்.''*

(துறவிகளை யான் எனது என்ற மமதை உணர்வுகளோ, சுயநல எண்ணங்களோ சிறிதும் நெருங்கா. அதனால் உள்ளிருந்து உணர்வுகளை எழுப்பக்கூடிய உறுப்புக்களோ வெளியிலிருந்து இயங்கக்கூடிய உறுப்புக்களோ எந்தவிதச் சலனமின்றி அவர்கள் உள்ளத்தில் செயல்படுகின்றன. அதனால் துன்பங்களுக்கு அழைத்துச் செல்லும் 'ஆசை' எனும் உணர்ச்சிக்கு வாய்ப்பில்லாது போய்விடுகிறது. அதுபோது அவர்களது சித்தம், ஆத்மா தெளிவான இயல்பைப் பெறுகிறது.)

**யுக்த: கர்மபலம் த்யக்த்வா**
**சாந்திமாப்னோதி நைஷ்டிகீம் ।**
**அயுக்த: காமகாரேண பலே**
**ஸக்தோ நிபத்யதே ॥** (12)

''துறவியானவர் வினைப்பயன்களில் பற்று இல்லாது, நிஷ்டையில் உருவாகும் அமைதியைப்பெறுகிறுன். யோகத்தைப் பின்பற்றுதவன் ஆசையினால் தாக்குண்டு கட்டப்பட்டவனாகின்றுன்''.

(வினை செய்வது என்பது துறவிகளும் சம்சாரிகளும் மேற்கொள்ள வேண்டிய ஒன்றுகும். ஆனால் துறவியானவன் வினையாற்றும் போது, 'நான் ஒன்றும் செய்வதில்லை எல்லாம் கடவுள் செயல்'' என்ற எண்ணமே துறவிக்கு உறுதியாகின்றது. நிஷ்டையாகின்றது. இதனால் துறவி கவலைக்கு உட்படுவதில்லை. அவருடைய அமைதி பெருகுகின்றது. அறிவு பிரகாசிக்கின்றது. ஞானம் உதிக்கின்றது. ஆனால் அதே நேரத்து சம்சாரியானவன், ஆசையின் காரணமாகச் செய்யும் பணிகளைத் தனக்காகச் செய்கின்றுன். 'நான் செய்கிறேன்' என்று கூறுகின்றுன். அதனால் செய்யும் வினைகளின் பயன்களால் குழப்பம், ஏமாற்றம், கோபம், துன்பம் ஆகியவற்றுல் தாக்குண்டுத் துன்பப்படுகிறுன்.)

**ஸர்வகர்மாணி மனஸா ஸந்யஸ்**
**யாஸ்தே ஸுகம் வசீ ।**
**நவத்வாரே புரே தேஹீ நைவ**
**குர்வன்ன காரயன் ॥** (13)

''தன்னைக் கட்டுப்படுத்திய (ஐம்புலன் இன்பங்களைக் கட்டுப்படுத்திய) தேகியானவன் வினைகள் யாவற்றையும் தன் மதிநுட்பத்தால் விலக்கிவிட்டு, எதையும் செய்யாதவனாக, எதனையும் செய்விக்காதவனாக, ஒன்பது வாயில்களைஉடைய உடம்பில் சுகமாக அமர்ந்திருக்கிறுன்.''

(இச்செய்யுளில் வினைப்பற்றில்லாத ஆத்மாவின் நிலை கூறப்படுகிறது. வினைகள் பலவகை உண்டு. நாளும் செய்யவேண்டிய வினை. அதாவது நித்திய கர்மம். உறங்குவதும், குளிப்பதும், உண்பதும், வழிபடுவதும், நாளும் மனிதன் மேற்கொள்ளும் வினைகளாகும். ஏகாதசி, ஸ்ரீராமநவமி, சதுர்த்தி, சிவராத்திரி போன்ற சமய திருநாட்களில் மேற்கொள்ள வேண்டிய வினைகளை நைமித்திக கர்மம் என்று கூறுவர். ஒரு குறிப்பிட்ட பலனுக்காக மேற்கொள்ளவேண்டிய வினையை காமிய கர்மம் என்று சொல்வர். செய்யக்கூடாத, விலக்கப்பட்ட வினையை நிஷித்த கர்மம் என்று பேசுவர். ஆசை மற்றும் கர்வம் இல்லாத துறவியானவன் இந்த நான்கு வினைகளால் எந்தவித தாக்கமும், பாதிப்பும் அடைவதில்லை. அத்தகைய துறவியின் ஆத்மாவானது ஒன்பது ஓட்டைகளை உடைய இந்த உடலுக்குள் ஓர் அரசனாக வாழ்கிறது.)

**ந கர்த்ருத்வம் ந கர்மாணி**
**லோகஸ்ய ஸ்ருஜதி ப்ரபு: ।**
**ந கர்மபல ஸம்யோகம்**
**ஸ்வபாவஸ்து ப்ரவர்த்ததே ॥** (14)

''வினைக்குரிய தலைமை, வினையாற்றுதல், அவ்வி னையினால் பயன் அடைதல் ஆகியவற்றை இந்த உலகத்திற்காக கடவுள் ஏற்படுத்தவில்லை. இயற்கையே இவ்வாறு ஏற்படுத்தியுள்ளது.''

(இயற்கையின் உந்துதலால் வினைகள் நடைபெறு கின்றன.ஆனால் தான் தான் அவ்வினைகளை செய்வதாக மனிதன் தன் அறியாமையின் காரணமாக எண்ணிக்கொள்கிறுன். அப்போது, அவ்வினைப் பயன்களையும் தானே பெறு வதாகவும் எண்ணுகின்றுன். ஆனால் வினைக்கும், வினை

*ப்பயனுக்கும், வினைகளின் தலைமைக்கும் அவ்இயற்கையே முழுப்பொறுப்பாகும்.)*

**நாதத்தே கஸ்யசித்பாபம் ந**
**சைவ ஸுக்ருதம் விபு: ।**
**அக்ஞானேனாவ்ருதம் ஞானம்**
**தேன முஹ்யந்தி ஜந்தவ: ॥** (15)

*''யாருடைய பாவ-புண்ணியங்களையும் கடவுள் (பரமாத்மா) பொருட்படுத்துவதில்லை. பேரறிவு (ஞானம்) அறியாமையால் (அக்ஞானத்தால்) சூழப்பட்டிருக்கிறது. அதனால் உயிர்கள் (ஜீவாத்மாக்கள்) மயக்கத்தில் உள்ளன''.*

*(நிலம், நீர், காற்று, நெருப்பு ஆகிய நான்கு பூதங்களின் தன்மைகள் ஐந்தாவது பூதமான ஆகாயத்தின் தன்மையை எந்த நிலையிலும் பாதிக்காது. அதேபோன்று இயற்கையின் தாக்குதல்கள் அப்பரமாத்மாவை ஒன்றும் செய்யாது. அதாவது பரமாத்மா இவ் இயற்கையின் நன்மை, தீமைகளை பொருட்படுத்துவதில்லை. ஏற்கும் பாத்திரத்தின் வடிவங்களுக்கேற்ப அவற்றிலுள்ள நீரானது அவ்வவ் வடிவங்களைப் பெறுகின்றது - ஆனால் நீர் வடிவமற்றது. அதே போன்ற பரமாத்மா - கடவுள் அவ் இயற்கையை சார்ந்திருப்பது போன்ற ஒரு உணர்வையே ஏற்படுத்தும். இது ஜீவர்களின் அறியாமையையே காட்டும். ஆகவே இயற்கையோடு நட்பு வைத்துக் கொள்ளும் ஜீவன் பந்த பாசங்களுக்கு அடிமையாகின்றான். அந்த இயற்கையிலிருந்து தன்னை முழுவதுமாக விடுவித்துக் கொள்ளும் போதுதான் அவன் உண்மையான விடுதலையைப் பெறுகின்றான்.)*

**ஞானேன து ததக்ஞானம் யேஷாம்**
**நாசிதமாத்மன: ।**
**தேஷாமாதித்யவஜ்ஞானம்**
**ப்ரகாசயதி தத்பரம் ॥** (16)

*''யாருடைய அறியாமை ஆத்ம ஞானத்தால் (ஆன்மப்பேரறிவால்) அழிக்கப்படுகிறதோ, அவர்களுக்கு அந்த*

ஞானமானது (பேரறிவானது) சூரியனைப் போன்று விளங்கி (அந்த) பரம்பொருளை விளக்குகிறது''.

(இங்கு பேரறிவானது சூரியனுடன் ஒப்பிடப்படுகிறது. சூரியன் வானத்தில் தோன்றியவுடன், இருள் தானாக மறைந்துவிடுகிறது. அதேபோன்று ஞானமாகிய பேரறிவானது ஒருவனுக்குத் தோன்றிடும்போது அறியாமை அவனிடமிருந்து மறைந்துவிடுகிறது. சூரிய ஒளியானது, உலகத்தில் உள்ளதை உள்ளவாறு காட்டுவது போன்று, பேரறிவானது அந்தப் பரம் பொருளை நமக்கு விளக்குகிறது)

**தத்புத்தயஸ்ததாத்மானஸ்-**
**தந்திஷ்டாஸ்தத்பாராயணா: ।**
**கச்சந்த்யபுனராவ்ருத்திம்**
**ஞானநிர்தூதகல்மஷா: ॥** (17)

''பிரம்மத்தின்பால் (தன்) அறிவை செலுத்துபவர், அதனையே தானாகக் கொள்பவர், அதிலேயே உறுதியாக விளங்குபவர், தனையே புகலிடமாக்கிக்கொள்பவர் பேரறிவால் பாவங்களைப் போக்கிக் கொள்பவர் (ஆகியோர்) பிறகு பிறவி எடுப்பதில்லை.''

(பேரறிவான ஞானத்தைப்பெற்றவன் எல்லாம் பெற்றவனாகக் கருதப்படுகிறுன். அதனால் அவன் தெய்வீகநிலையை அடைகின்றுன். எங்கும் எதிலும் இறைவனையே காண்கின்றுன். அதனால் அவன் பிரம்மத்தின் மறு உருவமாகத் திகழ்கின்றுன். அப்போது பிறவி எனும் பிணைப்பு அவனுக்குப் பிறகு எப்போதும் ஏற்படுவதில்லை. சூரியன் எவ்வளவு முயற்சி செய்தாலும் அவனால் இருட்டு என்பதை எவ்வாறு காணமுடியாதோ, பேரறிவு பெற்ற ஞானியால் எங்கும் பிரம்ம ஒளியினையே காண்பானாகின்றுன்.)

**வித்யாவினயஸம்பன்னே**
**ப்ராஹ்மணே கவி ஹஸ்தினி ।**
**சுனி சைவ ச்வபாகே ச**
**பண்டிதா: ஸமதர்சின: ॥** (18)

*''கல்வியடக்கம் கொண்ட அந்தணனிடமும், பசு வினிடமும், யானையிடமும், நாயினிடமும், நாயைத்தின்னும் கீழ் மக்களிடமும் ஞானிகள் சமநோக்கமே கொள்வார்கள்''.*

*(நன்குக் கற்றுத் தேர்வது மட்டுமின்றி, அக்கல்வியினால் கர்வம் கொள்ளாது, அடக்கத்துடன் விளங்குபவனே உண்மை அந்தணன். அத்தகு அவன் மக்களில் பெருமையுடைய வனாவான். விலங்குகளில் புனிதமாகக் கருதப்படுவது பசு. வயது வித்யாசமின்றி எவரையும் என்றும் கவருவது, ஒரு மனஈடுபாட்டை தோற்றுவிக்கும் உருவம்கொண்டது யானையாகும். மக்களிடையே வாழ்ந்தாலும் அவர்களால் பெரிதும் ஒதுக்கப்பட்டு வாழ்வது நாய். கீழான பிறவியாகக் கருதப்படுபவன் அந்த நாயினைத் திண்பவன். இவ்வாறு பொதுவாக மக்களிடையே வேற்றுமை பாராட்டப்படுபவை மேற்கூறியனவாகும். ஆனால் பேரறிவு கொண்ட ஞானியானவன் இவ்வாறு அவற்றிடையே வேற்றுமை பாராட்டமாட்டான். எல்லாவற்றினும் அந்தப் பரம் பொருளையே காண்பான். இங்கு ஞானியானவன், காவேரி, சாக்கடை என்று வேற்றுமை பார்க்காது தன் ஒளியைப் பாய்ச்சிடும் சூரியனுக்கு நிகராகக் கருதப்படுகிறான்.)*

**இஹைவ தைர்ஜித: ஸர்கோ**
**யேஷாம் ஸாம்யே ஸ்திதம் மன: ।**
**நிர்தோஷம் ஹி ஸமம் ப்ரஹ்ம தஸ்-**
**மாத் ப்ரஹ்மணி தே ஸ்திதா: ॥** (19)

*''மனதை சமமாக வைத்துக்கொள்பவர்கள் இந்தப் பிறவியிலேயே இயற்கையை அடக்கி ஆள்பவர்களாவார்கள். பிரம்மம் சமநோக்கம் கொண்டது. குறையில்லாதது. ஆகையால் அவர்கள் (பிரம்ம-ஞானிகள்) பிரம்மத்தில் (மெய்ப்பொருளில்) நிலைத்து இருப்பார்கள்''.*

*(உடைந்த கண்ணாடியில் காணப்படும் பொருள்தெளிவாகத் தெரியாது. கண்ணாடி தூய்மையாக, உடையாததாக இருந்தால்தான் காணப்படும் பொருளை உள்ளது உள்ளவாறு*

நாம் காணமுடியும். இந்தக் கண்ணுடி போன்றது தான் மனம் என்பது. அம்மனத்தின் உறுதியால் பிரம்மஞானம் உதயமாகிறது. அந்தப் பிரம்மம் அசையாத ஒன்ருக விளங்கும் போது வேற்றுமைகள், மாறுபாடுகள் அதன்கண் நிகழா. அதனால் குறையில்லாத, கேடில்லாத ஒன்ருக அப்பிரம்மம் விளங்குகிறது. அந்த பிரம்மத்தைக் கொண்டவனே பிரம்மஞானியாவான்.)

ந ப்ரஹ்ருஷ்யேத்ப்ரியம் ப்ராப்ய
நோத்விஜேத்ப்ராப்ய சாப்ரியம் ।
ஸ்திரபுத்திரஸம்மூடோ
ப்ரஹ்மவித்ப்ரஹ்மணி ஸ்தித: ॥ (20)

''மெய்ப்பொருளை (பேரறிவை) அறிந்தவன், அம்மெய்ப்பொருளில் நிலைபெற்றவன், உறுதியான அறிவைக் கொண்டவன், மனத்தில் குழப்பம் இல்லாதவன் (ஆகியோர்) விரும்பியதைப் பெற்றதால் மகிழ்ச்சியோ, விரும்பியதைப் பெருததால் துன்பமோ கொள்வதில்லை''.

(நான் செய்கிறேன், என்னுடையது என்ற உணர்வினால் இயங்குபவன் மனக்குழப்பத்திற்கு ஆளாகின்ருன். அதனால்பெறப்படும் இன்பம், துன்பம், விருப்பு, வெறுப்பு ஆகிய உணர்வுகளை அவன் தன் உடம்பால் அனுபவிக்கின்ருன். ஆனால் எல்லாம் அப்பரம்பொருள் என்ற மெய்யறிவை உடையவன் இது போன்ற உணர்வுகளுக்கு அடிமையாவதில்லை.)

பாஹ்யஸ்பர்சேஷ்வஸக்தாத்மா
விந்தத்யாத்மனி யத்ஸுகம் ।
ஸ ப்ரஹ்மயோகயுக்தாத்மா
ஸுகமக்ஷயமச்னுதே ॥ (21)

''உலக விஷயங்களில் மனத்தை அடிமையாக்காதவன் ஆத்மாவில் இன்பம் பெறுகின்ருன். பிரம்ம சமாதியில் (மெய்ப்பொருள் தியானத்தில்) மனத்தை உடைய மனிதனானவன் குறையாத இன்பத்தைப் பெறுகின்ருன்.''

(ஐம்பொறிகளின் மூலமாகப் பெறப்படும் வெளியுலக

இன்பங்கள் நிலையற்றவையாகும். இவற்றை சிற்றின்பம் என்று அழைப்பர். ஆனால், உடலுக்குள் இருக்கும் ஆத்மா தூய்மையாக விளங்கிடும் போது, இறையனுபவத்தை நுகர்கின்றது. இதுவே நிலையான பேரின்பம் என்று கூறப்படுகிறது.)

**யே ஹி ஸம்ஸ்பர்ச ஜா போகா து:**
**கயோனய ஏவ தே ।**
**ஆத்யந்தவந்த: கௌந்தேய ந**
**தேஷு ரமதே புத: ॥** (22)

''புலன்களின் மூலமாகப் பெறப்படும் இன்ப அனுபவங்களே துன்பத்திற்குக் காரணங்களாகும். குந்தியின் மகனே! முதலும் முடிவும் உடைய அந்த புலனின்பங்களை ஞானியானவன் நாடுவதில்லை.''

(புலனின்பங்களுக்கு மனிதன் தன்னை அடிமையாக்கிக் கொள்வதன்மூலம் தானே தன்துன்பத்திற்குக் காரணனாகின்முன். புலன்களைக் கொண்டு இன்பங்களை நுகரும் போது, சுகம் எனும் மயக்கத்திற்கு ஆளாகின்முன். உடல் சுகமே இறுதி சுகம் என்று நினைத்துக்கொள்கிமுன். இன்ப விஷயங்களை விட்டு புலன்கள் நகரும்போது துன்பத்தையும், ஏமாற்றங்களையும் எதிர்கொள்ளுகின்முன். ஒரு சிறிது இன்ப அனுபவத்திற்காக இறுதியில் பெரிய துன்பங்களுக்கு ஆளாக்கிக் கொள்கின்முன். இந்த மனத்தை, புலன்களை கட்டுப்பாடு செய்யும் போது மனிதன் மிருகத்தினிடமிருந்து தன்னை வேறுபடுத்திக் கொள்ள வேண்டியது அவசியமாகிறது.)

**சக்னோதீஹைவ ய: ஸோடும்**
**ப்ராக்சரீரவிமோக்ஷுணத் ।**
**காமக்ரோதோத்பவம் வேகம் ஸ**
**யுக்த: ஸ ஸுகீ நார: ॥** (23)

''இப்பிறவியில் (மனிதப்பிறவியில்) உடலைவிட்டு செல்வதற்கு முன், காமம் மற்றும் கோபம் எனும் குரோதம் ஆகியவற்றின் கடுமையைப்பொறுத்துக்கொள்பவரே (அடக்குவனே) யோகியாகக் கருதப்படுவான். அவன்தான் உண்

மையான இன்பத்தை அனுபவிப்பவனாவான்''.

காமமும், கோபமும் மனிதனை மிருகமாக்கும் பண்புகளாம். உடம்பில் ஆசையிருக்கும் அளவு, புலன்களின் வழியாதான் ஒருவனது உடலும், உயிரும் இயங்கும். மேற்கூறிய பண்புகளால் மனிதன் தாக்கப்படும் போது, அவன் விருப்பு, வெறுப்பு, தளர்ச்சி என்று உள்ளத்தாலும், உடலாலும் அலைகழிக்கப்படுகின்றான். ஆகவே தாலா துன்பங்களுக்கும் வழிவகுக்கும் காமத்தையும் கோபத்தையும் அடக்குபவனே மனிதர்களுள் சிறந்த யோகியாகத் திகழ்வான். அவன் ஆத்மானுபவத்திலேயே இன்பத்தை நாளும் கர்பவனாவான்.)

ரSந்த: ஸுகோSந்தராராமஸ்-
ததாந்தர்ஜ்யோதிரேவ ய: ।
யோகீ ப்ரஹ்மநிர்வாணம்
ப்ரஹ்மபூதோSதிகச்சதி ॥ (24)

''ஆத்மாவில் இன்பத்தை அனுபவித்து, ஆத்மாவில் விளையாடி, ஆத்மாவில் உள்ளொளி காணும் ஒரு யோகியானவன் தானே மெய்ப்பொருளாகி, பிரம்ம நிர்வாணத்தை முக்தியை- வீடுபேற்றை) அடையப் பெறுகின்றான்.

(இச்செய்யுளில் மனிதன் புறப்பொருள்களின் மேல், அதனால் பெறப்படும் இன்பங்களின்மேல் இருக்கும் மோகத்தைத் துறக்கும் அளவு, உறவுகளை விடும் அளவு அவன் ஞானநிலையை தாக்கி விரைவாக அடியெத்து வைக்கின்றான் என்றுணறப்படுகிறது. அதாவது யோகி, வெளியில் காணப்படும் இன்பத்தை தன் ஆத்மாவிலேயே காணத்துவங்குகிறான். அப்போது அவனே மெய்ப்பொருள் ஆகி, இறுதிமயமான முக்தியைப்பெற தன்னைப் பக்குவப்படுத்திக் கொள்கிறான்.)

லபந்தே ப்ரஹ்மநிர்வாணம்ருஷய:
க்ஷீணகல்மஷா: ।
சின்னத்வைதா யதாத்மான:
ஸர்வபூதஹிதே ரதா: ॥ (25)

*''பாவங்களைப் போக்கி, சந்தேகங்களை அகற்றி, ஐம்பொறிகளை அடக்கி, மற்றைய உயிர்களின் நன்மையில் இன்பத்தைக் காணும் மாமுனிவர்கள் பிரம்ம நிர்வாணம் (முக்தி) பெறுகிறுர்கள்.''*

*(இங்கு யோகிகளின் நிலை கூறப்படுகிறது. யோகிகள் எனும் முனிவர்கள், ஞானிகள் தங்கள் ஆத்மாவிலேயே அந்த மெய்ப்பொருளை கண்டு அனுபவித்தவர்கள். பற்றுக்களைத் துறந்ததனால் இந்த நிலையினை இந்த மனமுதிர்ச்சியினை அவர்கள் எளிதில் கைக்கொள்கிறுர்கள். தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் எனும் வகையில் மற்றைய உயிர்களும் உயர்கதிபெற, பல்வேறு வழிமுறைகளையெல்லாம் கூறிப்போகிறுர்கள். இதனால் அவர்களது அறிவும், உணர்வுகளும் மேலும் பிரகாசித்திடும்போது முக்தி என்பது எளிதான ஓர் இல்க்காக - இலட்சியமாக அவர்களுக்கு அமைந்துவிடுகிறது.)*

**காமக்ரோதவியுக்தானாம் யதீனாம்**
**யதசேதஸாம் ।**
**அபிதோ ப்ரஹ்மநிர்வாணம்**
**வர்த்ததே விதிதாத்மனாம் ॥** (26)

*''ஆசை எனும் காமம், குரோதம் எனும் கோபம் ஆகிய இவற்றிலிருந்து விலகி, மனதினை அடக்கி, ஆத்மாவை அறியும் மெய்யறிவைப் பெற்று விளங்கிடும் துறவிகளுக்கு (ஞானிகளுக்கு) இப்பிறவியிலும், மறுபிறவியிலும் முக்தி என்பது எளிதாகின்றது''.*

**ஸபர்சான்க்ருத்வா பஹிர்**
**பாஹ்யாம்ஸ் ।**
**ச க்ஷுஸ்சைவாந்தரே ப்ருவோ:**
**ப்ராணுபானௌ ஸமௌ க்ருத்வா**
**நாஸாப்யந்தரசாரிணௌ ॥** (27)

**யதேந்த்ரியமனோபுத்திர்முனிர்**
**மோக்ஷபராயண: ।**

**விகேதேச்சாபயக்ரோதோ ய:**
**ஸதா முக்த ஏவ ஸ: ||** (28)

"வெளியுலக நிகழ்ச்சிகளை வெளியில் தடுத்து நிறுத்தி, (சிந்தனையிலிருந்து அகற்றி) இருகண்களின் பார்வையினையும் இரு புருவங்களின் இடையில் நிலைநிறுத்தி, மூக்கின்வழியாக வந்து போகும் பிராணன், அபானன் எனும் இருவழி மூச்சுக்காற்றுப்போக்கினை சமம் செய்து, புலன்கள், மனம், அறிவு ஆகியவற்றை அடக்கி, முக்தியை நாடி, ஆசை, அச்சம் கோபம் ஒழித்து குணசீலனாய் இருப்பவன் எப்போதும் முக்த னென்றே அழைக்கப்படுவான்".

(வெளியில் ஐம்புலன்களினால் பெறப்படும் நிகழ்ச்சிகளில் (ஒலி, மணம், காட்சி போன்றன) சிந்தனை செலுத்தாது, அவைவெளியிலேயே தடுத்து நிறுத்தப்பட வேண்டும். மனயமைதிபெற வேண்டுமென்றால், முன்பே கூறியபடி, நாம் சுவாசிக்கும் காற்றுப்போக்கினை சமமாக வைத்திடல் வேண்டும். கோபம், காமம் ஆகிய உணர்ச்சிகளுக்கு உடலும், உள்ளமும் துணைபோகும் போது, மூச்சுக்காற்றின் போக்கும் அதிகமாகிறது. அதுபோது சிந்தனையும் மனமும் கட்டுக்குள் இருப்பதில்லை. ஆகவே மனம் அமைதிபெற மூச்சுக்காற்று ஒழுங்குப் படுத்தப்படவேண்டும். அசையும் நீரில் உருவம் தெளிவாகத் தெரியாது. அதுபோன்று அலையும் மனதில் அமைதி தோன்றாது. தியானமே அதற்குச் சிறந்த பயிற்சியாகும். அவனது மனம் எண்ணெய் ஒழுக்கு போன்று, இடைவிடாத தடங்கலற்ற முறையில் கடவுளைப் பற்றி மனம் எண்ணுதல் வேண்டும். அவ்வாறு மனம், அறிவு ஆகியவற்றை நெறிப்படுத்துபவனே முக்தனாவான்.

**போக்தாரம் யகஞ்தபஸாம்**
**ஸர்வலோகமஹேச்வரம் ।**
**ஸுஹ்ருதம் ஸர்வபூதானாம்**
**ஞாத்வா மாம் சாந்திம் ருச்சதி ||** (29)

"வேள்வி, தவம் ஆகியவற்றை அனுபவிக்கின்றவனும், உலக முழுமைக்கும் தலைவனும், உயிர்களுக்கெல்லாம்

நண்பனாக இருப்பவனும் நான் (இறைவன்) என்பதை அறிபவன் அமைதி பெறுகின்றான்''.

*(வேள்வி, தவம் ஆகியவற்றை செய்விக்கும் கருவியாக இருந்து அவற்றால் அடையப்பெறும் தேவதையாக இருப்பவன் அந்த பரம்பொருள்தான். அவ் இறைவன் எந்தவதி எதிர்பார்ப்பும் இன்றி, எல்லா உயிர் இடத்தும் கருணையே காட்டுகின்றான். எல்லோர் உள்ளத்தும் சாட்சியாக இருந்து அவரவர்களுடைய நல்வினை, தீவினைகளுக்கேற்ப பலாபலன்களை அருளுகின்றான். இந்த உண்மையை தெரிந்து கொண்டவர்கள் மனதில் குழப்பம், மயக்கம் கொள்ளமாட்டார்கள். அமைதியே பெறுவார்கள்.)*

*(ஐந்தாம் அத்தியாயம் முற்றும்)*

# ஆறும் அத்தியாயம்

## தியான யோகம்

### பகவான் கூறியது:

அனாச்ரித: கர்மபலம் கார்யம்
கர்ம கரோதி ய: ।
ஸ ஸந்யாஸீ ச யோகீ ச ந
நிரக்நிர்ன சாக்ரிய: ॥ (1)

*''வினைப்பயன்களை எதிர்பார்க்காது யார் வினை ஆற்றுகின்றார்களோ அவனே துறவி. அவனே ஞானி. யாகத்தை (செய்யாது) விட்டவரும், வினை செய்யாது இருப்பவரும் துறவிகளல்லர்''.*

*(சாதாரணமாக துறவி அல்லது ஸந்யாஸி என்பவர்களுக்கு ஒரு பொறுப்பும் இல்லை என்பது பொதுவாக எண்ணப்பட்டுவருகிறது. அவருக்கென்ற குடும்பமோ, எதிர்பார்ப்புகளோ இல்லையென்பதால். ஆனால் உண்மையான துறவி என்பவன் பயன் எதிர்ப்பார்க்காது வினை செய்பவனேயாவான். வினை மட்டுமின்றி யாகம் எனும் வினையினையும் மேற்கொள்ள வேண்டும். இங்கு அர்ச்சுனன் தனக்குரிய போர்த்தொழிலை விட்டு விரக்தியாக துறவி நிலையில் பேசும் போது, பகவான் துறவிக்கும் பொறுப்பு உண்டு, கடமையுண்டு, வினையுண்டு என்றுபகவான்*

உறுதிப்படவிளக்குகிறன். ஆகவே தனக்குரிய வினையை செய்பவனே உண்மைத்துறவி, யோகி என்று உணர்த்தப்படுகிறது. பயன் எதிப்பார்க்காது வினை செய்பவன் துறவி. பின்னர் அதுபோன்று தொடர்ந்து வினைகளை ஆற்றும்போது, அத்துறவியே ஞானியாக, யோகியாகத் திகழ்கிறன்.)

யம் ஸந்யாஸமிதி ப்ராஹுர்யோகம்
தம் வித்தி பாண்டவ: ।
ந ஹ்யஸந்யஸ்தஸங்கல்போ
யோகீ பவதி கஸ்சன: ॥ (2)

''பாணடவா (அர்ச்சுனா), எதனைத் துறவு என்று கூறுகின்றர்களோ, அதனையே யோகம் என்று அறிவாயாக. ஏன் என்றல், சங்கல்பத்தை துறக்காதவன் யோகியாக முடியாது''

(லாட்டரி சீட்டு வாங்குவது என்பது ஒரு வினையாகும். அவ்வினையால் ஏற்படப்போகும் பலனை எதிர்பார்த்து மனதில் எண்ணங்களை ஏற்படுத்திக் கொள்வதென்பது சங்கல்பமாகும். அதாவது லாட்டரி சீட்டு வாங்கியபின், குலுக்கலில் தனக்கு பரிசு விழுந்தால் அப்பணத்தை எவ்வாறெல்லாம் செலவழிக்கலாம் என்று பலவழிகளில் மனம் திட்டம் போடுகிறது. அத்திட்டங்கள் நாளுக்குநாள் மாறிக்கொண்டே இருக்கின்றன. இது மனம் அலைபாய்வதால், மனத்தில் சலனம் ஏற்படுவதால் ஏற்படுகின்றது. இதுபோன்ற அலைபாயும் மனதைக் கொண்டவன் யோகியாக விளங்கமுடியாது. மனத்துறவு ஏற்படும் போது சங்கல்பம் எனும் எண்ணப்போக்குகள் நிறுத்தப்படுகின்றன. எண்ணப்போக்குகள் மறையும்போது யோகம் கை கூடுகிறது. ஆகவே மனம் உறுதியுடன் இருந்தால்தான் பற்றின்றி வினையும், தியானப்பயிற் சியினையும் மேற்கொள்ள முடியும். இதுபோதுவினைப்பயன் துறவும் கர்மயோகமும் ஒன்றுக இணைகின்றன.)

ஆருருக்ஷோர்முனேர்யோகம் கர்ம
காரணமுச்யதே: ।

யோகாரூடஸ்ய தஸ்யைவ சம:
காரணமுச்யதே: ॥ (3)

''தியான யோகத்தை அடைய முயலும் துறவிக்கு வினை என்பது ஒரு கருவியாக அமைகிறது. (அதே நேரத்து) தியான யோகம் அடையப்பெற்றவனுக்கு வினையின்மை எனும் நிலையே (வினையேதும் மேற்கொள்ளாது இருத்தல்) ஒரு கருவியாகக் கூறப்படுகிறது.''

(தியானம் என்பதும் ஒரு வினையேயாகும். பயன் ஏதும் கருதாத வினையாற்றலினால் மனம் தெளிவடைகிறது. மனம் தெளிவடையும் போது தியானத்திற்குத் தேவையான கட்டுப்பாடுள்ள ஒருமுனைப்பு உள்ளத்தாலும், உடலாலும் ஒருவன் பெறுகின்றான். அந்த நிலையில் அவன் தவஞானி என்றும் முனிவன் என்றும் அழைக்கப்படுகிறான். இன்பங்களை எதிர்பார்த்து ஒருவன் வினையாற்றும்போது அவன் தொடர்ந்து, ஊக்கத்துடன் அவ்வினைகளை மேற்கொள்கின்றான். அந்தத் தொடர்ச்சியும், ஊக்கமும் பயன் எதிர்பார்க்காத வினைகளை மேற்கொள்ளும் போதும் ஒருவனுக்கு அமைய வேண்டும். அதுவே சிறந்த தியானம் எனும் நிலைக்கு இட்டுச்செல்லும். பிறகு தியானமே சிறந்த வினையாகிறது. அதுபோது அவனிடம் குழப்பம், ஏமாற்றம் மறைந்து ஒழுக்கம், உறுதி, நேர்மை, வினை ஆற்றல், சம நோக்கு, ஒற்றுமை போன்ற புனிதமான பண்புகள் மலரவும் வளரவும் செய்யும். இந்நிலையே அவனை அந்த பரம்பொருளை அறிய வழிவகுக்கும்.)

யதா ஹி நேந்ரியார்த்தேஷு ந
கர்மஸ்வனுஸஜ்ஜதே: ।
ஸர்வஸங்கல்பஸந்யாஸீ
யோகாரூடஸ்ததோச்யதே: ॥ (4)

''எப்பொழுதும் வினைப்பயன்களில் பற்றில்லாது, செய்யும் வினையில் (பணியில்) கருத்துக்கொள்ளாது (வினை செய்கின்றோம் என்ற எண்ணப்போக்கு இல்லாது) எண்ணங்களை (பயன்களைப்பற்றிய பல்வேறு எதிர்பார்ப்பு

உணர்வுகள்) விட்டுவிட்டு ஒருவன் திகழும் போதுதான் அவன் யோகாரூடன் என்று அழைக்கப்படுகிறுன்''.

(யோகப்பயிற்சியில் தேர்ந்தவன் யோகாரூடன் என்று கூறப்படுகிறுன். ஒருவன் யோகப்பயிற்சி மேற்கொண்டு, சலனமற்ற சமாதி எனும் நிலையில், அவன் வெளியுலகத் தொடர்புகளிலிருந்து மனத்தளவில் ஏற்படும் உணர்வு களிலிருந்து விலகுகின்றுன். ஓசை, மணம் போன்ற ஐம்புலன்கள் பெறும் விஷயங்களிலிருந்து அவன் விடுதலை பெறுகிறுன். வினை, வினைப்பயன், பயன்களால் எதிர்பார்க்க ப்படும் அலைபாயும் எண்ணங்கள் ஆகியவற்றிலிருந்து அவன் விலகியிருக்கும் நிலையில் அவன் 'யோகாரூடன்' என்றழைக்கப்பெற்று, அந்த நிலையில் அவன் தன் ஆத்மாவை சுத்தமாக்கிக்கொள்கிறுன். அந்த சுத்த ஆத்மாவே அந்த இறைவன் உறையும் கோயிலாக விளங்குகிறது.)

**உத்தரேதாத்மனாத்மா்னம்**
**நாத்மானமவஸாதயேத்: ।**
**ஆத்மைவ ஹ்யாத்மனோ**
**பந்துராத்மைவ ரிபுராத்மன: ॥** (5)

''(ஒருவன்) தன்னைத்தானே மேம்படுத்திக்கொள்ள வேண்டும். தன்னையே தான் இழிவு படுத்திக்கொள்ளக்கூடாது. ஏனெனின் நமக்கு நாமே நண்பன், நமக்கு நாமே எதிரி''

(இறைவன் இம்மண்ணில் எண்ணற்ற உயிர் இனங்களைப் படைத்துள்ளான். அவற்றுள் மனித இனம் மேம்பட்டதாக விளங்குகிறது. ஏன்? எதற்காக இறைவன் அந்த இனத்தைச் சிறப்புள்ளதாகப் படைத்தான்? இன்பம் எது துன்பம் எது: பெருமை எது இழிவு எது: உயர்வு எது தாழ்வு எது; நன்மை எது தீமை எது என்று சிந்தனை மூலம் பிரித்து அறிந்து கொள்ளும் பகுத்தறிவை மனிதன் கொண்டதால், அது பிற உயிர்களுக்கு இல்லாததால் மனிதப்பிறவி சிறந்ததாகக் கருதப்படுகிறது. ஒருவனுடைய உயர்வுக்கும் தாழ்வுக்கும் அவனே காரணமாகின்றுன். பிறரால்தான் கெட்டுப்போகிறேும் என்று கூறினால் அது நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வதற்குச்

சமமாகும். புகைப்பிடித்தல், மது அருந்துதல், நம் வாழ்நாளைச் சுருக்கும் என்பதை நன்கு அறிந்தும், அதற்கு அடிமையாகிவிடும் மக்கள் அவற்றை விற்பதால் தான் நாங்கள் வாங்கும்படிநேரிடுகிறது என்று கூறி விற்பனை செய்யும் கடைக்காரன் மீது பழிசுமத்துவது நகைப்புக்கு இடம் தருவதாகும். '' பகைவனும் நண்பனும் வெளியுலகில் இல்லை. நம்மிடம்தான் உள்ளனர்'' என்பதை அறிபவனே உலகத்தை இயற்கையை, அந்த ஆண்டவனை அறிந்தவனாகக் கருதப்படுகிறான். தன்னைத்தானே வெறுப்பது பிறரையும் வெறுக்க வழிசெய்யும்.)

**பந்துராத்மாத்மனஸ்தஸ்ய**
**யேனாத்மைவாத்மனாஜித: ।**
**அனாத்மனஸ்து சத்ருத்வே**
**வர்த்தேதாத்மைவ சத்ருவத்: ॥** (6)

''தன்னைத்தானே வென்றவன் தனக்குத்தானே உறவினன் ஆகின்றான். அதேநேரத்து தன்னை வெல்லமுடியாத மனத்தை உடையவன் தனக்குத் தானே எதிரிபோன்று பகைமையை தன்னைச் சூழ வழிவகுக்கிறான்''.

(யோகப்பயிற்சியில் வெற்றிபெறாத அல்லது அப்பயிற்சியினை மேற்கொண்டு வரும் மனிதர்கள் இரு நிலைகளுக்கு உள்ளாகின்றார்கள். உடல், மனம், ஐம்பொறிகள் மூலமாக உள்ளமும், உடலும் சிற்றின்பங்களின்பால் அலைபாய்கின்றன. அதே நேரத்து இறை சிந்தனை ஒருவாறு பெற்று பேரின்பநிலையை அடையவேண்டுமென்ற முயற்சியினை அறிவால் கொள்ளும் நிலை. இருமாறுபட்ட உணர்வுநிலைகளின் போது, ஒருவன் தன் மனதையும் அறிவையும் கட்டுப்படுத்தும் முயற்சியில் வெற்றிகொள்வானாயின் அவனுடைய மனமே, அறிவே அவனுக்கு உற்ற துணையாகின்றன. நண்பனாகின்றன. அப்போது யோகி எனும் சொல்லுக்குப் பொருளாகின்றான். அத்தகுயோகிக்குரிய பக்குவம் இல்லாதார் ஆசை, பற்று ஆகிய

*காரணங்களால் புலனின்பங்களால் கவரப்பட்டுத் தங்களுக்குத் தாங்களே பகைவர்களாகின்றனர். ஆம், பகை, நட்பு அவர்களுடைய மனத்திட்பத்தைப் பொறுத்து அமைகின்றது.)*

**ஜிதாத்மன: ப்ரசாந்தஸ்ய**
**பரமாத்மா ஸமாஹித: ।**
**சிதோஷ்ணஸுகது: கேஷு ததா**
**மானாபமானயோ: ॥** (7)

*''தன்னை அடக்கி, தெளிந்த மனநிலை கொண்டவனுக்கு, குளிர்ச்சி, வெப்பம், இன்பம், துன்பம், புகழ், இழிவு (போன்ற) உணர்வுகளினால் தாக்குண்ட நிலையிலும், அந்த இறைவனின் திருக்காட்சி என்றும் கிடைத்திடும்''.*

*(மனிதப்பிறவியின் நோக்கம் கிடைத்தற்கரியது, பெறுதற்கரியது, காணுதற்கரியது அந்த பரம்பொருளின் திருக்காட்சியாகும். அதனைத் தூய மனம் கொண்ட, தெளிந்த சிந்தை கொண்ட மனிதர்களால் மட்டுமே பெறமுடியும். அதற்கான ஒரே வழி கீழான ஆசைகளை மனதில் ஏற்படுத்திக்கொள்ளாது தன்னைத்தானே வெல்ல வேண்டும். அந்தநிலையில் எவரும் அவனுக்கு பகைவர்களாக இருக்க மாட்டார்கல். பகை, மயக்கம் இல்லாத அந்த மனமே சுத்த ஆத்மாவாகும். அதில் இறைவன், கண்ணுடியில் தெரியும் உருவமாகத் திகழக்காணலாம்.)*

**ஞானவிக்ஞானருப்தாத்மா**
**கூடஸ்தோ விஜிதேந்த்ரிய: ।**
**யுக்த இத்யுச்யதே யோகீ**
**ஸமலோஷ்டாச்மகாஞ்சன: ॥** (8)

*''ஞானத்தில், விக்ஞானத்தில் திருப்தி கொண்டு, அலையும் மனம் இல்லாது, புலன்களை அடக்கி, மண், கல், பொன் ஆகியவற்றை வேறுபாடுஇன்றி ஒன்ருகக்காணும் யோகி யானவனே சமாதிநிலையை கைவரப்பெற்றவனாவான்''.*

*(இச்செய்யுளில் கூடஸ்தன் எனும் சொல் வருகின்றது. ஐம்புலன்களால் பெறப்படும் உணர்வுகளின் காரணமாக*

மனத்தை அலைபாயவிடாது, மனத்தை கட்டுப்பாடுமிக்கதாக வைத்துக்கொள்ளக்கூடிய மனப்பக்குவத்தை உடையவனே கூடஸ்தன் என அழைக்கப்படுகிறான். அவனது மனம், எதுமாறினாலும் மாறாது விளங்கும் ஆகாயத்தைப் போன்று இருக்கும். பக்குவப்பட்ட அந்த மனத்தைக் கொண்டவனால்தான், வெளியே இருக்கும் எப்பொருளைக் கண்டாலும் அவனுள் சலனம் ஏற்படாது. கல்லும் பொன்னும் ஒன்றாகவே அவனுக்குத் தெரியும். அம்மனம் இறைக்காட்சி எனும் இன்பத்தைப் பருகவே விரும்பும்.)

**ஸுஹ்ருன்மித்ரார்யுதாஸீன**
**மத்யஸ்தத் வேஷ்யபந்துஷு ||**
**ஸாதுஷ்வவி ச பாபேஷு**
**ஸமபுத்திர்விசிஷ்யதே: ||** (9)

''நல்ல மனம் கொண்டவர், நண்பர்கள், எதிரிகள், பொருட்படுத்தாதவர், நடுநிலைமை கொண்டவர், வெறுப்பவர்கள், உறவினர்கள், மேலோர் (உத்தம புருஷர்கள்) பாவிகள் ஆகியோரிடத்தும் ஒரே மன இயல்பைக் காட்டுபவரே சிறந்தவர்களாவார்கள்''.

(இம்மண்மீது படைக்கப்பட்ட எல்லா உயிர்களும் இறைவனின் கைவண்ணமேயாகும். அவற்றுள்சிந்திக்கத் தெரிந்த மனிதன், தன் சிந்தனைக்கேற்ப பல்வேறு உணர்வுகளை, குணங்களைக் கொண்டவனாகத் திகழ்கின்றான். நல்ல மனம் கொண்டவன் மற்றவர்க்கு நண்பனாக, உதவியாளராக, சுற்றமாகத் திகழ, வெறுப்பு, கோபம் போன்ற தீக்குணங்களால் தாக்குண்டவர்கள் பகைவர்களாகவும், பாவிகளாகவும் விளங்குகின்றனர். ஆனால் இவ்வாறு மனம், சிந்தனை, செயல்வேறுபாடுகள் கொண்ட மனிதர்களையும் ஒன்றாகக் காணும்மனிதனே சிறந்த யோகியாகக் கருதப்படுகிறான்.)

**யோகீ யுஞ்ஜீத ஸததமாத்மானம்**
**ரஹஸி ஸ்தித: |**

ஏகாகீ யுதசித்தாத்மா
நிகாசீரபரிக்ரஹ: ॥ (10)

''யோகியானவன் யார் கண்ணுக்கும் தெரியாது தனியாக இருந்து வந்து, உள்ளதையும், உடலையும் அடக்கி, ஆசைகளை அழித்து, (தனக்கென்ற) உடைமைப்பொருள் இல்லாதவனாய், எப்போதும் மனத்தை அடக்கவேண்டும்.''

(இச்செய்யுள் மூலமாக மனித இயல்பு நன்கு விளக்கப்படுகிறது. மனதை அடக்கவேண்டுமென்றால், எண்ணங்களை திசை திருப்ப வேண்டுமென்றால், அவன் வேறு பல காட்சிகளில் கருத்து கொள்ளவேண்டும். அப்போது வெளியுலக உறவு அவனுக்கு அவசியமாகிறது. ஆனால் தனிமையில் ஒருவன் இருக்கும்போது, வெளியுலகக் காட்சிகளை அவன் காணும் போது, மனதை அடக்குதல் என்பது அவ்வளவு எளிதல்ல. 'மருந்து சாப்பிடும் போது குரங்கை நினைத்துக் கொள்ளாதே' என்று அறிவுரை கூறினால், தான் மட்டுமல்ல வேறுயாரேனும் மருந்து சாப்பிட்டால் கூட குரங்கு நினைப்புதான் ஒருவன் மனதில் தோன்றும். ஆகவே எதனைக் கூடாது என்று கூறுகிறோமோ, எணணுகிறோமோ அதனைத்தான் பலமுறை பலவாறு மனம் அசைபோடும். ஆகவே தனிமையில் மனதை அடக்குதல் மிகுந்த பயிற்சியின் பயனாகத் தான் விளையும். அதற்குமுன்பு உடல் அடக்கம் தேவை. பின்னர் மன அடக்கம். இவற்றில் தேர்ச்சி பெற்றவனே யோகியாவர். உடலுக்கு நம் மனதை அடிமையாக்கக்கூடாது. ஆசை அதிகமாகும் அளவு தேவைகளும் பெருகுகின்றன. உயிர்வாழுதற்குரிய அடிப்படை தேவைகள் மட்டுமே ஒருவன் பெறல்வேண்டும். தேவைகள் அதிகமாகும் போது, பொருள்கள் அதிகமாகின்றன. பின்னர் அவற்றைக் காப்பாற்றவும், பெருக்கவும் நம் அறிவு, உடல் கட்டுப்பாடற்று செயல்புரிகின்றன. இதிலிருந்து நம்மைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டுமென்றால் போதும் என்ற மனப்பான்மை நம்முள் வளரவேண்டும். மேலும் நம்மிடம் இருக்கும் பொருளையும்

நம்முடையது என்று கருதுதல் கூடாது 'நான்' 'எனது' என்று எண்ண ஆரம்பித்தால், பழையபடி 'மனம்' மாசுபடும்)

## பகவான் கூறியது

> சுசௌ தேசே ப்ரதிஷ்டாப்ய
> ஸ்திரமாஸனமாத்மன: ।
> நாத்யுச்ரிதம் நாதிநீசம்
> சைலாஜினகுசோத்தரம்: ॥ (11)

''தூய்மையான இடத்தில், உறுதியுள்ளதும், அதிக உயரமும், அதிகத் தாழ்வும் இல்லாததும், துணி, மான் தோல், தர்ப்பை இவைகளைக கொண்டதுமான ஆசனத்தை நன்றாக அமைத்துக் கொள்ள வேண்டும்''.

(இங்கு, அமரும் இடம் (ஆசனம்) எவ்வாறு இருத்தல் வேண்டும் என்பது மனிதனின் உள்ளம் மற்றும் உடல் பாங்கினை மனதிற்கொண்டு மிக அழகாகக்கூறப்படுகிறது. சூழ்நிலை சுத்தமாக அமையும் போது அறிவும், மனமும் குழப்பமின்றி அமைதியுடன் விளங்கும். பிறகு அமரும் இடம் எவ்வாறு அமைக்கப்படவேண்டும் என்று விளக்கப்படுகிறது. அமரும் இருக்கை எவ்வித அசைவுகளுக்கு உட்படாதவாறு இருத்தல் வேண்டும். அடுக்கப்பட்ட மரத்துண்டுகளின் மீதோ, குவிக்கப்பட்ட கற்குவியல், மணற்குவியல் ஆகியவற்றின் மீதோ, இலை தழைகளைக் கொண்ட குவியல்களின் மீதோ இருக்கையினை அமைத்துக்கொள்ளக் கூடாது. ஏனென்றால் அவை எந்த நேரத்திலும் சரிந்து விடலாம். அதனால் அவற்றின் மீது இருந்திடும் இருக்கை தன் நிலையினின்று தடுமாறலாம். அதனால் அந்த இருக்கை மீது அமர்ந்திடும் யோகியின் 'ஒருமுனைப்பு' பலவாறு சிதறலாம். யோகி அமரும் இருக்கை எவ்வாறு இருக்கவேண்டும் என்று வளியுறுத்தப்படுகிறது. இருக்கையானது யோகிக்கு உடலின்ப உணர்வை எந்த நிலையிலும் தோற்றுவிக்கக்கூடாது. அதே நேரத்து இருக்கை யோகியை உட்கார முடியாதவாறு வருத்தக்கூடாது. அவற்றை மனதிற்கொண்டு, கண்ணன், இருக்கையின் அமைப்பை

விளக்குகிறார். அருக்கை பாறையாகவோ, கட்டப்பட்ட மேடையாகவோ இருத்தல் வேண்டும். நிலமட்டத்திலிருந்து மிக உயரமாகவோ (உட்காரும் போது மனதில் விழுந்து விடுவோமோ என்ற அச்ச உணர்வு ஏற்படக் கூடாது) தரையோடு தரையாகவோ (புழு பூச்சிகள் உடல் மீது ஊர்ந்து துன்பத்தைத் தரக் கூடாது என்பதற்காக) இருத்தல் கூடாது. இருக்கையானது முதலில் தர்ப்பைகளால் படரப்பட வேண்டும். அதன்மீது மான்தோல் விரிக்கப்பட வேண்டும். அதன்மீது துணி ஒன்று விரிக்கப்பட வேண்டும். இது போன்ற இருக்கையே (ஆசனம்) மன ஒருமைப்பாட்டிற்குத் தகுந்ததாகும்.)

தத்ரைகாக்ரம் மன: க்ருத்வா
யதசித்தேந்திரியக்ரிய: ।
உபவிச்யாஸனே யுஞ்ஜ்யாத்யோக
மாத்மவிசுத்தயே: ॥ (12)

''அங்கே ஆசனத்தில் அமர்ந்து, மனதை ஒருமுகப்படுத்திக்கொண்டு, மன ஓட்டத்தையும், ஐம்புலன் இன்பங்களையும் அடக்கிக்கொண்டு, சுத்தமான மனதை பெறும் பொருட்டு யோகம் பயில வேண்டும்''.

(கண், செவி போன்ற ஐம்புலன்களின் வாயிலாக மனமானது அசுத்தமாகின்றது. ஆகவே மனம் தூய்மையாக விளங்க வேண்டுமாயின், புலனின்பங்களை நுகரும் எண்ணங்களைக் கட்டுப்படுத்த வேண்டும். இதுபோது அறிவும் ஆன்மாவும் மேன்மையடைகின்றன.)

ஸமம் காயசிரோக்ரீவம்
தாரயன்னசலம்ஸ்திர: ।
ஸம்ப்ரேக்ஷ்ய நாஸிகாக்ரம் ஸ்வம்
திசஸ்சானவலோகயன்: ॥ (13)

''உடல், தலை, கழுத்து ஆகியவற்றை அசைக்காது நேராக வைத்துக்கொண்டு, உறுதியாக இருந்து, தன்னுடைய மூக்கின் நுனியைப் பார்ப்பது போன்று, மற்றைய திசைகளை பார்க்காது இருக்க வேண்டும்''.

(மனம் ஒடுங்குவதற்குரிய தியானத்தின் சிறப்பினை இச்செய்யுளில் காணலாம். உடல், தலை, கழுத்து நேராக உறுதியாக இருந்திடும்போது முதுகுத் தண்டும் நேராக அமைகின்றது. அதுபோது உடல் முழுவதும் சீரான, நேரான, நிமிர்ந்த நிலையில் இருந்திடும் போது, மூச்சுக்காற்றின் போக்கு சீராக அமைகின்றன. இதனால் மனதில் தேவையற்ற எண்ணங்கள் எழுவதில்லை. மனம் சஞ்சலமற்று இருக்கும் போது, உடலும், ஒரு குன்றினைப் போன்று அசையாது இருந்திடும். அந்த நிலையில் செவி, வாய், கண் போன்றன தங்கள் செயல்களை மறக்கின்றன. கண்கள் நிலைக்குத்தி, ஏதோ, அவரவர்களது மூக்கினைப் பார்ப்பது போன்று தோன்றும். இது, மனமானது ஆத்ம சொரூபத்தில் கலந்திட்ட நிலையினையே காட்டும்).

ப்ரசாந்தாத்மா விகதபீர்ப்ரஹ்ம-<br>
சாரிவ்ரதே ஸ்தித: ।<br>
மன: ஸம்யம்ய மச்சித்தோ யுக்த<br>
ஆஸீத மத்பர: ॥ (14)

''உள்ளத்தில் அமைதி கொண்டு, பயத்தை அகற்றி, பிரம்ம சர்ய விரதம் மேற்கொண்டு, மனதை அடக்கி, அறிவை என் பக்கம் இழுத்து வைத்து, என்னையே இலட்சியமாகக் கொண்டு யோகத்தில் உட்கார வேண்டும்''.

(தெளிந்த குளம் போன்று ஒருவனுடைய மனமானது தெளிவாகவும் அமைதியுடனும் இருந்திடும்போது, அந்த மனமானது தூய்மையானதாக களங்கமற்றதாக விளங்குகிறது. அதுபோது உணர்ச்சிகளின்பால் மனம் அடிமை இல்லையாதலால், அச்சம் போன்ற உணர்ச்சிகளும் அங்குத் தோன்றா. மேலும் சிற்றின்ப உமர்ச்சிகளைத் தூண்டும் காம உணர்வினை மனம் மறந்திடும்போது அது மேலும் கட்டுப்பாடுள்ள தூய்மையான இடமாக விளங்குகிறது. அதுபோது இறைவனின் பற்றிய நினைவே அங்குத் தவழும். இறைவன் ஒருவனே நமக்கு இறுதிப்புகலிடம். அவனை

அடைவதே நமது இலட்சியம். என்ற எண்ணங்கள் தோன்றிடும். அந்த நிலையில் அவன் சிறந்த யோகியாக, துறவியாகத் திகழுகின்றான்).

**யுஞ்ஜன்னேவம் ஸதாத்மானம்**
**யோகீ நியதமானஸ: ।**
**சாந்திம் நிர்வாணபரமாம்**
**மத்ஸம்ஸதாமதிகச்சதி ॥** (15)

''இவ்வாறு எப்போதும் மன்தைதியானத்தில் வைத்து, உள்ளத்தை அடக்கிடும் துறவி என்னிடத்தில் உள்ள, முக்தியில் கலந்துவிடுகின்ற அமைதியை பெறுகின்றான்''.

(இச்செய்யுளில் யோகத்தின் பயன் கூறப்பட்டுள்ளது. யோக சாதனம் புரிந்து மனதை அடக்கியவன் இயற்கையாக மன அமைதி பெறுகின்றான். இதுவே இறைவனை அறியவும், முக்தி எனும் வாழ்க்கைப் பயனைப் பெறவும் வழிகோலுகின்றது)

**நாத்யச்னதஸ்து யோகோஸ்தி ந**
**சைகாந்தமனச்னத: ।**
**ந சாதி ஸ்வப்னசீலஸ்ய**
**ஜாக்ரதோ நைவ சார்ஜுன: ॥** (16)

''அர்ச்சுனா! அளவுக்குமீறி சாப்பிடுபவனுக்கு யோகமில்லை. (அதே நேரத்து) சிறிதும் உண்ணாதவனுக்கும் (அந்த) யோகமில்லை. அதே போன்று அதிகமாக தூங்குபவனுக்கும், அதிகமாக விழித்திருப்பவனுக்கும் யோகமில்லை.''

உடம்பை வீணையைப்போன்று கையாள வேண்டும். வீணையின் கம்பிகளை அளவுக்கு மீறி இழுத்துக் கட்டினால் கம்பிகள் அறுந்து போகும். கம்பிகளைச் சரியாக இழுக்காமல் தொய்வாகக் கட்டினால் மீட்டும் போது ஓசை உண்டாகாது. ஆம் வயிற்றுமுட்ட உண்டால் சோம்பல் உண்டாகும். உணவே சாப்பிடா விட்டால் உடலில் சக்தி இருக்காது. ஆகவே உணவு,

காற்று, நீர் ஆகியன சரியான அளவில் இருக்குமளவில் வயிறு இருக்க வேண்டும். அதே போன்று தூக்கமும்கூட. எழுந்தவுடன் உடம்பு சுறுசுறுப்புடன் அமையும் வகையில் தூக்கம் மிதமாக இருத்தல் அவசியம். இதில் ஏற்றமோ குறைவோ அதிகமானால் தியானம் என்பது மனிதனுக்குக் கைகூடாது. மனிதன் பகலில் அதிகமாக உண்டாலும் இரவில் குறைவாகவே உண்ண வேண்டும் என்றும், கிளர்ச்சி தரும், சூடு பண்ணும் உணவு வகைகளை உட்கொள்ளக்கூடாது என்றும் ஸ்ரீராமகிருஷ்ணர் உபதேசிக்கிறார்.)

யுக்தாஹாரவிஹாரஸ்ய யுக்த
சேஷ்டஸ்ய கர்மஸு ।
யுக்தஸ்வப்னாவபோதஸ்ய
யோகோ பவதி து: கஹா ॥ (17)

''அளவுடன் உண்டு, உடல் பயிற்சி செய்பவனுக்கும், அளவுடன் வினைகளை செய்து, தூக்கத்தையும் விழிப்பையும் முறையாக மேற்கொள்பவனுக்கும் யோகமானது துன்பத்தை நீக்கிவிடும்''.

(வாழ்க்கையில் எவரும் அளவுக்கு மீறிய உணர்ச்சிகளுக்கோ, உடல் பயிற்சிகளுக்கோ இடம் தரலாகாது. சீரான, நெறியான வாழ்க்கை வேண்டுமென்றால் மேற்கொள்ளும் பணியை முறையாகச் செய்ய வேண்டும். தேவையான உடல் ஆற்றலை கொண்டுதான், குறித்த காலத்தில்தான் எவரும் தங்களுடைய வினைகளை ஆற்றவேண்டும். இங்கு உடற்பயிற்சியின் முக்கியத்துவம் குறிக்கப்பெறுகிறது. அப்பயிற்சியும் முறையாக இருத்தலின் அவசியம் அறிவுறுத்தப்படுகின்றது. இதுபோது உள்ளமும் சலனமற்று விளங்கிடும். தியானமும் நன்றாக கைகூடும். துன்பம், ஏமாற்றம் போன்ற உணர்ச்சிகள் மறைந்து போய்விடும்.)

யதா விநியதம் சித்தமாத்மன்
யேவாவதிஷ்டதே ।
நி:ஸ்ப்ருஹ: ஸர்வகாமேப்யோ யுக்த
இத்யுச்யதே ததா ॥ (18)

''ஆசைகள் எல்லாவற்றினின்றும் விருப்பங்களை விடுவித்து, நன்றாகக் கட்டுப்படுத்தப்பட்ட மனமானது ஆத்மாவிலேயே இருந்திடும்போது ஒருவன் யோகத்தில் தேர்ந்தவனாகக் கருதப்படுகிறான்''.

*(இச்செய்யுளில் மறுபடியும் மனதில் எந்தவிதமான காமம், கோபம் போன்ற சலனங்களுக்கு இடம் தரக்கூடாது என்று வலியுறுத்தப்படுகிறது. தாய்மையான மனமும், அறிவுமே சிறந்த யோக சாதனத்திற்கு வழிகோலும்)*

**யதா தீபோ நிவாதஸ்தோ**
**நேங்கதே ஸோபமா ஸ்ம்ருதா: |**
**யோகினோ யதசித்தஸ்ய யுஞ்ஜதோ**
**யோகமாத்மன ||** (19)

''ஆத்ம தியான பயிற்சியை மேற்கொள்ளும் துறவியின் கட்டுப்படுத்தப்பட்ட மனமானது, காற்றில்லாத இடத்தில் வைக்கப்பட்ட தீபத்தின் அசையாதிருக்கும் நிலைக்கு ஒப்பிடப்படுகிறது''.

*(காற்று இல்லாது அறையில் எரியும் தீபமானது, ஏதோ சித்திரம் போன்று எந்தவிதமான அசைவுகளும் இன்றி நேராக எரியும். அது போன்று காற்று எனும் ஆசை இல்லாத துறவியின் மனம் எந்தவித தடுமாற்றம் இன்றி குழப்பம் இன்றி அந்த தீபம் போன்று விளங்கும்.)*

**யத்ரோபரமதே சித்தம் நிருத்தம்**
**யோகஸேவயா: |**
**யத்ர சைவாத்மனாத்மானம்**
**பச்யன்னாத்மனி துஷ்யதி ||** (20)

''யோகப்பயிற்சியினால் எப்போது அறிவானது நன்றாகக் கட்டுப்பட்டு அமைதி பெறுகின்றதோ, மேலும் எப்போது ஆத்மாவைக் கொண்டு ஆத்மாவை அறிந்து ஆத்மாவில் இன்பம் காண்கிறானோ.....''

*(இச்செய்யுளில் ஆரம்பிக்கப்பட்ட கருத்து தொடர்ந்து அடுத்துவரும் செய்யுட்களிலும் தொடர்கின்றது.)*

**ஸுகமாத்யந்திகம் யத்தத்-**
**புத்திக்ராஹ்யமதீந்த்ரியம் ।**
**வேத்தி யத்ர ந சைவாயம்**
**ஸ்திதஸ்சலதி தத்த்வத: ॥** (21)

''புலன்களுக்கு எட்டாததும், அறிவினால் புரிந்து கொள்ளப்படுவதும், முடிவில்லாததும் ஆகிய எந்த இன்பத்தை துறவியானவன் அறிகின்றானோ, எதில் நிலைத்தபின்பு ஆத்ம சொருபத்திலிருந்து அவன் விலகுவதில்லையோ...''

*(உண்மையான இன்பம் புலனின்பங்களால் பெறுவன அல்ல. அது ஆத்ம சொரூபத்திலேயே புதைந்திருக்கிறது. அதனை புலன்களால் அறிய முடியாது. அமைதியுடன் கூடிய, குழப்பமில்லாத அறிவினால் மட்டுமே அந்த ஆத்ம இன்பத்தை அனுபவிக்கமுடியும். ஆத்ம இன்பத்தை அனுபவித்த பின், வெளியுலக இன்பங்களுக்கு அவன் அடிமையாவதில்லை.)*

**யம் லப்த்வா சாபரம் லாபம்**
**மன்யதே நாதிகம் தத: ।**
**யஸ்மின்ஸ்திதோ ந து:கேன**
**குருணாபி விசால்யதே: ॥** (22)

''எதனைப் பெற்று அதைவிட பெரியதொரு வேறு எந்தவித மான லாபத்தை நினைப்பதில்லையோ, எதில் நிலைபெற்று எந்தவித பெரியதொரு துன்பத்தாலும் தாக்கப்படு வதில்லையோ...''

*(மிதிவண்டி வாங்கும் வரை அதன்மேல் ஒருவனுக்கு ஆசை இருக்கும். அதனை வாங்கிய பிறகு அதன்மீது கொண்ட ஆசை குறைந்து, ஸ்கூட்டர் மீது அவன் ஆசை பிறக்கிறது. அதனை பெற்றபின்பு கார் வேண்டுமென்று ஆசை பிறக்கிறது. இவ்வாறு மனிதனுடைய ஆசை அதனால் பெறப்படும் இன்பம் மாறிக்கொண்டே இருக்கிறது. ஆனால் இந்த உலகத்தை யெல்லாம் கடந்த அந்த பரம்பொருள் மீது கொண்ட ஆசையை, இன்பத்தைப் பெற்றபின்பு, அதனைவிட பெரியதொரு அதிகமான மதிப்புள்ள பொருள் வேறு இல்லை. எனவே*

*அதுவே இறுதி இன்பம் தரவல்லது. கடலை அடைந்தபின் மீனுக்கு வேறு எது பெரியதொரு நீர்ப்பரப்பாக இருக்க முடியும். பரம்பொருளை அடைந்தபின் ஞானிக்கு வேறு எது அடையக்கூடிய பொருள்! மேலும் துன்பம் யாவும் உடலைப் பொறுத்தவரைதான். ஆனால் ஞானியானவன் உடலை ஒரு நிழலாகத்தான் கருதுகின்றான். நிழலை அடித்தால் எவ்வாறு அதற்கு வலிக்காதோ, அதே போன்று ஆத்ம ஞானியின் உடல் அவனைப் பொறுத்தவரை ஓர் நிழல் போன்றது தான்.)*

**தம் வித்யாத்து: கஸம்யோக-**
**வியோகம் யோகஸம்ஞிதம் ।**
**ஸ நிஸ்சயேன யோக்தவ்யோ**
**யோகோநிர்விண்ணசேதஸா ॥** (23)

*''அதுவே துன்பத்தின் பிடியிலிருந்து விடுவிக்கும் யோகம் என்பதை அறிந்து கொள்வாயாக. சிறிதும் தளராத மனதுடன் உறுதியாகத் தொடர்ந்து அந்த யோகத்தைக் கற்றுக் கொள்''*

*(மனிதன் எப்போதும் இன்பத்தை அனுபவிக்கவே விரும்புகின்றான். அதனால் தன் அறியாமையினால் தன்னைத்தானே ஆசைகளுக்கும், புலன்களுக்கும் அடிமைப்படுத்திக் கொள்கின்றான். ஆசைகளை விட்டொழித்து அதனால் வரும் துன்பங்களிலிருந்து தன்னை விடுவித்துக்கொண்ட நிலையில் யோகம் அவனுக்கு எளிதாக வந்தமைகிறது. மனதில் குழப்பம் இருக்கும்வரை யோகம் சிறிதும் அவனுக்குக் கைகூடாது.)*

## பகவான் கூறியது

**ஸங்கல்ப ப்ரபவான் காமான்ஸ்த்**
**யக்த்வா ஸர்வான் சேஷத: ।**
**மனஸைவேந்த்ரியக்ராமம்**
**வினியம்ய ஸமந்தத: ॥** (24)

*''எண்ணங்களினால் ஏற்படும் ஆசைகள் எல்லாவற்றையும் முற்றுமாக அழித்துவிட்டு, மனத்தின் எல்லாப்*

பக்கங்களிலிருந்தும், ஐம்புலன்களையும் முழுவதுமாக அடக்கிக் கொண்டு....''

(விதை ஒன்று மண்ணுக்குள் இருந்தால், செடி ஒன்று வளரவே செய்யும். ஆம் மண்ணாகிய இந்த உடலில் - உள்ளத்தில் விதையாகிய எண்ணம் இருந்தால், செடியாகிய ஆசைகள் காமங்கள் வளரத்தான் செய்யும். ஆம் சிறு தீ பெருந்தீயாவது போன்று ஆசையானது பேராசைக்கு, மனிதனை எளிதாக இட்டுச் செல்லும். ஆகவே அறிவாலும், மிக்க உறுதியாலும் ஐம்பொறிகளை அடக்குதல் அவசியம்.)

**சனை: சனைருபரமேத்புத்த்யா**
**த்ருதிக்ருஹீதயா: ।**
**ஆத்மஸம்ஸ்தம் மண: க்ருத்வா ந**
**கிஞ்சிதபி சிந்தயேத்: ॥** (25)

''உறுதி கொண்ட அறிவாலும், ஆத்மாவின் மீது ஒருமுகப்படுத்தப்பட்ட மனதாலும் மெதுவாக அமைதியைப் பெருவாயாக. வேறு எதனையும் மனதில் எண்ணாது இருப்பாயாக''

(கலைகளிலே கரை கண்டவர்களில் பலர், அறிவின் இருப்பிடமாக திகழ்பவர்களில் பலர், தங்கள் மனதில் ஆசைகள் எனும் குறையை, பலவீனத்தைக் கொண்டதால், வாழ்க்கையில் தோல்வி கண்டுள்ளார்கள். நெறியான வாழ்க்கை இருந்தால்தான் மனவலிமை எளிதாகக் கிடைத்திடும். இதற்கு மனதை ஆத்மாவின்கண் ஒருமுகப்படுத்த வேண்டும். அதுபோது மனம் சிற்றின்பங்களின் பால் செல்லாது. இறைச் சிந்தனையும் சிறிது சிறிதாக நம்முள் வலுக்க ஆரம்பிக்கும்.)

**யதோ யதோ நிஸ்சரதி**
**மனஸ்சஞ்சலமஸ்திரம்: ।**
**ததஸ்ததோ நியம்யைததாத்மன் யேவ**
**வசம் நயேத்: ॥** (26)

''ஓர் எண்ணத்தில் இருக்காது எப்போதும் அலைந்து கொண்டிருக்கும் மனதானது, எதனால் எவற்றின் மீது திரிந்து

கொண்டிருக்கின்றது என்பதை அறிந்து, அவற்றிலிருந்து அதனை(மனதை) விலக்கி, ஆத்மாவின் மீது அது (மனது) செல்லுமாறு செய்க''

(சூழ்நிலைக்கும், வயதிற்கும் ஏற்ப மனிதனின் மனதானது பலவாறு ஆசைகளை மாற்றிக்கொண்டு, மேலும் மேலும் மகிழ்ச்சி அடையவே விரும்புகின்றது. தவறுகள், தகாதவை கள் என்ன என்பதை அறிந்தும், அறிவு அறிவுறுத்தியும், மனதானது அவ்அறிவினை அடக்கி, மயக்கி மறுபடியும் ஆசைகள் எழும்ப இடம் வகுக்கின்றது. இதுபோது, அறிவினை ஆற்றலுடன் செயல்படுத்தி மனதை அடக்கச் சிறிது சிறிதாக முயற்சிக்க வேண்டும். இது ஒரு போராட்டமாகவே அமையும். மனது உறுதி பெறும்வரை இது தொடரும். அப்போதுதான் நம் நிலையும் உயரும்.)

**ப்ரசாந்தமனஸம் ஹ்யேனம்**
**யோகினம் ஸுகமுத்தமம்: ।**
**உபைதி சாந்தரஜஸம்**
**ப்ரஹ்மபூதமகல்மஷம்: ॥** (27)

''மிகவும் அமைதியான மனதை உடைய, ரஜோ குணத்தின் இயல்பை அடக்கிய, பாவமற்ற, தன்னில் பிரம்மத்தைக் கண்டுகொண்ட துறவியே பேரின்பம் பெறுகின்றான்.''

(மனதில் அமைதி இருக்க வேண்டுமென்றால் பற்றுகளை ஆசைகளைத் துறக்க வேண்டும். அதற்கு அவ் ஆசைகளைத் தோற்றுவிக்கும் ரஜோகுண உணர்வுகளை அடக்குதல் அவசியம். மனம் அமைதியுடன், அறிவு விழிப்புடனும் இருந்தால், ஆத்மாவானது தூய்மையடைகிறது. அப்போது ஞானியெனும்- துறவியெனும் உயர்நிலை பெற்று, 'பிரம்மஞானி' என்று அழைக்கப்பெறுகிறான். அதுபோது வினைகளால் அவன் தாக்கப்பெறுவதில்லை. வினைகளைக் கடந்த நிலைக்குச் செல்கின்றான்.)

**யுஞ்ஜன்னேவம் ஸதாத்மானம்**
**யோகீ விகதகல்மஷ: ।**

ஸுகேன ப்ரஹ்மஸம்ஸ்பர்ச-
மத்யந்தம் ஸுகமச்னுதே: ॥ (28)

''இவ்வாறு மனதை ஆத்மாவின் கண் எப்போதும் நிலைபெறச்செய்து, பாவங்களிலிருந்து விடுவித்துக்கொண்ட துறவியானவன், பிரம்ம ஞானம் எனும் பேரறிவினால் பெறப்படும் பேரின்பத்தை எளிதில் பெறுகின்றான்''.

(இரும்பை இழுத்திடும் ஊசிக் காந்தத்துடன் வேறு இரும்புப் பொருள் ஒன்றினை வெகுநேரம் உரசச்செய்தால் அந்த இரும்புப்பொருளும் காந்தச் சக்தி சிறிது பெறுகிறது. அதைப் போன்று பிரம்ம ஞானம் எனும் அந்த பேரறிவு பெற்றவர்களுடன் தொடர்பு வைத்துக்கொண்டால் அவர்களும் நாளடைவில் சிறிது சிறிதாக அந்த பிரம்ம ஞானத்தால் பெறப்படும் இன்பத்தைப் பெறுவர்.)

ஸர்வபூதஸ்தமாத்மானம்
ஸர்வபூதானி சாத்மனி: ।
ஈக்ஷதே யோகயுக்தாத்மா
ஸர்வத்ர ஸமதர்சன: ॥ (29)

''யோகம் எனும் பயிற்சியில் தேர்ச்சி பெற்று எங்கும் சமநோக்கத்தைக் கொண்டவன், மற்றைய உயிர்கள் எல்லாவற்றிலும் தன்னையும், தன்னிடத்து எல்லா உயிர்களையும் இருப்பதாகக் கொள்கிறான்.''

(யோகப்பயிற்சி கொண்டு அதில் முழு வெற்றி அடைந்தவன் மனதில் வேற்றுமை எண்ணம் தோன்றாது. உயிர்களைப் படைத்திட்ட பிரம்மனையும், அப்பிரம்மன் படைத்திட்ட உயிர்களில் மிகவும் அற்பமானதுமான புல்லையும் ஒன்றாகவே கருதுவான். அதாவது எல்லா உயிர்களையும் ஒன்றாகப் பார்த்திடும் உயர் ஞானத்தைப் பெற்றுவிடுகிறான்.)

யோ மாம் பச்யதி ஸர்வத்ர
ஸர்வம் ச மயி பச்யதி ।

**தஸ்யாஹம் ந ப்ரணச்யாமி**
**ஸ ச மே ந ப்ரணச்யதி ||** (30)

*''யார் ஒருவன் என்னை எல்லாவற்றினிடத்தும், எல்லாவற்றையும் என்னிடத்திலும் பார்க்கின்றனோ, அவனுடைய பார்வையிலிருந்து நான் மறைவதில்லை. அவனும் என் கண்பார்வையிலிருந்து மறைவதில்லை''.*

*(தன்னுயிர்க்கும் மற்றைய உயிர்களுக்கும் இடையே எந்த விதமான வேறுபாடும் காணாத உயர்ந்த நிலை அடைந்த பிறகு, உயிர்கள் எதனால் யாரால் படைக்கப்பட்டன என்ற ஞானக்கேள்வி எழுகிறது. பலவகையான நகைகளைப் பார்த்து மகிழ்ந்த மனம், இவையாவும் பொன்னால்தான் செய்யப்பட்டன என்ற அறிவு கிடைக்கிறது. அதுபோன்ற இவ்வுயிர்கள் யாவும் அந்தப் பரம்பொருளிலிருந்துதான் உருவாகின என்ற ஞானத்தைப் பெறுகின்றன் யோகி. அந்த உண்மையை அறிந்தபிறகு தன்னுள்ளேயே அந்த பரம்பொருளைப் பார்க்கின்றன். அதனால் எந்த நிலையிலும் கால நேரத்திலும் பரமனைப்பற்றிய ஞானத் தொடர்பு அவனுள் தொடர்ந்து அமைகிறது.)*

**ஸர்வபூதஸ்திதம் யோ மாம்**
**பஜத்யேகத்வமாஸ்த்தித: |**
**ஸர்வதா வர்த்தமானோபி ஸ**
**யோகீ மயி வர்ததே ||** (31)

*''இருப்பது ஒன்றே (பிரம்மம் என்பவன் ஒருவனே) என்பதை நிச்சியப்படுத்திக் கொண்டு, எல்லா உயிர்களிடத்தும் இருக்கும் என்னை (பகவானை) வழிபடும் துறவியானவன் எந்த நிலையில் இருந்தாலும் என்னுள் இருப்பவனாகக் கருதப்படுகிறன்''.*

*(எல்லா உயிர்க்ளிடத்தும் இருக்கும் பிரம்மம் என்பது ஒருவன்தான் என்பதை, எல்லாவற்றிற்கும் மூலப்பொருள் பிரம்மம் ஒன்றுதான் என்பதை அறிந்து கொண்ட ஞானியானவன் எங்கும் எதிலும் பிரம்மத்தையே பார்க்கிறன். அதுபோது ஓய்வு, வினையாற்றல், தியானம் என்ற நிலைகளிலும்*

அவ்யோகியானவன் இருந்தாலும், அவன் பிரம்மத்துடன் இருப்பதாகவே கருதப்படுகிறான்.)

**ஆத்மௌபம்யேன ஸர்வத்ர ஸமம்**
**பச்யதி யோ அர்ஜுன ।**
**ஸுகம் வா யதி வா து:கம்**
**ஸ யோகீ பரமோ மத: ॥** (32)

''அர்ச்சுனா, தன்னையே உவமையாகக் கருதி இன்பத்தையும், துன்பத்தையும் எப்போதும் ஒன்றாகக் காண்கின்றவனே பரம யோகி என அழைக்கப்பெறுகிறான்''.

(மனிதன் தான்வேறு, தன் கை, கால்கள் வேறு என்று நினைப்பதில்லை. தனக்கு ஏற்படும் இன்ப துன்ப உணர்ச்சிகளுக்கு அவனுடைய உடல் உறுப்புகளும் காரணங்களாக அமைகின்றன. ஆகையால் அவன் தன் கைகளுக்கு ஒரு விதமாகவும், கால்களுக்கு ஒருவிதமாகவும் மதிப்புத் தருவதில்லை. எல்லாவற்றையும் போற்றிப்பாதுகாக்கவே செய்கின்றான். இது ஒரு சாதாரண மனிதனின் மனப்பாங்கு. ஆனால் ஒரு ஞானியானவன், இந்த நிலையைத் தாண்டி, தன் உடல் உறுப்புக்களைப் போன்றே மற்றைய உயிர்களையும் எண்ணிப்பார்க்கின்றான். ஆம், அவன் தான் வேறு, தான் வாழும் உலகம் வேறு என்று நினைப்பதில்லை. அதனால் மற்றைய உயிர்கள் துன்பப்படும் போது தானும் துன்பம் கொள்கின்றான். இதனை 'வாடிய பயிரைப் பார்த்தபோதெல்லாம் தானும் வாடுவதாகக்' கூறிய வள்ளலாரின் நிலைக்கு ஒப்பிடலாம். அத்தகைய ஞானியானவன் உலக மேன்மைக்காகவே வாழத் தலைப்படுகின்றான். அத்தகைய அவனே பரமயோகியாகப் போற்றப்படுகின்றான்.)

## அர்ச்சுனன் கூறுவது:

**யோ அயம் யோகஸ்த்வயா ப்ரோக்த:**
**ஸாம்யேன மதுஸூதன: ।**
**ஏதஸ்யாஹம் நபச்யாமி சஞ்சலத்-**
**வாத்ஸ்திதிம் ஸ்திராம் ॥** (33)

"மதுசூதனா! "சமமாகப் பார்த்தல்" என்ற நீங்கள் போதித்த இந்த யோகமானது, என்றும் உறுதியாக அமைந்திடும் என்று, எப்போதும் அலைபாய்ந்து கொண்டிருக்கும் என் உள்ளம் கருதவில்லை".

(எப்போதும், எங்கும் சமமான மனநிலையை பெற்றிருத்தல் என்பது மிகவும் கடினம். அந்த நிலையை அடையவே பகவான் அதனை ஒரு யோகமாக- சிறந்த பயிற்சியாகக் குறிப்பிடுகிறார். மாறி மாறி வரும் எண்ணங்களைக் கொண்ட மனதில் சமநோக்கு எனும் பண்பட்ட மனநிலை உண்டாவது என்பது கட்டுப்பாடு எனும் சிறந்த பயிற்சிக்குப் பிறகே கைகூடும். இங்கு அறிவுரை சொல்வது எளிது, ஆனால் பின்பற்றுவது- செயற்படுத்துவது மிகவும் கடினம் என்று என்னும் சாதாரண மனிதனின் உள்ளக்கிடக்கை எடுத்துக்காட்டப்படுகிறது.)

**சஞ்சலம் ஹி மன: க்ருஷ்ண**
**ப்ரமாதி பலவத்த்ருடம்: ।**
**தஸ்யாஹம் நிக்ரஹம் மன்யே**
**வாயோரிவ ஸுதுஷ்கரம்: ॥** (34)

"கிருஷ்ணா, மனமானது எப்போதும் அலையும் தன்மை கொண்டது, கலங்கிடச்செய்வது; ஆற்றலுடையது: உறுதி கொண்டது. அதனை அடக்கி ஆள்வது என்பது, காற்றினை அடக்குவது போன்று, எளிதானதன்று என்று நான் நினைக்கிறேன்"

(இங்கு மனதின் இயல்புகள் நான்கு நிலைகளில் கூறப்படுகிறது. ஓர் எண்ணம் கொண்டு விளங்காமல் ஆசை களுக்கேற்றவாறு எண்ணங்களைக் கொண்டு மனமானது எப்போதும் அலைபாய்ந்து கொண்டிருக்கிறது. இது அலைதல் எனும் 'சஞ்சலத்' தன்மையாகும். மனமானது மனிதனின் உணர்வுகளை கொல்லாமல் கொல்லுகின்றது. எதிர்பார்ப்பது கிடைக்காவிட்டால் மனம் பலவாறு நொந்து இந்த உடலைத் துன்புறுத்துகின்றது. ஏமாற்றங்கள் பெறக்கூடாது என்று எப்போதும் மனம் எண்ணி இந்த உடலைக் கலக்கிக் கொண்டிருக்கின்றது. இது 'பிரமாதி' எனும் நிலை. அறிவினை

*அழித்திடும் வலிமை, ஆற்றல் கொண்டது மனம். இது 'பலவத்' எனும் நிலையாகும். எதிர்பார்த்து எண்ணியது கிடைக்காவிட்டால் மனம் தன்னை மாற்றிக்கொள்வதில்லை. அவற்றின் மீதே கருத்தைக்கொண்டு, அதனைப் பெறவே, அதனை வெற்றிக் கொள்ளவே தன்னை மேலும் தீவிரப்படுத்திக்கொள்கிறது. இது 'த்ருடம்' எனும் நிலைமையாகும். காற்றை ஒருவன் வெறும் கைகளால் பிடித்து வைத்துக்கொள்வது என்பது முடியாத காரியமாகும். அதனைப் போன்றது அலைபாயும் மனத்தின் தன்மை.)*

## பகவான் கூறுவது:

**அஸம்சயம் மஹாபாஹோ மனோ**
**துர்நிக்ரஹம் சலம் ।**
**அப்யாஸேன து கௌந்தேய**
**வைராக்யேண ச க்ருஹ்யதே ॥** (35)

*''பரந்த தோள்களை உடையவனே! மனம் கட்டுக்குள் அடங்காதது; அலையும் தன்மை கொண்டது. இதில் சிறிதும் சந்தேகம் இல்லை. ஆயினும், குந்தியின் மகனே! சிறந்த பயிற்சியாலும், உறுதியாலும் அதனை (மனதை) அடக்கலாம்''.*

*(போதைப்பொருட்களுக்கு ஒருவன் அடிமையாகி விட்டிருந்தால் அவனுக்குள் ஓர் ஊசிமூலம் மருந்து கொடுத்து அவனைத் திருத்திடமுடியாது. அப்படி ஒரு தீர்வு இருந்தால், பல இளைஞர்களை நாம் காப்பாற்றிவிடலாம். ஆனால் சிறந்த மனோ உடல்பயிற்சி, அறிவினால் ஏற்படும் சிறந்த உறுதி ஆகியவற்றால் மட்டுமே போதைப்பொருளுக்கு அடிமையான வனை நிரந்தரமாகத் திருத்திடமுடியும். தொடர்ந்த பழக்கத்தால் - பயிற்சியால் ஒருவன் தன் இயல்பை மாற்றிக்கொள்ள முடியும். இந்தப் பயிற்சியை இறைவனைப் பற்றிய எண்ணங்களில் ஒருமுகப்படுத்தி மேற்கொள்வானாயின், மனமானது மற்றைய விஷயங்களில் செல்லாது கட்டுப்படும். அதேபோன்றது உறுதி எனும் மனப்பான்மையுமாகும். இதனை*

ஒருவன் தனது அறிவு கொண்டு பெற முடியும். புலனின்பங்களினால் ஏற்படும் இன்னல் களை அறிவுகொண்டு தீர்மானித்தறிந்து உள்ளத்தையும், உடலையும் அலைபாய விடாது, ஒருவன் உறுதியுடன் தன் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக் கொள்ள முடியும். புகைப் பிடித்தல், மது அருந்துதல் போன்ற தீமை பயக்கும் பழக்கங்களுக்கு அடிமையானவர்களை இந்தத் தீவிர பயிற்சியும் மன உறுதியுமே காப்பாற்றுவதற்குறிய இறுதி நம்பிக்கையாகும்.)

**அஸம்யதாத்மனா யோகோ**
**துஷ்ப்ராய இதி மே மதி: ।**
**வச்யாத்மனா து யததா**
**சக்யோ அவாப்துமுபாயத: ॥** (36)

''மனதை அடக்கத்தெரியாதவன் யோகம் என்பதை பெறமுடியாது என்பது என் எண்ணம். மனதை அடக்கிச் சிறந்த வழிமுறைகளைப் பின்பற்றுபவனால் மட்டுமே அதை(யோகத்தை) பெறமுடியும்.''

(இச்செய்யுளில் பகவான் மனிதனின் முன்னேற்றத்திற்கு மனமே முக்கிய காரணம் என்று அறுதியிடுகின்றார். ஒருவனது வீழ்ச்சியும், உயர்ச்சியும் அவனவன் மனதைப் பொறுத்து விளங்குகின்றது. இங்குச் சிறந்த வழிமுறைகள் என்பன, முற்செய்யுளில் குறிப்பிட்ட பயிற்சியும், மன உறுதியுமேயாகும்.)

## அர்ச்சுனன் கூறுவது:

**அயதி: ச்ரத்தயோபேதோ**
**யோகாச்சலிதமானஸ: ।**
**அவ்ராப்ய யோகஸம்ஸித்திம் காம்**
**கதிம் க்ருஷ்ண கச்சதி ॥** (37)

''ஈடுபாடு கொண்டவனாயினும் முயற்சி குறைந்ததால் யோகத்தினின்று தன் மனதை திசை திருப்பியபோது, அவன், யோகம் கைகூடாது எந்த நிலையைப்பெறுகிறான், கிருஷ்ணா?''

*(யோகமானது, யோகப்பயிற்சியானது நன்மைகள் பயக்கும் என்பதை தெரிந்து வைத்துக் கொண்டும் அதனைப் பெறுவதற்குரிய முயற்சியினை சரிவர, முழு அளவில் மேற்கொள்ளாத போது அவன் கடைசியில் எந்த கதியை நிலையை அடைகின்றான் என்ற வினாவை அர்ச்சுனன் எழுப்புகிறான்.)*

**கச்சின்னோபயவிப்ரஷ்டஸ்**
**கின்னாப்ரமிவ நச்யதி: ।**
**அப்ரதிஷ்டோ மஹாபாஹோ**
**விமூடோ ப்ரஹ்மண: பதி ॥** (38)

*''அகன்ற தோள்களை உடையோனே! பிரம்ம ஞானத்தைப்பெறும் நெறியிலே (வழியிலே) மோகத்திற்கு உள்ளாகும்போது அவன் எந்தவிதமான ஆதரவின்றி, இரண்டிலிருந்து விலகி கலைந்துவிட்ட மேகம்போல் அழிந்து போகின்றான் அல்லவா?''*

*(வானத்தில் மேகங்கள் கருத்து ஒன்று சேர அமையும் போதுதான் மழை பொழிகின்றது. அவ்வாறு இல்லாமல் அம்மேகம் சிதறிச் சிறு சிறு பகுதிகளாகப் பிரிந்த நிலையில் அவற்றால் மழை பெறமுடியாது. அதுபோன்று, பிரம்ம ஞானத்தைப் பெறும் முயற்சியில், ஐம்புலன்கள் பற்றினால் தன்னை இழந்து, மனதைச் சிதறச் செய்வானாயின் அவன் தன் வினைப்பற்றிலிருந்து தவறி, பூவுலக இன்பத்தையோ, வானுலக பேரின்பத்தையோ பெறமுடியாது. இதுபோது அவன் நிலை மிகவும் பரிதாபகரமானது.)*

**ஏதன்மே ஸம்சயம் க்ருஷ்ண**
**சேத்துமர்ஹஸ்ய சேஷத: ।**
**த்வதன்ய: ஸம்சயஸ்யாஸ்ய**
**சேத்தர ந ஹ்யுபபத்யதே ॥** (39)

*''கிருஷ்ணா, எனக்கு ஏற்பட்ட இந்த சந்தேகத்தை முழுவதுமாக தீர்க்கத் தகுந்தவர் நீங்கள்தான். உங்களாலன்றி வேறு யாராலும் இந்த சந்தேகத்தைத் தீர்த்து வைக்கமுடியாது''.*

*(இயற்கையைப்பற்றி- இறைவனைப் பற்றிய சந்தேகங்களை அந்த இறைவன்தான் நீக்க முடியும். ஏனென்றால் சந்தேகத்தை எழுப்பதுவதும் அவனே, தீர்ப்பதும் அவனே, ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள தொடர்பின் பெருமையை இறைவன் மட்டுமே அறிந்துள்ளான். மனிதனின் மனப்போக்கும், அவனுக்குத் தேவையானதும், இறைவன் நன்கு தெரிந்து வைத்துள்ளான். நோய் ஏன் வந்தது, அதனை எப்படித் தீர்ப்பது என்னும் அரிய கலையை தெரிந்த கலைஞன் இறைவனாவான். இதனால் இச்செய்யுளில் இறைவனின் வல்லமை சுட்டிக்காட்டப்படுகிறது.)*

## பகவான் கூறுவது:

**பார்த்த நைவேஹ நாமுத்ர**
**விநாசஸ்தஸ்ய வித்யதே ।**
**ந ஹி கல்யாணக்ருத்கஸ்சித்துர்**
**கதிம் தாத கச்சதி ॥** (40)

*''பார்த்தா (அர்ச்சுனா) அவனுக்கு (முயற்சியில் தவறியவனுக்கு) இப்பிறவியிலோ மறுபிறவியிலோ அழிவு என்பது கிடையாது. நன்மை செய்யும் யாரானாலும் அவன் இழிநிலை அடைவதில்லையப்பா''.*

*(சிறிதே நன்மை செய்து, சிறிது நாட்களே நல்லவனாக இருந்தாலும் பெரிதும் தீமைகள் செய்து, அதிக நாட்களாக தீயவனாக விளங்கும் ஒருவன் அடையும் நிலையே அவனும் அடைவான் என்ற ஒரு நியதி இருந்தால், மனிதனுக்கு வாழ்க்கையில் நம்பிக்கையோ, பிடிப்போ, உயர்ச்சியோ, சிறப்போ இருந்திருக்காது. கடலின் ஆழத்திற்குச் செல்லும் அளவு அரிய பொருட்கள் கடலடியில் கிடைத்திடும். ஆகவே நல்லன சிறிதே செய்தாலும் அதற்குத் தகுந்தவாறு நிலையும் உயரும். துரியோதனன், கர்ணன், இராவணன் போன்றோர் தீமைகளின் உருவமாக, தீமைகளுக்கு நண்பர்களாக விளங்கினாலும், அவர்களிடம் குடி கொண்ட சில, பல நற்பண்புகளே அவர்களை பல நேரங்களில் தனித்து*

உயர்த்திக்காட்டுகின்றன. எனவே சிறிது நன்மை செய்தாலும் சிறு பொழுது நல்லவர்களாக விளங்கினாலும் அவர்களை சமுதாயம் தள்ளிவிடாது. அவன் அழிவதில்லை.)

**ப்ராப்ய புண்யக்ருதாம் லோகானு**
**ஷித்வா சாச்வதீ: ஸமா: ।**
**சுசீனாம் ஸ்ரீமதாம் கேஹே யோக-**
**ப்ரஷ்டோ அபிஜாயதே ॥** (41)

''யோகத்தை விட்டவன் (யோகப்பயிற்சியை பாதியில் கைவிட்டவன்) புண்ணியம் செய்தவர்கள் வாழும் உலகத்தை அடைந்து, அங்குப் பல நாட்கள் வாழ்ந்து, செல்வம் நிரம்பப் பெற்ற நல்லவர்களுடைய வீட்டில் பிறவி எடுக்கின்றான்''.

(மண்ணுலக வாழ்க்கையை விரும்பும் சிற்றின்ப நெறியும், விண்ணுலகப் பேற்றினைப் பெற விரும்பும் பேரின்ப நெறியும் என்றும் ஒன்று சேரா. அது இரு குதிரையில் ஒருவன் சவாரி செய்யும் நிலை. சிற்றின்பத் தாக்கத்தால் பேரின்ப நெறி மாசுபடுகின்றது. பேரின்ப நெறியினை பெறுவதற்கான யோகப் பயிற்சியில் ஒருவன் ஆசை, காமம் போன்ற உணர்வுகளால் தடுக்கப்படலாம். அதுபோது அவன் இறுதியில் முக்தி எனும் பிறவாநிலை பெறாது போகலாம். ஆனால் அவனுடைய சிற்றின்ப வேட்கை தீர, அவன் சுவர்க்கத்திற்குச் சென்று இன்பம் அனுபவித்து பிறவி எடுத்து, நல்ல உயர்ந்த, புனிதமான செல்வந்தர் குடும்பத்தில் பிறந்து தன்னுடைய சிற்றின்ப ஆசைகளைத் தொடர்ந்து துய்க்கவே செய்கின்றான். யோகத்தைப் பாதியில் விட்டவனுக்கு எப்படி சுகவாழ்வு பெற முடிகிறது என்ற கேள்வி எழுலாம். ஆனால் யோகத்தைக் கற்கத் தொடங்கும் போதே அவன் சாதாரண மனித நிலையிலிருந்து தன் இயல்பை உயர்த்திக் கொள்ளவே செய்கின்றான். மனமும் அறிவும் அடியோடு மாசுபடுவதில்லை. சிறிது மாசுபட்டாலும், அவனுடைய அடிமனம் தூய்மையானதாகவே விளங்குகிறது. அதுபோது, அந்தத் தூய்மை நிலைக்கு ஏற்றவாறு அவனுடைய வினைப்பயன்களுக்கு ஏற்றவாறு மறுபடியும் பிறவி எடுக்கின்றான். ஆகவே யோக நெறி தவறியவன் அடியோடு

*அழிவதில்லை. அயர்வே வாய்ப்பு அளிக்கப்படுகிறது. சுவாமி விவேகானந்தர் நல்ல பணக்காரக் குடும்பத்தில் பிறந்து பின்னர் துறவி வாழ்க்கை கொண்டு யோக புருஷராகவும் விளங்கியது இங்குக் குறிப்பிடத்தக்கது.)*

**அதவா யோகினாமேவ**
**குலே பவதி தீமதாம் ।**
**ஏதத்தி துர்லபதரம் லோகே**
**ஜன்ம யதீத்ருசம் ॥** (42)

*''(முன் செய்யுளின் கருத்து தொடர்கிறது) அல்லது (யோகப் பயிற்சியை பாதியில் கைவிட்ட அவன்) அறிவு நிரம்பப்பெற்றுள்ள யோகிகளின் குலத்தில் பிறக்கிறான். இத்தகைய பிறவியை நிச்சயமாக இந்த உலகத்தில் எளிதாக பெறமுடியாது.''*

*(யோகப் பயிற்சியை தொடர்ந்து மேற்கொள்ளாதவன் இப்பிறவியில் இழிவாக வாழமாட்டான் என்று கூறி மறு பிறவியில் சான்றோர் பிறந்த குலத்தில் பிறப்பதாக பகவான் உறுதி கூறுகின்றான். செல்வந்தர் வீட்டில் பிறப்பதை விட அறிவுடையோர் வீட்டில் பிறப்பர் என்று கூறுகின்றார். அதாவது பணத்தைக் காட்டிலும், அறிவுடைய குடும்பம் எளிதில் ஒருவனை மேன்மையாக்குகிறது என்பதை பகவான் சுட்டிக்காட்டுகிறார்.)*

**தத்ர தம் புத்திஸம்யோகம்**
**லபதே பௌர்வதேஹிகம் ।**
**யததே ச ததோபூய: ஸம்ஸித்தௌ**
**குருநந்தன ॥** (43)

*''குருநந்தனா!- இதனால் (அறிவுடையார் குலத்தில் பிறப்பதால்) முந்தைய பிறவியில் பெற்ற யோகப்பயிற்சி அறிவை (இப்பிறவியில்) மறுபடியும் பெறுகின்றான். முக்தி பெறும் பயனைப் பெறுவதற்காகத் தொடர்ந்து அதிக அளவில் அவன் முயற்சிகளை மேற்கொள்கின்றான்''.*

(குரு குலத்தில் பிறந்ததால் அர்ச்சுனன் இங்கு பகவானால் 'குருநந்தனா' என்று அழைக்கப்பெறுகின்முன். சிற்றின்பமோகத்தால் தன் யோகப்பயிற்சியின் இடையில் தடுமாற்றம் கொண்டவன், அடுத்தப் பிறவியில், ஒருகாலத்தில் பயிற்சி கொண்டதன் பயனாக, ஒரு யோகியின் குடும்பத்தில் பிறக்கின்முன். அவ்வாறு பிறக்கும் போது, அக்குடும்பத்தில் யோகியர் மேற்கொள்ளும் பயிற்சிகளை, முறைகளைப் பார்த்திடும் போது, அவனுக்கு முற்பிறவியில் அவன் ஒரு சிறிது காலம் கொண்ட யோகப்பயிற்சி பற்றிய சிந்தனைகள் அவனுள் உருவாகின்றன. ஆக, உள்ளத்தில் யோகத்தைப் பற்றிய சிந்தனையும், வெளியில் யோகத்தைப் பற்றிய சூழ்நிலையும் ஒன்றிடும் போது, அவன் இப்பிறவியில் இன்றும் முறையாக, தீவிரமாக யோகப்பயிற்சியை மேற்கொள்கின்முன். இதற்கு யோகியர் குடும்பத்தில் பிறந்து சிறந்த யோகியாக விளங்கிய ஸ்ரீராமகிருஷ்ணபரமஹம்ஸரை உதாரணமாகக் கொள்ளலாம்.)

**பூர்வாப்யாஸேன தேனைவ**
**ஹ்ரியதே ஹ்யவசோ அபி ஸ: |**
**ஜிக்ஞாஸுரபி யோகஸ்ய**
**சப்தப்ரஹ்மாதிவர்த்ததே ||** (44)

''தன்னுடைய முயற்சி இல்லாது, முற்பிறவியில் மேற்கொண்ட பயிற்சியின் உறவினால் அவன் (யோகப் பயிற்சியை இடையில் விட்டவன்) யோகப் பயிற்சிக்கு இழுக்கப்படுகிருன். யோகத்தில் ஆராய்ச்சி செய்யும் சாதாரணமானவன் கூட வேதத்தைக் கடந்தவனாக விளங்குகின்முன்''.

(இச்செய்யுளில் வேதம் சொல்லும் வழியில் நின்று வினையாற்றுபவரைவிட, யோக நெறியை மேற்கொள்ளும் சாதகனே சிறந்த வாழ்க்கையை உடையவனாகக் கருதப்படுகிருன் என்பது பகவானால் கூறப்படுகிறது. நன்முக படித்து தேர்வு எழுத வேண்டும் என்று எண்ணும் மாணவன் சிறந்தவன்தான். ஆனால் அந்த எண்ணத்தை தகுந்த முயற்சி கொண்டு செயல்படுபவன் அவனைவிட சிறந்தவனாவான்.

*இவ்வாகையில் வேதங்களைக் கற்றுக்கொள்ளும் பண்டிதர்கள் அறிஞர்கள் அவை கூறிய வினை வழியில் நின்று முக்குணங்களான ரஜஸ், தமஸ், சாத்வீகம் எனும் இயற்கை கொண்டு விளங்கும் உணர்வுகளில் உழன்று, தொடர்ந்து பிறவிப்பிணியில் வருந்துவர். அவர்களைக் காட்டிலும் விரைவான முக்தியைத் தரும் யோகப்பயிற்சி மேற்கொண்டு திகழும் ஆராய்ச்சியாளன் சிறந்தவன். ஆராய்ச்சி மேற்கொள்ளும் மாணவன் பலவாறு பலமுயற்சிகளை மேற்கொள்ளுகிறான். அம்முயற்சிகளே அவனைச் சிறந்த யோக புருஷனாகத் திகழச்செய்கிறது.)*

**ப்ரயத்னாத்யதமானஸ்து யோகீ**
**ஸம் சுத்தகில்பிஷ: ।**
**அநேகஜன்மஸம்ஸித்தஸ்ததோ**
**யாதி பராம் கதிம் ॥** (45)

*''கடுமையான முயற்சிகளை மேற்கொள்ளும் யோகியானவன் (யோக சாதனையில் தேர்ச்சிப் பெற்றவன்) பாபங்கள் அற்றவனாய், புனிதனானவனாய், எடுக்கும் பல பிறவிகளில் முதிர்ச்சி அடைந்து முக்தி எனும் பேற்றினை அடைகின்றான்''.*

*(கல்விக்காகவும், பொருளுக்காகவும் ஒருவன் எவ்வாறு சீரான திவிர முயற்சிகளை தன் வாழ்க்கையில் செய்கின்றானோ, அதே போன்று, அக்கல்வி மற்றும் பொருளைவிட யோகத்தை யோகப்பயிற்சியை மேற்கொள்ள வேண்டும். ஏனென்றால் கல்வியும் பொருளும் தராத முக்தி எனும் இறுதி இன்பத்தை, மனிதனின் இறுதி விருப்பத்தை யோகம் பெற்றுத் தருகின்றது. இத்தகு ஆற்றல்மிகு யோகத்தை ஒருவன் தன் ஒவ்வொரு பிறவியிலும் முயன்று அடைய முயல வேண்டும். அவனே யோகி என்று போற்றப்படுகின்றான்.)*

**தபஸ் விப்யோ அதிகோ யோகீ**
**ஞானிப்யோ அபி மதோ அதிக: ।**
**கர்மிப்யஸ்சாதிகோ யோகீ**
**தஸ்மாத்யோகி பவார்ஜுன ॥** (46)

''தவம் செய்யும் முனிவர்களைவிட யோகி மிகவும் மேலானவன். கல்வி அறிவு நிரம்பிய அறிவாளிகளைவிட யோகியானவன் சிறந்தவனாகக் கருதப்படுகிறான். வினையாற்றுபவர்களை விட (யோகி) மேலானவன். ஆகவே, அர்ச்சுனா, நீ சிறந்த யோகியாக விளங்குவாயாக''

(வெறும் வேதங்களைப்பற்றிய அறிவு பெற்றிருப்பதால் மட்டும் பயனில்லை. அவ்வேதத்தில் அறிவுறுத்தியபடி நடமுயற்சிப்பதே நன்மை தரும். ஆம் யோகத்தைப் பற்றிய சாத்திர அறிவு பெற்றவனைவிட அதைப் பயிற்சி மூலம் மேற்கொள்பவனே சிறந்தவனாவான். இந்த யோகப் பயிற்சியை மேற்கொண்டு, அதனை இடையில் மேற்கொள்ளாது விளங்கும் ' யோகப் பிரஷ்டன்'' என்பவன், இம்மை மறுமை இன்பங்களை எளிதாகப்பெறுகின்றான். சாதாரணமாக யோகத்தை மேற்கொள்பவனது மனமும், அறிவும் மேம்பட்டு விளங்குவதால் அவன் விரும்பும் எதனையும் எளிதாக, விரைவாகப் பெறுகின்றான். யோகத்தில் முழு வெற்றியடைந்தவன் முக்தி எனும் பேரின்பம் ஒன்றினையே பெறுகின்றான். யோகத்தை இடையில் கைவிட்டவன், பூவுலக இன்பம், மேலுலக இன்பம் ஆகிய இரண்டினையும் பெறுகின்றான் என்று பகவான் மீண்டும் மீண்டும் வலியுறுத்துகின்றார். இந்த அறிவுரை அர்ச்சுனன் இருக்கும் குழப்பமான, நம்பிக்கையில்லாத தருணத்தில் மீண்டும் மீண்டும் கூறப்படுவதால், அர்ச்சுனன் சிறிது சிறிதாக அமைதியினையும் ஒருமுனைப்பினையும் பெறுகின்றான். இதனைத்தான் பகவான் எதிர்பார்க்கின்றார்.)

யோகினாமபி ஸர்வேஷாம்
மத்கதேனாந்தராத்மனா ।
ச்ரத்தாவான்பஜதே யோ மாம்
ய மே யுக்ததமோ மத: ॥ (47)

''யார் ஒருவன் உறுதியுடன் அறிவை என்னிடம் வைத்து என்னை வழிபடுகின்றானோ நினைக்கின்றானோ, அவனே

யோகியர்க்குள் மிகவும் சிறந்தவனாவான் என்பது என்னுடைய எண்ணமாகும்''.

(எல்லோரும் இலட்சியத்துடன் அல்லது குறிக்கோளுடன்தான் தன் முயற்சிகளை, கடமைகளை மேற்கொள்ள வேண்டும். அக்குறிக்கோள்கள் உயர்ந்தனவாக இருந்திடும்போது, அவன் வாழ்வும், அவனைச் சார்ந்த சமுதாயமும் உயர்ந்தனவாக அமையும். தியானத்தை மேற்கொள்ளும் யோகிகள், ஞானிகள் யாவருமே சிறந்தவர்கள் தாம். தாங்கள் விரும்பும் எதனையும் அவர்கள் எந்தவிதத்தடையுமின்றிப் பெறுகிறார்கள். ஆனால் ஒருசில இம்மண்ணுலக சுகங்களுக்காக யோகத்தை தியானத்தை மேற்கொள்வதை விட, அந்த இறை உணர்வு ஒன்றினை மட்டுமே அறிவாலும், மனதாலும் கொண்டுதியானத்தை மேற்கொள்பவர்கள் அறுதியில் அந்த இறைவனையே அடைகிறார்கள். இறைவனை அடைவதைவிட இந்த உலகத்தில் அடையப்பெறும் பேறு வேறு ஏதும் இல்லை.)

(முடிவுறும் இந்த ஆறு அத்தியாயங்களில் ஜீவாத்மாவின் நிலை விவரிக்கப்பட்டு, அந்த ஜீவாத்மா மேன்மையுறுதற்குரிய பாங்கும் சொல்லப்பட்டது. ஜீவாத்மா பரமாத்வாவிடம் சேர வழிவகுக்கும் உறவாக பக்தியானது செயல்படுகிறது. அடுத்துவரும் ஆறு அத்தியாயங்களில் பரமாத்மாவின் நிலை வளக்கப்பட உள்ளது. பக்தியின் மேன்மையும் கூறப்படுகிறது.)

**இதிஸ்ரீமத் பகவத் கீதாஸூபநிஷத்ஸு**
**ப்ரஹ்மவித்யாயாம் ।**
**யோக சாஸ்த்ரே**
**ஸ்ரீக்ருஷ்ணார்ஜுனஸம்வாதே**
**த்யானயோகோ நாம ஷஷ்டோ அத்யாய: ॥**

''பிரம்மஞானத்தைக் கூறுவதும், யோக சாத்திரத்தைக் கூறுவதும், கிருஷ்ணனுக்கும் அர்ச்சுனனுக்கும் இடையே நடைபெறும் உரையாடலுமாகவும் உள்ள பகவத்கீதை எனும் உபநிடதத்தில் உள்ள தியான யோகம் என்ற ஆறும் அத்தியாயம் முடிவுற்றது

(ஆறாம் அத்தியாயம் முற்றும் )

# ஏழாம் அத்தியாயம்

## ஞான விக்ஞான யோகம்

மய்யாஸக்தமனா: பார்த்த கம்
யுஞ்ஜன்மதாச்ரய: ।
அஸம்சயம் ஸமக்ரம் மாம் யதா
ஞாஸ்யஸி தச்ச்ருணு ॥ (1)

''பார்த்திபா, என்னுடன் இசைந்த மனதுடன், என்னையே சரணமாகக் கொண்டு, எந்தவித சந்தேகமுமில்லாமல் என்னை எவ்வாறு முழுவதுமாக அறிவது என்பதைச் சொல்கிறேன், கேள்''.

(ஒருவன் நன்ருக எழுதுகிருன் என்ருல், அவன் நன்ருகப்படித்திருக்கிருன், சூழ்நிலையை நன்ருக அனுபவித்திருக்கின்ருன் என்பதே பொருள். அவ்வாறு எழுதத்தெரியாதவன் மற்றவர் பேசுவதைக் கேட்கவேண்டும். அப்போதுதான் கேட்பவனுடைய அறிவு விரிவடைகிறது. ஆம் கேள்வி ஞானமே ஒருவனுடைய அறிவை, நிலையை உயர்த்துகிறது. அங்கு, இறை உண்மை தெரியாதவனுக்கு இறைவனே தன்னை விளக்குகின்ருன். அதற்கு மற்றைய உலகாயுத ஆசைகளில் விருப்பு இல்லாது, ஒரு முனைப்புடன் கூடிய சூழ்நிலை வேண்டும். அப்போதுதான் எந்தவிதக்குழப்பமும் இன்றி இறை உண்மையை அறிந்து,

*அதனால் பக்தி எனும் உயர் உணர்வு நம்முள் எளிதாகப் பிறக்கும்.)*

**ஞானம் தே அஹம் ஸவிக்ஞானமிதம்**
**வக்ஷ்யாம்யசேஷது: ।**
**யக்ஞாத்வா நேஹ பூயோ அந்யஜ்**
**ஞாதவ்யமவசிஷ்யதே ॥** (2)

*''அறிவியலோடு (விக்ஞானத்துடன்) கூடிய இந்த அறிவை (ஞானத்தை) சிறிதும் பாக்கியில்லாமல் நான் உனக்குக் கூறுகிறேன். இதை அறிந்தால் நீ இனிமேலும் அறிந்து கொள்வதற்கு ஏதும் இல்லை''.*

*(இங்கு ஞானம் என்பது சிந்தனை செய்யும் திறமை அல்லது அறிவு என்பதாகும். விக்ஞானம் என்னும் அறிவியல் என்பது, நடைமுறையில் மேற்கொள்ளும் அறிவாகும். சிந்தனையால் பெற்ற அறிவினை செயலில் மேற்கொள்ள வேண்டும். செயலளவில் உயர் அறிவை, இறை அறிவை, இறை உண்மையை அனுபவிப்பவனுக்கு, வாழ்க்கையில் மேலும் கற்றுக்கொள்வதற்கு ஏதும் இல்லை.)*

**மனுஷ்யாணும் ஸஹஸ்ரேஷு**
**கஸ்சித்யததி ஸித்தயே: ।**
**யததாமபி ஸித்தானம் கஸ்சின்மாம்**
**வேத்தி தத்வத: ॥** (3)

*''ஆயிரக்கணக்கான மனிதர்களிடையே ஒருவன் தன் மனதில் எழும்பும் ஆசை காரணத்தால் முயற்சியை மேற்கொள்கிறுன். இவ்வாறு முயற்சி மேற்கொள்ளும் அந்த நல்லவர்களில் கூட ஒருவன்தான் என்னை உள்ளபடி அறிந்துகொள்கிறுன்''.*

*(சித்தி என்றுல் கொண்ட குறிக்கோள் நிறைவு பெறுதல், முக்தி, வெற்றி என்று பலவாறுபொருள்படும். இங்கே மனமானது இறைவனைக் காணுதற்குரிய பக்குவத்தை அடையும் நிலையினைக் குறிக்கிறது. ஒரு மா மரம் நன்றுக காய்க்கிறது. பிறகு அக்காய்கள் பழுத்து அதில் உள்ள கொட்டைகள் பிறகு மாமரங்கள் முளைக்க உதவுகின்றன. தன்*

இனவிருத்திக்காக அம்மரம் காய்க்கிறது. ஆனால் மாமரம் விதைகளாவதில்லை. ஏனென்றால் அவற்றில் பல, பல உயிர்களுக்கு உணவாகின்றன. ஒரு சில மாங்கொட்டைகள் நிலத்தின் காரணமாக முளைப்பதில்லை. ஆகவே ஒரு சில மாங்கொட்டைகளுக்குத்தாம் மரங்களாகின்ற வாய்ப்பு அமைகின்றன. அதே போன்று தான் மனித இனமும். மனிதப்பிறவி அந்த இறைவனை அறிவதற்காகத்தான் ஏற்பட்டுள்ளது. ஆனால் ஒரு சிலர் மனதில்தான் அந்த இறையின் பத்தை அனுபவிக்கத் தோன்றுகின்றது. அவ்வாறு தோன்றுபவர்களில்கூட ஒருசிலர்தான் இறை உண்மையை அறிகின்றனர். இறைவனை அனுபவிக்கின்றனர். ஆகவே அடையவேண்டிய குறிக்கோள் எவ்வளவுக்கெவ்வளவு உன்னதமாக அடைகிறதோ, அவை அடையும்முயற்சிகளோ வாய்ப்புகளோ குறைவாக இருக்கின்றன.)

> **பூமிராபோ அனலோ வாயு:**
> **கம் மனோ புத்திரேவ ச: ।**
> **அஹங்கார இதீயம் மே பின்னா**
> **ப்ரக்ருதிரஷ்டதா ॥** (4)

''மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், மனம், அறிவு, மமதை என்று இவ்வாறு எட்டு வகையாக என்னுடைய இயற்கை பிரிவுபட்டிருக்கின்றது''.

(இந்த உலகத்திற்கு முதல் காரணமாக இருப்பது இயற்கையாகும். இந்த இயற்கையானது ஐம்பூதங்களின் விரிவான 24 தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டு விளங்குகிறது. அதாவது மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்ற ஐம்பூதங்களும், நாற்றம், சுவை, ஒளி, ஊறு, ஓசை என்ற அந்த ஐம்பூதங்களின் குணங்கள் ஐந்தும், மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்புலன்களும், செயல் உறுப்புகளான வாய், கை, கால், குதம், ஆண்குறி என்ற ஐந்தும் ஆகிய இருபதும் இவற்றிற்கு உரியவனான மனிதனும், அவனுக்கு உதவி புரிந்திடும் கருவிகளான மனம், அறிவு, அகங்காரம்

*எனும் மமதை எனும் மூன்றும், ஆக மொத்தம் 24 தத்துவங்களாக இந்த இயற்கையானது பிரிவு பட்டுள்ளது.)*

**அபரேயமிதஸ்த்வன்யாம் ப்ரக்ருதிம்**
**வித்தி மே பராம் ।**
**ஜீவபூதாம் மஹாபாஹோ யயேதம்**
**தார்யதே ஜகத் ॥** (5)

*''இது (மேற்சொன்ன) என்னுடைய கீழான, இழிவான இயற்கையாகும். இதனைவிட மேலானதும், உயிராக இருப்பதுமாகிய என்னுடைய இயற்கையை அறிந்து கொள்வாயாக அகன்ற தோள்களை உடையவனே! இந்த உலகமானது இதன்மீதுதான் (இந்த இயற்கையின் மீதுதான்) ஆதாரப்பட்டுள்ளது.''*

*(மேற்சொன்ன 24 கூறுபாடுகளை உடைய ஐம்பூதங்கள் கீழான நிலையாகும். இந்த ஐம்பூதங்களால் இந்த உடல் உருவாக்கப்பட்டுள்ளது. இது அறியும்தன்மை கொண்டது. ஆனால் இந்த உடலில் இருக்கும் ஜீவபோதமானது - ஆத்மாவானது இறைவனின் மேலான இயற்கைத்தன் மையாகும். அதாவது ஒரு பொருள் எரிகிறது. எரியும் நெருப்பிலிருந்து எழும் புகையானது அந்நெருப்பின் கீழான இயற்கையாகும். கீழான நிலையாகும். அந்த நெருப்பிலிருந்து எழும் ஒரு பொறியானது அந்த நெருப்பின் மேலான இயற்கையாகும். ஏனென்றால் அந்த நெருப்பின் ஆற்றல் அந்தப் பொறிக்கும் உண்டு. ஆம் இறைவனாம் நெருப்பின் தன்மையை கொண்டது பொறியாகிய உயிர்களின் ஆத்மாவாகும். ஆனால், நெருப்பின்றிப் பொறி சற்றே விலகி இருக்கிறது. இங்கே மேலான அந்த இயற்கையின் ஆத்மாவானது இந்த உடலில் அமைந்து, அதற்கு ஆதாரமாக உள்ளது.)*

**ஏதத்யோனீனி பூதானி**
**ஸர்வாணீத்யுபதாரய ।**
**அஹம் க்ருத்ஸ்னஸ்ய ஜகத்**
**ப்ரபவ: ப்ரலயஸ்ததா ॥** (6)

''உயிர்கள் எல்லாமும் இந்த இரண்டு (மேற்சொன்ன) இயற்கையிலிருந்துதான் தோன்றின என்பதைத் தெரிந்துகொள்வாயாக! நானே இந்த உலகமனைத்தின் தோற்றத்திற்கும் மறைவிற்கும் காரணமாவேன்.''

(இந்த வாழ்வானது மேலான இயற்கையான உயிரும் உடலும் சேர்ந்தபோது கிடைக்கிறது. இந்த இரண்டும் சேரும்போதுதான் வாழ்க்கையோட்டம் நடைபெறுகிறது. மேகக்கூட்டங்களானது ஆகாயத்தில்தான் தோன்றுகின்றன. ஆகாயத்தில்தான் நகர்ந்து செல்கின்றன. பிறகு ஆகாயத்திலேயே மறைந்து போகின்றன. அதுபோன்றே இந்த உலக உயிர்கள் யாவும் இறைவனிடம்தான்தோன்றுகின்றன. அந்த இறைவனிடமே ஒடுங்கி விடுகின்றன.)

மத்த: பரதரம் நான்யத்கிஞ்சி
தஸ்தி தனஞ்ஜய ।
மயி ஸர்வமிதம் ப்ரோதம்
ஸூத்ரே மணிகணா இவ ॥ (7)

''தனஞ்ஜயா, என்னைக்காட்டிலும் மேலானது வேறு எதுவும் இல்லை. நூலில் மணிகள் இருப்பது போன்று, எல்லாமே என்மீது சேர்க்கப்பட்டிருக்கின்றன.''

(எல்லா பொருள்களின் உற்பத்திக்கும், அழிவுக்கும் காரணம் அந்த இறைவன்தான். மேலும் அந்த எல்லா உயிர்களின் இயக்கத்திற்கும் அவன்தான் காரணம். அவனுடைய சூழற்சியை யாராலும் தடுத்திடமுடியாது. அவனுக்குத் தெரியாது எந்தப்பொருளும் தோன்றிடமுடியாது. இறைவன் ஒருநூல் போன்றவன். அந்த நூலில் சேர்க்கப்பட்டிருக்கும்-கோர்க்கப்பட்டிருக்கும் பொருள்களோ முத்து, பவளம், ரத்தினம் என்று பல்வேறு இயல்புகளைக் கொண்டவையாகும். அதுபோன்று என்றும் ஒன்று போல் இருக்கும் இறைவன் மீது, பல்வேறு குணங்களை, உருவங்களைக் கொண்ட உயிர்கள் ஆதாரப்பட்டிருக்கின்றன.)



23

ரஸோ அஹமப்ஸு கௌந்தேய
ப்ரபாஸ்மி சசிஸூர்யயோ: ।
ப்ரணவ: ஸர்வவேதேஷு சப்த:
கே பௌருஷம் ந்ருஷு ॥ (8)

''குந்தியின் புதல்வனே! நான் நீரில் அதன் சுவையாகவும், சூர்ய சந்திரனில் அவற்றின் ஒளியாகவும், வேதங்கள் எல்லாவற்றிலும் அவற்றின் ஓங்கார ஒலியாகவும், வானத்தில் ஓசையாகவும் மனிதர்களிடையே அவர்களின் ஆற்றலாகவும் இருக்கிறேன்''.

(நீருக்கு என்று தனியாக சுவை ஒன்றும் கிடையாது. ஆனால் அந்த உமிழ்நீரைக் கொண்டுதான், வாயில் மெல்லுவது கற்கண்டா, கல்லா, படிகாரமா என்பது தெரியவரும். சுவை அறிதற்கு நீர் தேவை. ஆம் அந்த நீரிலே சுவையறியும் தன்மை மறைந்திருக்கிறது. மறைந்திருக்கும் அந்தத் தன்மையின் சிறப்பே இறைவன் என்பது. வெளிச்சம் இல்லாவிட்டால் எந்தப்பொருளும் கண்களுக்குப் புலனாகாது. விக்ஞானத்தின் அதிசயத்தால் ஒரு குறிப்பிட்ட பரப்பில் உள்ள பொருள்களைத் தான் காணமுடியும். அந்த மின்சாரமும் நீர் போன்ற இயற்கையின் மீதே ஆதாரப்பட்டுள்ளது. ஆனால் தவறுது வானத்தில் தோன்றி மறையும் சந்திரன் மற்றும் சூரியன் தரும் வெளிச்சத்திற்கு ஈடு இணை ஏதும் இல்லை. அந்த வெளிச்சத்தினால்தான் இயற்கையின் பெருமை, சிறப்பு அறிந்துகொள்ளமுடியும். அத்தகு ஆற்றல் உள்ள சந்திரன் மற்றும் சூரியன் ஆகியவற்றின் ஒளியாக அந்த இறைவன் இருக்கின்றான். ஞானம் மற்றும் விக்ஞானம் ஆகியவற்றின் வளர்ச்சிக்கு உறுதுணையாக இருப்பன ஐம்பூதங்கள். அவற்றில் ஒன்றான ஆகாயத்தின் குணம் ஒலியாகும். வானம் இல்லாவிடின் ஒலி பிறக்காது. ஆனால் அந்த ஒலியை நம்மால் காணமுடியாது. அது போன்று இறைவன் வானத்தில் ஒலியாக கலந்துள்ளான். இந்த ஒலியால்மொழி பிறந்தது. எல்லா ஒலிக்கும் அடிப்படையாக இருப்பது ஓம் எனும் ஓங்காரமாகும். இதுவே எல்லா வேதங்களுக்கும் உயிராக இருப்பது.

ஓங்காரத்தின் விரிவே வேதங்களாகும். அந்த ஓங்காரமாக இருப்பது இறைவன். மற்றைய உயிர்களைக் காட்டிலும் உயர்ந்தது மனிதப் பிறவி. அவனை பலவகைகளிலும் உயர்த்துவது அவனிடம் உள்ள ஆற்றலாகும். அந்த ஆற்றலால்தான் அவன் சிறப்பான, மேன்மையான செயல்களைச் செய்யமுடிகிறது. அத்தகு மனிதன் மூலமாகத்தான் இறைவனின் பெருமை, அவன் படைப்பு பாராட்டப்படுகிறது. அத்தகு மனித ஆற்றல்தாம் இறைவன்.)

**புண்யோ கந்த: ப்ருதிவ்யாம்**
**தேஜஸ்சாஸ்மி விபாவஸௌ ।**
**ஜீவனம் ஸர்வ பூதேஷு**
**தபஸ்சாஸ்மி தபஸ்விஷு ॥** (9)

''மண்ணில் நல்ல வாசனையாகவும், நெருப்பினில் சுடராகவும் நான் இருக்கின்றேன். எல்லா உயிர்களிடத்தும் அவற்றின் துடிப்பாகவும், தவம் மேற்கொள்ளும் முனிவர்களின் தவமாகவும் நான் விளங்குகின்றேன்''.

(மண்ணில் எல்லாவிதமான வாசனை, மணம் எழலாம். ஆனால் நல்ல வாசனை - நறுமணம் ஒன்றே நம்மிடையே ஒரு தெய்வீக உணர்வை தோற்றுவிக்கிறது. குப்பைக்கூளங்களை எரித்திடும் போது எழும் புகை நம்மை நம் மூக்கை மூடிக் கொள்ளச்செய்கிறது. அதே நேரத்து சாம்பிராணியில் எழும் புகை நம்மையறியாமல் நம்மிடம் ஒரு அமைதியை, நம்மைச் சுற்றி அன்பானச் சூழ்நிலையை ஏற்படுத்துகிறது. அத்தகு நறுமணமாக மண்ணில் இறைவன் இருக்கின்றான். சூரியனுடைய பிரதிபலிப்பாக நெருப்பு இருக்கின்றது. ஆத்ம ஒளியின் வெளித்தோற்றமே அந்நெருப்பாகக் கருதப்படுகிறது. அழியும் உடல்களுக்குள் உயிர்களாக, ஆத்மாவாக இறைவன் திகழ்கின்றான். உயிரால் அந்த உடல் வாழ்கிறது. அந்த உயிரே இறைவனாவான். எல்லா உயிர்களும் வாழத்தான் செய்கின்றன. ஆனால் மனித உயிர்க்கும் மற்றைய உயிர்களுக்கும் பெருத்த வேறுபாடு உண்டு. மனிதன் தன்னை செயலாலும், வாழ்க்கை முறையாலும் மேம்படுத்திக்கொள்ள

முடியும். அவ்வாறு மேம்படுத்திக்கொள்ள மனிதன் மேற்கொள்ளும் முயற்சியே ஒரு மாபெரும் தவமாக அவரவர்களுடைய வாழ்க்கையில் அமைகின்றது. அத்தகு தவத்தை மேற்கொள்ளும் மனிதர்களே முனிவர்கள். அந்த முனிவர்களின் தவம் போன்று மனிதனிடம் இறைவன் இருக்கின்றான்.)

பீஜம் மாம் ஸர்வபூதானாம்
வித்தி பார்த்த ஸனாதனம் ।
புத்திர்புத்திமதாமஸ்மி தேஜஸ்:
தேஜஸ் வினாமஹம்: ॥ (10)

''பார்த்தா, எல்லா உயிர்களுக்கும் இன்றியமையாத வித்தாக நான் இருக்கின்றேன் என்பதை அறிந்துகொள். அறிவுடையோர்களின் அறிவாக, பேரொளியாளர்களின் பேரொளியாகவும் நான் இருக்கின்றேன்''.

(வித்தென்பது இன்றியமையாத, அவசியமான, ஆதாரமான ஒரு நிலையாகும். மழைக்கு கடலானது வித்தாக உள்ளது. எப்படியெனில், கடல்நீர் ஆவியாகி வான் சென்று மேகங்களாக மாறுகின்றன. பிறகு மேகம் ஒருநிலையில் மழையாக மாறுகின்றது. மாறிய மழை மறுபடியும் கடலையே அடைகின்றது. ஆகவே கடலே மழைக்கு ஆதாரமாகின்றது. ஆதாரமானதே வித்தாகும். அதுபோன்று எல்லா உயிர்களுக்கும் பிறப்பிடமாக இறைவன் இருக்கின்றான். ஆகவே அவன் வித்தாக அமைகின்றான். ஒருவன் தன் அறிவால், சிந்தனையால் இயற்கை உண்மையை - இறை உண்மையை தெரிந்து கொள்கின்றான் என்றால் அவனுடைய அந்த அறிவு பேரறிவாக மாறியுள்ளது என்று பொருள். ஒருவனால் இறைவனைக் காண நேரிடுகின்றது என்றால், அவன் ஆத்மாவை அவன் அறிந்துள்ளான் என்று பொருள். ஆத்மாவை அறிந்த அறிவு மேன்மையானது. ஆகவே அத்தகு அறிவாளர்களின் - ஞானிகளின் அறிவாக இறைவன் இருக்கின்றான். ஓர் இடம் சுத்தமாக இருக்கும் போது அங்கு துர்வாசனை ஏற்படாது. வயிற்றில் பிரச்சனை என்றால், அது அவ்வயிற்றை உடையவனின் வாய் காட்டிவிடும். ஆம் வாய் நாறும். ஆகவே

*உடல் சுத்தமாக இருந்தால் உள்ளம் சுத்தமாக இருந்தால் தானாகவே அவனிடம் ஓர் ஈர்ப்புத்தன்மை பிறக்கும். அதனால் அவனிடமிருந்து ஓர் ஒளி தோன்றும். அதனை தேஜஸ் என்று கூறுவர். இந்த தேஜஸை, இறைவழிபாட்டாலும் இறைநினைப்பாலும் ஒருவன் தன்னுள் வளர்த்திட முடியும்.)*

## பகாவான் சொன்னது

பலம் பலவதாமஸ்மி காமராக
விவர்ஜிதம்: ।
தர்மாவிருத்தோ பூதேஷு காமோ
அஸ்மி பரதர்ஷப ॥ (11)

*''பரதத்தலைவனே! பலசாலிகளிடம் காமம், ராகம் நீக்கப்பட்ட ஆற்றலாக நான் உள்ளேன். மற்றைய உயிர்களிடத்து அறத்திற்கு உட்பட்ட காமமாக உள்ளேன்.''*

*(கண்களுக்குத் தெரியாத பொருள்களிடத்து ஆசை கொண்டால் அது காமம். அதாவது நினைத்தாலே அனுபவிக்கத்தூண்டும் உணர்வானது காமமாகும். ஒரு பொருளைக் கண்ணுல்கண்ட பின்பு அதனை அடைய நினைக்கும் எண்ணம் ராகமாகும். ஒருவன் தன்னிடம் அடைந்திருக்கும் ஆற்றலை நலம் தருபவற்றிற்கே பயன்படுத்த வேண்டும். சிற்றின்பங்களுக்காக, உலகாயுத ஆசைகளுக்காகப் பயன்படும் ஆற்றலுக்கு மதிப்பில்லை. எந்தவிதப் பற்றுமின்றிப் பயன்படுத்தப்படும் ஒருவனது திறமை, ஆற்றல் போகப்போக மேலும் வலிமையுடையதாகிறது. ஒருவன் தன் ஆற்றலை மனித வாழ்க்கைக்குப் பயன்படும் வகையில் பயன்படுத்திக்கொண்டால், அதில் குற்றமில்லை. உணவே வாழ்வில்லை. பசியைப்போக்குவதற்கு மட்டுமே உணவு. அப்போது எந்த உணவின் மீது பற்று ஆசை ஏற்பட்டால் அது தவறில்லை. இதைத்தான் ஞானிகளும், முனிவர்களும் மேற்கொள்கின்றனர்.)*

யே சைவ ஸாத்விகாபாவா ராஜஸாஸ்
தாமஸாஸ்ச யே ।

**மத்த ஏவேதி தான்வித்தி ந**
**த்வஹம் தேஷு தே மயி ||** (12)

*"சத்வ, ரஜோ, தமோ குணங்களால் உண்டாகிய எல்லா பொருள்களும் என்னிடத்திலிருந்துதான் பிறக்கின்றன என்பதை அறிவாயாக! ஆனால் அதே நேரத்து நான் அவற்றின் மீது ஆதாரப்படவில்லை. அவைதாம் என்மீது ஆதாரப் பட்டிருக்கின்றன".*

*(உலகமானது முக்குண இயல்புகளைக் கொண்டது, ஆனால் இந்த உலகத்தைப் படைத்த இறைவனோ இக்குணங்களுக்கு அப்பாற்பட்டவன். ஒரு கயிற்றைப் பார்த்து பாம்பு என்று சொல்கிறோம். பாம்பாக நமக்கு தெரிவது மாயையினால்தான்.)*

**தரிபிர்குணமயைர் பாவைரேபி:**
**ஸர்வமிதம் ஜகத் |**
**மோஹிதம் நாபிஜானாதி மாமேப்ய:**
**பரமவ்யயம் ||** (13)

*"இந்த மூன்று குணங்களால் ஆக்கப்பட்ட பொருள்களின் ஆசையால் இந்த உலகம் மயங்கி நிற்கின்றது. அதே சமயத்து இந்தப் பொருள்களைக் காட்டிலும், மேலான, அழியாத என்னை (இந்த உலகம்) அறியவில்லை."*

*(சினிமாப்படம் பார்க்கும் ஒருவன், திரையில் தெரியும் நிகழ்ச்சிகளில் ஒன்றிப் போய்விடுகிறான். அதுபோது நிழற் படங்களைத் தாங்கி நிற்கும் திரையினை அவன் மறந்து விடுகின்றான். ஆனால் திரை இல்லை என்றால் படம் இல்லை. அதுபோன்று இறைவனால் படைக்கப்பட்ட பொருள்களைத் தன் முக்குண பேதங்களால் அனுபவிக்கின்றார்கள். அதில் மயங்கிப் போகின்றார்கள். ஆனால் நகரும், நகராபொருளில் எங்கும் எப்பொழுதும் நிறைந்துள்ள இறைவனை மனிதன் நினைப்பதில்லை.)*

**தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா**
**துரத்யயா |**

மாமேவ யே ப்ரபத்யந்தே
மாயாமேதாம் தரந்தி தே ॥ (14)

''முக்குணங்களால் உண்டாக்கப்பட்ட இந்த தெய்வ மாயையிலிருந்து உண்மையில் (எவராலும்) விடுபடமுடியாது. (ஆனால்), என்னையே இறுதிப்புகலிடமாக யார் சரணடைகின்றார்களோ, அவர்கள் இந்த மாயையிலிருந்து விடுபடலாம்''.

(இந்த மாயத் தோற்றத்தை இறைவன் தன் உடம்பாகக்கொண்டு விளங்குகின்றான். மாயையானது இறைவனது விளையாட்டாகும். விஷ்ணுவுக்கு மகாமாயன் என்று பெயர். அந்த மாயையினால்தான் அவன் செயற்கரியச் செயல்களைச் செய்தான். அந்த மாயவனை உள்ளபடி அறிந்து, அவன் திருவடிகளைச் சரண்புகுந்தால் அவன் தன் உண்மை உருவத்தைத் காட்டுவான். அதுபோது மனிதன் உலகப்பற்று எனும் மாயையிலிருந்து விடுபடுவான்.)

ந மாம் துஷ்க்ருதினோ மூடா:
ப்ரபத்யந்தே நராதமா: ।
மாயயாபஹ்ருதஞானா ஆஸுரம்
பாவமாச்ரிதா: ॥ (15)

''பாவமான செயல்களைச் செய்பவர்கள், முட்டாள்கள், மக்களில் கீழான குணத்தை உடையவர்கள், மாயையினால் உண்மையான அறிவை இழந்தவர்கள், அரக்க இயல்பை கொண்டவர்கள் போன்றோர் என்னைப் புகழ்வதில்லை''.

(உயர்ந்த குணமும் பண்பும் உடையவர்கள் தேவர்களாகக் கருதப்படுவர். அதே நேரத்து பிற உயிர்களைத் துன்புறுத்துபவர்களும், எப்போதும் உள்ளத்தில் கள்ளமும், கபடமும் கொண்டிருப்பவர்களும் அசுரர் என்று அழைக்கப்படுவர். எப்போது, எல்லாம் இறைவன், எங்கும் இறைவன் இருக்கின்றான் என்ற பேருண்மையை மறக்கின்றானோ அவனிடம் மூடத் தன்மை குடிபுகுகின்றது.

*அறியாமை மிகுந்தவர்கள் இறுதியில் ஆழிவைத்தான் அணைப்பார்கள். இந்த அறியாமையானது ஆசை, காமம் எனும் மாயையினால் பிறக்கிறது. இந்த அறியாமையினால் இறைவனையும் இறைநம்பிக்கையாளர்களையும் தூற்றுகின்ற இழிநிலையை அடைகின்றனர்.)*

**சதுர்விதா பஜந்தே மாம்ஜனா:**
**ஸுக்ருதினோ அர்ஜுன ।**
**ஆர்தோ ஜிக்ஞாஸுரர்த்தார்த்தீ**
**ஞானீ ச பரதர்ஷப ॥** (16)

*''பரத குலத்தில் தோன்றிய பெருமகனாகிய அர்ச்சுனா! துன்பத்தை அனுபவிப்பவன், ஞானத்தின்மேல் ஆசை உடையவன், பொருளால் வரும் இன்பத்தைத் தேடுபவன், ஞானி ஆகிய நான்குவகையான அறச்செயலைச் செய்பவர்கள் என்னை வணங்குகின்றனர்''.*

*(கடவுள் இல்லை என்பவன் கூட துன்பத்தில் அவதியுறும் போது அவனையும் மீறி இறைவனை நினைக்கின்றான்.அந்த நினைப்பே அவனுக்கு நன்மைகள் உண்டாக்குகின்றது இறை நம்பிக்கை ஒருவனுக்கு தக்க சமயத்தில் உதவிடும். திரௌபதி தன் மானத்திற்காகவும், யானை தன் உயிருக்காகவும் கண்ணனை அழைத்தது இவ்வகையில்தாம். அந்த இறைவனைப்பற்றி அறிய வேண்டும் என்ற ஆசை, தீராத வேட்கை உடையவர்கள் 'ஜிக்ஞாசு'' என்று அழைக்கப்படுகிறார்கள். விவேகானந்தர் போன்ற எத்தனையோ இறைமனிதர்கள் ஜிக்ஞாசுகளாவர். இறைவனை அறியவேண்டும் என்ற ஆசையானது, பிறவியிலேயே ஒருவனுக்கு அமையாது. அவ்வாசையினை வளர்த்துக்கொள்ளும் மன இயல்பினை பெறுதல் அவசியம். பிறகு அர்த்தார்த்தீ என்ற சொல் ஒன்று வருகின்றது. அதாவது பொருள்மீது அதிக ஆசை உடையவன் என்பதாகும். இப்பிறவியில் தான் மகிழ்ச்சியாக வாழ, அதற்குத் தேவையான செல்வத்தைப்பெற ஒருவன் இறைவனை நாடுகின்றான். எப்பொது இறைவன் மீது நம்பிக்கை வைத்து, தன் ஆசையைத் தீர்த்துக்கொள்ள நினைக்கின்றானோ, அவனும் சிறந்த பக்தனாகின்றான். நான்காவதாகக் குறிக்கப்படுவர்*

*ஞானிகளாவர். இவர்கள் பிறவியிலேயே இறை உணர்வோடு விளங்குவர். இறைவனைத்தவிர வேறொரு சிந்தனையும் அவர்களிடம் இருக்காது. ஆக இந்த நான்கு வகையானவர்களும் இறைவனோடு, இறைநினைப்போடு நேரடியாகவும், மறைமுகமாகவும் உறவு கொண்டவர்கள். அதனால்தான் அவர்கள் அறச்செயலாளர்கள் என்று அழைக்கப்படுகின்றனர்.)*

**தேஷாம் ஞானீ நித்யயுக்த**
**ஏகபக்திர் விசிஷ்யதே ।**
**ப்ரியோ ஹி ஞானினோ அத்யர்த்த-**
**மஹம் ஸ சமம ப்ரிய: ॥** (17)

''(முன் செய்யுளில் சொன்ன நான்குவகையான அறச்செயல்கள் செய்பவர்களான) அவர்களில் தொடர்ந்து யோகம் மேற்கொண்டு சற்றும் மாறுபடாத பக்தி செய்யும் ஞானியானவன் மேலாவன். ஏனெனின் அத்தகு ஞானிக்கு நான் மிகவும் விருப்பம் உடையவன். எனக்கும் அவன் மிகவும் பிடித்தமானவன்''.

*(சாதாரண மனிதன் முதலில் தனக்குத்தான் முதலிடம் தருகின்றான். தான் மற்றைய உயிர்களைக் காட்டிலும் சிறந்தவன் என்ற மனப்பாங்கு கொண்டவன் மனிதன். ஆனால், தான் இவ்வுலகில் வாழ்வதற்கு அந்த இறைவன்தான் காரணம், தன் உயிர்க்கு அந்த கடவுள்தான் உயிர்என்ற பேருண்மையை உணரும் போது, உயர் அறிவை பெறும் போது, மனிதன் ஞானி எனும் நிலைக்கு உயருகின்றான். இந்த ஞான உறவே இறைவன் - மனிதன் உறவைப் பலப்படுத்துகின்றது.)*

**உதாரா: ஸர்வ ஏவைதே**
**ஞானீத்வாத்மைவ மே மதம்: ।**
**ஆஸ்தித: ஸ ஹி யுக்தாத்மா**
**மாமேவானுத்தமாம் கதிம் ॥** (18)

''(16ஆம் செய்யுளில் சொல்லப்பட்ட) இவர்கள் யாவருமே நல்லவர்கள்தான். ஆனாலும், ஞானியை என் ஆத்மாவின் உருவமாகக் கருதுகிறேன். ஏனென்றால் யோகத்தில் நிலை

24

பெற்றவனாகிய அவன் மிக உயர்ந்த கதியாக விளங்கும் என்னையே சார்ந்திருக்கிறான்''.

(இறைவனைத் தொழும் எவருமே பக்தர்கள்தாம். ஆனால் அவர்கள் பக்தியில் உலகாயுத ஆசைகளின் எதிர்பார்ப்புகள் அடங்கியிருக்கும். ஆனால் ஞானியின் பக்தி எல்லா வகையிலும் உயர்ந்தது. தனித்தன்மை வாய்ந்தது. அவர்தம் பக்தி உலக நலத்தையும் தாண்டி, ஆத்ம நலத்தின் மேல் ஓங்கியிருக்கும். அதுபோது அந்த ஞானி இறைவனுக்கு நெருங்கிய உறவாகின்றான்.)

**பஹூனாம் ஜன்மனாமந்தே**
**ஞானவான்மாம் ப்ரபத்யதே: ।**
**வாஸுதேவ: ஸர்வமிதி ஸ**
**மஹாத்மா ஸுதுர்லப: ॥** (19)

''பல பிறப்புகளைக் கடந்த பிறகுதான் ஞானியானவன் 'எல்லாம் அந்த இறைவனின் (வாசுதேவனின்) உருவமே' என்று அறிந்து வழிபட்டு என்னை அடைகின்றான். அதுபோன்ற உயர்ந்த ஆத்மா (உயர்ந்த பக்தன்) கிடைப்பது அவ்வளவு எளிதல்ல''.

(இச்செய்யுளில் 'வாசுதேவ' எனும் சொல் வருகிறது. அதற்குப் பொருள் எல்லாவற்றினுள்ளும் இருப்பவன் என்பதாகும். எல்லாவற்றிலும் என்பது நகரும், நகரா பொருள்கள் நல்லவர் கெட்டவர் ஆகியோர் அடங்கியது ஆகும். ஞானி என்பவன் எது உண்மையான பெற்ற வனன்றறியும் அறிவைப்பெற்ற பிறகு அறி ஞானியானவன் பார்க்கும் எந்தப் பொருளிடத்தும் அவன் இறைஉருவத்தையே, எதனையும் இறைவனாகவே காணுகின்றான். அந்த உயர்ந்த நிலையினை அடைந்ததும் அவன் தனக்கும், பிற உயிர்களுக்கும் நல்லன செய்யும்நல்லதைக் கற்பிக்கும் ஒரு வழிகாட்டியாக விளங்குகிறான். அதுபோது அவன் பிறவி ஒரு அறிதான பிறவியாக மற்றவர்களிடையே திகழ்கின்றது.)

**காமைஸ்தைஸ் தைர்ஹ்ருதஞானா:**
**ப்ரபத்யந்தே அன்ய தேவதா: ।**

தம் தம் நியமமாஸ்தாய ப்ரக்ருத்யா
நியதா: ஸ்வயா ॥ (20)

''பலவகையான ஆசைகளின் காரணமாக அறிவை இழந்தவர்கள், அவரவர்களுடைய இயற்கை உணர்வுகளினால் இழுக்கப்பட்டு, அந்த உணர்வுகளுக்கு ஏற்றவாறு வழிமுறைகளை மேற்கொண்டு மற்றைய கடவுளர்களை வழிபடுகின்றனர்.''

*(பல அரசு அலுவலர்கள் பல அமைச்சர்கள் யாவரும் முதலமைச்சர்களுக்குக் கீழ்தான் செயல்படுவார்கள். அதுபோது, தங்களுடைய சிறு சிறு தேவைகளை விருப்பங்களை நிறை வேற்றிக்கொள்ள பலர், இந்த அலுவலர்களையும், அமைச்சர்களையும் நாடிப் பயன்பெறுவர், முதலமைச்சரை ஒருவர் நாடுகின்றார் என்றால், அவரது தேவை, விருப்பம், எதிர்பார்க்கப்படும் பயன் அதிகமானதாக மேன்மையான தொன்றாக இருக்கும். ஆனால் இன்று முதலமைச்சரை சந்திப்பது என்பது அவ்வளவு எளிதல்ல. இதனை நாம் நம் அன்றாட வாழ்க்கையில் பார்க்கலாம். இந்தக் கண்ணோட்டத்தில்தான் நாம் இச்செய்யுளின் கருத்தைப் பார்க்க வேண்டும். தமது மனதில் எழும் சிறு சிறு ஆசைகளை நிறைவேற்றிக்கொள்ள ஒருவன் சிறு சிறு தெய்வறங்களை வழி படலாம். ஆனால் முக்தி எனும் அரிய பலனைப்பெற வேண்டுமென்றால் அவன் மேலான அந்தப் பரம்பொருளைத்தான் வழிபடவேண்டும். ஆனால் அவனை நெருங்குவது என்பது அவ்வளவு எளிதல்ல. தீவிரமான, நேர்மையான முயற்சியும், பயிற்சியும் தேவை. ஆகவே, ஆசைகள், எதிர்பார்புகள் சிறியனவாக இருப்பின் வழிபடும் தெய்வங்கள் பலவாகின்றன. வழிபடும் முறைகள் பலவாகின்றன.)*

## பகவான் கூறுவது:

யோக யோயாம் யாம் தனும் பக்த:
ச்ரத்தயார்சிதுமிச்சதி ।
தஸ்ய தஸ்யாசலாம் ச்ரத்தாம்
தாமேவ விததாம்யஹம் ॥ (21)

''எந்தெந்த பக்தன் எந்தெந்த இறை வடிவத்தை தீவிரமாக வழிபட ஆசைப்படுகிறுனோ, அவரவர்களுடைய அந்தத் தீவிரத்தன்மையை உறுதியுடன் நான் அமையச் செய்வேன்''.

*(இச்செய்யுளில் பக்தியின் முக்யத்துவம் வலியுறுத்தப்படுகிறது. லட்டு, மைசூர்பாகு, ஜிலேபி என்று பல வகை இனிப்பு வகைகள் இருக்கலாம். ஆனால், அவற்றின் பொதுத்தன்மை இனிப்பு மட்டுமே. ஆம் கடவுளின் உருவங்கள், பெயர்கள் பலவகைப் படலாம். ஆனால் அவற்றைத் தொழுதிடும் போது பக்தி என்று உணர்வே பொது வாக அமைகின்றது. அந்தப் பக்தி முதிர்ந்த போது வேறு பட்ட உருவங்களும், பெயர்களும் மறைந்து போகும். ஒருவனே தேவன் எனும் உண்மை அறிவு புலப்படும். இதைத்தான் கண்ணனும் பக்தர்களிடம் எதிர்பார்க்கின்றுன்.)*

ஸ தயா ச்ரத்தயா யுக்தஸ்-
தஸ்யாராதன மீஹதே ।
லபதே ச தத: காமான்மயைவ
விஹிதான்ஹி தான் ॥ (22)

''தீவிரத்தன்மையுடைய அவன் (யாரொருவன்) அக்கடவுளை வழிபட்டு, அதனால் அவன் விரும்பியவற்றைக் கிடைக்கப்பெறுகின்றுன். ஆனாலும், அவ்விரும்பும் பொருட்களை உண்மையில் தகுந்தவாறு (அவனுக்குக் ) கொடுப்பது நான் தான்''.

*(ஊரில் குளம், குட்டை, ஆறு, அருவி போன்ற நீர்நிலைகள் பல இருக்கலாம். ஆனாலும் அவைகொண்டுள்ள நீர் என்பது மேலிருந்து பொழியும் மழை யேயாகும். அதே போன்றது தான் மற்றைய தேவதையாகிய கடவுளர்கள் வழங்கும் அருளானது மூலப்பொருளாகிய அந்த மகாவிஷ்ணுவின் கருணை யினால்தான் என்பது இச்செய்யுளில் வலியுறுத்தப்படுகிறது.)*

அந்தவத்து பலம் தேஷாம்
தத்பவத்யல்பமேதஸாம ।

தேவான் தேவயஜோ யாந்தி
மத்பக்தா யாந்தி மாமபி ॥ (23)

''ஆனால், சிறுஅறிவு படைத்த இவர்கள் (மற்றைய கடவுளர்களை வழிபடுபவர்கள் (அச்சிறு) அக்கடவுளர்களையே அடைகின்றனர். என்னை வணங்கும் என் பக்தர்கள் என்னையே அடைகின்றனர்''.

(ஆழமான ஆற்றில் மூழ்குபவர்களுக்குப் பலவித நிறமுள்ள, உருவமுள்ள கூழாங்கற்கள் கிடைக்கும். அதே நேரத்தில் ஆழமான கடலில் இறங்குபவர்களுக்கு நல்ல முத்துக்கள் கிடைக்கும். ஆகவே மூழ்கும் செயல் என்பது இருவரும் மேற்கொள்ளும் ஒரே முயற்சிதான். ஆனால் கிடைக்கும் பலனோ வேறுபட்டது. ஆகவே சிறு கடவுளர்களை வணங்குபவர்கள் தங்கள் சிறு சிறு இவ்வுலக ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ளலாம். ஆனால் பரம்பொருளான கண்ணனை வணங்குவோர் நிலைத்த பேரின்பத்தை அடையலம்.)

அவ்யக்தம் வ்யக்திமாபன்னம்
மன்யந்தே மாமபுத்தய: ।
பரம் பாவமஜானந்தோ
மமாவ்யய மனுத்தமம்: ॥ (24)

''என்னுடைய அழியாத, ஒப்புமை கூறமுடியாத பரம்பொருள் உண்மையை அறியாத மூடர்கள், (ஐந்து) புலன்களுக்கும் கட்டுப்படாத என்னை அந்தப் புலன்கள் அறியும் குணத்தை உடையவனாகக் கருதுகின்றனர்''.

(இச்செய்யுளில் விஷ்ணுவின் இயல்பு கூறப்படுகிறது. இந்த உலக உயிர்கள் வினையின் காரணமாக ஓர் உருவத்தைக் கொண்டு பிறக்கின்றன. அது போலத்தான் மனிதனும் பிறக்கின்றான்.ஆனால் அவ்வுயிர்களைக் காப்பாற்றும் இறைவன், கண்களுக்குத் தெரியும். மனித உருவண் கொண்டாலும், அவன் அதற்குள் கட்டுப்படாதவன். மனிதனை உயர்த்துவதற்கே இறைவன் தான் ஆடும் நாடகத்தில் ஒரு

காட்சியாக இப்பூமியில் உருவம் எடுக்கின்றான். இதனை அறியாதவர்கள் அறிவில்லாதவர்களேயாவர்.)

**நாஹம் ப்ரகாச: ஸர்வஸ்ய**
**யோகமாயா ஸமாவ்ருத: ।**
**மூடோ அயம் நாபிஜானாதி**
**லோகோ மாமஜமவ்யயம் ॥** (25)

''யோக மாயையினால் நன்றாக நான் மூடப்பட்டுள்ளேன். (அதனால்) நான் எவருடைய அறிவுக்கும் அறியப்படுவதில்லை. பிறப்பே இல்லாத அழிவே இல்லாத, என்னை இந்த அறிவற்ற உலகம் தெரிந்து கொள்வதில்லை''.

(இந்த இயற்கையானது முக்குணங்களின் சேர்க்கையாகும். அத்தகு இயற்கை, குணங்கடந்த இறைவனின் யோக மாயையாகும். வானத்தில் மேகம் இருக்கிறது. இருக்கின்றது என்பதை சூரிய ஒளியால்தான் அறிய முடிகிறது. அந்த சூரியனையே அந்த மேகம் மறைகின்றது. இந்த மறைப்பையும் அந்த சூரிய ஒளியினால்தான் காணமுடியும். ஆகவே சூரியனை மேகம் மறைப்பதுபோன்று தோன்றுவது மாயையே. அதே போன்று இயற்கையாகிய மாயையினால் இறைவன் மறைந்துள்ளான். இது யோக மாயை. இதனை அறிந்து கொள்ளாதவர்கள் இறைவனை ஒரு சாதாரண மண்ணுலக பிறவியாகக் கருதும் அறிவற்றவர்கள். உண்மையை உணர்ந்தவர்கள் இறைவனின் திருவிளையாடலை நன்கு அறிவர்.)

**வேதாஹம் ஸமதீதானி**
**வர்த்தமானானி சா அர்ஜுன**
**பவிஷ்யாணி ச பூதானி மாம் து**
**வேத ந கஸ்சன ॥** (26)

''அர்ச்சுனா, (முன்பு) சென்றுள்ளவற்றையும், (இன்று) இருப்பவனவற்றையும், (நாளை) வருபவனற்றையும் ஆகிய உயிர்கள் பற்றி எனக்குத் தெரியும். ஆனால் யாருக்கும் என்னைத் தெரியாது''.

(இந்த உலக உயிர்களின் தோற்றமும் மறைவும் மாயையின் ஆற்றல்தான். இந்த ஆற்றலின் தலைவன் அந்த மாமாயன்தான். காலச்சக்கரம் அவன் அருளால்தான் சுழல்கிறது. அதனால்தான் யுகங்கள் மாறுகின்றன. ஆனால் அந்த யுகங்களில் நடந்தது, நடந்துவரும், இனி நடக்க இருக்கும் யாவுமே அவனறிவான். ஆனால் மனிதன் தன் வாழ்நாளிலே தன்னையே அறிந்து கொள்ள முடியாதவன். தன்னை அறிய மனிதன் அவ்இறைவனையே அவனருளுக்காக நாடவேண்டும். உண்மையான, நேர்மையான பக்தியே இறை உண்மையை அறிய வழிவகுக்கும். உண்மையான பக்தர்கள் காந்தக்கல்போன்றவர்கள். அவர்களால்தான் இறைவன் எனும் இரும்பினை இழுத்திட முடியும். பக்தி இல்லாதவர்கள் மரம் போன்றவர்கள். மரம் காந்த சக்தியினைப் பெற முடியாது.)

**இச்சாத் வேஷஸமுத்தேனே த்வந்த்வ**
**மோஹேன பாரத ।**
**ஸர்வபூதானி ஸம்மோஹம்**
**ஸர்கே யாந்தி பரந்தப ॥** (27)

''எதிரிளை வருத்தமூட்டும் பாரதா, விருப்பு வெறுப்பு எனும்குணங்களால் தோன்றும் இருநிலை ஆசைகளினால் பிறவி எடுக்கும் போதே எல்லா உயிர்களும் குழப்பத்தால் சூழப்படுகின்றன''.

(இச்செய்யுளில் 'த்வந்த்வ மோகம்' எனும் சொல் வருகிறது. அதாவது இருநிலை ஆசை அல்லது மோகம் என்பதாகும். இருநிலை என்பது நன்மை தீமை இயல்புகளாகும். அதாவது நன்மையால் வரும் இன்ப உணர்வுகளுக்கும், தீமையால் கிடைக்கும் துன்ப உணர்வுகளுக்கும் இடையே சிக்கி அவ்வுணர்வுகளைத்தரும் உணர்ச்சிகளுக்கு ஆளாகின்றான். இன்னும் விளக்கமாகக் கூறின், மனிதன் நன்மையை எதிர்பார்த்து கிடைத்திடும் இன்பத்திற்கும், துன்பத்தைத் தவிர்ப்பதால் கிடைத்திடும் இன்பத்திற்கும் இடையே அகப்பட்டு, குழம்பி மன அமைதியை இழக்கின்றான். இந்த

*இரு உணர்வுகளைப் பற்றிக் கவலைப்படாமல் இரண்டையும் எதிர்பார்க்காது விருப்பு - வெறுப்பு அற்று விளங்கிடும் போது, அவன் இறைவனைப் பற்றி அறிய முடிகிறது)*

**யேஷாம் த்வந்தகதம் பாபம்**
**ஜனானாம் புண்யகர்மணும் ।**
**தே த்வந்த்வமோ ஹநிர்முக்தா**
**பஜந்தே மாம் த்ருடவ்ரதா: ॥** (28)

*''ஆனால் நல்வினைகளை உடைய எந்த மக்களிடமிருந்து பாவமானது விலக்கப்படுகிறதோ, (அப்போது அவர்கள்) இருநிலை ஆசைகளிலிருந்து விடுதலைப்பெற்று, (அவர்கள்) உறுதியான விரதமனப்பான்மையுள்ளவர்களாக விளங்கி என்னை வணங்குகிறுர்கள்.''*

*(மனிதன் தொடர்ந்து செயல்எனும் வினை ஆற்றிக் கொண்டிருக்கின்றுன். அது போது அவ்வினைகள் யாவும் அவன் சொந்த நலன்களுக்காகவே அமைகின்றன. இந்த நிலையில் அவன் மனதில் இறையுணர்வு என்பது என்றும் தோன்றுது. சுயநலப் பற்று பரமனின் அருளைப்பெற்றுத் தராது. அப்பரமன் பற்றே இறுதியான இன்பத்தைத் தரவல்லது. ஆம் துன்பத்திலும் தோல்வியிலும், இன்பத்திலும், வெற்றியிலும் மனம் ஊசலாடாது, பயன் கருதாது, சுயநலநோக்கம் இல்லாது வினைபுரியும் பண்பே அவனுக்குப் புண்ணிய பலனை அளிக்கிறது. அந்த நிலையே அவனுக்கு ஒர் உறுதியான குழப்பமில்லாத மனப்பக்குவத்தை உண்டாக்குகிறது. அதுவே இறை உண்மையை அறிய வழிவகுக்கும்.)*

**ஜராமரணமோக்ஷாய மாமாச்ரித்ய**
**யதந்தி யே ।**
**தே ப்ரஹ்ம தத்விது: க்ருத்ஸ்ன**
**மத்யாத்மமம் கர்ம சாகிலம் ॥** (29)

*''கிழத்தன்மையினின்றும், இறப்பிலிருந்தும் விடுதலை அடைய என்னை வணங்கி தகுந்த முயற்சிகளை மேற்கொள்பவர்கள் அந்த பரம்பொருளையும் ஆத்ம சொரூபத்தையும், அறிந்து கொள்கின்றனர்''.*

*('மனிதன் அழுதுகொண்டே பிறக்கின்றான், ஏமாற்றங்களுடன் சாகின்றான்'' என்று சொல்லுவர். அழுதுகொண்டே பிறந்தாலும் ஆசைகளுடன்தான் பிறக்கின்றான். பின்னர் நடுவில் அழுவது நின்றாலும் ஆசைகள் வலுவடைகின்றன. உடலில் வலுவிருக்கும் வரை ஆசைகளுக்குக் குறைவில்லை. உடலும் உள்ளமும் சோர்வடையும் முதுமைக் காலத்தில்தான் மனிதன் எது உண்மையான ஆசை என்பதைப் பற்றி எண்ணத் தலைப்படுகின்றான். அதுபோது மரணம் நெருங்குகின்றது. அதனைத் தவிர்க்க முடியாது என்பதை உணருகின்றான். மரணத்திற்கு முன் தன்னைத் திருத்திக்கொள்ள ஆசைப்படுகின்றான். அந்த இறுதி ஆசைதான் இறைவன் மீது நாட்டம் கொள்ளச்செய்கிறது. ஆகவே மனிதன் இளமையாக இருக்கும்போது, மனித வாழ்வின் உண்மையை அறிதல் அவசியம். அப்போதுதான் அவனுள் இறைநாட்டம் தோன்றிடும். அந்த நிலையே அவனை உயர்த்திடும். அதனால் அவன் இறைவனையும், தன்னையும், தான் செய்யும் வினைகளின் முக்கியத்துவத்தையும் அறியத்தலைப்படுகின்றான். அதுபோது, அவன் தன் வயோதிகத் தன்மையையோ, மரணத்தையோ, கண்டு பயப்படமாட்டான். அவனுடைய மரணம் ஏமாற்றமாக இருக்காது)*

**ஸாதிபூதாதிதைவம் மாம் ஸாதி**
**யக்ஞும் சயே விது: ।**
**ப்ரயணகாலே அபி சமாம் தே**
**விதுர்யுக்த சேதஸ: ॥** (30)

*''யாரொருவன் என்னை, ஆதிபூதத்துடனும், ஆதிதெய்வத்துடனும், அதி யக்ஞத்துடனும் விளங்கி அறிந்துகொள்கிறார்களோ, (அவர்கள்) நிலைத்த மனத்தைக் கொண்டவர்களாக, சாகும் நிலையிலும் என்னை அறிந்துகொள்கிறார்கள்.''*

*(மனிதன் தான் இறக்கநேரிடும் அந்த நேரத்தில் தன் வாழ்க்கையைப் பற்றி ஒரு கண்ணோட்டத்தை விரைவாக காணுகின்றான். பற்றுகளின் காரணமாக அவனுக்கு அவனது*

*மரணம் அச்சத்தையும், குழப்பத்தையும் ஏற்படுத்துகின்றது. ஆனால் வாழ்க்கையை, அவன் அதனை சுவைக்க விரும்பும் நிலையிருந்தே, எது வாழ்க்கை, என்று ஆலோசித்தானாயின் அவன் இயற்கையை (அதன் ஆற்றலை) அதன் கண் நிகழும் நிகழ்ச்சிகளை முறையாக, நிதானமாக அறியத்தலைப்படுகின்றான். நிரந்தரமற்ற தன் வாழ்வில் எது உண்மை, எது நிலையானது என்பதை அறிகின்றான். அறிந்த அந்த நிலையில் அவன் ஒரு மாமனிதனாக விளங்குகின்றான். அதுபோது அவனுள் பக்தியும், பேரறிவும் வளருகின்றது. இறைஇன்பம் சுவைக்க முற்படுகின்றான். ஆம், மரணம் புகட்டும் இப்பாடத்தினை, மரணப்படுக்கையில் அறிய இடம் கொடுக்காது, இளமையிலேயே அறிதல் அவசியம் என்பது இச்செய்யுளால் சுட்டிக்காட்டப்படுகிறது.)*

**இதி ஸ்ரீமத் பகவத் கீதாஸூப**
**நிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம் ।**
**யோக சாஸ்த்ரே ஸ்ரீகிருஷ்ணார்ஜுனஸம்வாதே**
**ஞானவிக்ஞானயோகோ நாம**
**ஸப்தமோ அத்யாய: ॥**

*''இறை உண்மையைக் கூறுவதும், யோக இயலானதும், ஸ்ரீகிருஷ்ணனுக்கும் அர்ச்சுனனுக்கும் இடையே நடைபெறும் உரையாடலுமாகவும் உள்ள இந்த பகவத் கீதை என்னும் உபநிடதத்தில் உள்ளது ஞானவிக்னான யோகம் என்னும் (இந்த) ஏழாம் அத்தியாயமாகும்.'')*

*(ஏழாம் அத்தியாயம் முற்றும்)*

# எட்டாம் அத்தியாயம்

## அக்ஷரப்ரஹ்ம யோகம்

### அர்ச்சுனன் கூறியது:

கிம் தத்ப்ரஹ்ம கிமத்யாத்மம் கிம்
கர்ம புருஷோத்தம ||
அதிபூதம் ச கிம் ப்ரோக்தமதிதைவம்
கிமுச்யதே || (1)

*''ஓ புருஷோத்தமனே! பிரம்மம் என்று அழைக்கப்பெறுவது எது? அத்யாத்மம், கர்மம் எனப்படுபவை எவை? அதிபூதம் என்று அழைக்கப்பெறுவது எது? அதிதெய்வம் என்பது எது''*

*(அர்ச்சுனனின் ஐயக் கேள்விகள் தொடருகின்றன.)*

அதியக்ஞ: கதம் கோஅத்ர
தேஹே அஸ்மின் மதுஸூதன ।
ப்ரயாணகாலே ச கதம்
ஞேயோ அஸி நியதாத்மபி: || (2)

*''மதுசூதனா! இந்த உடலில் அதியக்ஞன் என்பவன் யார்? அவன் எப்படி இருப்பான்? கட்டுப்பாட்டினைப் பெற்றவர்கள் தங்கள் மரணக்காலத்தில் உன்னை எவ்வாறு அறிந்துகொள்கிறார்கள்''.*

(இந்த ஒன்றிரண்டு செய்யுட்களில் வரும் ஏழு சொற்களும் பொருள் பொதிந்தனவாகும். கிருஷ்ணன் குறிப்பிட்ட அந்த ஏழு சொற்களின் பொருளையே இந்தச் செய்யுட்களில் அரச்சுனன் கேட்கின்றான்.)

## பகவான் கூறுவது:

அக்ஷரம் ப்ரஹ்ம பரமம் ஸ்வபாவோ
அத்யாத்ம முச்யதே ।
பூதபாவோத்பவகரோ விஸர்க:
கர்மஸம்ஜ்ஞித: ॥ (3)

''அழிவில்லாததும், மிகச்சிறந்ததாகவும் இருப்பது பிரம்மமாகும். அதனுடைய இயல்பானது அத்யாத்மம் என்று கூறப்படுகிறது, உயிர்களைப் படைத்து, அவற்றை இயக்கும்படியான வேள்வியாகிய வினையே கர்மம் என்று அழைக்கப்படுகிறது''.

(எல்லா உயிர்களுக்கும் காரணமாக இருப்பது பிரம்மம் என்பதாகும். அப்பிரம்மம் ஐம்புலன்களுக்குக் கட்டுப்படாதது. காலத்தைக் கடந்தது. அண்டங்கள் எல்லாவற்றிற்கும் அப்பிரம்மம் இருப்பிடமாக இருப்பதால் அது பரப்பிரம்மம் என்று அழைக்கப்படுகிறது. அதுவே முழுமூலப்பொருளாகும். ஒவ்வொரு உயிர்க்கும் அதற்கென்ற இயல்புகள் உண்டு. அதனை சுபாவம் என்று கூறுவர். அந்த பரப்பிரம்மத்திற்கு அதற்கென ஓர் இயல்பு உண்டு. அதாவது, அப்பரபிரம்மம் பல உயிர்களைத்தன்னை வெளிப்படுத்திக்கொள்ளும் இயல்பைக் கொண்டதாக அமைந்துள்ளது. அந்த இயல்புக்கு அத்யாதமம் என்று பெயர். கடலில் அலைகள் எவ்வாறு ஒடுங்கி விடுகின்றனவோ அவ்வாறு ஜீவாத்மாக்கள் (எனும் அலைகள்) பரப்பிரம்மத்துடன் (கடலுடன்) ஒடுங்கி விடுகின்றன. ஒருவனுடைய உயர்ச்சிக்குக்காரணம் அவன் புரியும் செயல்பாடுகளான வினைகளாகும். அந்த நல்வினைகளே 'கர்மம்' என்றழைக்கப்படுகின்றன.)

அதிபூதம் க்ஷரோ பாவ:
புருஷஸ்சாதிதைவதம் ।

அதியக்ஞோ அஹமேவாத்ர
தேஹேப்ருதாம் வர ॥ (4)

''மனிதர்களுள் உயர்ந்தவனே! அழிகின்ற பொருள் அதிபூதம் என்று கூறப்படுகிறது. புருஷன் எனப்படுபவன் அதிதெய்வமாகின்றான். இனிமேல் நான்தான் இங்கு உடம்பினுள் அதியக்ஞமாக விளங்குவேன்''

(இங்கு அதிபூதம், புருஷன், அதிதெய்வம், அதியக்ஞம் எனும் நான்கு சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதில் அதிபூதம் என்பது அழிந்துவிடக்கூடிய இந்த உடல்களாகும். புருஷன் என்பவன் இந்த உலகமனைத்தையும் தன்னுடைய இருப்பிடமாகக்கொண்டு எங்கும் எதிலும் நீக்கமற நிறைந்திருப்பவனாவான். அதிதெய்வம் எனப்படுபவன் இந்த உயிர்கள் யாவற்றிற்கும் உடலைக்கொடுத்த பிரம்மதேவனாவான். இறுதியாகக் கூறப்படுவது அதியக்ஞமாகும். யாகம் என்று அழைக்கப்பெறும் கேள்விக்குச் சிறப்பு அதில் சொரியப்படும் பொருள்களையும் சார்ந்துள்ளது. அலைபாயும் அவ்விறைவனுக்கே கொடுக்கப்படுகின்றன. அதுபோது, அவ்வேள்வியில் வேள்வி செய்பவன் தன்னையே ஒரு பொருளாகச் சொரியும் போது, அந்த வேள்வியே ஒரு புனிதமாகிறது. ஆம் ஜீவன் தன்னையே அப்பரமனுக்கு அளித்துவிடுகிறது. அதுவே ஜீவ பரம ஐக்யமாகும். அங்கு ஜீவன் இயல்புமறைந்து பரபேரதம் ஒளிர்கின்றது. அந்த ஒளிரும் சூழ்நிலையில் தெய்வாம்சம் பிரதிபலிக்கின்றது. இதனை ஏற்படுத்தும் ஒரு யக்ஞமே அதியக்ஞாமாகிறது.)

அந்தகாலே ச மாமேவ ஸ்மரன்
முக்த்வா கலேவரம்! ।
ய: ப்ரயாதி ஸ மத்பாவம் யாதி
நாஸ்த்யத்ர ஸம்சய: ॥ (5)

''இறக்கும் தருணத்தில் என்னையே நினைத்துக்கொண்டு உடலைவிட்டு, யார் ஒருவன் செல்கின்றானோ, அவன் என் உருவத்தை அடைகின்றான். இதில் சிறிதும் ஐயமில்லை''.

*(இன்றையக் காலக்கட்டத்தில் சராசரி ஒரு மனிதன் தனது 50வது வயது வரை, தன் இன்பம், தன் வாழ்க்கை, தன் குடும்பம், என்று அதற்காக நாளும் பலவாறு உழைக்கின்றான். ஆனால் எது உண்மயான இன்பம், எது நிலைத்த உறவு என்பதைத் தன் வாழ்நாளின் இறுதிக் கட்டத்திலே தான் நினைக்கத் தலைப்படுகின்றான். உடலும், உள்ளமும் சோர்வுற்ற நிலையில்தான் இறைவனைப்பற்றி நினைக்கின்றான். அது அவனுடைய மரண பயத்தின் எதிரொலிதான். இவ்வொலியினை அவன் தவிர்க்க வேண்டுமாயின் இறைநினைப்பு அவனுடைய வாழ்க்கையின் ஒருபகுதியாக இருந்திட வேண்டும். தனது இறுதிக்காலத்திலாவது அவன் அந்த பக்தி உணர்வினை வளர்த்துக் கொள்ளவேண்டும். இந்தப் பக்தி உணர்வினை இறை நாமாக்களைக்கூறுவதாலேயே ஒருவன் பெறமுடியும். ஆகையால்தான் தான் பெண் இன்பத்தில் திளைத்து நோயுற்றுத் துடித்த 'அஜாமிளன்' தன் உயிர் பிரியும்போது 'நாராயணு' என்று இறைவன் பெயர் கொண்ட தன் மகனை அழைத்ததால் அஜாமிளன் உயர்கதி பெற்றதாக புராணம் கூறும்.*

*ஆம் மரணக்காலத்தில் ஒருவனுக்குள் ஏற்படும் இறைநினைப்பு, அவனை இறைவனோடு கலந்துவிடச்செய்கின்றது என்பதற்கு இங்கு பகவான் உறுதி அளிக்கின்றான்.)*

**யம் யம் வாபி ஸ்ரமன்பாவம்**
**த்யஜத்யந்தே கலேவரம ।**
**தம் தமேனவைதி கௌந்தேய ஸதா**
**தத்பாவபாவித: ॥** (6)

*''குந்தியின் மகனே! மரணமாகிய கடைசிக்காலத்தில், மனதில் எதை நினைத்துக் கொண்டு இந்த உடலை ஒருவன் விடுகின்றானோ, எப்போதும் அதனையே நினைத்துக் கொண்டு இருப்பவனாகிய அவன், அதனையே (அப்பொருளையே) அடைகின்றான்.''*

(சிறு வயதில் ஒருவன் தான் எதிர்காலத்தில் ஒரு சிறந்த பொறியாளனாகவோ, சிறந்த மருத்துவனாகவோ, வழக்கறிஞராகவோ ஆக வேண்டும் என்றுநினைத்துக் கொள்ளும் போது, அவன் தன் முயற்சியில் வெற்றியடையலாம். அவ்வாறு அவன் வெற்றியடையாத தருணத்து, அவன் தான் சாகும் தருவாயினும் அந்த நினைவே அவன் உள்ளத்தில் ஒரு சில கணங்கள் நிழலாடுகின்றது. ஏன் எனின், அந்த நினைப்பு, அந்த வெறி அவன் மனதில் ஆழமாக பதிந்து விட்டதால். ஆகவே ஒருவனது ஆசை ஏமாற்றமாக நின்றுவிட்டநிலையில் அவ்ஆசை அவனது அடுத்தப்பிறவியிலும் தொடரலாம் என்பது இங்குச் சுட்டிக்காட்டப்படுகிறது.)

**தஸ்மாத்ஸர்வேஷு காலேஷு**
**மாமனுஸ்மர யுத்ய ச ।**
**மய்யர்பித மனோபுத்திர்**
**மாமேவைஷ்யஸ்யஸம்சய: ॥** (7)

''ஆகவே, எப்பொழுதும் என்னையே நினைத்துக்கொண்டு போர் புரிவாயாக. மனத்தையும் அறிவையும் என்னிடம் முழுமையாக ஒப்படைத்துவிடுவதால் சிறிதும் ஐயமில்லாமல் நீ என்னையே சேர்வாய்''

(இங்கு இறைவன் அர்ச்சுனன் வாயிலாக, உலக மக்களுக்கு ஓர் உண்மையை உணர்த்துகின்றார். போர் செய்வது அர்ச்சுனனுடைய குலப்பெருமை. அதுவும் அந்தச் சூழ்நிலையில் போர் செய்வது என்பது நடந்தாக வேண்டும். அது அங்கு அர்ச்சுனனுடைய முதல் கடமையாகும். ஆகவே, அவரவர்கள் அவரவர்களுக்குரிய கடமையை ஆற்றுவதே சிறந்த தர்மம் என்று இங்கு வலியுறுத்தப்படுகிறது. சிலர் பஜனை என்ற பெயரில் வீட்டில் தடபுடலாக, கடன்வாங்கியும் பூஜைகள், பிரஸாதங்கள் என்று செய்வர், அதே நேரத்து, குடும்பச் சூழ்நிலை, மனைவி, மக்கள் நிலைகலையும் மறந்துவிடுவர். ஏன், தங்கள் தொழிலையே மறந்துவிடுவர். அதே போன்று ஒருசிலர் தங்கள் குடும்பத்தின் பெயரில் காட்டும் அளவற்ற ஈடுபாட்டினால் கடவுள் நினைப்பே மறந்து

*விடுகின்றனர். இரண்டு நிலைகளும் தவறு. ஆம், தங்களுக்கு இடப்பட்ட, தாங்கள் மேற்கொண்ட வினைகளை ஆற்றிக்கொண்டே இறைசிந்தனையையும் மனதில் வளர்த்துக்கொள்ள வேண்டும். இந்த இரண்டு நிலைதான் ஒருவனை உயர்த்தக்கூடிய சிறந்த சாதனமாகும்.)*

**அப்யாஸயோகயுக்தேன சேதஸா**
**நான்யகாமினா ।**
**பரமம் புருஷம் திவ்யம் யாதி**
**பார்த்தானுசிந்தயன் ॥** (8)

*''பார்த்தா! மற்றைய விஷயங்களிலே (மனத்தைச்) செலுத்தாது, பயிற்சி எனும் யோகத்துடன் கூடிய அறிவால், பேரொளிமயமான அப்பரம்பொருளை நினைப்பவன் அப்பரமனையே அடைகின்றான்.''*

*(மாணவனுக்குப் படிப்பது ஒருபயிற்சியாகும். விளையாட்டு வீரனுக்கு விளையாடுவது ஒரு பயிற்சியாகும். இந்த பயிற்சியே ஒரு யோகமாக அவர்கள் மேற்கொள்ளும் போது, அவர்கள் ஊண், உறக்கம் மறந்து விடுகின்றனர். தேர்வோ, போட்டியோ அவர்களது இலக்காக அமைந்து விடுகிறது. இது போன்று, பக்தனானவன் தான் வழிபடும் கடவுளை நாளும் வழிபடும்போது, நாளடைவில் தன்னை, தன் உடலை மறந்தவனாகின்றான். அந்த நிலையில் மரணத்தின் இறுதிநிலை அவனை எந்த அளவிலும் பாதிக்காது).*

**கவிம் புராணமனுசாஸிதார**
**மணோரணீயாம்ஸ மனுஸ்மரேத்ய: ।**
**ஸர்வஸ்ய தாதாரமசிந்த்யரூப**
**மாதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத் ॥** (9)

**ப்ரயாணகாலே மனஸா அசலேன**
**பகத்யாயுக்தோ யோகபலேன சைவ ।**
**ப்ருவோர்மத்யே ப்ராணமாவேச்ய**
**ஸம்யக் ஸதம் பரம் புருஷமுபைதிதிவ்யம் ॥** (10)

''எல்லாம் தெரிந்தவனும், பழமையானவனும், எல்லாவற்றையும் ஆட்சி புரிபவனும், அணுவை விட மிகச் சிறியதாக இருப்பவனும், எல்லாவற்றையும் தாங்குபவனும், கருத்துக்கும் அறிவுக்கும் எட்டாத உருவத்தை உடையவனும், சூரியனைப்போன்று ஒளிபடைத்தவனும், அறியாமை எனும் இருட்டைக்கடந்தவனும் ஆகிய அந்த மூலப்பொருளான இறைவனை, பக்தியுடன், உறுதியான உள்ளத்துடன், யோகமெனும் ஆற்றலுடன் தன் உயிரைத் தன் புருவ நெற்றியின்நடுவில் ஒரு முகமாக இருத்தி யாரொருவன் தன்னுடைய மரணக்காலத்தில் தியானிக்கின்றானோ, அவன் அந்த மூலப்பொருளையே சென்றடைகின்றான்.''

மேற்கூறிய இரண்டு செய்யுட்களில் இறைவனின் எட்டுவித குணங்கள் கூறப்பட்டுள்ளன. அதனால்தான் இறைவன் 'எண்குணத்தான்' என்றுபக்தர்களால் அழைக்கப்பெறுகின்றான். அத்தகு பெருமைமிகு இறைவனை ஒருவன் தன் சிறந்த பக்தி எனும் தூய அன்பின் மூலமாகவும், சிறிதும் கலங்காத, களங்கம் கொள்ளாத உள்ளத்தின் மூலமாகவும், பயிற்சியினை ஒருமுனைப்போடு மேற்கொள்ளும்படியான யோகமெனப்படும் ஆத்ம பலத்தின் மூலமாகவும் இறைவனை அடையவேண்டும் என்றுஇங்கு அறிவுறுத்தப்படுகிறது. சாதாரணமானவர்களுக்கு உயிரானது அவர்களது உடம்பிலுள்ள 9 ஓட்டைகளில் ஏதாவது ஒன்றின் வழியாக வெளியேறுமாம். ஆனால் ஞானிகளுக்கு, உச்சந்தலையில் உள்ள 'பிரம்மாந்திரம்' எனும் உச்சி மண்டை வழியாக வெளியேறுமாம். அவ்வழியே புனிதமுக்திக்கு இட்டுச்செல்லுமாம்.)

யதக்ஷரம் வேதவிதோ வதந்தி
விசந்தி யத்யதயோ வீதராகா:।
யசிச்சந்தோ ப்ராஹ்சர்யம் சரந்தி
தத்தே பதம் ஸங்க்ர ஹேண ப்ரவக்ஷ்யே ॥ (11)

'' வேதத்தை அறிந்து கொன்டவர்கள் எதனை அழிவற்றதாக நினைக்கின்றனர்; பற்றுக்களைவிட்ட துறவிகள் எதனுள் புகுகின்றனர்; எதனை நாடி அவர்கள் (முனிவர்கள்)



26

*பிரம்மசர்யத்தைப் பின்பற்றுகின்றனர். (அவர்கள் விரும்பும்) அந்த (உயர்ந்த) நிலையினை உனக்கு மிகவும் சுருக்கமாகக் கூறுகின்றேன்.''*

*(இச்செய்யுளில். வேதத்தின் பெருமையும் அதைப் படித்தறிந்தவர்கள் பெறும் உயர்நிலையினையும் பகவான் கோடிட்டுக் காட்டுகிறார். அதாவது வேதமும் ,வேதவித்தகர்களும் கண்டறிந்து இன்புற்றது, அழியும் இந்த அண்டத்தினுள் இருக்கும் அந்த அழியா உண்மைப்பொருளான பரம்பொருளைப் பற்றித்தான். அக்ஷரம் என்று அழைக்கப்பெறுவது அந்தப் பரம்பொருள்தான். பற்றற்று விளங்கி பிரம்மசரியம் எனும் நோன்பை முறையாகப் பின் பற்றுபவர்களே துறவிகள் எனப்படுவோர். இவர்களால்தாம் அந்தப் பரம்பொருள் பற்றிய அறிவு, உணர்வு பெறப்படுகிறது; உணரப்படுகிறது.)*

**ஸர்வத்வாராணி ஸம்யம்ய மனோ**
**ஹ்ருதி நிருத்ய ச ।**
**மூர்த்ன்யாதாயாத்மன: ப்ராணமாஸ்**
**திதோ யோகதாரணாம் ॥** (12)

**ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரன்**
**மாமனுஸ்மரன் ।**
**ய: ப்ரயாதி த்யஜ தேஹம் ஸ**
**யாதி பரமாம் கதிம் ॥** (13)

*'' ஐம்புலன்களையும் அடக்கி, மனதை இதயத்தில் கட்டுப்படுத்தி, தன்னுடைய உயிரை உச்சந்தலையில் தேக்கிவைத்து, யோகதாரணையில் நிலைப் பெற்றிருந்து'', '''ஓம்' எனும் ஓரெழுத்தான பிரம்ம மந்திரத்தைச் சொல்லிக்கொண்டு, என்னைத் தியானித்துக்கொண்டு, யாரொருவன் இந்த உடலை விட்டுப் போகின்றானோ, அவன் உயர்கதியை அடையப்பெறுகின்றான்.''*

*(இங்குத் துறவிகளின் இறுதி நிலையான மரணநிலை விளக்கப்படுகிறது. சாதாரண மனிதர்கள் இறக்கும் தருவாயிலும் கூட பற்று, பாசம், ஆசை எனும் தளைகளுக்கு*

*அடிமையாவார்கள். ஆனால், சன்னியாசிகள் என்று அழைக்கப்பெறும் துறவிகளின் ஆசையானது எல்லை கடந்து உடல் ஆசையிலிருந்து விடுபட்டு அப்பேரின்ப மயமான இறை உணர்வில் மூழ்கி விடுகிறது.மரணத்தை நெருங்கும்போது, அவர்களது உள்ளம் அலைபாயாது. அது அவர்களுடைய இதயத்துடன் ஒன்றித்துவிடுகிறது. உள்ளமும், அறிவும் அந்த இறைமயமாக மாறிவிடும் நிலையே யோகதாரணயாகும். அந்த நிலையில் மரண-நிலையில் துறவியின் ஒவ்வொரு உடல் உறுப்பும் குளிர்ந்துவிடுகிறது. அதாவது உயிர் அந்த உறுப்புகளைப் படிப்படியாக நீங்கி வெளியேறுகிறது. சாதாரணமான மனிதனின் உயிர் அவன் வாய் அல்லது மூக்கு, வழியாகச் செல்லுமாம். துறவியின் உயிர் இறுதிநிலையில் நீங்கும்போது அவர்களது உச்சந்தலைக்குச் சென்றுவிடுமாம். ஆகவேதான் மற்ற உறுப்புக்கள் சில்லிட்டு விளங்க உச்சந்தலைமட்டும், சற்றே சூடாக இருக்குமாம்.*

*அதுபோது அவர்கள் உணர்வில் 'ஓம்' எனும் அந்த வேதமந்திரச் சொல்லே, இறைவடிவமே இருக்குமாம். அதுவே துறவிகளின் இறுதி முக்தி நிலையாகும். அந்த முக்தியைப்பெறுதலே துறவிகளின் இறுதி இலட்சியமாகும்.)*

அனன்யசேதா: ஸததம் யோ
மாம் ஸ்மரதி நித்யச:।
தஸ்யாஹம் ஸுலப: பார்த்த
நித்யயுக்தஸ்ய யோகின: ।। (14)

*''பார்த்தா, வேறு எந்த சிந்தனையுமின்றி யார் ஒருவன் என்னைத் தொடர்ந்து நினைக்கிறுனோ, அந்த ஒரு நிலைத்த மன துடைய துறவிக்கு (யோகிக்கு) நான் எளிதாகக் கிடைக்கப்பெறுவேன்''*

*(இறைவனானவன் மிகவும் எளிமைக்குணம் நிரம்ப இருப்பவன். அவனை நோக்கி நாம் ஒரு அடிவைத்து முன்சென்றுல், அவன் மூன்றடி முன் வந்து நம்மை எதிர்கொள்கின்றுன். அந்த ஓர் அடி என்பது நமது பற்றற்ற, ஒருமுகச் சிந்தனையுடன் கூடிய இறைச்சிந்தனை அதிகமாக இருக்கிறதோ, அவனுக்கு முக்தி விரைவில் எளிதில் கிடை*

*த்துவிடுகிறது.)*

**மாமுபேத்ய புனர்ஜன்ம து:**
**காலயமசாச்வதம் ।**
**நாப்னுவந்தி மஹாத்மான:**
**ஸம்ஸித்திம் பரமாம் கதா: ॥ (15)**

*''மேலான பக்குவம் அடையப் பெற்ற மகாத்மாக்கள் என்னை அடைகின்றனர். பின்னர் அவர்கள் துன்பம் தரக்கூடியதும், நிலையற்றதுமாகிய மறு பிறவியைப் பெறுவதில்லை''*

*(எந்த ஒருபொருளை அடைய நினைக்கின்றோமோ அதற்குத்தகுந்தவகையில் தன்னைத் தகுதி உடையவனாக ஆக்கிக் கொள்ளுதல் அவசியம். இதற்கு தீவிர சிந்தனையும், முயற்சியும் தேவை. மனிதனுடைய தகுதிக்குத் தக்கவாறுதான் வாழ்க்கையில் வெற்றியை அடையப்பெறுகின்றான். பக்தன் இறைவனைக் காணக்கூடிய பக்குவம் எனப்படும் தகுதியை பெற்ற உடனேயே இறைவன் தன்னைத்தானே அப்பக்தனுக்குக் காட்டிக் கொடுத்து விடுகிறான்.)*

**ஆப்ரஹ்மபுவனால் லோகா :**
**புனராவர்தினோ அர்ஜுன ।**
**மாமுபேத்ய து கௌந்தேய**
**புனர்ஜன்ம ந வித்யதே ॥ (16)**

*''அர்ச்சுனா, இறுதியான பிரம்மலோகம் வரை உள்ள எல்லா உலகங்களுக்கும் மறுபிறப்பு எனும் . நிலையுண்டு. குந்தியின் மகனே, ஆனால் ,என்னைச் சேர்ந்தவனுக்கு மறுபிறப்பு என்பது ஏதும் இல்லை.''*

*(உலகத்திற்குப் பிறப்பு இறப்பு எனும் பிறவிநிலை இல்லை என்றால், அவ்வுலகத்தில் உள்ள உயிர்களுக்கும் இல்லை என்பதே பொருள் .ஆனால், பிரம்மலோகம் உள்ளிட்டப் பதினான்கு உலக உயிர்களுக்கும் பிறப்பு இறப்பு உண்டு.அங்குள்ள உயிர்கள் இறுதியில் முக்தி எனும் பதவியினைப் பெறுகின்றனர். இப்பதவியானது சாலோக்யம் ,*

சாமீப்யம், சாரூப்யம் என்று வேறுபடுகின்றது. இவையாவும் காலச்சக்கரத்தின் சுழற்சிக்குக் உட்பட்டவையே. முறையான முக்திப் பாதையில் செல்பவர்கள் சிறிதுகாலம் பிரம்ம லோகத்தில் இருப்பர். பின்னர் மேலும் பக்குவமடைந்த அங்கிருந்த ஆன்மாவாக உயர்வு பெற்று பரமனைச் சென்றடைகின்றனர். அவர்கள் மீண்டும் இந்த மண்ணில் பிறவி எடுப்பதில்லை. ஆனால் சிலர் இந்த உலகத்திலிருந்தே, தங்கள் ஆத்மாக்களைத் தேர்ந்த பக்குவநிலையில் வளர்த்துக்கொள்வதால் விதேகமுக்தி என்னும் நேரிடையாக இறைவனைக் சேரும் பேரின்பப் பேற்ருன முக்தியைப் பெறுகின்றனர், அத்தகு நபர்கள் வேகவைத்த விதைகளைப் போன்றவர்களாவர். வேகவைத்த விதை முளைக்காது. அதுபோலவே முதிர்ந்த ஞானநிலை பெற்றவர்களுக்கு மறு பிறவி இல்லை.)

ஸஹஸ்ரயுகபர்யந்த மஹர்யத்-
ப்ரஹ்மணோ விது:।
ராத்ரிம் யுக ஸகஸ்ராந்தாம்
தே அஹோராத்ரவிதோ ஜனா :॥ (17)

'' பிரம்ம தேவனுக்கு ஒருபகல் என்பது ஆயிரம் யுகமாகவும், இரவு என்பது ஆயிரம் யுகமாகவும் இருக்கிறது என்பதை அறிந்தவர்கள் 'இரவு பகலின் ' தத்துவத்தை அறிந்தவர்களாகக் கருதப்படுகின்றனர்.''

(இச்செய்யுளில் பிரம்மதேவனின் காலக்கணக்குக் கூறப்படுகிறது. நான்கு யுகங்களான கிரத யுகம், திரேதாயுகம், துவாபரயுகம், நாம் வாழ்ந்து கொண்டிருக்கும் கலியுகம் ஆகியன சேரந்தது ஒரு சதுர்யுகமாக்க கருதப்படுகிறது. இதுபோன்ற ஆயிரம் சதுர்யுகங்கள் சேர்ந்தது பிரம்மனுக்கு ஒரு பகலாகவும் , மற்றுமொரு ஆயிரம் சதுர்யுகங்கள் சேர்ந்து ஓர் இரவாகவும் அதாவது இராண்டாயிரம் சதுரயுகங்கள் சேர்ந்த காலமே பிரம்மனுக்கு ஒரு நாளாகும் . இது போன்ற 365 நாட்கள் கொண்டது ஒரு வருஷமாகும். இது போன்ற நூறு வருஷங்கள் வாழ்பவர் பிரம்மதேவனாவான். இக்கருத்தினால் காலத்தின்

எல்லையில்லா குணம் கூறப்பட்டுள்ளது. இக்காலத்தை யெல்லாம் கடந்தவன் அந்த இறைவன். எல்லையில்லா இந்த காலத்தையும், அளக்கமுடியாத வெட்ட வெளியினையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது நமது வாழ்வும் நாம் வாழும் இடமும் எவ்வளவு சிறியது, குறுகியது என்பது நமக்குத் தெரியவரும்.)

**அவ்யகீதாத் வ்யக்தயா: ஸர்வா:**
**ப்ரபவந்த்யஹராகமே ।**
**ராத்ர்யாகமே ப்ரலீயந்தே தத்ரை-**
**வாவ்யக்தஸம்ஞகே ॥** (18)

''பிரம்மனுடைய பகல் தோன்றும்போது பிறந்திடாத நிலையிலிருந்த தோற்றங்கள் யாவும் அப்போது வெளிப்படுகின்றன. இரவும் வந்திடும்போது 'ஒடுக்கம்' என்பதனுள் சென்றுவிடுகின்றன''.

(ஒருவன் இரவில் படுக்கப்போகும்போது அவன் உள்ளத்திலேயே அவன் வாழும் உலகம் ஒடுங்கிவிடுகிறது. பகல் விழித்தெழும் போது அவன் வாழும் உலகம் விரிவடைகின்றது. அதேபோன்று, பிரம்மாவின் பகல் தோன்றும் போது இந்த உலகங்கள் தோன்றச் செயகின்றன. இரவானபோது, அந்த உலகங்கள் அழிந்து விடுகின்றன. இதுவே பிறப்பு இறப்பு எனப்படுகின்றது . இது போன்று முன் செய்யுளில் கூறப்பட்ட நூறு வருடங்கள் முடிவடையும் போது பிரம்மனின் ஆயுள்காலம் முடிவடைகின்றது. அதாவது கிரமமுக்தி பெறுகின்ரூர். அவருக்கும் பின் அப்பதவிக்கு உரிய தகுதியை ஒரு ஜீவன் கூடபெறமுடியும். அதாவது ஜீவபோதத்தில் இருந்துகொண்டே பெறும் 'பிரகிருதி லயம்' எனும் இயற்கையை அறியும் ஞான அறிவால் அப்பதவியைப் பெறமுடியும்).

**பூதக்ராம: ஸ ஏவாயம் பூத்வா**
**பூத்வா ப்ரலீயதே ॥**
**ராத்ர்யாகமே அவச: பார்த்த**
**ப்ரபவத்யஹராகமே ॥** (19)

*''அர்ச்சுனா, தோன்றிடும் உயிர்கள் யாவும் பிறந்து பிறந்து இறுதியில் இரவு வரும்போது தங்கள் சக்தியையும் மீறி ஒடுங்கிவிடுகின்றன. பகல் வரும் போது மீண்டும் வெளிப்படுகின்றன.''*

*(வினைகளின் விளைவாகத்தான் இந்த உயிர்கள் மறுபடியும் மறுபடியும் பிறக்கவே செய்கின்றன. வினைப்பயன் முடியும்வரை தொடரும் வினைகளுக்கேற்ப பிறப்பும் வினையும் ஒருவனைத் தொடரவே செய்கின்றன.)*

## பகவான் கூறுவது

பரஸ்தஸ்மாத்து பாவோ அன்யோ
அவ்யக்தோ அவ்யக்தாத்ஸநாதன: ।
ய: ஸ ஸர்வேஷு பூதேஷு
நச்யத்ஸு ந வினச்யதி ॥ (20)

*''ஆனால் அத்தகு அவ்யக்தத்தைவிட மேலான, நிலையான வேறு ஒரு அவ்யக்தம் உள்ளது. உயிர்கள் யாவும் அழிந்தாலும், அது அழிவது இல்லை.''*

*(இங்கு அவ்யக்தம் என்ற சொல் வருகிறது. அதாவது பிரம்மா உள்ளிட்டு எல்லா உயிர்களும் மறுபடியும் பிறக்கமுடியா நிலைக்கு 'அவ்யக்தம்' என்று பொருளாகும். இந்தநிலையானது புலன்களுக்குத் தெரியாது. எல்லா உயிர்களுக்கும் ஒருபோக்கு உள்ளது. ஆனால் 'அவ்யக்தம்' என்பதற்கு வரவும் போக்கும் இல்லை.)*

அவ்யக்தோ அக்ஷர இத்யுக்தஸ்த
மாஹு: பரமாம் கதிம் ।
யம் ப்ராப்ய ந நிவர்தந்தே
தத்தாம பரமம் மம ॥ (21)

*''அவ்யக்தம், அக்ஷரம் என்று கூறுவதை பரமகதி என்று அழைப்பர். உயிர்கள் எதனை அடைந்து மறுபடியும் திரும்பி வருவதில்லையோ, அதுவே என்னுடைய பரமபதம் ஆகும்.''*

*(அவ்யக்தம் என்பது புலன்களுக்கு எட்டாத நிலை என்று பொருள். இறைவனும் புலன்களால் அறியப்படாதவன். அக்ஷரம் என்றால் குறைவு படாதது என்பது பொருள். இறைவனும் எந்த நிலையிலும் குறைவோ, பழுதோ இல்லாதவன். இயற்கை என்பதற்கு அவ்யக்தம் என்ற குணம் அமையலாம். ஆனால் அக்ஷரம் அதற்குப் பொருந்தாது. ஏனெனில் இயற்கையில் சேர்ந்துவிடும் -ஒடுங்கிவிடும் உயிர்கள் மறுபடியும் தோன்றவே செய்கின்றன. ஆனால் பரப்பிரம்மம் எனப்படும் இறைவனுடன் சேர்ந்துவிடும் உயிர்களுக்கு மறுபடியும் பிறவி என்பதில்லை . ஆகவே பிரம்மம் என்பது உயர்ந்ததாகக் கருதப்படுவதால் அதுவே 'பரமபதம்' என்று போற்றப்படுகிறது.)*

**புருஷ: ஸ பர: பார்த்த பக்த்யா**
**லப்யஸ்த்வனன்யயா ।**
**யஸ்யாந்த: ஸ்தானி பூதானி**
**யேன ஸர்வமிதம் ததம் ॥** (22)

*''அர்ச்சுனா! எந்த உயிர்களானது யார் ஒருவனுள் இருக்கின்றனவோ, எந்த ஒருவனுள் அவ்வுயிர்கள் யாவும் பரந்தும் உள்ளனவோ, அத்தகு பரம புருஷனை அனன்ய பக்தியால் அடையப்பெறலாம்.''*

*(இச்செய்யுளில் இறைவனது தன்மை கூறப்படுகிறது. மனதில் இறைவனைப் பற்றிய சிந்தனையை ஒருமுகப்படுத்தி. வேறொன்றிலும் சிதறவிடாது மேற்கொள்ளும் ஈடுபாடே- பக்தியே அனன்ய பக்தி என்று கூறப்படுகிறது. கடலுக்குள் பல மலைகளும் உள்ளன. ஆனால் நீருக்குள் மூழ்கியிருக்கும் மலைகளின் உள்ளே அந்நீரால் உள்ளே போகமுடியாது. ஆகவே கடல் நீர் எங்கும் பரந்து உள்ளது என்று சொல்லமுடியாது. இதனால் கண்ணுக்குத் தெரியும் பொருளாகிய கடலுக்கு எல்லாவற்றையும் அடக்கும் சக்தியோ எல்லாவற்றினுள்ளும் பரந்து, செல்லும் தன்மையோ இல்லை. ஆனால் கண்ணுக்குத் தெரியாத ஆகாயமாகிய*

*வெட்டவெளியானது மற்றைய பூதங்களாகிய பூமி, நெருப்பு, காற்று , நீர் ஆகியவற்றில் பரந்து உள்ளது. அதுபோலவே சிதாகாசமாகிய பரம்பொருளினுள் நகரும் நகரா பொருட்கள் யாவும் அடங்கி உள்ளன. அதுவே எங்கும் நீக்கமற பரந்தும் உள்ளது.)*

யத்ரகாலே த்வரைவ்ருத்தி
மாவ்ருத்திம் சைவ யோகின: ।
ப்ரயாதா யாந்தி தம் காலம்
வக்ஷ்யாமி பரதர்ஷப ॥ (23)

*''பரதகுலத்தில் உதித்த பெருமகனே! எந்தக் காலத்தில் உடலை விட்டுப் போகின்ற துறவிகளாகிய யோகிகள் முக்தி எனும் பரமபதத்தை அடைகின்றனரோ, எந்தக் காலத்தில் அவ்வாறு உடலை விட்டுச் செல்பவர்கள் மறுபடியும் பிறக்கின் றனரோ அந்த காலத்தைப்பற்றிச்சொல்கிறேன் கேள்''.*

*(இச்செய்யுளில் துறவிகளின் இறுதி நிலையும் உயிர்களின் அடுத்த நிலையும் சுட்டிக்காட்டப்பட உள்ளது.)*

அக்னிர் ஜ்யோதிரஹ: சுக்ல:
ஷண்மாஸா உத்தராயணம் ।
தத்ர ப்ரயாதா கச்சந்தி ப்ரஹ்ம
ப்ரஹ்மவிதோ ஜனா: ॥ (24)

*''நெருப்பு, வெளிச்சம், பகல், சுக்லபட்சம், (வளர்பிறை காலம்) உத்தராயண காலத்தின் ஆறுமாதங்கள் ஆகியவற்றின் போது உடலை விட்டு மரணத்தைத் தழுவுகின்றவர்கள் பிரம்மஞானிகளாவர், அவர்கள் பிரம்மமாகிய பரம்பொருளை அடைகின்றனர்.''*

தூமோ ராத்ரிஸ்ததா க்ருஷ்ண:
ஷண்மாஸா தக்ஷிணாயம் ।
தத்ர சாந்த்ரமஸம் ஜ்யோதிர்
யோகீ ப்ராப்ய நிவர்த்தே ॥ (25)

*''புகை, இரவு, கிருஷ்ணபட்சம்(தேய்பிறை காலம்) தக்ஷிணாயணத்தின் ஆறுமாதங்கள் ஆகியவற்றின்போது உடலை*

விட்டு மரணத்தைத் தழுவுகின்ற (யோகிகளாகிய) துறவிகள் சந்திரனது ஒளியை அடைந்து மறுபிறவியைப் பெறுவார்கள்.''

**சுக்லக்ருஷ்ணே கதீ ஹ்யேதே ஜகத:**
**சாச்வதே மதே ।**
**ஏகயா யாத்யனாவ்ருத்திமன்யயா**
**வர்ததே புன: ॥** (26)

'' இவ்வுலகத்தினுடைய ஒளியும், இருட்டும் ஆகிய இருவழிகளும் இயற்கையில் நிரந்தரமானவை என்று உறுதியாக கருதப்படுகின்றது. ஒருவழியால் யோகி எனும் துறவியானவன் பிறவாமையைப் பெறுகின்றான். மற்றொரு வழியால் அத்துறவியானவன் மறுபடியும் பிறக்கும் படியான பிறவியைப் பெறுகின்றான்.''

(மேற்கூறிய மூன்று செய்யுட்களில் 'ஒளி' வழி எனும் ஞான மார்க்கம் குறிப்பிடப்படுகிறது. 'ஒளி' வழிதான் பகற்பொழுது என்று சுட்டிக்காட்டப்படுகிறது. ஞானமார்கத்திற்கு எதிரான வழியானது 'இருளாக'க் கருதப்படுகிறது. இந்த இருளானது அறியாமை, வீணான சமய ஆசாரங்கள், குருட்டு நம்பிக்கைகள் என்று கருதப்படுகிறது. இவ்வழியில் செல்லும் பக்திமான்களும் மறுபிறவி என்பதையே அடைகின்றனர். இச்செய்யுட்களில் உத்ராயணம், வளர்பிறை, பகல் என்பதும், தட்சிணாயணம், தேய்பிறை, புகை என்பதும் முறையே ஞானமார்க்கத்தின் பேரொளியினையும், அடுத்தடுத்துப் பிறவிக்கு இட்டுச் செல்லும் அறியமையினையும் விளக்கவே பயன்படுகின்றன.)

**நைதே ஸ்ருதீ பார்த்த ஜானன்**
**யோகீமுஹ்யதி கஸ்சன ।**
**தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு**
**யோகயுக்தோ பவார்ஜுன் ॥** (27)

''மேற்கூறிய இரண்டு வழிகளையும் உண்மையாக அறிந்த துறவியானவர்கள் மோக மார்க்கத்தை அடையமாட்டார்கள்.

ஆகையால் பார்த்தா, நீ என்றென்றும் யோகத்திலேயே ஈடுபாடு உடையவனாகி விளங்குவாயாக.''

(இந்த உடலால் எந்தத்தொழிலைச் செய்து கொண்டிருந்தாலும், எந்த வகையான துன்பங்களைப் பட்டுக்கொண்டிருந்தாலும், அவன் உள்ளம் மட்டும் தியான வழியில் அந்தப் பரம்பொருளையே நினைத்திடல், வேண்டும். இவ்வாறு எந்தக் கணமும் மனதை, சிந்தனையை யோக வழியில் நிலைநிறுத்திப் பயிற்சி செய்பவனே, (மேற்கூறிய) ஒளிவழியில் செல்ல தகுதியுடையவராகின்றான்.)

**வேதேஷு யக்ஞேஷு தப: ஸு சைவ**
**தானேஷு யத்புண்யபலம் ப்ரிதிஷ்டம் ।**
**அத்யேதி தத்ஸர்வமிதம் விதித்வா**
**யோகீபரம் ஸ்தான முபைதி சாத்யம் ॥** (28)

''(ஞானமார்க்கத்தைத் தெரிந்து கொண்ட) துறவியானவன், வேதங்களைப் பயிலுவதாலும் தானதர்மங் களைச் செய்வதாலும், வேள்விகளைப் புரிவதாலும் கிடைக்ககூடிய புண்ய பலன்களையெல்லாம் விட, அவற்றையும் கடந்து ஆதியாகிய அந்தப் பரம்பொருளை சென்றடைகின்றான்.''

(வேதம், யாகம், கொடை ஆகிய சடங்குகள் நிரம்பிய வழிகள் தந்திடும் நிலையில்லா இன்பங்களில், ஞானமார்க்கத்தின் இன்பத்தைத் தெரிந்து கொண்டதுற வியானவன் தன்னை இழக்கமாட்டான். ஆகவே நிலையான இன்பத்ததைத் தந்திடும் முக்திக்கு வழிகாட்டிடும் தியான வழியில் நின்று அத்துறவியானவன் அவ்இறைவனை அடைந்து வெற்றி பெறுகின்றான்.)

**இதி ஸ்ரீ மத் பகவத் கீதாஸுபநிஷத்ஸு**
**ப்ரஹ்ம வித்யாயாம்**
**யோக சாஸ்த்ரே ஸ்ரீ க்ருஷ்ணார்ஜுன**
**ஸம்வாதே**
**அக்ஷரப்ரஹ்ம யோகோ நாம**
**அஷ்டமோ அத்யாய: ॥**

*(பிரம்ம ஞானத்தைச் சொல்வதும், யோக சாஸ்திரமானதும், ஸ்ரீ கண்ணனுக்கும் அர்ச்சுனுக்கும் இடையே நடக்கும் உரையாடலுமாகவும் விளங்கிடும் பகவத் கீதை எனும் உபநிடதத்தில் உள்ள 'அக்ஷர ப்ரஹ்மயோகம்' எனும் எட்டாம் அத்தியாயம் இதுவாகும்.)*

*(எட்டாம் அத்தியாயம் முற்றும்)*

# ஒன்பதாம் அத்தியாயம்

## ராஜவித்யா ராஜகுஹ்ய யோகம்

பகவான் கூறியது:

இதம் து தே குஹ்யதமம்
ப்ரவக்ஷ்யாம்பன ஸூயவே ।
ஞானம் விக்ஞான ஸஹிதம் யஜ்-
ஞாத்வா மோக்ஷயஸே அசுபாத் ॥ (1)

*''எதை அறிந்துகொண்டு தீமைகள் எனும் அசுபத்திலிருந்து விடுபடுவாயோ, அனுபவத்துடன் கூடிய அந்த அறியும் படியான உயர்ந்த மேலான அறிவை, பொறாமைக்குணம் இல்லாத உனக்கு (நான்) நன்றாக விளக்குவேன்.''*

*(இங்கு அசுபம் என்பது, அன்றாட உலக வாழ்க்கையில் எதிர் கொள்ளும் அல்லது தருவித்துக்கொள்ளும் தீமைகளாகும். அறியாமையால் ஏற்படும் பற்று, ஆசை எனும் காரணங்களை, அந்த பரம்பொருளை அறிந்து கொள்ளும் இறையனுபவத்தால்மட்டுமே போக்கிக்கொள்ளமுடியும். இங்குப் பொறாமை எனும் தீப்பண்பு இல்லாத அர்ச்சுனன் சுட்டிக்காட்டப்பட்டு, மறைமுகமாக பாராட்டப்படுகிறான். ஆம் பொறாமை என்பது மனிதனின் மற்றைய உயர்ந்த பண்புகளை எல்லாம் அழித்துவிடும் ஆற்றலுடையது. அப்பொறாமை எனும் பண்பே ஒருவனுடைய உயர்வுக்கு முதல்*

எதிரியாகும். பொறுமையற்ற மனிதனின் உள்ளமே பேரறிவைப் பெற வழிவகுக்கும்.)

**ராஜவித்யா ராஜகுஹ்யம் பவித்ர**
**மிதமுத்தமம் ।**
**ப்ரத்யக்ஷாவகமம் தர்ம்யம் ஸுஸுகம்**
**கர்துமவ்யயம் ॥** (2)

''இந்த (அறிந்துகொள்ளக்கூடிய) பேரறிவு என்பது வித்தைகளிலேயே ஓர் அரசனுக்கு ஒப்பானது. வேதங்களிலேயே மேன்மையானது. தூய்மை விளைவிப்பதில் மிகவும் சிறந்தது. கண்களாலேயே அறியக்கூடியது. அறத்தின் வழி உபதேசிக்கப்படுவது. பின்பற்றுவதற்கு மிகவும் எளிமையானது, அழியாததும் கூட.''

(எப்படி யோகங்களில் உயர்ந்தது ராஜ யோகமோ, அப்படியே வித்தைகளில் சிறந்ததான பரம்பொருளைப் பற்றிய பிரம்ம வித்தைக்கு ராஜவித்தை என்று பெயராகும். இந்தப் பரம்பொருளைப் பற்றிய பேரறிவை அறிந்து கொள்ள எல்லா மனிதர்களுக்கும் உரிமை உண்டு. இது ஒரு பொதுச்சாலை என்று கூறலாம். ஆனால் பெருமை கோபம், காமம் போன்ற மனிதர்களுக்கு இந்தப் பேரறிவானது ஒரு ரகசிய ஞானமாகிவிடுகிறது. இந்தப் பேரறிவை அறிந்தவர்கள் எல்லா வகைகளிலும் தூய்மையான நிலையை அடைவார்கள். இறை அறிவைப் பெற்ற பின்பு, அவர்களே இறைவனாகும் மிகத் தூய்மையான தன்மையைப் பெற்றுவிடுவதால், இந்தப் பேரறிவு தூய்மையாக்குவதில் தலைசிறந்த சாதனமாகத் திகழ்கிறது. இறைவனைப் பற்றிய இந்தப் பேரறிவு ஒருவனுள் கனவுலகிலிருந்து விடுபடும் விழிப்பு எனும் நிலையை உண்டாக்குவதால் அதுவே பிறவி எனும் பெரும் துன்பத்தைத் துடைத்திடும் ஆற்றலைப் பெறுகிறது. அப்பேரறிவைப் பெற்றபின்பு, உயர்ந்த வாழ்க்கையை அவன் கடைபிடிப்பதால், அவன் ஒரு தர்மவானாகப் புகழப்படுகிறான். அவனது வாக்கும், செயலும், சிந்தனையும் புனிதமாக விளங்குகின்றன. இதனால், இறைவனை அறியும் வழியும் எளிமையாகவும், அவ்

அறிவைப் பெற்றபின்பு அதனை யாராலும் அழிக்கமுடியாத, காலத்தாலும் வீழ்த்தமுடியாத பெருமை பெற்றுவிடுகிறது.

**அச்ரத்ததானா: புருஷா தர்மஸ்யாஸ்ய**
**பரந்தப ।**
**அப்ராப்ய மாம் நிவர்தந்தே ம்ருத்யு**
**ஸம்ஸார வர்த்மனி ॥ (3)**

*''பகைவர்களை அழிப்பவனே! இந்த (பேரறிவை அறிந்து கொள்ளக்கூடிய) தர்மத்தில் ஈடுபாடு இல்லாதவர்கள் என்னை அடையமுடியாது. அதனால் இறந்து பிறக்கும் வாழ்க்கைப்பாதையில் அல்லலுறுகின்றனர்.''*

*(அறிந்து கொள்ளுவதற்கு முன்பு, அறிவதற்கான நாட்டமும், ஈடுபாடும், முயற்சியும் அறிந்துகொள்ள நினைப்பவனிடம் இருத்தல் அடிப்படைத் தகுதியாகும். அந்த வகையில் இறைவனைப் பற்றிய உண்மையை- இறையறிவான பரஞானத்தை அறிந்துகொள்பவர்களுக்கு மிகுந்த ஈடுபாடு தேவை. அவ்வாறு ஈடுபாடும் முயற்சியும் இல்லாதவர்கள் இறைவனைப் பற்றி அறியவோ அவனை அடைவதோ முடியாத ஒன்றாகும். அத்தகு மனிதர்கள் முக்தி எனும் இறுதி இன்பத்தை அடையாது, மீண்டும் மீண்டும் பிறப்பு இறப்பு எனும் சம்சாரக் கடலிலேயே நீந்திக் கொண்டிருப்பார்கள். முக்தி எனும் கரையை அவர்களால் அடையவே முடியாது.)*

**மயா ததமிதம் ஸர்வம்**
**ஜததவ்யக்தமூர்தினா ।**
**மத்ஸ்தானி ஸர்வபூதானி ந சாஹம்**
**தேஷ்வவஸ்தித: ॥ (4)**

*''ஐம்புலன்களுக்கு அகப்படாதபுலப்படாத அவ்யக்த மூர்த்தியாகிய நான் இந்த அண்டகோளங்கள் அனைத்திலும் பரவியுள்ளேன். ஐம்பூதங்களும் என்னுள்ளே அடக்கமாகும். அதே வேளையில், நான் அந்த ஐம்பூதங்களில் இல்லை.''*

*(எவ்வாறு கடலில் அலைகள் அடங்கி இருக்கின்றனவோ, ஆகாயத்தில் காற்று பரத்துள்ளதோ அவ்வாறே பரமாத் மாவான*

இறைவனிடம், புல் பூண்டு முதல் பிரம்மன் வரை எல்லா அசையும் அசையா பொருள்கள் யாவும் அடங்கியுள்ளன. மேலும் ஐம்பூதங்களும் அவ்இறைவனிடம் அடக்கமாகும். அதேநேரத்து இறைவனோ அவற்றினுள் அடங்காதவன்.)

ந ச மத்ஸ்தானி பூதானி பச்ய மே
யோகமைச்வரம் ।
பூதப்ருன்ன ச பூதஸ்தோ மமாத்மா
பூதபாவன: ॥ (5)

''ஐம்பூதங்கள் யாவும் என்னிடத்தில் நிலைத்துள்ளவை அல்ல. என்னுடைய ஈசுவர யோகத்தின் சிறப்பைக் கவனி.(அந்த) ஐம்பூதங்களை தோற்றுவித்தும், காத்தல் செய்து வரும் என்னுடைய இயல்பினை அவற்றில் காணமுடியாது.''

(இச்செய்யுளில் இறைவனின்-பரமாத்மாவின் தனிச்சிறப்பு உணர்த்தப்படுகிறது. இறைவன்தான் எல்லா அசையும் அசையா பொருள்ளைத் தோற்றுவிக்கிறான்.அதேநேரத்து தோன்றியுள்ள அப்பொருள்களுடன் அவ்இறைவன் எந்தவிதமான தொடர்பும் அற்று விளங்குகிறான். அவைதான் பரமாத்மாவுடன் சம்பந்தப்பட்டிருக்கின்றன. இந்தக் குணமே-இயல்பே பரமாத்வாவின் யோகரகசியம் எனும் தனிச்சிறப்பாகும்.)

யதாகாசஸ்திதோ நித்யம் வாயு:
ஸர்வத்ரகோ மஹான் ।
ததா ஸர்வாணி பூதானி மத்ஸ்
தானீத்யுபதாரய ॥ (6)

''எப்போதும் எங்கும் பரவியுள்ள காற்றானது எவ்வாறு வானத்திற்குள்ளேயே அடங்கியிருக்கின்றதோ, அவ்வாறே ஐம்பூதங்கள் யாவும் என்னிடம் உள்ளன என்பதை அறிவாயாக.''

(காற்று, நீர், நெருப்பு, மண், இவற்றில் அவை அடங்கியுள்ள இடமான இறுதி பூதமான ஆகாயமானது எந்த வகையிலும் மாசுபடுவதுமில்லை. அதேபோன்று பிரம்மத்தின் மாயா செயல்கள் யாவும் பிரம்மத்தின் மீது ஆதாரப்பட்டாலும்,

அவற்ருல் பிரம்மம் தாக்கப்படுவதில்லை, குறைவுபடு வதில்லை. ஆகாச தத்துவமே, அந்தப்பரம்பொருளின் தத்துவத்தைப் புரிந்து கொள்ள உதவும் வழியாகும்.)

**ஸர்வபூதானி கௌந்தேய ப்ரக்ருதிம்**
**யாந்தி மாமிகாம் ।**
**கல்பக்ஷயே புனஸ்தானி கஸ்பாதௌ**
**விஸ்ருஜாம்யஹம் ॥ (7)**

''குந்தியின் மகனே! (அர்ச்சுனனே) ஐம்பூதங்களும், அனைத்து உயிர்களும் யாவும் கற்ப முடிவில் என்னுடைய இயற்கை நிலையை அடைகின்றன. மீண்டும் அடுத்த கற்ப ஆரம்பத்தில் நான் அவற்றைத் தோற்றுவிக்கின்றேன்.''

(உலகத்தின் அழிவு பிரளயம் எனப்படுகிறது. அதுவே கற்பம் எனப்படுகிறது. இதற்கு முன்பேயே கூறியபடி பிரம்மாவுக்கு இரவு ஏற்படும் போது உலகம் அழிகிறது. அவனுக்குப் பகல் தோன்றும்போது மறுபடியும் உயிர்களின் ஆக்கம் நிகழ்கின்றது.)

**ப்ரக்ருதிம் ஸ்வாமவஷ்டப்ய**
**விஸ்ருஜாமி புன: புன: ।**
**பூதக்ராமமிமம் க்ருத்ஸ்னமசவம்**
**ப்ரக்ருதேர்வசாத் ॥ (8)**

''என்னுடைய இயற்கையாம் மாயைக்கு ஆற்றல் அளித்து, சுதந்திரமின்றி அந்த இயற்கையின் வசத்திற்குட்பட்ட இந்த உயிர்கள் யாவற்றையும் மீண்டும் மீண்டும் நான் பிறப்பித்துக் கொண்டிருக்கின்றேன்.''

(இந்தச் செய்யுளில் 'அவஷ்டப்ய' எனும் சொல் வருகிறது. அதாவது அருளுடையதாக, ஆற்றல் உடையதாக எனப்பொருள்படுகிறது. எப்படி நிலத்தைக் கொத்தி உழவன் வலு சேர்க்கின்ருனோ கல்வி புகட்டி ஆசியர் ஒருவர் மாணுக்கனுக்கு எவ்வாறு அறிவாற்றல் வளர்க்கின்ருனோ அதே போன்று பரமாத்மாவின் அருளால் இயற்கையாம் மாயை அருள் வழங்குகிறது. இந்த இயற்கையின் ஆற்றலால், உயிர்கள் தங்கள் வினையின் பயனாக, அறியாமையின் காரணமாக

அடிமைப்பட்டு உழல்கின்றன. அத்தகு உயிர்களை இறைவன் மீண்டும் மீண்டும் தோற்றுவித்துக் கொண்டிருக்கின்றான்.)

**ந ச மாம் தானி கர்மாணி**
**நிபத்னந்தி தனஞ்ஜய ।**
**உதாஸீனவதாஸீனமஸக்தம் தேஷு**
**கர்மஸு ॥** (9)

''தனஞ்சயா! 'வினைகளில் பற்று வைக்காதவனும், பொருட்படுத்தாதவன் போன்று அமர்ந்திருப்பவனுமாகிய என்னை அவைகள் (அந்த வினைகள்) கட்டுப்படுத்தமாட்ட.''

(பொருட்படுத்தாதவன் என்னும் பொருளில் உதாஸீனன் எனும் சொல் இங்கு கையாளப்படுகிறது. வினைகளின் மீது மோகம் விட்டவர் யாராயினும் அவன் உதாஸீனன்ஆகும். இங்கு இவ்வுயிர் யாவும் இறைவனின் மாயையால் படைக்கப்பட்டன. ஆனால் இறைவனோ அம்மாயையின் சாயல் சிறிதும் கலவாதவன். அதாவது மாயையைக் கடந்தவன். மாயையின் நியதிகளுக்கு அப்பாற்பட்டவன். ஆம், யாரொருவன் மாயைக்கு அடிமையாகாது விளங்குகிறானோ, பற்றுக்களுக்கு அடிமையாகாது திகழ்கின்றானோ, அவன் இப்பிறவியிலேயே முக்தி எனும் பதவிக்குத் தகுதியாகின்றான்.)

**மயாத்யக்ஷேண ப்ருக்ருதி:ஸூயதே**
**ஸசராசரம் ।**
**ஹேதுனானேன கௌந்தேய**
**ஜகத்விபரிவர்ததே ॥** (10)

''குந்தியின் மகனே! என் மேற் பார்வையில் அமையப்பெற்ற, இயற்கையானது அசையும் அசையா பொருள்களை உடைய இந்த உலகத்தைத் தோற்றுவிக்கின்றது. இதனால் பூமியானது சுழல்கின்றது.''

(சூரியனின் ஒளிக்கிரணங்களால் எவ்வாறு பொருள்கள் கண்களுக்குப் புலனாகின்றனவோ, அதேபோன்று ,பரமாத்மாவின் அருளால் அவனுடைய மாயையின் ஆற்றலால் உலக உயிர்கள் தோன்றுகின்றன. இவையாவும் ஒரு அரசு

*சபையில் அரியாசனத்தில் அரசன் அமர்ந்திருக்க, அவன் ஆணையின் காரணத்தால் சுற்றும் அவை நடவடிக்கைகள் நடைபெறுவது போன்று இறைவனின் நாடகம் நடைபெறுகின்றது.)*

## பகவான் கூறியது:

**அவஜானந்தி மாம்மூடா மானுஷீம்**
**தனுமாச்ரிதம்**
**பரம் பாவமஜானந்தோ மம**
**பூதமஹேச்வரம்** (11)

*''என்னுடையதெய்வீக இயல்பினையும், எல்லா உயிர்களுக்கும் தலைவனாக நான் இருப்பதையும் அறிந்து கொள்ள முடியாத மூடர்கள், ஒரு சாதாரண மனிதவடிவம் எடுத்தவனாகக் கருதி என்னை இழிவு செய்கின்றனர்.''*

*(இச்செய்யுளில் இறைவனின் அருட்திறமும், கருணை உள்ளமும், அவனுடைய குண இயல்பும் குறிக்கப்படு கின்றன. எங்கும், எப்போதும். எதிலும் உறைந்திருக்கும் அப்பரமாத்மா, உலக உயிர்களின் நன்மையின், மேன்மையின் பொருட்டு, தன்னிலையிலிருந்து இறங்கி மனித நிலையில் அவர்களுடன் இரண்டறக் கலந்து மனித அவதாரம் எடுத்திட்டான். இந்த உண்மையை மறந்து இறைவனும் ஒரு சாதாரண மனிதன்தான் என்று நினைத்து அவன் நிலையை இகழ்ந்து இன்பம் காண்கின்றனர் மூடர்கள். தன் குழந்தையின் மகிழ்ச்சிக்காக, சிரிப்புக்காக ஒரு தந்தையானவன் சிங்கம் போலவும், பூனை போலவும், நாய்போலவும் தரையில் தவழ்ந்து குரல் எழுப்புகின்றான். அதனால் அவன் தந்தை நிலையிலிருந்து மாறுவதில்லை. ஆம் ஒரு தந்தை நிலையில்-ஒரு தாய்நிலையில் நின்று நம்மை உய்விக்கவே இறைவன் அவதாரம் கொள்கின்றான் என்பதை நினைவிற் கொள்வது நம்மைத் திருத்திக்கொள்ள வழிவகுக்கும்.)*

**மோகாசா மோககர்மாணோ மோக**
**ஞானா விசேதஸ: ।**

ராக்ஷஸீ மாஸுரீம் சைவ ப்ரக்ருதிம்
மோஹினீம் க்ரிதா: ॥ (12)

''பேராசை கொண்டவர்கள், பயனில்லாத செயல்களைச் செய்பவரகள், குற்றம் குறை பார்க்கும் பண்புடையவர்கள், விவேகமற்று விளங்குபவர்கள் ஆகியோர் மயக்கம் தருகின்ற ராக்ஷஸர், அசுரர் இயல்பு கொண்டவர்களாவர்.''

(எப்போதும் இந்த உடம்பு நிலையானது, இன்பம் அனுபவிக்கவே இந்த உடலுள்ளது என்று ஒருவன் நினைக்கின்றானோ, அப்போதே அவன் காமம், ஆசை, வெறுப்பு,கோபம் போன்ற உணர்ச்சிகளுக்கு இடம் கொடுத்தவனாகின்றான். பற்றற்று விளங்கவேண்டிய மனமானது ஆசைக்கு இடம் கொடுக்கும் போது,செய்யும் வினைகளும், பயன்படுத்தும் அறிவும், அவனை இறைவன்பால் வழிகாட்டாது. அப்போது அவன், ரஜோகுணமும், தமோ குணமும் கொண்டு வல்லரக்கனாவும், அரக்கனாகவும் திகழ்கின்றான்.)

மஹாத்மானஸ்து மாம் பார்த்த
தைவீம் ப்ரக்ருதி மாச்ரிதா: ।
பஜந்த்யனன்யமனஸோ ஞாத்வா
பூதாதிமவ்யயம் ॥ (13)

''பார்த்தா ! ஆனால் மகாத்மாக்களாகிய பெரியோர் தெய்வத்தன்மை கொண்டவர்கள்.அவர்கள்தாம் உலக உயிர்களுக்குப் பிறப்பிடம் என்றும் அழியாதவன் என்றும் என்னை அறிந்து, வேறு எந்த விஷயத்திலும் நாட்டம் கொள்ளாது என்னையே தொழுகின்றனர்.

(இயற்கையின் மீது அன்பு, தெய்வத்தின்மீது நம்பிக்கை ஆகியன மனிதனிடம் அவனிடம் உள்ள சத்துவ குணத்தால் உற்பத்தியாகின்றன. இவ்வுலக உயிர்கள் யாவும், தானும் அந்தப் பரம்பொருளிடமிருந்துதான் தோன்றினோம் என்ற உண்மையை அறிந்தவர்கள்,இறுதியில் தங்களைத் தோற்றுவித்த அந்த இறைவனையே அடைய விரும்புகின்றார்கள். அந்த

*நிலையை அடையும்போது அவர்கள் மகாத்மாக்கள் என்று அழைக்கப்பெறுகின்றனர். அப்போது மகாத்மாக்கள் பற்றற்ற மனப்பக்குவம்,அன்பு தியாகம்,பொறுமை போன்ற குண இயல்புகளின் உறைவிடமாக விளங்குகின்றனர். ஆம் இறைநாட்டமே மனிதனை மகாத்மாவாக மேலோங்கச் செய்கிறது.)*

**ஸததம் தீரத்தயந்தோ மாம்**
**யதன் தஸ்ச த்ருடவ்ரதா: ।**
**நமஸ்யன்தஸ்ச மாம் பக்த்யா**
**நித்ய யுக்தா உபாஸதே ॥** (14)

''எப்பொழுதும் என் புகழ் பாடுபவராகவும், உறுதியான நம்பிக்கையுடன், விரதத்துடன் என்னை நினைப்பவராகவும், தூயபக்தி உணர்வுடன் என்னைத் தொழுபவராகவும் உள்ள மகாத்மாக்கள் இடைவிடாது என்னையே வழிபடுகின்றனர்.''

*(இங்கு மகாத்மாக்களின் இயல்பு குறிக்கப்படுகிறது. இறைவனின் அருட்திறம், மேனியழகு, அவன் நாமத்தின் பெருமை ஆகியவற்றை எப்போதும் நினைப்பவர்களே, நினைந்து நினைந்து வாயால் புகழ்பவர்களே ஆத்மாக்கள். ஆம் ஆழ்வார்களும் நாயன்மார்களும் தங்கள் வாழ்க்கையினை இறைச் சிந்தனையிலேயே கழித்துப் பேறு பெற்றவர்களாவர். மேலும் உடலைக் கட்டுப்பாட்டுடனும், தூயதாகவும் வைத்துக்கொள்ளுதல் மகாத்மாக்களின் இயல்பாகும். நோன்பு, காலை,மதியம், மாலை குளித்தல், பூசை விதிகளைப் பின்பற்றுதல் யாவும் மனவடக்கம், ஐம்புலன் அடக்கம், பற்றற்ற நிலை, மனஉறுதி ஆகியவற்றை வளர்க்கும். வளர்ந்து முதிர்ந்த நிலையே மகாத்மாக்களின் அன்றாட வாழ்க்கையாகும். மேலும் எந்தவித ஆடம்பரமுமின்றித் தடங்குகளுமின்றி, இறைவனை அடையும் வழிதூய பக்தியாகும். இது ஒரு எளிமையான கடவுளை நெருங்கும் நேர்வழியாகும். இந்தநேர் வழியில் சென்று இறைவனைத்தரிசித்த அடியவர்கள் எண்ணிக்கை இம்மண்ணில் ஏராளமாகும். இந்த பக்தி உணர்வினை நிரம்பப் பெற்றவர்களே மகாத்மாக்கள்.அவர்கள்*

நித்யயோகிகள் என்று குறிக்கப்படுகின்றனர்.அத்தகையோர் இறைவன் அருகில் இருக்கும் பேறுபெற்றவர்கள். இத்தகு மகாத்மாக்கள் நாளும்தொழும் பேறு உடையவனாக தான் இருப்பதாகக் கண்ணபெருமான் பெருமிதமாகக் கூறுகின்றான்.)

ஞானயக்ஞேன சாப்யன்யே யஜந்தோ
மாமுபாஸதே ।
ஏகத்வேன ப்ருதக்த்வேன பஹுதா
விச்வதோமுகம் ॥ (15)

''ஞானவேள்வியின்பால் ஈடுபட்டவர்கள் என்னை ஒன்றாய்,வேறாகவும், பலவாகவும் கண்டுவழி படுகிறார்கள்.

(இறைவனை அடைய வழிவகுக்கும் ஞானம் எனும்பேரறிவு பெற்ற ஞானியர்கள் மூன்று வகையாக இறைவனைத் தொழுகின்றனர்.அதாவது இறைவன் ஒருவனே, மற்றவை மாயை எனும் ஸ்ரீ சங்கரரின் அத்வைதம், இறைவன் எனும் பரமாத்மாவும் உயிர்கள் எனும் ஸ்ரீ மத்வாச்சாரியரின் துவைதம்,இந்த உலகமும்-இயற்கையாவும் இறைவனின் பகுதிகளே, இறைவன் ஒருவனே எல்லாமாக எங்குமாக உள்ளான் எனும் ஸ்ரீராமானுஜரின் விசிஷ்டாத்துவைதம் ஆகிய மூன்று தத்துவங்கள் குறிக்கப்படுகின்றன.ஆனால் இவை மூன்றும் அவரவர்களை அந்த பரமாத்மாவிடம் அழைத்துச் செல்லும் ஞானமார்க்கங்களாகும்.அந்த மார்க்கங்களில் அர்ப்பணித்துக் கொள்ளும் புனித வேள்வியே ஞான யக்ஞமாகும்.)

அஹம் க்ரதுரஹம் யக்ஞ:
ஸ்வதாஹமஹ மௌஷதம் ।
மந்த்ரோ அஹமஹமேவாஜ்யமஹ
மக்னிரஹம் ஹுதம் ॥ (16)

'நான் 'கிரது' எனும் வைதீக கர்மாவாகவும், மாபெரும்வேள் வியாகவும், முன்னோர்க்குப் படைக்கப்படும் உணவாகவும், மருந்தாகவும், மந்திரமாகவும், ஹோமத்தில் அளிக்கப்படும் நெய்யாகவும், அந்நெய்யை பெறும் தீயாகவும், வேள்வியின் பயன் எனும் விளையாகவும் உள்ளேன்.''

(இச்செய்யுளில் செய்யும் வினைகள் மட்டுமின்றி, எல்லாப்பொருள்களுமே பிரம்மமாக சொல்லப்படுகிறது. 'கிரது' என்பது வேதங்களில் கூறப்பட்டுள்ள ஒரு வினையாகும். வேள்வி எனும் யக்ஞம் என்பது ஸ்மிருதியில் குறிக்கப்படுகிறது. இங்கு ஔஷதம் என்பதற்கு உணவென்றும், மருந்தென்றும் சொல்லப்படுகிறது. மனதில் நினைக்கப்படுகின்ற எண்ணமே மந்திரமாகும். ஆம் வேள்வி என்றுசெய்யப்படும் வினை, வினையாற்ற வேண்டுமென்ற எண்ணம், ஹோமகுணத்தில் சொரியப்படும் நெய் எனும் அவிசு, அவ்வவிசை ஏற்றுக்கொள்ளும் தீ, எதற்காக வேள்வி செய்யப்படுகிறதோ அந்தப் பயன் எனும் வினை ஆகியனயாவும் பிரம்மமாகவே இங்கு இறைவனால் சுட்டிக்காட்டப்படுகிறது.)

பிதாஹமஸ்ய ஜகதோ மாதா
தாதா பிதாமஹா: ।
வேத்யம் பவித்ரமோங்கார ருக்
ஸாம யஜுரேவ ச ॥ (17)

நானே இந்த அண்டத்தின் தந்தை, தாய், பாட்டனார் மற்றும் வினைப்பயனைக் கொடுப்பவனும், அறிந்து கொள்ள வேண்டியவனும் தூய்மை செய்பவனும் நானே. மேலும் ஓங்காரம் ரிக் சாமம், யஜுர் வேதங்கள் ஆகியனவாகவும் இருப்பவனும் நானே''

(இந்த உலகம் தோன்ற முதல் காரணமாக இறைவன் விளங்குவதால் அவன் இந்த உலக உயிர்களுக்குத் தாயாகவும், தந்தையாகவும் அழைக்கப்பெறுகிறுன். உயிர்கள் ஆற்றும் வினைகளுக்கு ஏற்றவாறு பயன்களை அள்ளித் தருபவன் வள்ளலாகிய இறைவனாகும். அதனால் அவன் 'தாதா' என்று குறிக்கப்படுகின்றுன். இறை உண்மையைத் தெரிந்து கொண்டால் அதுவே எல்லா அறிவைப் பெற்றதற்கு ஒப்பாகும். ஆகவே இறைவனேஅறியத்தக்க பேரறிவாகும். ஐம்பூதங்களான நீர், நெருப்பு, மண், காற்று ஆகியவற்றிற்குப் பொருட்களைத் தூய்மைப்படுத்தும் குணம், ஆற்றல் உண்டு. ஆனால்

புனிதப்படுத்தப்படும் அப்பொருள்கள் மீண்டும் மாசு அடையலாம், ஆனால் ஐம்பூதங்களின் தலைவனான அவனைச் சார்ந்தார்க்கு என்றுமே புனிதத்தோடு விளங்கிடும் பெருமை உண்டு. ஆகவே அவ் இறைவன் தூய்மைக்கு இருப்பிடமாவான். ஒசையின் அடிப்படையில்தான் வேதங்களின் பெருமை பேசப்படுகின்றன. இந்த உலகத்தின் தோற்றம், வளர்ச்சி அழிவு ஆகியவற்றை விளக்கிடும் ரிக், சாமம், யஜுர் வேதங்களின் இருப்பிடமாக இறைவன் திகழ்கின்றான். ஆம் அவனே ஒசை, அவனே வேத நாயகன்.

நான்கு வேதங்களில் இறுதியாக விளங்கிடும் அதர்வண வேதம் பின்னர் தோன்றியது. அதலால், அவ்வேதம் இங்குக் குறிககப்பெறவில்லை.)

**கதிர்பர்தா ப்ரபு: ஸாக்ஷீ நிவாஸ:**
**சரணம் ஸுஹ்ருத் ।**
**ப்ரபவ:ப்ரளய:ஸ்தானம் நிதானம்**
**பீஜமவ்யயம் ॥** (18)

" புகலிடம், வளர்ப்பவன், தலைவன், சாட்சி வசிக்குமிடம், அடைக்கலம், நண்பன், பிறந்த இடம், சேரும் இடம், தங்குமிடம், களஞ்சியம், அழியாத வித்து (யாவும் நானே)".

(உலக உயிர்களுக்கு ஆண்டவனே கதி. அதாவது அவன்தான் நம் புகலிடம். நம்முடைய வினைகளுக்கு ஏற்ப பலன்களைத் தந்து நம் விதியை அவன்தான் நிர்ணயிக்கின்றான். நாம் உயிர்வாழ உணவு தந்து நம்மை வளர்ப்பவன் இறைவன். ஜீவாத்மாக்களாகிய உலக உயிர்களுக்கு அந்த இறைவனே பரமாத்மா-தலைவன் இங்குத் தலைவன் என்பது 'ப்ரபு' என்று குறிக்கப்பெறுகின்றது. ஆம் அவன் தலைவன்-ஆண்டான். நாம் அவனது அடிமைகள். நம் உள்ள, உடல் எண்ணங்களுக்கு அவன் சான்றாகச் சாட்சியமாகத் திகழ்கின்றான். அண்டத்திலுள்ள எல்லாப் பொருள்களின், உயிர்களின் இருப்பிடம் அவனே. அதாவது தாங்குபவன் அவனே. 'உயிர் கொடுப்பான் தோழன்' என்பார்கள். அர்ச்சுனனுக்கு உதவியதுபோல், கண்ணனாகிய

இறைவன் உயிர்களுக்கு உற்ற காலத்தில் உதவிடும் நல்ல தோழனாக விளங்குகின்றான். அதாவது உயிர்களின் நலத்தை நாடும் நண்பனாவான் இறைவன். உலக உயிர்களின் தங்குமிடமாக ஆண்டவன் இருக்கின்றான். இறைவன் களஞ்சியம் போன்றவன். எடுக்க எடுக்க, அள்ள அள்ளக் குறையாதது களஞ்சியம். ஆம்,இறைவன் நிதிக்களஞ்சியம். கருணையின் ஊற்று. அருளின் மொத்த உருவம். இறைவன் அழியாத விதை போன்றவன். சாதாரணமாக விதைகள் தங்களை அழித்து, பயிர்களை உற்பத்தி செய்கின்றன. இறைவனோ உலக உயிர்களை நாளும் படைத்துக் கொண்டிருக்கும் அழியாத வித்தாகும்.)

தபாம்யஹமஹம் வர்ஷம்
நிக்ருஹ்ணம்யுத்ஸ்ருஜாமி ச ।
அம்ருதம் சைவ ம்ருத்யுஸ்ச
ஸதஸச்சாஹமர்ஜுன ॥ (19)

''அர்ச்சுனா!நான் வெப்பத்தைத் தருகின்றேன். மழையைப் பெய்யவும், அம் மழையைத் தடுக்கவும் செய்கின்றேன். மரணமில்லாமை, மரணம், ஸத்தும், அஸத்தும் எல்லாம் நானேதான்.''

(இறைவன் தன் பிரதிநிதியான சூரியனைக் கொண்டு உலகில் வெப்பத்தை-சூட்டை வெளிப்படுத்துகின்றான்.அந்த சூரிய கிரணங்களைக்கொண்டு மழையைப் பொழிவித்தும் வறட்சியையும் உண்டு பண்ணுகிறான்,அவ் இறைவன்.உலக உயிர்கள் வாழ்வதும், அவைகளின் உயிர் போவதற்கும் இறைவனே காரணமாவான். வினைப்பயன்களுக்கேற்றவாறு அதிக ஆயுளும், இளமையில் மரணம் போன்றன கிடைக்கப்பெறுகின்றன.இவையாவும் மனிதனின் மனம் பக்குவமடைந்து, ஞான நிலைஅடையவே இறைவன் செய்யும் விளையாட்டாகும். வினையாற்றும் போது உயிர்களின் இயக்கம் சத்தாகும். கண்களுக்குப் புலப்படாத உயிர்களின் இயக்கமே அசத்தாகும். ஆம் இறைவன் சத்தாகவும், அச்த்தாகவும் திகழ்கின்றான்.)

த்ரைவித்யா மாம் ஸோமபா: பூதபாபா
யக்ஞைரிஷ்டவா ஸ்வர்கதிம் ப்ரார்த்தயந்தே ।
தே புண்ய மாஸாத்ய ஸுரேந்தரலோக
மச்னந்தி திவ்யான் திவி தேவபோகான் ॥ (20)

''மூன்று வேதங்களைக் கற்றறிந்தவர்கள் வேள்விகளால் என்னை வழிபட்டு, சோமபானம் அருந்தி, பாவங்களிலிருந்து விடுதலை பெற்று வானுலகை அடைய விருப்பம் கொள்கின்றனர். அவர்கள் புண்ணியம் மிக்க தேவேந்திரன் வாழும் உலகத்திற்குச் சென்று, சுவர்க்கலோகத்தில் இனிமை மிக்கசுகபோகங்களை அனுபவிக்கின்றனர்.''

(ஞான, பக்தி வழிமுறைகளைப் பின்பற்றி நிலையான முக்தி பேரின்பத்தைப் பெற விரும்பாமல், ரிக் சாம, யஜுர்வேதங்களில் குறிப்பிட்டுள்ள கர்ம காண்டத்தைப் பின்பற்றி, அதாவது வேத மந்திரங்களைக் கற்று அதனால் பெறும் ஆற்றலால் தேவலோகத்தை அடைந்து, 'சோமபானம்' எனும் மதுவினை அருந்தி, சுகபோகங்களை அனுபவிக்கவே சிலர் ஆசைப்படுகின்றனர். ஆனால் அவ் இன்பங்களை, அவர்கள் ஆற்றியுள்ள புண்ணிய பயன்கள் அவர்கள் கணக்கில் இருக்கும் வரைதான் அனுபவிக்க முடியும். புண்ணிய பயன்கள் மறைந்த பிறகு, அவர்கள் மீண்டும் பிறவி எனும் சுழற்சியில் தள்ளப்படுகின்றனர். ஆகவே இவர்களால் இறுதி வரை உபநிஷத்துக்கள் கூறியுள்ள பிரம்மஞானத்தைப் பெறமுடிவதில்லை என்று இறைவன் இச்செய்யுளில் மறைமுகமாகச் சுட்டிக்காட்டுகிறார்.)

## பகவான் சொன்னது:

தே தம் புக்த்வா ஸ்வர்கலோகம் விசாலம்
க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி ।
ஏவம் த்ரயீதர்மமனுப்ரபன்னா
கதாகதம் காமகாமா லபந்தே ॥ (21)

''அவர்கள்(வேதம் நன்கு கற்றவர்கள்) அந்த பெரிய வானுலகமான சுவர்க்கலோகத்தை அடைந்து, அங்குள்ளவற்றை அனுபவித்து, பிறகு தங்களுடைய

புண்ணியம் எனும் நற்கருமப்பலன்கள் குறைந்து மறைந்து போனபிறகு, மீண்டும் மண்ணில் வந்து பிறக்கின்றனர். ஆகவே இவ்வாறு வேதங்களைப் பின்பற்றி போகத்தை இன்பத்தைப் பெற நினைப்பவர்கள் பிறப்பு இறப்பு எனும் சுழற்சியிலேயே வாழ்கின்றார்கள்.''

(உலகாயுத ஆசைகளுக்காகப் பலர் வேத அறிவுரைகளைப் பின்பற்றுகின்றனர். அதனால் அவர்கள் கணக்கில் நல்வினைப் பயன்கள் கூடுவது என்பது உண்மைதான். சேர்த்தப் பணத்தைச் செலவழிக்கும்போதுதான் இன்பம் உண்டாகும். இவ்வின்பத்தை தொடர்ந்து அனுபவிக்க அவனிடம் பணம் என்றும் இருத்தல் அவசியம். ஆம் ஆசையில், பற்றுக்களின் மாய வலையில் அகப்பட்டவர்கள் தொடர்ந்து உழைத்துத்தான் ஆகவேண்டும். இந்தத் தொடர் உழைப்புத்தான் பிறப்பு, இறப்பு என்பதாகும். ஆனால் அப்பரம்பொருளைப் பற்றிய ஞானம் எனும் பெரும் பொருளை- அழியாப் பொருளை- குறையா பொருளை அடைந்து விட்டால் அவர்கள் கணக்கில் குறைவு என்பது என்றும் இருக்காது.)

அனன்யாஸ் சிந்தயந்தோ மாம் யே
ஜனா: ப்ரயுபாஸதே ।
தேஷாம் நித்யாபியுக்தானாம் யோக
க்ஷேமம் வஹாம்யஹம் ॥ (22)

''என்னுடன் வேறுபடாதவராக, என்னையே எப்போதும் மறவாது வணங்கி நாளும் யோகிகளாக வாழ்வோர்க்கு, நலம் பலவற்றை நான் அளிக்கிறேன்.''

(தாயின் கர்ப்பத்தில் குழந்தை இருக்குமளவு குழந்தையும் தாயும் வேறுவேறு அல்ல. அக்குழந்தையின் வளர்ச்சிக்குரிய நலத்தை தாயே தானாகவே பாதுகாக்கிறாள். பிறந்த பின்பும் குழந்தை தாயின் மடியையே தஞ்சமாகக் கொள்ளும் வரை, அத்தாயின் நேரடிப்பரிவு அக்குழந்தைக்குக் கிடைக்கும். இதுவே 'அனன்ய'த் தொடர்பு ஆகும். ஆம் இறைவனிடம் பக்தன் தன்னை முழுமையாக '' சரணாகதி'' செய்யுமளவு, இறைவனின் அருட்பார்வை அவனுக்குக் கிடைக்கும். அதாவது அவனது நலத்தை இறைவன், அவன் தன்னை

*முழுமையாக அர்ப்பணித்திடும்வரை, தானே பார்த்துக்கொள்கிறான்.)*

**யே அபிஅன்யதேவதா பக்தா**
**யஜந்தே ச்ரத்தயா அன்விதா: ।**
**தே அபி மாமேவ கௌந்தேய**
**யஜந்த்ய விதி பூர்வகம் ॥ (23)**

*''குந்தியின் புதல்வா! ஈடுபாடுடன் விளங்கும் பக்தர்கள் மற்றைய தேவதைகளை (கடவுளர்களை) வணங்கும்போது, விதிவழுவியவர்களாகத் திகழ்ந்து என்னையே வணங்குகின்றனர்.''*

*(இங்கு அவிதி பூர்வகம் எனும் சொல்வருகிறது. அதாவது அறியாமையால் விதியை மீறச் செய்யும் செயலாகும். அதாவது, உலகாயுத ஆசைகளுக்காக, சிறு சிறு இன்பங்களுக்காக சிறுதேவதைகளை வணங்குதல் ஆகும். ஆனால் இறுதியான பேரின்பப்பேறு முக்தி என்பது அக்கண்ணனால்தான் அளிக்க முடியும். ஏனெனின் மற்றைய தேவதைகள் அவனுக்கு ஆட்பட்டவர்களே. ஆகவே, மூலப்பரம்பொருளான அம்மாயவனை மறந்து, அவனின்று வேறுபட்டவர்கள் என்று கருதி மற்றைய கடவுளர்களை வழிபடுவது என்பது விதிவழுதிய செயலாகும்.)*

**அஹம் ஹி ஸர்வயக்ஞானம்**
**போக்தா ச ப்ரபுவே ச ।**
**ந து மாமபிஜானந்தி தத்வேனா**
**தஸ்ச்யவந்தி தே ॥ (24)**

*''நானே எல்லா வேள்விகளுக்கு உரியவனாகவும், தலைவனாகவும் இருக்கின்றேன்.ஆனால் (அதை மறந்து) மற்றைய தேவதைகளை (கடவுளர்களை) தொழுபவர்கள் என்னை உண்மையாக அறியவில்லை. அதனால் அவர்கள் அத்தவற்றினைப் புரிந்து, மறுபடியும் பிறவி எடுக்கின்றனர்.''*

*(ஒரு நிறுவனத்தில் பணிபுரியும் ஒருவர், அந்நிறுவனத்தில் பணிபுரியும் மேனேஜர் எனும் மேலாளரிடமிருந்து பெரும் ஆதரவை விட, அந்நிறுவனத்தின் உரியமையாளர் வழங்கும்*

ஆதரவு அவருக்கு மிகவும் பயன்தரக்கூடியதாக அமையும். மேலாளர்கள் மாறலாம்.ஆனால் உரிமையாளரிடமிருந்து அந்நிறுவனத்தில் தான் பணிபுரியும் வரை உண்மையான, நிர்ந்தரமான பலன்களை எதிர்பார்க்கலாம்.ஆம் மேலாளர்கள் நியமித்திடும் உரிமையளாரகிய அப்பரம்பொருள்தான் 'முக்தி' எனும் இறுதிப்பயனை அளித்திடமுடியும். அம்முக்தியைப் பெற்றபிறகு மரணம், பிறப்பு எனும் மீளாத்துயரில் மூழ்குதல் வேண்டாம்.)

**யாந்தி தேவவ்ரதா தேவான் பிதரூன்**
**யாந்தி பித்ருவ்ரதா: ।**
**பூதானி யாந்தி பூதேஜ்யா யாந்தி**
**மத்யாஜினோ அபிமாம் ॥** (25)

''தேவர்களை வணங்குபவர்கள் அத்தேவதைகளை அடைகின்றனர். பிதிர்களை (முன்னோர்களை) வணங்குபவர்கள் அவர்களையே அடைகின்றனர். பூதங்களைத் தொழுபவர்கள் அப்பூதங்களையே பெறுகின்றனர். என்னை வழிபடுவர்கள் இறுதியில் என்னையே பெறுகின்றனர்.''

(ஒருவன், தான் பத்தாம் வகுப்பு தேர்ச்சி பெற்றால் போதும் என்றால் அவனுடைய கல்வித்தகுதி 10-ஆம் வகுப்பாகவே இருந்து வருகிறது. ஒருவன் தான் ஒரு மருத்துவராக, பொறியாளராக, ஆட்சித்தலைவராக விளங்கவேண்டி, அதற்காக முழு முயற்சியுடனும் நம்பிக்கையுடனும், தேர்ந்த உழைப்புடனும் பாடுபட்டால் அவன் தகுதி, ஆற்றல், புகழ், நிலையாவும் தானாகவே அவனுக்குக் கிடைத்துவிடுகிறது. மழையால் உருவாகும், ஓர் ஓடைசாக்கடையில் சேரும் போது அதன் பெருமை அழிகின்றது.ஒரு குளத்திலோ, குட்டையிலோ, ஏரியிலோ சேரும் போது அதன் சுதந்திரம் அவற்றுடன் நின்று விடுகின்றது. ஆனால் விரிந்து பரந்துள்ள ஆழ்கடலுடன் சேரும் போது அவ்வோடையின் நிறம்,அளவு மறைந்து அக்கடலின் தன்மையைப் பெற்றுவிடுகிறது. அதனைப் போன்று சிறு கடவுளர்களை,முன்னோர்களை, பூதங்களை வணங்கும் ஒருவன் அவற்றின் ஆற்றல்களை மட்டுமே பெறுகின்றான். ஆனால், எல்லாவற்றிற்கும் மூல காரணனான அப்பரம்

பொருளை வணங்குமபோது, இறுதியில், காந்தத்துடன் சேரும் இரும்புத்துண்டும் காந்தச்சக்தி பெறுவதுபோன்று, அப்பரமனையே ஒருவன் அடைந்து விடுகின்றான்.)

பத்ரம் புஷ்பம் பலம் தோயம்
மே பக்த்யா ப்ரயச்சதி ।
ததஹம் பக்த்யுபஹ்ருதமச்னாமி
ப்ரயதாத்மன: ॥ (26)

''யார் ஒருவர் இலை, மலர்,கனி அல்லது நீரை தூயபக்தி உணர்வோடு எனக்குப்படைக்கின்றாரோ, அத்தூயா மனதால் படைத்திடும் அப்பொருளை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்கிறேன்.''

(இச்செய்யுளில் பக்தியுடன் இயல்பு, ஆற்றல் சுட்டிக்காட்டப்படுகிறது. இறைவன் சடங்குகளால் பெருமைப்படுபவன் அல்ல. தூயபக்தி உள்ளமே தான் உறையும் கோயில் என்று இறைவன் உணர்த்துகின்றான். மற்றைய தேவதைகளை சடங்குகள், விதிமுறைகள் மூலமாக திருப்திப்படுத்தலாம். ஆனால், மூலப்பொருளான அம்மாயவனைத் தூயபக்தி உணர்வால் மட்டுமே கட்டுப்படுத்தமுடியும். அதனால்தான், 'பாரதப்போர்' தூதுப்பணிக்காக அத்தினாபுரம் வந்த போது பகவான்,மாடமாளிகைகள், பொன்னும் பொருளும் நிறைந்த துரியோதனிடம் செல்லாமல் விதுரன் வீடு சென்று அவன்தந்த கூழினை அமுதாக ஏற்றான். பின்னொரு நாள் நட்பு பாராட்டி வந்த குசேலன் தந்த அவலை ஆர்வத்துடன் உண்டான். திரேதாயுகத்தில் எச்சிறப்படுத்திச் சபரி தந்த கனியை அன்புடன் சுவைத்தான்.எதை, எங்கு யார் தந்தார்கள் என்று பாராமல், எந்த மனநிலையில் எந்த உணர்வுடன் தந்தார்கள் என்பதை மட்டுமே இறைவன் பார்த்தான். அதனால்தான், தங்கள் வசதிக்கு ஏற்றவாறுதரும் பொருளை அது கனியோ, காயோ இலையோ இல்லை வெறும் நீரோ எதுவானாலும்,அதில் பக்தி கண்டு அவற்றை ஏற்பது அவ்இறைவனின் இயல்பாகும். ஆம் ஆடம்பரமில்லாத, பகட்டில்லாத பக்தி உள்ளமே பரமன் உறையும் திருக்கோயிலாகும்.)

**யத்கரோஷி யதச்னாஸி யஜ்ஜு**
**ஹோஷி ததாஸி யத் ।**
**யத்தபஸ்யஸி கௌந்தேய தத்குருஷ்வ**
**மதர்பணம் ॥** (27)

*''(ஆகையால்)குந்தியின் மகனே! நீ எதைச் செய்தாலும், எதனைச் சாப்பிட்டாலும், எதனை ஹோமம் செய்தாலும், எதனை அளித்தாலும், எத்தகைய தவத்தை மேற்கொண்டாலும் அவற்றை எனக்கே அர்ப்பணித்திடுவாயாக.''*

*(இங்கு மனிதனின் எல்லா நல்முயற்சிகளும் நல்வினைகளும் இறைவனுக்கே உரியதாகவும், தீவினைகளின் பயன்கள் மனிதனுடைய பிறப்பு இறப்பு எனும் சுழற்சிக்கே அழைத்துச் செல்வதாகவும் குறிக்கப்பெறுகின்றது. எந்த ஒரு காரியத்தையும், அதனால் பெறப்படும் பயன்களையும் இறைவனுக்காகவே, சமூகத்திற்காகவோ ஒருவன் மேற்கொள்ளும்போது, அது புனிதமாகிறது. அங்கு 'நான்'எனும் அகந்தை அழிகிறது.உலக உயிர்களில் உலக நாதனைக் காணும்போது, உலகப்பற்று மனிதனிடம் சிறிது சிறிதாக அறவே மறைகின்றது.)*

**சுபாசுபபலைரேவம் மோக்ஷ்யஸே**
**கர்மபந்தனை: ।**
**ஸந்யாஸயோகயுக்தாத்மா விமுக்தோ**
**மாமுபஷ்யஸி ॥** (28)

*''ஆகவே, நன்மை தீமைகளைத்தருகின்ற வினைகளிலிருந்து உன்னை விடுவித்துக் கொள்வாயாக! துறவி நிலையில் உன் உள்ளத்தை பண்படுத்திக்கொள்வாயாக! அப்போதுதான் வினையிலிருந்து விடுபட்டு என்னை அடையமுடியும்!''*

*(முன்பு பல இடங்களில் அவ்வப்போது கூறியதுபோல் பிறவி எடுத்தபின் வாழ்க்கையில் ஒருவன் தான்செய்யும் வினைகளுக்கு ஏற்ப மீண்டும் மீண்டும் பிறவிகள் எடுக்கின்றான். ஆனால்,தான் செய்யும் வினைகள் யாவும் அந்த இறைவனுக்காகவே,அந்த வினைப்பயன்கள் யாவும்*

அவனுடையதே, என்ற மனப்பான்மையில், 'நான்', 'எனது' என்ற உணர்வில்லாமல், ஒருவன் துறவி-சன்னியாசி வாழ்க்கைகயை மேற்கொள்வானாயின், அவன் மேற்கொள்ளும் வினையாவும் ஒரு 'யோகமாக' அமைந்திடும். அப்போது முக்தி என்பது அவனுக்கு எளிதில் கிடைத்திடும் வினைப்பயனாக விளங்கிடும்.)

**ஸமோ அஹம் ஸர்வபூதேக்ஷு ந மே**
**த்வேஷ்யோ அஸ்தி ந ப்ரிய:।**
**யே பஜந்தி து மாம் பக்த்யா மயி**
**தே தேஷு சாப்யஹமா ॥ (29)**

''நான் எல்லா உயிர்களையும் சமநோக்கில்தான் பார்க்கின்றேன். எனக்கு எதிரியும் இல்லை;நண்பனும் இல்லை. அதேநேரத்து என்னை உண்மையான பக்தியுடன் பூசை செய்பவர்கள் பலர் இருக்கின்றனர். நானும் அவர்களிடத்து இருக்கின்றேன்.''

(பச்சை மரத்திலும் பற்றி எரியும் தன்மை இருக்கின்றது. அம்மரம் நன்கு காய்ந்துவிட்டால்-உலர்ந்துவிட்டால் நெருப்பினை அது நன்கு பற்றிக்கொள்ளும் . அதுபோன்று உலகாயுத ஆசைகள் எனும் ஈரமானது மரமாகிய நம் உடலில் இருக்கும்வரை நெருப்பு அதனைப்பற்றுது.செய்யும் வினைகளைக் கடவுளுக்காக, சமுதாயத்திற்காக அர்ப்பணித்துவிட்டால்,அதாவது உள்ளத்தை தூய்மையானதாக வைத்துக் கொண்டால் அங்கு உறைந்திட இறைவன் விரைவாக வந்திடுவான்.)

## பகவான் சொன்னது:

**அபி சேத்ஸுதுராசாரோ பஜதே**
**மாமனன்யபாக் ।**
**ஸாதுரேவ ஸ மந்தவ்ய:**
**ஸம்யக்வ்யவஸிதோ ஹி ஸ: ॥ (30)**

''தீமை பல புரிபவனாக இருந்தாலும் அவன் வேறொன்றையும் நினைக்காது என்னைமட்டுமே தொழுவானாயின், அவனை சாது என்றே கூறவேண்டும்.

ஏனென்றால் அவன் தீவிரமான தீர்மானம் கொண்டவனாகத் திகழ்கின்றான்.''

(இரு நண்பர்கள் ஒருவன் தான் சினிமாவிற்குப் போவதாகவும் மற்றொருவன் கோயிலுக்குப் போவதாகவும் கூறிக்கொண்டு பிரிகின்றனர். சினிமா பார்த்துக் கொண்டிருப்பவனின் கண்கள் திரையைப் பார்த்துக் கொண்டிருந்தாலும், காதுகள் ஒலியைக் கேட்டுக் கொண்டிருந்தாலும், அவன் மனம் மட்டும் நண்பன் கோயிலுக்குச் சென்றிருப்பதையும், இறைவன்முன் நண்பன் நின்று கொண்டிருப்பதையும், பூசாரி பிரஸாதம் வழங்குவதையும் தன் கற்பனையில் பார்த்துக் கொண்டிருந்தான்... கோயிலுக்குச் சென்ற நண்பரோ, கோயிலில் நடைபெறும் நிகழ்ச்சிகளில் மனத்தை ஒட்டாமல், திரைப்படம் காணச் சென்றிருந்த நண்பன் பற்றியும், அவன் சென்ற சினிமா அரங்கின் காட்சிகளே மனதில் நிழலாடியன.

பொழுதுபோக்குக்காகச் சென்றவன் மனதோ இறைநாட்டம் கொண்டது. கோயிலுக்குச் சென்றவன் மனமோ சினிமா பார்க்கத் தொடங்கியது. ஆம் எண்ணங்களால் மக்கள் உயருகிறார்கள். தாழ்கிறார்கள். ஆகவே எவ்வளவுதான் தீயகாரியங்கள பல புரிந்தாலும் அவன் மனம் இறைவன்மீது நாட்டம் கொண்டுவிட்டால் நாளடைவில் மனமும், அறிவும் பண்படுகிறது. நல்லதே காண நல்லதே செய்ய அவன் மனம் விரும்புகின்றது. இதனால் தீயோன் நல்லோன் ஆகின்றான். பொழுது புலர புலர உலகத்தில் இருள் அகன்று, வெளிச்சம் பரவுகின்றது. இறைவன் எனும் திருவருள் மனதில் சிறிது சிறிதாக பெருகும்போது அந்த உள்ளத்தில் இருள் எனும் தீய எண்ணங்கள் அழிந்து போகின்றன. இதற்கு களவுத்தொழில் புரிந்துவந்த வான்மீகி, இராமாயாணம் பாடிய முனிவராக உயர்ச்சிபெற்றது ஒரு சிறந்த உதாரணமாகத் திகழ்கின்றது. கொள்ளை அடித்துவந்த திருமங்கைமன்னை மாயவன் திருவடி ஸ்பரிசத்தால் ஆழ்வாரானார்.)

க்ஷிப்ரம் பவதி தர்மாத்மா சச்வச்
சாந்திம் நிகச்சதி ।

கௌந்தேய ப்ரதிஜானீஹி
நமே பக்த ப்ரணச்யதி ॥ (31)

*''(என்னை என்றும் எண்ணும்) அவன் விரைவாக தர்மலானாக விளங்குவான், என்றும் அமைதியினையும், பெறுகின்றான். குந்தியின் புதல்வா, என்னைத் தொழும் என் பக்தன் எப்போதும் அழிவை எதிர்கொள்வதில்லை, இதனை நன்றாக அறிவில் கொள்வாயாக.''*

*(கடவுள் பக்தியினை அன்றையத் தேவைகளுக்காகவோ, சுயவிளம்பரத்திற்க்காகவோ, வாழ்க்கையில் மேற்கொள்வது என்பது நிர்ந்தரமான பயனைத்தராது. மகிழ்ச்சியில் இறைவனைமறந்து, துன்பத்தில் இறைவனை நினைப்பது மனிதனது இயல்பு. துன்பம் தொடர்ந்து வரும்போது பக்திமானும் இறைவனை நிந்திப்பது என்பதும் சராசரி மனிதனின் மனப் போக்காகும். பாண்டவர்கள் கௌரவர்களால் பல வகைகளில் தொடர்ந்து துன்பப்பட்டு அவதியுற்றாலும், இறுதிவரை கண்ணன் துணையையே அவர்கள் நாடியதால், இறுதியில் வெற்றியையே பெற்றனர். ப்ரஹ்லாதன், ராமதாசர் போன்றோரின் தீவிர இறை நம்பிக்கையே இறுதியில் அவர்களை பக்தி உலகில் கொடி கட்டிப் பறக்கச் செய்தது. ஆம் கடவுளை நம்பினோர் கைவிடப்படார்.)*

மாம் ஹி பார்த்த வ்யபாச்ரித்ய
யே அபிஸ்யு: பாபயோனய: ।
ஸ்த்ரியோ வைச்யாஸ்ததா
சூத்ராஸ்தே அபி யாந்தி பராம் கதிம் ॥
(32)

*''பார்த்தா! கீழான பிறவியர்களாகக் கருதப்படும் பெண்கள், வைசியர், சூத்திரர் ஆகியோரும் என்னிடம் பக்தி பூண்டால், உறுதியாக அவர்கள் என்னைச் சேர்கின்றனர்.''*

*(இங்குக் கீழான பிறவி என்று மூன்று பிரிவினர் குறிக்கப்பெறுகின்றனர். இம்மூவகைப் பிரிவினரும் அவர்களிடம் உள்ள குறையினால் கீழானவர்களாக*

அழைக்கப்படுகின்றனர். பெண்கள் இரக்கத்தின் ஊற்ருகக் கருதப்படுகின்றனர். தாய்மைக்கே உரிய கருணை உள்ளம் கொண்டவர்கள். இந்தத் தாய்மைக் குணம் கொண்ட ஆடவரும் தாயாகத்தான் கொண்டாடப்படுவர். தங்கள் மனதை எளிதில் இளக்கிக் கொள்ளும் தன்மையால் பேதையர் என்று இவர்கள் அழைக்கப்பெறுவர். இப்பேதமையால் தாங்களே தங்களுக்கு அழிவைத் தேடிகொள்ளும் பலவீனமும் இவர்களிடம் உண்டு. இப்பலவீனத்தால் இப்பெண்கள்- இப்பலவீனத்தைக் கொண்டவர்கள் கீழானப் பிறவியர் ஆவர். அடுத்ததுவைசியர். வியாபாரம் செய்யும் யாவரும் வைசியரே. வியாபாரிகள் பொதுவாக பணம் சேர்ப்பதிலேயே கருத்தாக இருப்பர். கடவுள் சிந்தனை எப்போதாவது வந்துபோகும்.அதாவது கடை திறக்கும் போதும், மூடும் போதும் மட்டுமே. வியாபாரம் என்று வந்து விட்டால் 'லாபமே' அவர்களது குறிக்கோள்.அந்த லாபத்தை ஏழை, எளியார், பணக்காரார் என்று வேற்றுமைப்பாராட்டாது எதிர்பார்க்கும் அவர்கள் தம் வியாபார சிந்தனை, கடவுள் சிந்தனையை மறைக்கும். இதனால் இவர்கள் போன்ற உணர்வுகொண்ட மக்கள் வைசியர் என்றே அழைக்கப்பெறுவர். ஆகையால் செல்வத்தையே நாடும் இவர்களும் கீழான மக்களே. அடுத்தது சூத்திரர். இவர்கள்தம் இயல்பு மற்றவர்களிடம் அடிமையாக வாழ்ந்து மடிபவர்கள். அதாவது கையேந்தும் நிலை. இப்படிக் கையேந்தி மற்றவர்களுக்கு வணக்கம் போட்டு வாழும் எந்த இனத்தவரும் சூத்திரரே. ஆகையால் இவர்களும் கீழானவர்களே.இப்படிக் கீழான மூவகையினரும் அந்த இறைவனையே சரணமாகப் பற்றினால் - அவன்தான் உண்மை, அவன்தான் நிலையான பொருள், அவன்தான் நம் எஜமானன்'என்று நம்பி இறைவனை வழிபட்டார்களேயானால் அவர்களுக்குத் தன் திருவருள் நிச்சயம் கிட்டும் என்று உறுதி அளிக்கிருர் பகவான் இச்செய்யுளில்.)

கிம் புனர்ப்ராஹ்மணு: புண்யா பக்தா
ராஜர்ஷயஸ்ததா ।

அநித்யமஸுகம் லோகமிமம் ப்ராப்ய
பஜஸ்வ மாம் ॥ (33)

'' அப்படியிருக்கும் போது புண்ணியவான்களும், பக்தர்களுமாகிய அந்தணர்களையும், ராஜரிஷிகளையும் பற்றி பின்பு பேசுவானேன்? நிலையற்றதும், இன்பமற்றதும் ஆகிய இந்த உலகில் பிறந்த நீ என்னையே பணிவாயாக''

(முந்தைய செய்யுளில் மூன்று இனத்தோரைக் கீழான பிறவிகள் என்று குறிப்பிட்ட கண்ணன், இச்செய்யுளில் மேலான பிறவிகளாக மற்ற இருவரைக் காட்டுகின்றார். இவ்வுலகில் புண்ணியவான்கள் இறைநாட்டம் கொண்டவர்களேயாவர். இறைநாட்டம் கொண்டவர்களிடத்து தீக்குணம் அறவே இருக்காது. ஆகையால் அந்தத் தூய சூழ்நிலையை பிராம்மணர்கள் எனும் இனத்தோர் பிறக்கும் போதே பெறுகின்றனர். ஒரு காலத்தில் பிராமணர்கள் வாழும் இடத்தை அக்ரஹாரம் எனறு அழைப்பர். அவ் அக்ரஹாரத்தில் எப்போதும் பூசைகள், வேத மந்திர ஒலியும், வேள்விகளும் நடந்து கொண்டே இருந்தன .அதனால் அங்கு வாழும், பிறக்கும், வளரும் மக்களிடையே தெய்வபக்தி தொடர்ந்து என்றும் அமைந்து விளங்கியது. அத்தகு பக்தியுடன் கூடிய சூழ்நிலையில் பிறந்த எவரும் பிராம்மணர்களே. இக்குலம் வாழ்க்கை முறையால், மன உணர்வால் அந்தணர்குலம் என்று அழைக்கப்பெற்றது. ஆகையால் இக்குலத்தில், இக்குணத்துடன் பிறந்தவர் எவருமே தூயோராவர். அவர்கள் மேலான பிறவிகளாவர். அதே போன்று நாட்டு நன்மைக்காக, மக்கள் மேன்மைக்காக 'மக்கள்சேவையே மகேசன் சேவை' என்று கூறுவதற்கொப்பவாழும் அறச்சிந்தனை உடைய ராஜ ரிஷிகளும், மன்னர்களும் மேலான பிறவிகளே. இப்பிறவியர் இறைவனை அடைய எந்தவிதமான இடையூறுகளையும் எதிர்கொள்ளத்தேவையில்லை என்று இறைவன் உறுதி கூறிகின்றான். ஆகவே நீர்க்குமிழி போன்று பிறவியை அடையப்பெற்ற மக்கள், மரணம் என்றுவரும் என்று தெரியாத நிச்சயமற்ற உலகில் வாழும்மக்கள் ஆசை, காமம் ,கோபம்

*போன்ற உள்ளத்தையும் , உடலையும் கெடுக்கும் உணர்வுகளுக்குப் பலியாகி, வாழ்க்கையைப் பொருளற்றதாக்கிக் கொள்ளாதீர்கள் என்று இறைவன் இங்கு அறிவுறுத்துகின்றான்.)*

**மன்மனா பல மத்பக்தோ மத்யா ஜீ**
**மாம் நமஸ்குரு ।**
**மாமேவைஷ்யஸி யுக்த்வைவமாத்**
**மானம் மத்பராயண: ॥** (34)

*''மனதை என்பால் வைத்து என்னிடம் பக்தி மேற்கொண்டு, எனக்கு வேள்விகள் புரிந்து என்னையே தொழுவாயாக. எனனையே இலட்சியமாகக் கொண்டு உறுதியான உள்ளத்துடன் என்னையே பெறுவாயாக!''*

*(மனம் நினைக்கின்றது. அறிவு ஆணையிடுகின்றது. பொறிகள் செயல்படுகின்றன. இதனால் நினைப்புக்கு ஏற்றவாறு பயன்கள் நிகழ்கின்றன. ஒருவன் மீது கோபமோ, வெறுப்போ ஏற்பட்டால், மனம் அவனையே நினைக்கின்றது. அதனால் அறிவு தடுமாறுகின்றது. தடுமாறிய அறிவால் வினைகள் தீவினையாகின்றன். விளைவுகள் ஆபத்தாக முடிகின்றன. ஆகவே உள்ளத்தில் எந்தவிதமான கீழான எண்ணங்களுக்கும் இடம்தரக்கூடாது. உள்ளத்தைத் தூய்மையாக வைத்துக்கொண்டால் உலகமும் தூய்மையானதாக விளங்கிடும். இதற்கு 'நான்' 'எனது, என்ற உணர்வுகளுக்கு இடந்தராது 'அந்த இறைவனே உண்மை, அவனே நமக்கு இறுதிப்புகலிடம்' என்று நினைத்து மனச் சஞ்சலங்களுக்கு இடந்தராது, புனிதமான குறிக்கோளை அடைய சிறந்த வேள்வியாக நம் வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டும்.)*

*(ஒன்பதாம் அத்தியாயம் முடிவுற்றது)*

# பத்தாம் அத்தியாயம்

## விபூதி யோகம்

### கண்ணன் கூறுவது:

பூய ஏவ மஹாபாஹோ ச்ருணு
மே பரமம் வச: ।
யத்தே அஹம் ப்ரீயமாணய
வக்ஷ்யாமி ஹிதகாம்யயா ॥ (1)

''அகன்றே தோள்கள் உடையவனே! மேன்மையைத் தரும் என் அறிவுரைகளை மறுபடியும் கேட்பாயாக! கேள்விகளைச் கேட்பதில் ஆர்வம் கொண்டுள்ள உனது நலம் கருதியே உனக்கு நான் கூறுகின்றேன்.

(பகவத் விபூதி என்பது 'இறை உண்மை ' 'இறையாற்றல்' 'இறைமேன்மை' என்று பொருள்கொள்ளலாம். முன்பு கூறிய சில இறை உண்மைகளை மறுபடியும் இவ் அத்தியாயத்தில் வலியுறுத்தும் வகையில் கூறுப்படுகிறது. கேள்வியின் தன்மையைப்பொறுத்து, கேள்வி கேட்பவரின் பெருமை பேசப்பெறும். உண்மையான தேர்ந்த அறிவுள்ள ஆசிரியன் எதிர்பார்ப்பது தன் மாணவனிடமிருந்து தேர்ந்த கேள்விகளைத்தான். தூர் வார வாரத்தான் ஊற்றுநீர் பெருகும். மாணவனின் கேள்விகளும் ஆசிரியரின் பதில்களும், அறிவின் வளர்ச்சிக்கு அடிப்படையாகும். இந்த அறிவின்

விளக்கங்களால் மற்றைய மாணவர்களும் பயனுறுவர். இதனைத்தான் ஒரு நல்லாசிரியர் எதிர்பார்ப்பார். அந்த உணர்வில்தான் ஆசிரியானான கண்ணன் தன் மாணவனான அர்ச்சுனனிடம் அதிகமான சந்தேகங்களை எதிர்நோக்குகின்றான். அவன் வழி, இந்த சமுதாயத்திற்கு வழிகாட்டுகின்றான் நம் கீதாசாரயன்.)

ந மே விது: ஸுரகணா
ப்ரபவம் ந மஹர்ஷய: ।
அஹமாதிர்ஹி தேவானாம்
மஹர்ஷீணாம் ச ஸர்வச: ॥ (2)

''வானுலகில் வாழும் தேவர்களும், மாமுனிவர்களும் என் ஆதியை உணரமாட்டார்கள். ஏனெனில் அந்த தேவர்களும், முனிவர்களும் தோன்றிட நான்தான் முதல் காரணமாக விளங்குகின்றேன்.''

(இங்கு இறைவனின் ஆதி அந்தம் இல்லாத தன்மை புழப்படுகிறது. புல் , பூண்டு முதல் தேவர்கள் வரை யாவும் அவனிடமிருந்து அவன் இச்சையிலிருந்து தோன்றியவை தாம். தன் குழுந்தையின் பிறப்பை ஒரு தாய் அறிவாள். ஆனால் குழந்தைக்குத் தன் தாயின் பிறப்புத் தெரியாது. அதுபோல தோன்றிய தங்கள் தோற்றத்தை தெரிந்து கொள்ள முடியாது.)

யோ மாமஜமனாதிம் ச வேத்தி
லோக மஹேச்வரம் ।
அஸம்மூட: ஸ மர்த்யேஷு
ஸர்வபாபை: ப்ரமுச்யதே ॥ (3)

''யார் என்னை ஆதி இல்லாதவன் என்றும் , பிறப்பு, பிறப்பு இல்லாதவன் என்றும், உலக உயிர்களுக்குத் தலைவன் என்றும் உணர்கின்றானோ அவன் மனமயக்கத்திலிருந்து விடுபட்டவனாவான்; மேலும் பாவங்களின்றும் விடுபடுவான்.''

(உலகில் ஒன்றின் அழிவிலிருந்துதான் மற்றொன்று தோன்றுகின்றது. விதை அழியும் போதுதான் அது மரமாகின்றது. ஆனால் இறைவனோ அழிவில்லாதவன்; பிறப்பு இறப்பு அற்றவன். நகரும், நகரா உயிர்கள் யாவும் அவ்இறைவனிட மிருந்துதான் தோன்றின. அழியும் உயிர்கள்தாம் என்று தெரிந்த

மானுடம் அழியா அப்பரம்பொருளை அறிந்து கொண்டால், இறைவனின் மேன்மை, ஆற்றல், தன்மை புரியவரும். இதை மனிதன் தன் மெய்யுணர்வால் மட்டும் புரிந்து கொள்ள முடியும். அப்போதுதான் அவன் மயக்க அறிவிலிருந்து விடுபட்டவனாகின்றான். இறுதியில் அவ் இறை உணர்வைப்பெற்று, அவ் இறைவனையே காணப்பெறும் பேறு பெறுகின்றான். அந்தக்கணமே, அவன் பாவங்களிலிருந்து விடுபடுகின்றான்.

புத்திரஞானமஸம்மோஹ: க்ஷமா
ஸத்யம் தம:சம:।
ஸுகம் து:கம் பவோ அபாவோ
பயம் சாபயமேவ ச ॥ (4)

அஹிம்ஸா ஸமதா துஷ்டிஸ்தபோ
தானம் யசோ அயச: ।
பவந்தி பாவா பூதானாம் மத்த:
ஏவ ப்ருத்கவிதா: ॥ (5)

'' அறிவு, பேரறிவு மனக்குழப்பமின்மை, பொறுமை, சத்தியம், அடக்கம், அமைதி, இன்பம், பிறப்பு, இறப்பு, அச்சம், அச்சமின்மை, அஹிம்சை, மனசமநிலை, மனநிறைவு, தவம், தானம், புகழ்ச்சி, இகழ்ச்சி ஆகிய பலவிதமான குணங்கள் உயிர்களுக்கு என்னிடமிருந்துதான் உண்டாகின்றன.''

(இவ்விரண்டு செய்யுள்களிலும் மனிதனிடம் விளங்குகின்ற பல்வேறு குண உணர்வுகள் கூறப்படுகின்றன. மனிதனின் அறிவுநிலை, உணர்வு நிலை ஏற்ப இக்குணங்கள் அவனிடம் பரந்து விளங்குகின்றன. ஆம் மனிதனின் வினைகளுக்கு ஏற்ப இவ்வுணர்வுகள் அவனிடம் வெளிப்படுகின்றன. இவ்வெளிப்பாடு இறைவனால் அளிக்கப்படுகின்றது.)

மஹர்ஷய: ஸப்த பூர்வே
சத்வாரோ மனவஸ்ததா ।
மத்பாவா மானஸா ஜாதா யேஷாம்:
லோக இமா: ப்ரஜா : ॥ (6)

''ஏழு மகரிஷிகளும் முன்பிருந்த மனுக்கள் நால்வரும் என் ஆற்றலோடு என் மனதில் தோன்றியவர்களாவர். உலகிலுள்ள உயிர்கள் யாவும் அவர்களிடமிருந்தே வந்தவையாகும்.''

(ஸர்வேஸ்வரானாகிய அப்பரமனின் மீதுகொண்ட தீவிர ஞான பக்தியின் காரணமாக அப்பரமனின் தன்மையை ஏழுமாமுனிவர்களும், பதினான்கு மனுக்களில் முக்யமான நான்கு மனுக்களும் பெற்றனர். ஆகவே அவர்கள் அப்பரம்பொருளின் இதயத்திலிருந்து -மனத்திலிருந்து அறிவிலிருந்து, உணர்விலிருந்துதோன்றியவர்களாவர். அதனால் அவர்கள்முறையே ஞானத்தையும், ஆனந்தத்தையும் இந்த உலகில் பரப்பினார்கள். ஆம் அவ் உயிர்களின் பிறப்பும், வளர்ப்பும் அவர்களால் புகுத்தப்பட்டன. பிருகு, மரீசி, அத்ரி புலகர், அங்கிரஸ், கிரது புலஸ்தியர் ஆகியோர் ஏழு மாமுனிவர்களாவர் சுவாரோசிஷர், சுவாயம்புவர், ரைவதர், உத்தமர் ஆகியோர் நான்கு முக்கிய மனுக்களாவர்.)

**ஏதாம் விபூதிம் யோகம் ச மம யோ**
**வேத்தி தத்வத: ।**
**ஸோ அவிகம்பேன யோகேன**
**யுஜ்யதே நாதர் ஸம்சய: ॥ (7)**

''என்னுடைய இந்த பெருஞ்சிறப்புக்களையும், யோகத்தையும்(என் திருக்குணங்களையும்) உள்ளதை உள்ளபடி அறிபவன், சலனமற்ற யோக நிலையை அடையப்பெறுவான். இதில் சிறிதும் ஐயமில்லை.''

(உலக உயிர்களின் தோற்றத்திற்கும், இயல்புக்கும் அவ் இறைவனே மூல காரணமாவதால் அவ் இறைக்குணங்களே அவனது சிறப்புக்களாகப் பேசப்பெறுகின்றன. அத்தகு சிறப்பினை அறிந்தோர்- அவன் பெருமையை உணர்ந்தோர் எந்தவிதமான சந்தேகத்திற்கும் இடம் கொடுக்காத, குழப்பங்களுக்கு உட்படாத வகையில் திகழ்ந்து தளராத பக்தியுடன் உறுதியுடன் விளங்குவர்.)

**அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்த:**
**ஸர்வம் ப்ரவர்த்ததே ।**

**இசி மச்வா பஜந்தே மாம் புதா**
**பாவஸமன்விதா: ॥** (8)

''நானே எல்லாவற்றிற்கும் பிறப்பிடமாவேன். இவ்வுலகம் முதற்கொண்டு எல்லாம் என்னிடமிருந்தே பரந்து விளங்குகின்றன. இந்த உண்மையை அறியும்படியான ஞானிகள் என்னையே பக்தி உணர்வுடன் வழிபடுகின்றனர்.

*(எவ்வாறு தாவரங்களுக்குப் பூமியானது ஆதாரமாக இருக்கின்றது என்பதை அறிந்த குடியானவன் அந்நிலத்தின்மீது எருவிடுதல், பண்படுத்துதல் போன்ற செய்கைகளின் மூலம் அதிக ஈடுபாடு கொள்கின்றுனா, ஞானியானவன் இந்த உலக இயக்கத்திற்கு மூலகாரணன் அவ் இறைவனே என்று அறிந்து காமம், கோபம், பொருமை, மயக்கம் போன்றவற்றை விடுத்து, பக்திமூலம் அப்பரமனையே நாளும் நாடுகின்றுன்.)*

**மச்சித்தா மத்கதப்ராணு**
**போதயந்த: பரஸ்பரம் ।**
**கத.ந்தஸ்ச மாம் நித்யம்**
**துஷ்யந்தி சரமந்தி ச ॥** (9)

''அறிவை என்பால் வைத்து, உயிரை எனக்குரியதாக்கி, யாவரும் என் இயல்பை விளக்கிக் கொண்டு, எங்கும் எல்லோரும் என்னையே புகழ்ந்து கூறியும், மனநிறைவுடனும், மகிழ்ச்சியுடனும் (ஞானிகள்) விளங்குவார்கள்.''

*(விரும்பியதைக் கொணர்ந்துதரும், தனக்கு எப்போதும் பாதுகாப்புத்தரும் தந்தையின் பால் ஒரு குழந்தைக்கு எவ்வாறு ஒரு பிடிப்பும், பாசமும், அன்பும் இருக்குமோ, அதேபோன்று, தன் பிறவிக்கும், முக்திக்கும் மூலகாரணன் அவ் இறைவன் என்று அறிந்திடும் பக்தன் அவ்இறைவனுக்கே தன் அறிவையும், தன் உணர்வுகளையும் இறுதியில் தன் உயிரையும் அர்ப்பணித்துவிடுகிறுன். இறைவன் பற்றிய நினைப்பே, பேச்சே. செயலே பக்தனது அன்றுட வாழ்வியலாக அமைந்துவிடுகின்றன.)*

**தேஷாம் ஸந்தயுக்தானாம் பஜதாம்**
**ப்ரீதிபூர்வகம் ।**
**ததாமி புத்தியோகம் தம்யோன**
**மாமுபயாந்தி தே ॥ (10)**

''என்றென்றும் யோக முயற்சியை மேற்கொண்டு பக்தியுடன் என்னை வணங்குபவர்களுக்கு (நான்) புத்தி யோகத்தை அளிக்கின்றேன். அதனால் அவர்கள் என்னையே வந்தடைகிறார்கள்.''

(எங்கும் எதிலும் இறை உண்மையை அறிந்து கொண்டவர்கள் அவ்இறைவனை நினைப்பதிலேயே, அவ்வுண்மையைப் பிறர்சொல்லக்கேட்பதிலேயே, அவன்தம் பொருமையைப் பிறருக்கு உபதேசிப்பதாலேயே மகிழ்வு பெருகின்றனர். அதுவே ஒரு யோகமாக அவர்களுக்கு அமைந்து விடுகின்றது. அதுபோது இறைவன் அவர்களுடைய அறிவை மெய்யறிவு எனும் ஞான ஒளியுடன் ஒளிரச்செய்கின்றான். அது போது முக்தி எனும் பேரின்பம் அவர்களுக்கு ஒரு எளிதான இலட்சியமாக அமைந்துவிடுகின்றது.)

**தேஷாமேவானுகம் பார்த்த**
**மஹமக்ஞானஜம் தம: ।**
**நாசயாம்யாத்ம பாவஸ்தோ**
**ஞானதீபேன பாஸ்வதா ॥ (11)**

''நான் அவர்கள்பால் செலுத்திடும் அருளெனும் கருணை கொண்டு,அவர்களது உள்ளத்தில் புகுந்து மெய்ஞ்ஞானசுடர் ஒளியால், அறியாமையால் அவர்களுக்குள் ஏற்படும் இருட்டினை விலக்கி விடுகிறேன்.''

(ஜீவாத்மாவின் மனபரிபக்குவத்திற்கே இறைவன் இவ்வுலகைப் படைத்துள்ளான். பேரின்பமான முத்திநிலையின் வெற்றி, பிறக்கும்போது மெய்யுணர்வுடன் பிறத்தல் அல்ல. பிறந்தபின்பு மனதை, அறிவை, உணர்வுகளை இறைநிலைக்கு மேம்படுத்துவதுதான் மனிதனின் சாதனையாகும். மனிதன் ஓர் அடி முன்வந்து கை நீட்டினால், அவனைக் காப்பாற்ற இறைவன் பத்தடி கீழிறங்கி தன் அபயக்கரங்களை நீட்டுவான். இதுதான் அவதாரத்தின் நோக்கமாகும். இறைவன் நம்

*இதயமாகிய கோயிலில் வந்தமர வேண்டுமானால், முதலில் நம் இதயம் தூய்மையானதாக அமைதல் அவசியமாகும். ஞான ஒளி நம் உள்ளத்தில் என்றென்றும் ஒளிர வேண்டுமானால், நம்மிடம் பக்தி எனும் எண்ணெயும் இறைமனனம் எனும் தூயக்காற்றும், தேர்ந்த சிந்தனை எனும் திரியும், மயக்கமற்ற உள்ளமெனும் அகலும் நம்மிடம் இருத்தல் வேண்டும். அப்போதுதான் அந்த ஞானத்தீயில் அந்தக் கடவுளைக் காணமுடியும்.)*

## அர்ச்சுனன் கூறுவது

பரம் ப்ரஹ்ம பரம் பவித்ரம்
பரமம் பவான் ।
புருஷம் சாச்வதம் திவ்யமாதி
தேவமஜம் விபும் ॥ (12)

ஆஹுஸ்த்வாம்ருஷய: ஸர்வே
தேவர்ஷிர் நாரதஸ்ததா ।
அஸிதோ தேவலோ வ்யாஸ:
ஸ்வயம் சைவ ப்ரவீஷி மே ॥ (13)

*''நீரே (பகவானே) உயர்வான மூலப்பரம்பொருளாகவும், உயர்ந்த அடைக்கலமாகவும், புனிதத்துடன்கூடிய தூய்மையானவராகவும் விளங்குகிறீர். தேவமுனிவரான நாரதரும் மற்றும் அஸிதர், தேவலர், வியாசர் போன்ற மற்றைய முனிவர்களும் உங்களையே நித்யமானவர், ஒளிபொருந்திய புருஷர், ஆதிமுதலோன், பிறவியில்லாதவன், எங்கும் நீக்கமற நிறைந்தவன் என்று கூறுகின்றனர். இப்போது தாங்களும் எனக்கு இவ்வுண்மையை எடுத்துக்கூறுகின்றீர்.''*

*(இச்செய்யுட்களில் இறைவனான விஷ்ணுவின் ஆற்றல்கள் அரச்சுனன் அறிந்துகொள்ளும் முகத்தான் நமக்கு மீண்டும் உணர்த்தப்படுகின்றன. ஞானத்தின் இருப்பிடம் பகவான். அதனை அறிந்தவர்கள் முனிவர்கள். இதனை அர்ச்சுனன் தன் அனுபவத்தில் அறிந்து இதுபோது வெளியிடுகின்ருன்.)*

ஸர்வமேத்ருதம் மன்யே யன்மாம்
வதஸி கேசவ ।
ந ஹி தே பகவன் வ்யக்திம் விதுர்
தேவா ந தானவா : ॥ (14)

''கேசவா!எனக்கு நீங்கள் கூறுவதெல்லாம் உண்மையென்றே கருதுகின்றேன். பகவானே! உன்னுடைய தோற்றத்தை தேவலோகத்தாரோ, மண்ணுலகத்தாரோ அறியவில்லை.''

*(ஆறுகுணங்களாகிய ஆற்றல், அறம்,செல்வம், பலம், மனஉறுதி, ஒளி ஆகியன உடையவன் பகவான் எனப்படுவார். இதனால், உயிர்களின் இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகியவற்றைத் தெள்ளத்தெளிவாக அறிந்தவன் அவன். இத்தகு பெருமைமிகு பகவானின் அவதார இரகசியத்தினை மேலுலகத்தவர்களே அறியமுடியாத போது, சாதாரண மனிதர்கள் எங்கே அறிய இயலும். தோற்றத்தின் காரணத்தை அந்த பரம்பொருளே கூறினால்தான் உண்டு. அபபோதுதான் பக்தர்கள் சற்றே அந்த உண்மையை அறிய ஏதுவாகிறது. இதனைத்தான் அர்ச்சுனன் மூலம் பகவான் செய்து முடிக்கின்றார்.)*

ஸ்வயமேவாத்மானாத்மானம் வேத்த
த்வம் புருஷோத்தம ।
பூதபாவன பூதேச தேவதேவ
ஜகத் பதே ॥ (15)

''புருஷோத்தமனே! உலக உயிர்களைப் படைத்தவனே! அவ்வுயிர்களுக்குத் தலைவனே! தேவாதிதேவனே! இவ் அண்டங்களுக்கெல்லாம் நாயகனே,உம்மை உம்மால்தான் உள்ளபடி அறியமுடியும். (எங்களால் முடியாது.'')

*(மற்ற புருஷர்களாகிய உயிர்களைவிட எல்லா வகையிலும் பகவான் உயர்ந்தவராகையால்,அவனே புருஷோத்தமனாவான். இவ்வுலக உயிர்களைப் படைத்து அவற்றை ஆண்டு தனது மேலான தன்மையை இறைவன் காட்டுகின்றான். இத்தகு ஆற்றலையுடைய பகவானை அவனேதான் அறிந்து கொள்ள*

*முடியும். ஒரு வைரக் கல்லின் மதிப்பை ஒரு காய்கறி விற்பவனாலோ, ஒரு விஞ்ஞானியாலோ எடை போட இயலாது. அதன் மதிப்பை ஒரு வைர வியாபாரிதான் அறியமுடியும். அது போன்று பரம் பொருளின் பெருமையை அவனன்றி வேறெவரும் அறியார்.)*

**வக்துமர் ஹஸ்யசேஷேண திவ்யா**
**ஹ்யாத்மவிபூதய: ।**
**யாபிர்விபூதிபிர்லோகானிமாம்**
**ஸ்த்வம் வ்யாப்ய திஷ்டஸி ॥** (16)

*''எந்த வகையான மேலான குணஇயல்புகளைக் கொண்டு இந்த உலகத்தில் நிரம்பியுள்ளீரோ அந்த குணயியல்பு களைச்சிறிதும் விடாது தாங்களே (எனக்கு) விளக்குவீராக''.*

*(ஒரு யானையின் பலம் அந்தயானையே தன் செயலால் காட்டும் போதுதான் நம்மால் அறிய முடிகிறது. அது போன்று இறைவனின் தெய்வீகச் சிறப்பு, அவன் விளக்கினால்தான் நாம் அறிய ஏதுவாகும். மனிதர்களால் அவன் பெருமையை அறியமுடியாது. பகவானால்தான் முடியும். மேலும் அது இறைவனின் பக்தர்கள்பால் காட்டவேண்டிய கடமையுமாகும்.)*

**கதம் வித்யாமஹம் யோகிம்ஸ்த்வாம்**
**ஸதா பரிசிந்தயன் ।**
**கேஷு கேஷு ச பாவேஷு சிந்தய:**
**அஸி பகவான்மயா ॥** (17)

*''யோகீ! எப்போதும் உங்களையே நினைத்து நான் எவ்வாறு உங்களை அறிவது? பகவானே! எந்தெந்த வகைகளில் நீங்கள் என்னால் சிந்திக்கத் தக்கவர் ஆவீர்?''.*

*(இங்கு பகவான் 'யோகீ' என்று விளிக்கப்படுகிறுர். அதாவது 'யோகமாயை'யினால் அப்பகவான் பிற உயிர்களிடமிருந்து தனித்து இருக்கிறுன். இங்கு அர்ச்சுனன் மனப்போக்கில, சிந்தனையில் இருந்துகொண்டு, இறைவனை எவ்வாறு தியானிக்கவேண்டும், மனதில் இருத்திக்கொள்ளவேண்டும்*

*என்று ஒரு பரந்த மனப்பான்மையில் "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" எனும் அளவில் செயல்படுகின்றான். சாதாரண மனிதனுக்கு உலகாயுத ஆசைகளின் காரணமாக இறைவனைச் சித்தித்தல் என்பது அரிதாக விளங்கிடும் போது அர்ச்சுனன் அவர்கள் சார்பில், இறைவனைப்பற்றி சித்தித்தல் எவ்வாறு என்று பகவானிடமே விளக்கம் கேட்கின்றான். இந்த சிந்தனை, விளையாட்டுப் பொருட்களைப் பார்க்கும் போதெல்லாம் தன் குழந்தையை நினைத்திடும் ஒரு தாயின் சிந்தனை போன்று விளங்குதல் வேண்டும். இந்த உறவினைத்தான் அர்ச்சுனன் எதிர்பார்க்கின்றான்.)*

**விஸ்தரேணாத்மனோ யோகம்**
**விபூதிம் ச ஜனார்த்தன ।**
**பூய: கதய த்ருப்திர்ஹி சருண்வதோ**
**நாஸ்தி மே அம்ருதம் ॥** (18)

*"ஜனார்த்தனா ! உங்களுடைய யோக சக்தியினையும், மேலான ஆற்றல்களையும் மறுபடியும் எமக்கு விளக்கி அருள்வீராக! ஏனெனின் அமுதம் போன்ற உங்கள் உபதேசங்களில் என்றுமே எமக்குச் சுவை குறையவில்லை."*

*(மனிதன் இறைவனை வணங்குவது இம்மை மறுமை பயன்களுக்காகவேதாம். இப்பயன்களைத் தருவது யோகம் எனும் இறைவனின் சக்தியும், அவ்இறைவனின் ஆற்றல்களான விபூதிகளுமாகும். இவ் இரண்டினையும் விளக்கிடும் இறைவனின் உபதேச வார்த்தைகள் நினைக்க நினைக்க, அனுபவிக்க அனுபவிக்க இனித்திடும் அமுத மொழிகளாகும். இவ் அமுதத்தைச் சுவைத்திட சுவைத்திட அதன் இனிமை பெருகவே செய்யும். அதனைப் பக்தர்கள் பருக இவ்வேண்டுகோள் மூலமாக ஒரு வாய்ப்பினை அர்ச்சுனன் அமைத்துத் தருகின்றான்.)*

## பகவான் சொன்னது:

**ஹந்த தே கதயிஷ்யாமி திவ்யா**
**ஹ்யாத்ம விபூதய: ।**

ப்ராதான்யத: குருச்ரேஷ்ட
நாஸ்த்யந்தோ
விஸ்தரஸ்ய மே: ॥ (19)

*''அப்படியே கேட்டபாயாக! குருக்களில் சிறந்தவனே! என்னுடைய மேலான சிறப்புகளில் முக்யமானவற்றை இப்போது நான் கூறுகின்றேன். ஏனென்றால் என்னுடைய ஆற்றல்களுக்கு ஓர் எல்லை இல்லை.''*

*(உலக உயிர்களும் இயற்கையும் இறைவனின் படைப்பாகும். அப்படைப்பே அவ்இறைவனின் ஆற்றல்களைப் படம்பிடித்துக் காட்டுவனவாகும். இவ் ஆற்றல்களின் தன்மையும், பெருமையை சொல்லிமாளாது. இருந்தாலும் இறைவன் இங்குத் தன்னுடைய சில ஆற்றல்களைப் பக்தனுக்குக் கூறி, அதனாற்றான் தன்னுடைய மற்றைய ஆற்றல்களை புரியவைக்கின்றான்.)*

அஹமாத்மா குடாகேச ஸர்வ பூதா
சயஸ்தித: ।
அஹமாதிஸ்ச மத்யம் ச
பூதானாமந்த ஏவ ச: ॥ (20)

*''உறக்கத்தை வென்றவனே! (அர்ச்சுனன்) என் உடம்பாக உள்ள எல்லா உயிரினங்களுள்ளும் நான் ஆத்மாவாக விளங்குகின்றேன். அவ்வுயிர்களின் தோற்றத்திற்கும், வாழ்வுக்கும், மறைவிற்கும் நானே காரணமாக உள்ளேன்.*

*(உறக்கத்தை வென்றவன் என்றும் எதனையும் எளிதில் புரிந்து கொள்ளவான். ஆம் விழிப்புடன் இருப்பவனுக்கே -ஆதம் போதத்தில் விழிப்பு பெற்றவனுக்கே, பரமாத்மாவான இறைவனின் பெருமை குழப்பமின்றி அறியமுடியும். பரமாத்மாவான இறைவன் ஜீவாத்மாக்களுள் வசிப்பதால்தான் தோற்றமும் வளர்ச்சியும் மறைவும் ஏற்படுகின்றது.)*

ஆதித்யானாமஹம் விஷ்ணுர்ஜ்யோதி-
ஷாம் ரவிரம்சுமான்: ।
மரீசிர்மருதாமஸ்மி நக்ஷத்ராணு-
மஹம் சசீ: ॥ (21)

*''ஆதித்யர்களுள் நான் விஷ்ணுவாக இருக்கின்றேன். ஒளியைத் தருபவற்றுள் நான் சூரியன்; காற்றுக்களில் நான் வாயு; விண்மீன்களில் (நட்சத்திரங்களில்) நான் சந்திரன்.''*

*(மாம்பழங்கள் எல்லாமே பொதுவாக இனிமை கொண்டவைதாம். இருந்தாலும் 'மல்கோவா' எனும்போது மாங்கனிகளில் அது முதலிடம் பெறுகிறது. இம்முறையில் ஒவ்வொரு இனத்திலும், வகையிலும் மிகச்சிறப்பு பெற்று விளங்கும் தனித்தன்மை-பாகுபாடு அமைந்துள்ளது. அந்த வகையில், 'சூரியன்'கள் (ஆதித்யர்கள்) ஒவ்வொரு மாதத்திற்கும் ஒன்று என்ற விகிதத்தில் 12 சூரியன்கள் பெற்று இருந்தாலும், தைமாத சூரியனான விஷ்ணுவுக்கு ஒரு தனிச்சிறப்பு உண்டு. உத்தாராயண புண்ணிய காலத் தொடக்கத்தை இந்த தை மாதம் கொண்டு விளங்குகிறது. இந்தப் புண்ணிய காலத்திற்காகவே காத்திருந்து உயிர்த் துறந்தவர் பீஷ்மாசாரியார். மேலும் பனியின் கொடுமையைத் தடுத்து இதமான வெப்பத்தைத் தருவது. புதிய தான்ய அறுவடை நடைபெறுவது இந்தத் தைமாதத்தில்தான். ஆகவே இந்தத் தைமாத சூரியக் கடவுளான விஷ்ணுவாக தான் இருப்பதாகக் கண்ணன் கூறுகின்றான். ஆகவே இயற்கையாவும் அக்கடவுளின் ஆற்றல்களாக விளங்கிடினும், அவ்இயற்கையிலும் இறைவனின் தனிப்பெரும் ஆற்றலைக் காணும்படியான ஒரு பகுதியில் இறைவன் தன்னை வெளிப்படுத்த நினைக்கின்றான். எல்லோரும் பக்தர்கள்தாம், இருந்தாலும் அவ்இறை உண்மையை உணர்ந்த ஞானியர்கள் உயர்வாகக் கருதப்படுகின்றனர். அதனால்தான் அவர்களை சமயத் தலைவர்களாக சமய வழிகாட்டிகளாக நாம் ஏற்றுக் கொள்கிறோம். அத்தகு ஞானியர் இடத்தில் கடவுள் தன்னை வெளிப்படுத்திக் கொள்கின்றான்.)*

தேவானாம் ஸாமவேதா அஸ்மி
தேவானாமஸ்மி வாஸவ: ।
இந்த்ரியாணும் மனஸ்சாஸ்மி
பூதானா மஸ்மி சேதனா: ॥ (22)

''வேதங்களுள் நான் சாமவேதம்; தேவர்களுள் தான் இந்திரன் ;இந்திரியங்களுள் நான் மனமாக இருக்கின்றேன்; உயிர்களில் நான் உணர்ச்சியாக விளங்குகின்றேன்.''

(ரிக், யஜுர், சாம, அதர்வண ஆகிய நான்கு வேதங்களில் இறைவன் தன்னை சாமவேதமாக இருப்பதாகக் கூறுகிறார். ஏனெனில்,மற்றைய வேதங்களைப் காட்டிலும் , சாமவேதம் இசையுடன் ஓதக்கூடியது. பொருள் தெரியாவிட்டாலும் அதன் உச்சரிப்பு மனதையும், கருத்தையும் கவரவல்லது. இராவணன் 'சாமவேத'கீதம் பாடியே இறைவன் அருள் பெற்றதாக இந்து சமயம் கூறும். விஷ்ணு ஸஹஸ்ர நாமங்களில் 'ஸாமக' என்பது இறைவனின் ஒரு பெயராகும். தேவர்கள் எல்லாருக்கும் இந்திரன் தலைவனாக இருப்பதால், தான் அவனாக இருப்பதாகக் கூறிகிறார். மனம் போனபடிதான்-அதன் சொல்படிதான் -நம் புலன்கள் செயல்படுகின்றன. நல்லதும், கெட்டதும் அந்த மனிதன் சொல்படிதான் நடக்கின்றன. ஆகவே அந்த மனமாக இறைவன் திகழ்கின்றானாம்.உயிர்களின் ஆற்றல் அவற்றின் உணர்ச்சிகளில்தான் உள்ளது. உணர்ச்சி இல்லையென்றால் உயிர் இருந்தும் பயனில்லை.அது ஒரு 'நடை பிணம் ' நிலைதான். அறிவு வளர, அறிவு பயன்பட உணர்ச்சி இன்றியமையாதது. உணர்ச்சியின் உந்துதலால், அறிவின் மேம்பாட்டால் நாம் அந்த இறைவனின் ஆற்றலைப் பெருமானை அறியமுடிகிறது. ஆகவே இறைவன் அந்த உணர்வாக அமைகின்றான்.)

ருத்ராணும் சங்கரஸ்சாஸ்மி
வித்தே சோ யக்ஷரக்ஷஸாம் ।
வஹுனாம் பாவகஸ்சாஸ்மி மேரு
சிகரிணு மஹும்: ॥ (23)

''உருத்திரர்களில் நான் (கண்ணன்)சங்கரனாகவும்,யக்ஷரக்ஷகர்களில் குபேரனாகவும், வசுக்களில் நான் அக்னியாகவும், மலைகளில் நான் மேருவாகவும் விளங்குகிறேன்.''

(உருத்திரர்கள் பதினொருபேர் ஆவார்கள். ஒவாதச ருத்ரர்கள் என்று அழைக்கப்பெறுவர்.இவர்கள் சிவனின் அம்சங்களாகக்

கருதப்படுகின்றனர். உருத்ரன் என்றால் அழவைப்பவன் என்பதாகும். இங்கு சங்கரனாகிய ருத்ரன் என்பவன் மக்களுக்கு துன்பம் கொடுத்து அவர்களைப் பண்படுத்துகிறான். கம்சனும் அன்று மக்களை அழவைத்தவன்தான். அதாவது அவர்களுக்கு தீங்கு விளைவித்து அழவைத்தவனாக விளங்கினான். ஆனால் இங்கு சங்கரனானவன் ஒரு மருத்துவன் நிலையில் இருந்து உடலை அறுத்தும், கசப்பான மருந்து கொடுத்தும் நோயாளிகளைக் காக்கும் விதத்தில், மக்களுக்குப் பல பிரச்சனைகளைத் தந்து, அவர்கள்தம் மனதைப் பண்படுத்துகின்றான். ஆகவே நன்மை பயக்கும் சங்கரனாக கண்ணன் திகழ்கின்றான். யக்ஷசன் என்றால் பொருளைத் தேடிக் கொண்டு வருபவன். அதாவது சம்பாதிப்பவன். ரக்ஷசன் என்றால் அப்பொருளைக் காப்பாற்றுவன். இவ்விருவர்களும் குபேரனது படைகளாகின்றனர் ஆகவே பொருளை ஈட்டுபவனும், காப்பாற்றுபவனுமாகிய நபர்களுள் குபேரனாக கண்ணன் விளங்குகிறான். அதாவது உழைப்பும் சேமிப்பும் கொண்டவனான அக்குபேரனாக அக்கண்ணன் திகழ்கின்றான். நிலம், நீர்க, காற்று நெருப்பு, ஆகாயம், சூரியன், சந்திரன், நட்சத்திரம் ஆகிய எட்டும் வசுக்கள் என்பர். (அஷ்டவசுக்கள்) இவற்றுள் அக்னியாவனவன் பல்வேறு விதங்களில் உருவங்களில் உலக இயக்கத்திற்குப் பயன்படுவதால் அவ்அக்னியாக பகவான் திகழ்கின்றான். அதேபோன்று தேவர்கள் வாழும் இடமான மேருமலை மலைகளுள் சிறந்ததாகக் கருதப்படுகிறது. ஆகவே அம்மேரு மலையாக பகவான் விளங்குகின்றான்.)

புரோதஸாம் ச முக்யம் மாம் வித்தி
பார்த்த ப்ருஹஸ்பதிம் ।
ஸேனானீனாமஹம் ஸ்கந்த:
ஸரஸாமஸ்மி ஸாகர: ॥ (24)

''பார்த்தா! மறை ஓதுபவர்களில் நான் பிரகஸ்பதி என்பதை அறிந்து கொள்வாயாக! படைத்தலைவர்களுள் கந்தனாகவும், நீர்நிலைகளுள் கடலாகவும் நான் விளங்குகிறேன்.''

(தேவர்களுக்குத் தலைவனாக இருப்பவன் இந்திரன். அவ் இந்திரனுக்கு குருவாக இருப்பவர் பிரகஸ்பதி எனும் மாமுனிவர். அத்தகு பெருமைமிகு அறிஞரான பிரகஸ்பதியிடம் இறைக்குணங்களை எளிதாக காணமுடிந்தது.ஆகவே இறை அம்சமான பிரகஸ்பதியாக தான் இருப்பதாகக் கண்ணன் கூறுகின்றான். பார்வதிபிள்ளைகளுள் ஆற்றலும் அறிவும் கொண்டவனாக முருகன் விளங்குகின்றான். மேலும் அழகின் இருப்பிடமாகவும் திகழ்கின்றான்.ஆகவே ஆற்றலும் அழகும்,அறிவும் இருக்குமிடமே இறைவன் வாழும் இடமாகும்.ஆகவே அம்முருகனாக (கந்தனாக) பகவான் விளங்குகின்றான்.எதனையும் தூய்மைப்படுத்தும் பண்பினைக் கொண்டது நீர். அந்நீரே கடலாக அமையும்போது அதன் ஆற்றல், பெருமை உயருகிறது. மேலும் விலை மதிக்கமுடியாத இயற்கை வளங்களை, அதிசயங்களைக் கொண்டது கடல். ஆகவே அக்கடலாக இறைவன் இருக்கின்றான்.)

மஹர்ஷீணாம் ப்ருகுரஹம்
கிராமஸ்ம்யேகமக்ஷரம் ।
யக்ஞானாம் ஜபயக்ஞோ அஸ்மி
ஸ்தாவராணாம் ஹிமாலய: ॥ (25)

'' மாமுனிவர்களுள் நான் பிருகு.சொற்களில் நான் பிரணவஎழுத்தாவேன்.வேள்விகளில் நான் ஜப வேள்வியாகத் திகழ்கின்றேன். இயங்காமல் நிலைத்த பொருள்களில் நான் இமயமாக விளங்குகிறேன்.

(பிரம்மாவினால் இனம் பெருக பிறப்பிக்கப்பட்ட மானச பிள்ளைகளில் ஒருவர் பிருகுமாமுனிவர். அவர் தவத்தின் பிறப்பிடமாகவும் இறை ஆற்றல் மிகந்தவராகவும் கருதப்பிடுகிறார். ஆகவே மாமுனிவர்களில் பிருகுவாக பகவான் திகழ்கின்றார். எழுத்துக்கள் பல சேர்ந்தாலும் அவற்றிற்குப்பொருள் (அர்த்தம்) இல்லாவிட்டால் அவ்வெழுத்துக்களால் பயனில்லை. இவ்வாறிருக்க ஓரெழுத்துக்குப் பொருள் இருக்குமா? ஆம் 'ஓம்' எனும் பிரணவ எழுத்தானது அந்தப் பரம்பொருளையே குறிப்பதாகும்.

ஆகவே எழுத்துக்களில் அத்தகு பெருமைமிகு, ஆற்றல்மிகு, புனிதமிகு ஒரெழுத்தாக கண்ணன் விளங்குகின்றான். ஜீவாத்மா தன்னை அப் பரம் பொருளுடன் இணைத்துக் கொள்ளக்கூடிய வினைமுயற்சி எதுவோ அது ஒரு புனித வேள்வியாகக் கருதப்படுகிறது. இத்தகு பல்வகை முயற்சிகளின் வெளிப்பாடாக விளங்கிடும் வேள்விகளில் சிறந்தது-எளிமையானது ஆற்றல்மிக்கது-இறை நாமத்தைச் சொல்லும் செயலாகும். இதுவே 'ஜப யக்ஞம்' என்று அழைக்கப்பெறுகிறது. ஆம் இறைவனோடு மனிதனது எண்ணம் ஒன்றாகக்கலந்து விடுவதால் இவ் நாம உச்சரிப்பு- நாம ஸ்மரணை ஓர் ஆற்றலுள்ள வேள்வியாக விளங்குகிறது. ஆகவே அந்த 'ஜபயக்ஞ'மாக இறைவன் திகழ்கின்றான். உயிர் இருந்தும் அசையாது இருக்கும் பொருளுக்கு 'ஸ்தாவரம்' என்று பெயர். அத்தகு ஸ்தாவரங்களுள் உயிருடன் இருப்பதாகக் கருதப்படும் (மலை வளருவதாக அறிஞர் கருத்து) மலைகளுள் வானத்தைத் தொடும் உயர்த்தையும், தொடர்ந்து நீண்டு இருக்கும் பெருமையும் கொண்ட இமயமாக பகவான் விளங்குகிறார்.)

அச்வத்த: ஸர்வவ்ருக்ஷாணாம்
தேவர்ஷீணாம் ச நாரத: ।
கந்தர்வாணாம் சிராத: ஸித்தானாம்
கபிலோ முனி: ॥ (26)

''மரங்கள் யாவற்றுள்ளும் நான் அரச மரம்; தேவலோகத்து முனிவர்களுள் நான் நாரதர்; கந்தர்வர்களுள் நான் சித்திரதன்; சித்தர்களில் நான் கபிலமுனியாவேன்.''

(மரங்களில் தலையானதாக விளங்குவதால் அது அரசு மரமாக விளிக்கப்படுகிறது. அம்மரத்தின் இலை, காய், பூ எதுவும் மனிதனின் அன்றாட வாழ்க்கையில் பயன்பெறா. இருந்தும் அது ஆன்மீகத்தின் ஒரு சின்னமாக விளங்குகிறது. இறை உணர்வைத் தூண்டுவதாக அமைந்துள்ளது. ஆகவே மரங்களுள் அவ் அரசமரமாக தான் இருப்பதாக பகவான் கூறுகிறான். மனிதர்களைவிட மேலானவர்களாகக் கருதப்படும் தேவர்கள் யாவருமே முனிவர்களாகக் கருதப்படமாட்டார்.

தத்துவ தரிசனம் அடையப்பெற்றவர்களே தேவ ரிஷிகள் எனப்படுவர். அவர்களுள் சிறந்தபக்திமானும், இறை உணர்வைத்தூண்டும் இசைப்புலமையும், சமுதாய மேம்பாட்டு உணர்வும் கொண்டவராக நாரத மாமுனி இருப்பதால் அவராக தான் இருப்பதாக இறைவன் கூறிப் பெருமைப்படுகின்றார். தேவர்களில் ஒரு பிரிவினர் கந்தர்வர்கள் ஆவர். மருத்துவம், இசை, வேதம், ஆகியவற்றில் தலைசிறந்தவர்கள். இவர்களுள் தலைசிறந்தவன் சித்ரரதன் என்போன். ஆகவே கந்தர்வர்களில் அச்சித்ரரதனாகத் தான் இருப்பதாக பகவான் தெளிவுறுத்துகின்றார். சித்தர்கள் என்போர் பிறவியிலேயே அறம், பேரறிவு, மன உறுதி போன்ற உயர்ப் பண்புகளை உடையவராவர். அவர்களுள் சிறந்தவரான கபில மாமுனிவர் வேதாந்தத்தின் அடிப்படையான சாங்கியதர்சனத்தை விளக்கிய பெருமைக்குரியவர். மேலும் மாகவிஷ்ணுவின் குருவாகவும் அவர் போற்றப்படுகிறார். ஆகவே சித்தர்கள் பிரிவில் தன்னைக் கபிலராக இறைவன் வெளிப்படுத்துகிறார்.)

## பகவான் கூறுவது:

**உச்சை: ச்ரவஸமச்வானாம் வித்தி**
**மாமம்ருதோத்பவம் ।**
**ஐராவதம் கஜேந்த்ராணும்**
**நராணும் ச நராதிபம் ॥** (27)

"குதிரைகளுள் அமுதத்துடன் தோன்றிய உச்சைசிரவஸ்ஸாகவும், யானைகளுள் ஐராவதமாகவும், மக்களுள் அரசனாகவும் நான் விளங்குவதை அறிவாயாக."

(அமுதத்திற்காகப் பாற்கடலை தேவர்களும், அசுரர்களும் கடைந்தார்கள். அப்போது வாழ்க்கைக்குத் தேவையான பல பொருள்களும் தோன்றின. அவ்வாறு தோன்றியவற்றுள் இந்திரன் பெற்றுக்கொண்டது உச்சைசிரவஸ் என்ற அழகுபொருந்திய குதிரையும், ஐராவதம் எனும் வெள்ளையானையுமாகும். மக்களைக் காக்கும் தலைவனே அரசனாவான். அதாவது அவன் காக்கும் கடவுளான

விஷ்ணுவாக விளங்குபவன்.)

ஆயுதானாமஹம் வஜ்ரம்
தேனூனாமஸ்மி காமதுக் ।
ப்ரஜனஸ்சாஸ்மி கந்தர்ப:
ஸர்ப்பாணாமஸ்மி வாஸுகி: ॥ (28)

''போர்க்கருவிகளில் வஜ்ராயுதமாகவும், பசுக்களில் காமதேனுவாகவும், பிறப்புக்குக் காரணமான மன்மதனாகவும், பாம்புகளில் (ஒரு தலை) வாசுகியாகவும் நான் விளங்குகிறேன்.''

(பகவானின் திவ்யாயுதங்கள் சக்கரமும், சங்கும் ஆகும். ஆனால் இறைவன் அவற்றைத் தனது கருவிகளாகக் குறிப்பிடாமல், வஜ்ராயுதத்தைத் தனது ஆயுதமாகக் கூறுகிறான். ஏனெனில் சங்கும் சக்ரமும் இறையம்சங்களாகக் கருதப்படுகின்றன. அவை யாராலும் உருவாக்கப்படவில்லை. ஆனால், உருவாக்கிய ஆயுதமாக வஜ்ராயுதம் விளங்குகிறது. மேலும் வஜ்ராயுதம் எனும் கருவி அரக்கனை அழிக்க ததீசி எனும் முனிவரது எலும்பினால் உருவாக்கப்பட்டது. அம்முனிவர் சிறந்த தவம் , சீலம், இறையருள் மூன்றும் பெற்ற மாமுனிவராவர்.அதனால் அவர் தம் தேகத்தினின்று உருவாக்கப்பட்ட (எலும்பினால்) ஆயுதமானதால் அது அதிக வலிமையும்,ஆற்றலும், பெருமையும் கொண்டதாக விளங்குகிறது. மேலும் உலகில் தீவினை அழிக்க, தன்னையே அழித்து அதற்கு உதவினார் அம்முனிவர். ஆகவே இவ்வாயுதம் ஒழுக்கத்தின் சிறப்பினையும் தியாகத்தின் பெருமையினையும் விளக்கிக்கூறும் .பசுவின் இயல்பு தன் ரத்தத்தையே பிறர்க்கு உணவாகக் கொடுக்கின்றது. அத்தகு பசு இனத்தில் வாரி வழங்கும் இயல்பும் ஆற்றலும் கொண்டகாமதேனுவாக தான் இருப்பதாக இறைவன் கூறுகின்றான். காதலின் இருப்பிடமாக மன்மதன் திகழ்கின்றான்.அக்காதல் தான் உலகத்தின் இன்பபெருக்கத்திற்கு அடிப்படை உணர்வாக அமைகின்றது. இந்த இச்சா சக்தியின் உறைவிடமாக மன்மதன் திகழ்வதால், தான் அம்மன்மதனாக இறைவன் திகழ்கின்றான். பாம்பு ஏதோ

ஒருவகையில் இறையம்சமங்களோடு தொடர்பு கொண்டுள்ளதை கடவுளர்தம் உருவமைதிகளின் மூலம் அறியலாம். மனித சக்தியும் 'குண்டலினி' எனும் பாம்பு வடிவில் உள்ளதாகக் கூறப்படுகிறது. ஆகையால் ஆற்றலும் தெய்வச்சின்னமாகவும் கருதப்படும் பாம்புக்கு முக்கியத்துவம் தரும் வகையில் விஷமுடைய ஒற்றைத்தலை உடைய பாம்புகளில் தான் வாசுகியாக இருப்பதாக இறைவன் இங்குக்கூறுகின்றார்.)

**அனந்தஸ் சாஸ்மி நாகானாம்**
**வருணோ யாதஸா மஹம் ।**
**பித்ருணாமர்யமா சாஸ்மி யம:**
**ஸம்யமதாமஹம் ॥** (29)

''நாகங்களில் அனந்தனாகவும், நீர்த்தெய்வங்களில் வருணனாகவும், (தென்புலத்தார் எனும்) முன்னோர்களில் அரியமானவாகவும், அறவழியிலே யமனாகவும் நான் இருக்கின்றேன்.''

(ஐந்து தலைகளையும், விஷமில்லாததாகவும் கூறப்படுவது அநந்தன் எனும் நாகப்பாம்பு ஆகும். இது விஷ்ணுவுக்குப் படுக்கையாகவும், குடையாகவும் திகழ்ந்து, இறைவனின் ஆற்றலாகத் திகழ்கின்றது. தேவர்களில் சிறந்தவனாகவும், நீர் சம்பந்தப்பட்ட தேவர்களுக்குத் தலைவனாகவும், மேற்குத் திசைக்குத் தலைவனாகவும் விளங்குகின்ற அம்சமாக வருணன் விளங்குகின்றான். இறப்பு மூலம் 'பித்ரு லோகம்' எனும் மேலுலகத்திற்குச் சென்ற முன்னோர்களில் முதலாக இருப்பவன் அரியமான் என்பான். ஆகவே அவன் நம் முன்னோர்களில் முதன்மையானவனாவான். ஆதலால் அவனுக்கு மக்கள் முதல்வழிபாடு மேற்கொள்வர். இறைப் பிரதிநிதியாக விளங்கி, மனிதர்களின் பாவ, புண்ணிய பலன்களுக்கு ஏற்ப நடுவுநிலை தவறாது அவர்களுக்கு நன்மை தீமை ஆகிய சுவர்க்கம், நரகம் எனும் வாழ்க்கையைத் தருபவன் யமனாவான். அவன் தென்திசைக்குத் தலைவனாக விளங்கி தர்மத்தின் காவலனாக செயல் புரிகின்றான்.)

ப்ரஹ்ஸாதஸ்சாஸ்மி தைத்யானாம்
காலः கலயதாமஹம் ।
ம்ருகாணும் ச ம்ருகேந்த்ரோ அஹம்
வைநதேயஸ்ச பக்ஷிணும் ॥ (30)

*''அசுரர்களில் பிரஹ்லாதானாகவும், கணக்கிடுபவர்களில் காலனா(மா)கவும் விலங்குகளில் சிங்கமாகவும், பறவைகளில் கருடனாகவும் நான் விளங்குகிறேன்.''*

*(காச்யபருக்கும் திதி என்பவளுக்கும் பிறந்தவர்கள் தைத்தியர்கள் எனப்படுகின்றனர். இவர்கள் தேவர்களுக்கு எதிரியாவதால் அசுரர்கள் ஆகின்றனர். அத்தகு அசுரர் குலத்தில் பிறந்தாலும் குப்பையில் மாணிக்கம் போன்று சிறந்த அறவோனாகவும், சான்றோனாகவும், பக்தனாகவும் பிரஹ்லாதன் விளங்கினான். அத்தகு சிறப்புமிக்கோனைத் தன் அம்சமாக வெளிக்காட்டுகிறார் பகவான். யார் தவறு செய்தாலும், காலம் மட்டும் என்றும் எங்கும் தவறு செய்யாது, தன் கடமையைச் செவ்வனே ஆற்றுகின்றது.ஆகவே சிறந்த கணக்காளியான காலமாகத் தன்னை பகவான் கூறிக்கொள்கிறார். அதேபோன்று ஆற்றலும், பெருமிக நோக்கும் கொண்ட சிங்கமாகவும், இறை அம்சமாகக் கருதப்படும் பறவையான கருடனாகவும் தன்னை பகவான் இனம் காட்டுகிறார்.)*

பவனः பவதாமஸ்மி ராமः
சஸ்த்ர ப்ருதாமஹம் ।
ஜஷாணும் மகரஸ்சாஸ்மி ஸ்ரோதஸா
மஸ்மி ஜாஹ்னவீ ॥ (31)

*''தூய்மைப்படுத்துபவர்களில் காற்றாகவும், ஆயுதம் ஏந்தியவர்களுள் இராமனாகவும் , மீன்களுள் மகரமாகவும்,நதிகளுள் கங்கையாகவும் நான் திகழ்கின்றேன்.''*

*(ஐம்பூதங்களுள் காற்றானது எங்கும் எப்போதும் பரவியிருக்கும் தன்மையது.நீர், நெருப்பு, மண் ஆகியன தூய்மையாக இருப்பதற்கும் பிராணவாயு எனும் காற்று தேவையாக உள்ளது. ஆகவே அவ் ஆற்றல்மிகு காற்றாக தான் இருப்பதாக பகவான் கூறுகிறார். கையில் கருவி*

*ஏந்தினால்மட்டும் ஒருவன் வீரனாகமாட்டான். அதனை கையாளும் முறை கொண்டே அவன் தன் திறமை,பெருமை பேசப்பெறும்.அக்கருவியினை அவ்வீரன் நல்லோர்க்கு மகிழ்ச்சியையும்,தீயோர்க்குத் துன்பத்தையும் வழங்கிடப் பயன்படுத்தும் போதுதான் அவ்வீரனுக்குச் சிறப்பு. அறத்தின் நாயகனான இராமனின் வில்லும் அறத்தை காக்கத்தான் பயன்படுத்தப்பட்டது. இராமனால் அவ்வில்லிற்குப் பெருமை ஏற்பட்டது. அத்தகு கருவி ஏந்திய இராமானாக பகவான் விளங்குகிறுர். நீரில் வாழும் மீன் இனமான சுறு பெரும்வலிவு கொண்டதால் மீன்களில் அச்சுறுவாகவும்,நதிகளில் எதையும் தூய்மைப்படுத்தும் தெய்வ ஆற்றல்கொண்டதும், பனி படர்ந்த இமயத்தின் வழிவருவதுமான கங்கையாகவும் தான் இருப்பதாகக் கண்ணபெருமான் கூறுகிறுர்.)*

**ஸர்காணுமாதிரந்தஸ்ச மத்யம்**
**சைவஹமர்ஜுன ।**
**அத்யாத்மவித்யா வித்யானாம் வாத:**
**ப்ரவததாமஹம் ॥** (32)

*''படைத்திடும் பொருள்களில் முதல், நடு மற்றும் முடிவாகவும், வித்தைகளில் ஆதம் வித்தையாகவும் தருக்கம் செய்பவர்களில் வாதமாகவும் நான் இருக்கின்றேன்.''*

*(உயிரினங்களுக்கு முதல், நடு, முடிவு இருப்பது போன்று அவ்வுயிர் இனங்கள் தோன்ற காரணமாக அமையும் ஐம்பூதங்களுக்கும் முதல், நடு, முடிவாக விளங்குவதாகக் கண்ணன் கூறுகின்றுன்.அதாவது ஒரு தங்க நகையை செய்வதற்கு முன்னும், உருக்கிய போதும் தங்கம் எனும் மூலப்பொருள் அழியாது விளங்குவது போன்று இறைவன் திகழ்கின்றுன். கற்க வேண்டிய தத்துவங்களில் சிறந்தது ஆத்ம தத்துவமாகும். அதாவது ஆத்மாவை அறியும் தருணத்து அந்தப் பரமனையே அறிந்தவனாகின்றுன்.இறைவனை அறிந்தவன் அவ்இறைவனாகவே விளங்குவதால் அந்த ஆத்ம தத்துவமே சிறந்ததாகத் திகழ்கின்றது. தருக்கம் அல்லது வாதிப்பது என்பது உண்மையை அறியும் செயலாகும். இந்த தருக்கமானது வாதம்,*

கல்பம், விதண்டை என்று மூன்று வகையாகும். இதில் வாதம் என்பது உண்மையை அறிய, விருப்பு வெறுப்பு இன்றி, சீரிய சிந்தனையுடன் வாதிடுவதாகும். கல்பம் என்பது தான் கொண்ட கொள்கையை நிலை நிறுத்த எதிர் வாதிடுபவர்களின் வாயடக்கி முரட்டுவாதம் செய்வது. மூன்றுவதான விதண்டை என்பது விதண்டாவாதமாகும். விதண்டாவாதம் செய்பவனுக்கு ஒரு கொள்கையோ, ஈடுபாடோ இருக்காது. பிறர் கொள்கைக்கும் மதிப்பு தரமாட்டான்.முறையன்றி பேசி எதிரிகளை பரிகாசம் செய்யும் எண்ணத்தில் வாதிடுவான்.ஆகவே வெற்றி தோல்வி எதிர்பார்க்காது உண்மைக்காக வாதிடும் 'வாத'மாக இறைவன் இருக்கின்றுன்.)

**அக்ஷராணுமகாரோ அஸ்மி**
**த்வந்த்வ: ஸாமாஸிகஸ்ய ச।**
**அஹமேவாக்ஷய: கால: தாதஹம்**
**விச்வதோமுக: ॥** (33)

''எழுத்துக்களில் நான் அகரம்; கூட்டுச் சொல்களிலே இருசொற்கூட்டு நான்; அழிவற்ற தான காலமும் நான், எங்கும் பரந்து விளங்கி வினைப்பயனைத் தருபவனும் நானே.''

('அ' எனும் எழுத்தே நாதபிரம்மத்தின் முதலாகத் தொடங்குகிறது. அவ்வொலியே பல்வேறுவகையாக விளங்கி மற்றைய எழுத்துக்கள் உண்டாகக் காரணமாகின்றது. 'கூட்டுச்சொல்' வடமொழியில் பயன்படுத்தப்படுகின்றன. அத்தகுக் கூட்டுச் சொற்களில் 'இருசொல்' கூட்டாக கண்ணன் திகழ்கின்றுனாம். அதாவது 'இருசொல்' கூட்டாக வரும்போது, அவ்விரு சொற்களும். 'இராமகிருஷ்ன அவதாரங்கள்' எனும் போது இராமன் மற்றும் கிருஷ்ணன் எனும் இரு சொற்கள் ஒரே பெருமை பெறுகின்றன. காலம் என்பது வினாடி முதல் கல்பம் (அழிவு)வரை பரந்துள்ளது.ஆனால் அந்த வினாடிக்கு முன்னும், கற்பகத்திற்கு பின்னும் காலம் என்பது இருந்துகொண்டே உள்ளது. ஆகையால் அது அழிவற்ற ஒருநிலையாக விளங்குகிறது.ஆகவே இறைவன் அக்காலமாகத் திகழ்கின்றுனாம். உயிர்களைப் படைத்திடும் அப்பிரம்மனையே

இறைவன் பல உயிர்களாக நடமாடுகின்றான். அவ்வுயிர்களின் மூலம் வினையாற்றலையும் வழங்கி வருகின்றான்.)

ம்ருத்யு: ஸர்வஹரஸ் சாஹம்
உத்பவஸ்ச பவிஷ்யதாம் ।
கீர்த்தி: ஸ்ரீர்வாக்ச நாரீணாம்
ஸ்ம்ருதிர்மேதா த்ருதி: க்ஷமா ॥ (34)

''எல்லாவற்றையும் அழித்திடும் மரணம் நான். செல்வந்தர்களிடத்து நான் வளரும் செல்வமாகத் திகழ்கின்றேன். பெண்மைகளுள் புகழ், அழகு, சொல், நினைவு, அறிவு, திண்மை மற்றும் பொறுமை என்று விளங்குகிறேன்.''

(தோற்றம், இருப்பு, மறைப்பு யாவும் அவ் இறைவனிடையே நடக்கின்றன. தோன்றிய யாவும் இறப்பது உறுதி. இந்த 'இறப்பு' பிறப்பைவிட முக்யமானது. எல்லா உயிர்களும்தான் பிறக்கின்றன. ஆனால் மானிடப்பிறப்பு, அவனை மேம்படுத்திக்கொள்ளவே நிகழ்கின்றது. இறந்தோர் பின் செல்லும் கூட்டத்தைப் பொறுத்து இறந்தவனின் புகழ், பெயர் பேசப் பெறும். ஆகவே பெருமைதரும் அம்மரணமாக இறைவன் விளங்குகின்றான். இப்பெருமையும் இறைமைப்பண்புகளால் மட்டுமே பெறமுடியும்.

நிறைந்த குடத்தில் நீர் தங்காது போன்று செல்வந்தரிடம் மேலும் செல்வம் சேரும் போது அது பிறர்க்குப் பயன்படவும் செய்கின்றது. செல்வம் திருமகளின் இருப்பிடமாக அமைவதால், அந்த வளரும் செல்வமாக மாயவன் திகழ்கின்றான். திருமகளின் திருக்குணங்களே பெண்மையின் பெருமை பேசும். ஒருவனுக்குச் சொல்லும் செயலும் தூய்மையானதாக அமையுமானால் புகழ் அவனைத் தேடிவரும். திரு என்றால் அழகு என்று பொருள். பெண்மைக்குச் சிறப்புதருபவற்றுள் உருவமைதியும் அழகு சேர்க்கும். மிதமானதும், கருத்துள்ள துமாகிய சொற்கள் வலிமையுடையதாக அமையும். எனவே சொல்வன்மையும் இறைவனின் திருவருளாலேதான் கிடைக்கப்பெறும். யானை உள்ளிட்ட சில உயிர் இனங்களுக்கு நினைவாற்றல் உண்டு.

ஆனால் இந்நினைவு ஆற்றல் ஒரு சில குறிப்பிட்ட காலத்திற்குள் மறையாலாம். மேலும் இடம் மாறும் போது நினைவுகளும் மறந்துவிடும்.ஆனால் இதற்கு விதிவிலக்காக மனிதன் விளங்குகின்றான். சிறந்த நினைவாற்றல் உடையவர் மகானாகப் போற்றப்படுவர். எழுதாக் கிளவியான 'வேதம்' மனிதரின் நினைவாற்றல் திறமையால்தான் இன்றுவரை நம்மிடையே போற்றப்பட்டு வருகின்றது. இது இறைச் சக்தியின் மகிமையால்தான் நாம் பெறமுடியும். பகுத்தறிவும் உயர்பண்பான அறிவானது மனிதர்களுக்கே உரிய தனிச்சிறப்பு, அறிவு மேம்படுவது மனிதனின் சொந்த முயற்சி என்றாலும் அம்முயற்சி வெற்றி பெறுவது இறைவனின் திருவருளால்தான். பிரச்சனைகளும், துன்பங்களும் மனிதனைச் சூழும்போது அவன்பொறுமை, கோபம் எனும் உணர்வுகளுக்கு ஆளாகாமல் பொறுமையுடன் திகழும் போது அவன் உயருகின்றான். 'பொறுத்தார் பூமியாள்வார்'என்பதற்கிணங்க மனிதர்க்குப் பெருமை சேர்ப்பது பொறுமையாகும். இவையாவும் குடிகொண்டுள்ள திருமகளின் பெண்மைப் பண்புகள் மனிதருள் அமைந்தால் நரகம் சொர்க்கமாகும்.)

ப்ருஹத்ஸாம ததாஸாம்னாம்
காயத்ரீ சந்தஸாமஹம் ।
மாஸானாம் மார்கசீர்ஷோ அஹம்
ருதூனாம் குஸுமாகர: ॥ (35)

''மேலும் நான் சாம வேதத்தில் பிருஹத் சாமமாகவும், சந்தங்களில் காயத்ரியாகவும், மாதங்களில் மார்கழியாகவும், பருவங்களில் வஸந்த காலமாகவும் விளங்குகின்றேன்.''

(முன்பொரு கீதை ஸ்லோகத்தில் நான்கு வேதங்களில் தான் சாம வேதமாக இருக்கின்றேன் என்று பகவான் கூறியுள்ளார். அந்த சாம வேதத்திலும் அதில் ஒரு பிரிவான ப்ருஹத் சாமமாகதான் இருப்பதாக இங்குக்கூறுகின்றார்.இசைச் சிறப்பு பெற்றது சாம வேதம்.அதில் ப்ருஹத் சாமம் இசைப்பெருமை மட்டுமின்றி, பொருட் செறிவும் மிக்கு விளங்குவது. செய்யுளுக்கு அழகு சேர்ப்பது சந்தம் எனும் இலக்கணம்.

இவ்வாறு இலக்கணச் சிறப்பும், தெய்வ வழிபாட்டிற்குரிய பெருமையும் கொண்டு காயத்ரி விளங்குவதால் தான் அக்காயத்ரியாக இருப்பதாக கண்ணன் கூறுகின்ருன்.அதிக குளிரும், அதிக வெப்பமும் இல்லாது மிதமான -சீதோஷ்ண நிலைகொண்ட மாதமாகத் திகழ்வது மார்கழி மாதமாகும். மார்கழி மாதத்து விடியற்காலைப் பொழுது 'பிரம்ம முகூர்த்தம்' எனும் சிறப்புடையது. இப்பொழுதானது இறைவழிபாடு, மனக்கட்டுபாடு,மனஅமைதி ஆகியவற்றிற்கான சிறந்த சூழ் நிலையாகும். அத்தகுப் பெருமைமிகு மார்கழி மாதமான மார்கழியாக தான் இருப்பதாக இறைவன் கூறுகின்ருன். பனிக்காலத்தைத் தொடர்ந்து விளங்குவது இளவேனிற்காலம். இக்காலத்தில் மரங்களும் செடிகளும் தளிர்விட்டுப் புதிய இலைகளுடன் புத்தொளியுடன் விளங்கிடும். புத்துணர்வுடன் கூடிய ஓர் புதிய சூழ்நிலை உருவாக்கிடும் இந்த இளவேனிற் காலமாக பகவான் இருக்கின்ருனாம்.)

த்யூதம் சலயதாமஸ்மி தேஜஸ்
தேஜஸ் வினா மஹம் ।
ஐயோ அஸ்மி வ்யவஸாயோ அஸ்மி
ஸத்வம் ஸத்வவதாமஹம் ॥ (36)

'' தீயோர் விளையாடும் சூதாட்டமாகவும்,ஒளி பொருந்தியோரின் ஒளியாகவும், வெற்றியாகவும், முயற்சியாகவும், நல்லோரின் சத்துவ குணமாகவும் நான் விளங்குகின்றேன்.''

(சூதாட்டம் என்பது வஞ்சிக்கும் விளையாட்டுக்களில் ஒன்ருகும். ஆனால் சூதாட்டம் இவற்றில் ஒரு சிறிது வேறுபட்டு விளங்குகிறது. குதிரைப் பந்தயம் கூட ஒருவகை சூதாட்டமே யாகும். ஆனால் அங்கு வெற்றியானது குதிரை ஓட்டுபவர் மீது மட்டுமின்றி, குதிரையின் மீதும் ஆதாரப்பட்டுள்ளது. வஞ்சித்தல் என்பது பிறருடைய ஏமாற்றத்தால் நிகழ்வது. ஆனால் சூதாட்டத்தின் வெற்றி அதை ஆடுபவரின் அறிவுத் திறத்தைப் பொறுத்து அமைகின்றது. இந்தத் திறமையும்கூட அவ் விறையருளால்தான் ஒருவனுக்குக் கிடைத்திட வேண்டும். இவ் அறிவுத்திறத்தை சூதாட்டத்திற்குச் செலவழிக்காமல்,

நன்மை பயப்பனவற்றிற்குச் செலுத்திடும் போது, அவன் மனிதருள் மகானாக அழைக்கப்படுவான். இங்கு 'தேஜஸ்வி' என்பது ஆற்றல் உடையவராவர். ஆற்றல் என்பது ஒருவனிடம் அழகு, அறிவு, மனக்கட்டுப்பாடு, உடல்நலம் ஆகியன ஒன்று சேரும் போது கிடைக்கக்கூடிய பேறுகும். அத்தகையோரிடம் 'ஆற்றல்வொளி' (ஆற்றல் வெளிப்பாடு) வீசிட, அதுவே மற்றவர்க்கு ஒரு வழிகாட்டியாக, பின்பற்றிடும் பாதையாக அமைந்திடுமாம். இதனை ஆசார்ய புருஷர்கள் ராமகிருஷ்ணர், விவேகானந்தர், மகாத்மாகாந்தி ஆகியோரிடம் விளங்கவே செய்தது, இத்தகு ஆற்றலாக, 'ஆற்றல்வொளி' யாக பகவான் திகழ்கின்றுனாம். முழுமைபெறுது வெற்றியை அளிக்காது. முயற்சியே இன்றைய மெய்ஞான, விஞ்ஞான வளர்ச்சிக்கு அடிப்படை தேவையாகும். முயற்சி செய்திருக்காவிட்டால், நமது சமயத்தலைவர்கள் நமக்கு இறை உண்மையை உணர்த்தியிருக்க மாட்டார்கள். முயற்சியில்லாது இருந்தால் நாம் இன்றைய விஞ்ஞான வளர்ச்சியின் பயனை அனுபவித்துக் கொண்டிருக்கமாட்டோம். ஆம், ஆன்றோரின் 'முயற்சி' இல்லாதிருந்தால், இன்றும் நாம் 'இருண்ட' காலத்திலேயே உழன்று கொண்டிருந்திருப்போம். மனிதனிடம் உள்ள மூன்று குணங்களில் (ரஜோ, தமோ, சத்துவ) சத்துவ குணமே ஒருவனை உள்ளத்தாலும், உடலாலும் பண்படுத்து கின்றது. பிறருக்குப் பயன்படும் வகையில் ஒருவனை உயர்த்துகின்றது. அத்தகு பெருமைமிகு சத்துவ குணமாக இறைவன் நம்முள் இருந்து நம் பிறப்புக்குப்புகழ் சேர்கின்றுன்.)

> வ்ருஷ்ணீனாம் வாஸுதேவோ அஸ்மி
> பாண்டவானாம் தனஞ்ஜய: ।
> முனீனாமப்யஹம் வ்யாஸ:
> கவீனாமுசனா கவி: ॥ (37)

''விருஷ்ணிகளுள் வாசுதேவனாகவும், பாண்டவர்களுள் தனஞ்ஜயனாகவும், முனிவர்களுள் வியாசராகவும், கவிகளுள் சுக்கிரனாகவும் நான் (இருக்கின்றேன்) யாதவர் குலத்திற்கு விருஷ்ணிகள் என்றுபெயர். அத்தகு குலத்தைச் சார்ந்த வசுதேவரின் புதல்வராக பகவான் இருப்பதால் அவருக்கு

இவ்வாறு இலக்கணச் சிறப்பும், தெய்வ வழிபாட்டிற்குரிய பெருமையும் கொண்டு காயத்ரி விளங்குவதால் தான் அக்காயத்ரியாக இருப்பதாக கண்ணன் கூறுகின்றான்.அதிக குளிரும், அதிக வெப்பமும் இல்லாது மிதமான -சீதோஷ்ண நிலைகொண்ட மாதமாகத் திகழ்வது மார்கழி மாதமாகும். மார்கழி மாதத்து விடியற்காலைப் பொழுது 'பிரம்ம முகூர்த்தம்' எனும் சிறப்புடையது. இப்பொழுதானது இறைவழிபாடு, மனக்கட்டுபாடு,மனஅமைதி ஆகியவற்றிற்கான சிறந்த சூழ் நிலையாகும். அத்தகுப் பெருமைமிகு மார்கழி மாதமான மார்கழியாக தான் இருப்பதாக இறைவன் கூறுகின்றான். பனிக்காலத்தைத் தொடர்ந்து விளங்குவது இளவேனிற்காலம். இக்காலத்தில் மரங்களும் செடிகளும் தளிர்விட்டுப் புதிய இலைகளுடன் புத்தொளியுடன் விளங்கிடும். புத்துணர்வுடன் கூடிய ஓர் புதிய சூழ்நிலை உருவாக்கிடும் இந்த இளவேனிற் காலமாக பகவான் இருக்கின்றானாம்.)

த்யூதம் சலயதாமஸ்மி தேஜஸ்
தேஜஸ் வினா மஹம் ।
ஜயோ அஸ்மி வ்யவஸாயோ அஸ்மி
ஸத்வம் ஸத்வவதாமஹம் ॥ (36)

"தீயோர் விளையாடும் சூதாட்டமாகவும்,ஒளி பொருந்தியோரின் ஒளியாகவும், வெற்றியாகவும், முயற்சியாகவும், நல்லோரின் சத்துவ குணமாகவும் நான் விளங்குகின்றேன்."

(சூதாட்டம் என்பது வஞ்சிக்கும் விளையாட்டுக்களில் ஒன்றாகும். ஆனால் சூதாட்டம் இவற்றில் ஒரு சிறிது வேறுபட்டு விளங்குகிறது. குதிரைப் பந்தயம் கூட ஒருவகை சூதாட்டமே யாகும். ஆனால் அங்கு வெற்றியானது குதிரை ஓட்டுபவர் மீது மட்டுமின்றி, குதிரையின் மீதும் ஆதாரப்பட்டுள்ளது. வஞ்சித்தல் என்பது பிறருடைய ஏமாற்றத்தால் நிகழ்வது. ஆனால் சூதாட்டத்தின் வெற்றி அதை ஆடுபவரின் அறிவுத் திறத்தைப் பொறுத்து அமைகின்றது. இந்தத் திறமையும்கூட அவ் விறையருளால்தான் ஒருவனுக்குக் கிடைத்திட வேண்டும். இவ் அறிவுத்திறத்தை சூதாட்டத்திற்குச் செலவழிக்காமல்,

நன்மை பயப்பனவற்றிற்குச் செலுத்திடும் போது, அவன் மனிதருள் மகானாக அழைக்கப்படுவான். இங்கு 'தேஜஸ்வி' என்பது ஆற்றல் உடையவராவர். ஆற்றல் என்பது ஒருவனிடம் அழகு, அறிவு, மனக்கட்டுப்பாடு, உடல்நலம் ஆகியன ஒன்று சேரும் போது கிடைக்கக்கூடிய பேறுகும். அத்தகையோரிடம் 'ஆற்றல்வொளி' (ஆற்றல் வெளிப்பாடு) வீசிட, அதுவே மற்றவர்க்கு ஒரு வழிகாட்டியாக, பின்பற்றிடும் பாதையாக அமைந்திடுமாம். இதனை ஆசார்ய புருஷர்கள் ராமகிருஷ்ணர், விவேகானந்தர், மகாத்மாகாந்தி ஆகியோரிடம் விளங்கவே செய்தது, இத்தகு ஆற்றலாக, 'ஆற்றல்வொளி' யாக பகவான் திகழ்கின்றுனாம். முழுமைபெறுது வெற்றியை அளிக்காது. முயற்சியே இன்றைய மெய்ஞான, விஞ்ஞான வளர்ச்சிக்கு அடிப்படை தேவையாகும். முயற்சி செய்திருக்காவிட்டால், நமது சமயத்தலைவர்கள் நமக்கு இறை உண்மையை உணர்த்தியிருக்க மாட்டார்கள். முயற்சியில்லாது இருந்தால் நாம் இன்றைய விஞ்ஞான வளர்ச்சியின் பயனை அனுபவித்துக் கொண்டிருக்கமாட்டோம். ஆம், ஆன்றேரின் 'முயற்சி' இல்லாதிருந்தால், இன்றும் நாம் 'இருண்ட' காலத்திலேயே உழன்று கொண்டிருந்திருப்போம். மனிதனிடம் உள்ள மூன்று குணங்களில் (ரஜோ, தமோ, சத்துவ) சத்துவ குணமே ஒருவனை உள்ளத்தாலும், உடலாலும் பண்படுத்து கின்றது. பிறருக்குப் பயன்படும் வகையில் ஒருவனை உயர்த்துகின்றது. அத்தகு பெருமைமிகு சத்துவ குணமாக இறைவன் நம்முள் இருந்து நம் பிறப்புக்குப்புகழ் சேர்கின்றுன்.)

> வ்ருஷ்ணீனாம் வாஸுதேவோ அஸ்மி
> பாண்டவானாம் தனஞ்ஜய: ।
> முனீனாமப்யஹம் வ்யாஸ:
> கவினாமுசனா கவி: ॥ (37)

''விருஷ்ணிகளுள் வாசுதேவனாகவும், பாண்டவர்களுள் தனஞ்ஜயனாகவும், முனிவர்களுள் வியாசராகவும், கவிகளுள் சுக்கிரனாகவும் நான் (இருக்கின்றேன்) யாதவர் குலத்திற்கு விருஷ்ணிகள் என்றுபெயர். அத்தகு குலத்தைச் சார்ந்த வசுதேவரின் புதல்வராக பகவான் இருப்பதால் அவருக்கு

வாசுதேவன் என்று பெயர். ஆதலால் அக்குலத்திற்கு நாயகனாக இறைவன்திகழ்கின்ருன். பாண்டவர்களுள் தன்னை தனஞ்ஜயன் என்றழைக்கப்படும் அர்ச்சுனனாகத் தன்னைக் கூறிக்கொள்கிருர். தனஞ்ஜெயன் என்ருல் செல்வத்தை வென்றவன், செல்வநாயகன் என்று பெயர். அதாவது மற்றைய அரசர்களிடமிருந்து மிக்கு உள்ள செல்வத்தைப் போரிட்டுக்கொண்டுவந்து, அதனை நல்லவற்றிற்குப் பயன்படுத்தியதால் அர்ச்சுனனுக்கு அப்பெயர் வந்தது. மேலும் தன்னை அர்ச்சுனனாகக் கூறிக்கொண்டது அவனிடம் பகவான் கொண்டிருந்த தோழமை உறவினைப் புலப்படுத்துவதாகும். மற்ருெரு காரணமும் உண்டு. அர்ச்சுனன் தன் செயல்களுக்கு, வெற்றிகளுக்குத் தான்தான் காரணம் என்று நினைத்திருந்தான். ஆனால் பகவான்தான் அவனுள் இருந்து முதற்காரணமாக விளங்குகினருன். அதனை அவனுக்கு நினைவூட்டவே, தன்கிருபையால் அவன் செயல்படுவதை விளக்கிடவே தான் அர்ச்சுனனாக இருப்பதாகக் கூறுகிருர். அடுத்து தன்னை முனிவர்களுள் வியாசராக இருப்பதாகக் கூறிப் பெருமைப்படுகிருர். முனிவர்,என்ருல் எல்லாம் தெரிந்தவர்,இறைவனை அறிந்தவர் என்று பொருளாம். இங்குவியாசபகவான் முனிவர்களுள் முதலிடம் பெறுகிருர். அதாவது, வேதங்களைத் தொகுத்ததும்,வேதாந்த சூத்திரங்களை பகுத்ததும்,மகாபாரதம் மற்றும் பல புராணங்களை எழுதியதும் அவர்தம் பக்தி,ஞானம் போன்றவற்றைப் படம் பிடித்துக் காட்டுவனவாகும். வியாசர் இறையருள் முழுமையாகக் கொண்டதனால்தான் அவர்தம்சிறப்பு தெரியலாயிற்று. அத்தகு பெருமைமிகு வியாசராக தான் இருப்பதாகப் பகவான் கூறுகிருர். உலக அறிவு , ஞான அறிவு மிக்கோர் கவிகளாவர். அத்தகையோரில் சிறந்தவராக உசனா என்றழைக்கப்படும் சுக்கிரன் விளங்குகின்ருர்.)

**"தண்டோ தமயதாமஸ்மி நீதிரஸ்மி**
**ஜிகீஷதாம் ।**
**மௌனம் சைவாஸ்மி குஹ்யானாம்**
**ஞானம் ஞானவதா மஹம் ॥** (38)

''தண்டனை தருபவர்களிடத்து (விளங்கும்) செங்கோலாகவும், வெற்றி வேண்டுவோரிடத்து (விளங்கும்) நீதியாகவும், ரகசியங்களுள் மௌனமாகவும், ஞானிகளிடத்து (விளங்கும்) பேரறிவாகவும் நான் (இருக்கின்றேன்.)

'' (கொலையே செய்யாதவனுக்குச் கொலைக்குற்றம் சுமத்தித் தண்டனை வழ்ங்கினால் நீதியின் மீதும், நீதிபதியின் மீதும் சமுதாயத்தின் மீதும் ஒருவனுக்குக் கோபம்,வெறுப்பு ஏற்படும். அதேபோன்று கொலை செய்த குற்றவாளிக்குத்தகுந்த சாட்சியங்கள் இல்லை என்று கூறிக் குறைந்த தண்டனைக் கொடுத்திடும் போது சமுதாயமும், பாதிக்கப்பட்டவரும் நீதியை, நீதிபதியை குறைகூறுவர். ஆகவே தண்டனை மறந்தாலும், குறைந்தாலும், அதிகமானாலும் (நீதியே) நீதிபதியே இறுதியில் விமர்சிக்கப்படுகிறார். குற்றத்திற்குரிய தண்டனை விதித்திடும்போது, குற்றவாளிகூட அத்தண்டனையை ஏற்றுக்கொள்ளக்கூடியதாக மதிக்கின்றான். செய்தகுற்றத்திற்காக நொந்து கொள்கிறான். அதனால் தன்னை சீர்திருத்திக்கொள்கிறான்.''இங்கு நீதிபதியின் செங்கோலாக நீதி அமைகின்றது. அதுவே நீதிபதிக்குச் சிறப்பு சேர்க்கின்றது. துலாக்ஂகாலாக-செங்கோலாக இறைவன் திகழ்கின்றானாம். நீதியின் உயர்வைப் பொறுத்தே வெற்றியின் சிறப்பு பேசப்பெறும். குறுக்கு வழியில் பெறப்படும் வெற்றி நிரந்தரமான அமைதியைத் தராது. பிரச்சனைகளை ஏற்படுத்தாது.அத்தகு நீதியாக இறைவன் அமைகின்றான். இரகசியங்களுள் தான் மௌனமாக இருப்பதாகக்கூறி, மௌனத்தின் பெருமையை,ஆற்றலை பகவான் வெளிப்படுத்துகிறார்.ஒரு விஷயம் வெளியே தெரிந்துவிட்டால் அது ஓசையாகி விடுகிறது.அதனையே இரகசியமாக வைத்திருந்தால் அதன் மதிப்பு உயருகிறது. இது மௌனத்தால் மட்டுமே காக்கமுடியும். அசையும் பொருட்களால் மௌனம் சாதிக்கமுடியாது. உடல் அசையாது இருப்பதைவிட, மனம்-உள்ளம் அசையாது இருந்தால் மனக்கட்டுப்பாடுடன் இருந்தால் -உள்ளே இறைவனைக் காணமுடியும். அதாவது நம்

*ஆத்மாவை நாம் அறிய முடியும். அறிந்தால் அதில் உறையும் ஆத்மநாதனை கண்டு இன்புறலாம். இதுவே மௌனத்தின் ஆற்றல். அறிவு , அறிபவன்,அறியப்படும் பொருள் தனித்தனியாகச் செயல்படும் போது, உலகாயுத விஷயங்களே மனிதனைச் சுற்றித் திகழும். அப்போது வாழ்க்கையின் பயனான பகவானை-இறை உண்மையை அறிய முடியாது. அறிந்து கொண்டால்,அந்த இறைவனைக் கண்டிட முடியும். மனிதன் பிறக்கும் போது அறிவுடன்தான் பிறக்கின்றான். அதாவது இறைக்குணங்களோடு தான் பிறக்கின்றான். அதாவது இறைவன் தன்னைக் கொடுத்து தன்னைக் காண்பித்து கொள்கிறான்.ஆகவே அந்த அறிவே இறைப்பண்பாகும்.)*

**யச்சாபி ஸர்வபூதானம் பீஜம்**
**ததஹமர்ஜுன।**
**ந ததஸ்தி வினா யத்ஸ்யான்**
**மயா பூதம் சராசரம்॥** (39)

*''அர்ச்சுனா ! ஐம்பூதங்களுக்கும் காரணம் நானே ! இந்த உலகத்தில் உள்ள எல்லா நகரும் மற்றும் நகரா உயிர்களில் நான் கலந்து வாழ்கின்றேன்.''*

*(உயிர்களின் தோற்றத்திற்குக் காரணமான ஐம்பூதங்களிடத்தும் கலந்து இருப்பவன் இறைவன். மேலும் ஆறறிவு வரை உள்ள உயிர்களினுள்ளும் செடி, கொடி போன்ற நகரா உயிர்களிடத்துள்ளும் ஆத்மாவாக இறைவன் திகழ்கின்றான். அவையாவும் இறை அம்சங்களேயாம் என்று பகவான் உறுதிப்பட விளக்குகின்றார்.)*

**நாந்தோ அஸ்திமம திவ்யானாம்**
**விபூதீனாம் பரந்தப।**
**ஏஷ தூத்தேசத: ப்ரோக்தோ**
**விபூதேர் விஸ்தரோ மயா॥** (40)

*''எதிரிகளை அலை கழிப்பவனே ! என்னுடைய ஆற்றல்களுக்கு முடிவு என்பது ஆற்றல்களின் ஒரு சிறிது மட்டுமே இங்கு என்னால் கூறப்பட்டது.''*

(இதனால் பகவானால் கூறப்பட்ட அவர்தம் ஆற்றல்களை அறிந்தவர், அதனால் பெறப்பட்ட ஞானத்தினால் மேலும் பரந்து கிடக்கும் இறைவனின் மற்றைய ஆற்றல்களை சுயானுபவமாக அறிதல் அவசியமாகிறது என்பது பெறப்படுகிறது.)

யத்யத் விபூதிமத்ஸத்வம்
ஸ்ரீ மதூர்ஜிதமேவ வா ! ।
தத்த தேவாவகச்ச த்வம் மம
தேஜோம்சஸம்பவம் ॥ (41)

''எவையெல்லாம் மகிமை, ஆற்றல், அழகுடன் திகழ்கின்றனவோ, அவையாவும் என்னுடைய ஆற்றலின் ஒரு பகுதியின் வெளிப்பாடே என்பதை அறிவாயாக!''

(ஒருவனுடைய உள்ளத்தைக் கவரும் மற்றவர்களுடைய, மற்றவற்றின் எந்த அழகும், எந்தச் செயலும் , எந்த ஓசையும் இறைவனின் அருளால்தான் வெளிப்படுகின்றன. அதாவது அவையாவும் இறைவனின் பிரதிநிதி வெளிப்பாடுகளேயாம்.)

அதவா பஹுனைதேன கிம்
ஞாதேன தவார்ஜுன ।
விஷ்டப்யாஹமிதம் க்ருத்ஸ்னம்
ஏகாம்சேன ஸ்திதோ ஜகத் ॥ (42)

''அர்ச்சுனா, இதனைப் பலவகையாக (என்னுடைய ஆற்றலை) விவாதிப்பதில் பயன் என்ன உனக்குக் கிடைக்கப் போகிறது? என்னுடைய ஆற்றலின் ஒரு பகுதியால் மட்டுமே இந்த உலகனைத்தையும் இயக்கிக் கொண்டிருக்கின்றேன்.''

(இந்தச் செய்யுளின் மூலம் தன் பரந்த ஆற்றலை சொல்லாமல் விளக்குகின்றார். அந்தப் பரம்பொருளை நேரில் கண்டுணரும் போதுதான் அவர்தம் முழு ஆற்றலை அறிய முடியும். அதாவது அவர்தம் ஆற்றலை அவரால் மட்டுமே அறியமுடியும்.)

(பத்தாம் அத்தியாயம் முற்றும்.)

# பதினோராம் அத்தியாயம்

## விஸ்வரூபதர்சன யோகம்

### அர்ச்சுனன் சொன்னது

மதனுக்ரஹாய பரமம்
குஹ்ய மத்யாத்மஸம்ஜிதம் ।
யத்வயோக்தம் வசஸ்தேன மோஹோஅயம்
விகதேதோ மம ॥ (1)

*''என்னை உய்விப்பதற்காக உங்களால், கூறப்பட்ட மிகச்சிறந்ததும், இரகசியமானதும், ஆன்மீகக் கருத்துக்கள் பற்றியதுமான விளக்கங்கள் என்னுடைய மனமயக்கத்தை அகற்றவிட்டன.''*

*(இந்த ஸ்லோகத்தின் மூலம் மூலப்பரம்பொருளான கிருஷ்ணனின் இறைத்தத்துவத்தைத் தான் தெரிந்துகொண்டதை அர்ச்சுனன் பிரகடனப்படுத்துகின்றான். தான் , இந்த உலகம், இரண்டிற்கும் உள்ள உறவு ஆகியவற்றை அறிந்த அர்ச்சுனன் தன்னை கிருஷ்ணனின் நண்பன் என்ற நட்புறவிலிருந்து விலகி, பக்தன் என்ற நிலையில் தன்னிலை விளக்கம் தருகின்றான்.)*

பவாப்யயௌ ஹிபூதானாம் ச்ருதௌ
விஸ்தரசோ மயா ।

த்வத்த: கமலபத்ராக்ஷ
மாஹா த்ம்யமபி சாவ்யயம் ॥ (2)

''தாமரைக் கண்ணா! இந்த உயிர்களின் பிறப்பு இறப்பு ஆகியவற்றை பற்றி உன்னால் இப்போது மிக விளக்கமாக கேட்கப்பட்டேன். உன்னுடைய இறுதி ஆற்றலும் என்னால் கேட்கப்பட்டது.''

*(எங்கும் எதிலும் கிருஷ்ணர் தான் இருப்பதாகக் கூறினாலும்,அவற்றுடன் அவ் இறைவன் பந்தப்படவில்லை.அதனால் அவர்தம் ஆற்றலுக்கு சிறிதளவுகூட தோய்வு என்பது இல்லை. இறைவன் தன் ஆற்றலின் தன்மையை ஒரு சிறிதே கூறினாலும், அதுவே பெரு விளக்கமாக அர்ச்சுனனுக்கு அமைகின்றது.இதுவே இறைவனின் பேராற்றலைக் குறிப்பாக உணர்த்தும்.)*

ஏவமேத்தயதாத்த த்வமாத்மானம்
பரமேச்வர ।
த்ருஷ்டுமிச்சாமி தே ரூபமைச்வரம்
புருஷோத்தம ॥ (3)

''பரம்பொருளே! தாங்கள் தங்களைப் பற்றிக் கூறியனயாவும் உண்மையே. (ஆகவே)புருஷோத்தமா, உம்முடைய ஈசுவர உருவத்தை (நான்) காண ஆசைப்படுகிறேன்.''

*(இங்கு அர்ச்சுனன் மற்றைய பக்தர்களை மனதிற்கொண்டு ஒரு வேண்டுகோளை இறைவனிடம் வைக்கின்றான். எங்கும் எதிலும் இருப்பதாகக் கூறிக்கொள்ளும் இறைவன், அவற்றினின்று தனித்தும் இருப்பதாகக் கூறுவதால், அவ்வாறு தனித்திருப்பது எவ்வாறு,அதனை மற்றவர்களால் எப்படிக் காணமுடியும் என்ற ஒரு பொதுஐயத்தை மனதிற்கொண்டு, இறைவனின் 'விஸ்வரூப' தரிசனத்தைப் பெற விழைகின்றான் அர்ச்சுனன். மேலும் என்குணத்தானாகிய விஷ்ணுவின் பேராற்றலைத் தன் ஊனக்கண்ணாலும் கண்டு இன்புறவேண்டும் என்பதும் அர்ச்சுனனின் ஆசை. அதனை நிறைவேற்றிக் கொள்ளவே தன் வேண்டுதலை வெளியிடுகின்றான்.)*

மன்யஸே யதி தச்சக்யம் மயா
த்ரஷ்டுமிதி ப்ரபோ ।
யோகேச்வர ததோ மே த்வம்
தர்சயாத்மான மவ்யயம் ॥ (4)

*''இறைவனே! அதைப் (விஸ்வரூபம்) பார்க்க என்னால் முடியும் என்று (நீங்கள்) கருதுவீர்களேயானால், யோகேஸ்வரனே! உங்களுடைய குறைவற்ற திருவுருத்தை எனக்குக் காட்டியருள்க.''*

*(இறைவனின் ஆற்றலில் ஒரு சிறுதுளி மட்டுமே, அதுவும் அவ் இறைவன் விளக்கியதால் மட்டுமே அர்ச்சுனனால் அறிந்துகொள்ள முடிந்தது. ஆகவே இறைவனின் முழு ஆற்றலை அவ் இறைவனே கூறினாலொழிய; சாதாரண மனிதனால் அவ் இறைவனை முழுமையாக காணவோ, கேட்கவோ முடியாது. இங்கு இறைவனின் கருணையினால் மட்டுமே இது சாத்தியமாகும். அர்ச்சுனன் இங்கு முழுமையாக இறைவனிடம் சரணடைகின்றான்.)*

## பகவான் கூறுவது

பச்யே மே பார்த்த ரூபாணி
சதசோ அத ஸஹஸ்ரச: ।
நானாவிதானி திவ்யானி
நானாவர்ணாக்ருதீனி ச ॥ (5)

*''பல வகையான, பல வண்ணங்களும், உருவங்களும் கொண்ட எனது தெய்வீகமான உருவங்களை எண்ணற்றவைகளாக இப்போது காண்பாயாக, பார்த்தா!''*

*(இறைவன் ஒருவனே எங்கும் எதிலும், எப்போதும், இருப்பதால், இவ்வுலக உயிர்களாக பல உருவங்களில், பல நிறங்களில் மறைந்து விளங்குகிறான். ஆகவே அவையாவும் இறைக்குணங்கள் நிரம்பப்பெற்றவையாகவே விளங்கிடும். இந்தக் குணரூபங்களைக் காண, ஒரு பக்தன் கேட்டுக்கொண்டதன் பேரில் இறைவன் தன்னைக் காட்டிக்கொள்ள முன்வருகின்றான்.)*

பச்யாதித்யான் வஸூன் ருத்ரானச்-
விநௌ மருதஸ்ததா ।
பஹூன்யத்ருஷ்ட பூர்வாணி
பச்யாஸ்சர்யாணி பாரத ॥ (6)

*''பார்த்த! (பரத வம்சத்தில் பிறந்தவனே) ஆதித்யர்களையும் வசுக்களையும், ருத்திரர்களையும், அச்வினிகளையும் மற்றும் மருத்துக்களையும் இப்போது பார்! முன்பு நீ எங்கும் கண்டிராத அதிசயங்கள் பலவற்றையும் காண்பாயாக.''*

*(12 ஆதித்யர்கள், 8 வசுக்கள், 11 ருத்திரர்கள், 2 அச்வினிகள், 4 மருத்துக்கள் ஆகியோரைக் கொண்டு விளங்கும் தன் உருவத்தை முதன்முதலாக அர்ச்சுனனுக்குக் காட்டுகிறார். முன்பு கண்ணன் கூறியதை இப்போது தன் கண்ணால் கண்டு அர்ச்சுனன் வியாப்படைகின்றான்.)*

இஹைகஸ்தம் ஜகத்க்ருத்ஸ்னம்
பச்யாத்ய ஸ சராசரம் ।
மம தேஹே குடாகேச யச்சான்
யத்த்ரஷ்டுமிச்சஸி ॥ (7)

*''குடாகேச ! (அர்ச்சுனா) அசையும் மற்றும் அசையாப் பொருள்கள் எல்லாம் அடங்கிய இந்த உலகம் அனைத்தையும் என்னுடைய இந்த ஓர் உடம்பிலே காண்பாயாக ! மேலும் என்னவெல்லாம் நீ காண விரும்புகிறாயோ அவையனைத்தையும் இப்போது காண்பாயாக!''*

*(அர்ச்சுனன் எது நல்லது, எது கெட்டது, இப்போரினால் ஏற்படும் விளைவுகள் என்னவாக அமையுமோ என்று பலவாறான சந்தேகங்களை கொண்டு விளங்குகிறான். அதனை இப்போது அறிந்துகொள்ளும் வாய்ப்பாக, அர்ச்சுனனுக்கு இறைவன் தன்னைக் காட்டிக்கொள்ள விரும்புகின்றார்.)*

நது மாம் சக்யஸே த்ரஷ்டுமனேனைவ
ஸ்வசக்ஷுஷா ।
திவ்யம் ததாமி தே சக்ஷு: பச்ய மே
மச் யோகமைச்வரம் ॥ (8)

*''ஆனால் என்னை உன்னால் இந்த ஊனக்கண்ணால் (சாதாரண பார்வையினால்) காணமுடியாது. உனக்கு நான் ஞானக்கண் அருள்கிறேன் .(அதனைக் கொண்டு) என்னுடைய ஆற்றல்மிக்க தெய்வீக மகிமைகளைக் காண்பாயாக.''*

*(மனிதனால் ஓர் அளவு தூரத்திலுள்ள பொருள்களை மட்டுமே கண்களால் காணமுடியும். வெகு தூரத்திலிருக்கும் பொருள்களைக் காண அதற்குரிய கண்ணாடி பொருந்திய கருவிகளையே அவன் பயன்படுத்த வேண்டும்.அதேபோன்று, கண்ணுக்குத் தெரியாத பொருள்களைக் காண பூதக் கண்ணாடி போன்றவையே அவனுக்குத் துணை செய்யும். அப்படி இருக்கும்போது சிந்தனைக்கும், கற்பனைக்கும் எட்டாத ஆற்றல்களை உடைய இறைவனது திருவுருவத்தை சாதாரண கண் கொண்டோ, பேரறிவுகொண்டோ காணமுடியாது. இறைவனின் திருவருள் எனும் கருணைமிக்க பரிவால்தான் அதனால் கிடைக்கப்பெறும் தெளிந்த ஞான அறிவால்தான் அதனால் பெறப்படும் ஞானக் கண்கொண்டு மட்டுமே அவனுடைய விஸ்வரூப தரிசனத்தைப் பார்த்திட முடியும்.)*

## ஸஞ்ஜயன் கூறுவது:

**ஏவுமுக்த்லவா ததோ ராஜன்**
**மஹாயோகேச்வரோ ஹரி।**
**தர்சயாமாஸ பார்த்தாய பரமம்**
**ரூபமைச்வரம் ॥ (9)**

*''அரசே பெரும் யோக புருஷனான ஹரியானவர் இவ்வாறு கூறியபிறகு பார்த்தனுக்குத் தன் மேன்மைமிகு ஈஸ்வர உருவத்தைக் காட்டியருளினார்.''*

*(ஸஞ்ஜயன் தன்னுடைய,வியாஸ பகவானால் அளிக்கப்பட்ட ஞானக்கண்ணினால், குருக்ஷேத்ர போர்க்கள நிகழ்ச்சிகளை. கண்ணில்லாத திருதராஷ்டரனுக்கு அப்போதைக்கப் போதே கூறிடும் ஆற்றல் பெற்றிருந்ததை 'பகவத் கீதை' ஆரம் பத்திலேயே கூறப்பட்டுள்ளது.)*

அநேக வக்த்ரநயனநேகாத்புத
தர்சனம் ।
அநேக திவ்யாபரணம்
திவ்யாநேகோத்யதாயுதம் ॥ (10)

''அந்த உருவமானது பல்வேறு முகங்கள், கண்கள் கொண்டது. பலஅதிசயமான காட்சிகள் கொண்டு விளங்குவது. தெய்வீகமான ஆபரணங்கள் பூண்டது. தெய்வீகமான பலவகையான போர்க்கருவிகளை ஏந்தியுள்ளது.''

*(ஆதியும் அந்தமும் இல்லாது விளங்கிடும், எங்கும் எதிலும் திகழ்ந்திடும், ஆற்றலும் , சிறப்பும் கொண்ட இறைவன் அதற்கேற்றவாறு கற்பனைக் கெட்டாத, சிந்தனைக்கு விருந்தாகத் தன்னை வெளிக்காட்டினான். அதுவே பார்ப்போர்க்கு அதிசயமும், திகைப்பும் ஏற்படுத்திவிடுகிறது. அவன் உடலே தெய்வீக ஒளியுடன் திகழந்திடும்போது அந்த உடலை அணிசெய்யும் ஆபரணங்களும், தெயவகாரியம் சிறப்புற நடைபெற துணை செய்திடும் ஆயுதங்களும் அவன் சிறப்பை மேலும் விளக்கவே செய்கின்றன.)*

திவ்யமால்யாம் பரதரம்
திவ்யகந்தானு லேபனம் ।
ஸ்ரவாஸ்சர்யமயம் தேவம்
அனந்தம் விச்வதோ முகம் ॥ (11)

''அவ்வுருவமானது புனிதமான மாலைகள்,ஆடைகள் தாங்கியது. தெய்வமணம் கமழும் வாசனைகளால் பூசப்பட்டுள்ளது. பெரிய அளவில் வியப்பூட்டுவது, பிரகாசித்துக்கொண்டிருப்பது, முடிவற்றதாக விளங்கி எங்கும் பரந்ததுள்ள முகத்தை கொண்டது.''

*(இயற்கை கொண்டுள்ள கற்பனைக்கும் மிஞ்சிய அதிசயகுணங்களை இறைவன் தாங்கியிருப்பதை இந்த 'விஸ்வரூபம்' சுட்டிக்காட்டுகிறது. இவையாவும் இயற்கைவழி இறைவனின் மகிமையினையே படம் பிடித்துக்காட்டுகின்றது.)*

திவி ஸூர்ய ஸஹஸ்ரஸ்ய
பவேத்யுக பதுத்திதா ।
யதிபா:ஸத்ருசீ ஸா ஸ்யாத்-
பாஸஸ்தஸ்ய மஹாத்மன: ॥ (12)

''ஆகாயத்தில் ஒரே சமயத்தில் ஆயிரம் சூரியர்கள் தோன்றினால், அதுபோது ஏற்படும் பேரொளிக்கு நிகராக இவ்வுருவம் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது.''

(இங்குச் சாதாரண மனிதனுக்குத் தெரிய வேண்டுமென்பதற்காக, உடனடியாக புரிந்துகொள்ள வேண்டுமென்பதற்காக ஆயிரம் சூரியன்கள் என்று கூறுப்பட்டுள்ளது. ஒரு சூரியனை நேருக்கு நேராக பார்ப்பதே கடினம்.அதுபோது, ஆயிரம் சூர்யன்கள் என்றால் கேட்கவா வேண்டும். ஆனால் இறைவனின் பேரொளி இவற்றையெல்லாம் தாண்டிய ஒப்பில்லாத ஒளிபொருந்தியவன் என்பதே பேருண்மையாகும்.)

தத்ரைகஸ்தம் ஜகத் க்ருத்ஸ்னம்
ப்ரவிபக்த மனேகதா ।
அபச்யத்தேவ தேவஸ்ய சரீரே
பாண்டவஸ்ததா ॥ (13)

''அப்போது (கிருஷ்ணனின் விஸ்வரூப தரிசனத்தின்போது) பலவாறு பிரிந்துள்ள இவ்வுலகம் அனைத்தையும் பரம்பொருளின் உடலில் ஒன்றாகக்கூடி இருப்பதை பாண்டவன் (அரச்சுனன்) பார்த்தான்.''

(புல், பூண்டு, பூச்சி முதல் யானை .சிங்கம், மனிதன் என்று இம்மண்ணில் பல வாழுகின்றன.இவை யாவும் உயிரின் பல்வகையான தோற்றங்களே இவையாவும் வியாபித்துள்ள இப்பூமியும், வானவர் வாழும் தேவலோகமும், வானத்தில் உலாவும் கிரகங்களும் யாவும் இறைவன் உருவத்தில் காணுகின்றான் அர்ச்சுனன்.அதாவது எல்லா உலகங்களையும் தன்னகத்தே ஒரே நேரத்து இறைவன் தாங்குகிறான். அந்தப் பேராற்றலை ஓர் அதிசயமாக அர்ச்சுனன் கண்டதைத் தான் பார்த்ததாக சஞ்ஜயன் கூறுகின்றான்.)

தத: ஸ விஸ்மயா விஷ்டோ
ஹ்ருஷ்ட ரோமா தனஞ்ஜய: ।
ப்ரணம்ய சிரஸா தேவம்
க்ருதாஞ்ஜலிரபாஷத ॥ (14)

*''பிறகு தனஞ்ஜயன் (அர்ச்சுனன்) மிகவும் ஆச்சர்யத்துடன், உடல் சிலிர்க்க, பகவானை தலை வணங்கி, இருகைகூப்பிப் பேசலுற்ருன்.''*

*(இறைவன் பேருருவைக் கண்டவுடன் வியப்பால் உடல் வெளிப்பாட்டு உணர்ச்சிகளுக்கு உள்ளாகின்ருன் அர்ச்சுனன். ஆம் தன் கற்பனையும் மீறி, ஆற்றல்மிகு ஓர் உருவத்தைக் கண்டவுடன் தன்னை மறந்து உணர்வுகளுக்கு ஆளாகிவிடும் அர்ச்சுனன், அடுத்துத் தன் மனதில்படும் கருத்துக்களைக் கூற முற்படுகின்ருன்.)*

## அர்ச்சுனன் கூறுவது:

பச்யாமி தேவான்ஸ்தவ தேவ தேஹே
ஸர்வான்ஸ்ததா பூதவிசேஷ ஸங்கான் ।
பரஹ்மாண மீசம் கமலாஸனஸ்த்தம்
ருஷின்ஸ்ச ஸர்வானுரகான்ஸ்ச திவ்யான் ॥ (15)

*''தேவனே! உன்னுடைய உடலில் தேவர்கள் யாவரையும், உயிரினங்கள் எல்லாவற்றையும், தாமரை மலரில் அமர்ந்திருக்கும் நான்முகனான பிரம்மனையும், எல்லா முனிவர்ளையும், தேவலோகத்து பாம்புகளையும் நான் பார்க்கிறேன்.''*

அநேக பாஹூதர வக்த்ர நேத்ரம்
பச்யாமி த்வாம் ஸர்வதோ அனந்த ரூபம் ।
நாந்தம் ந மத்யம் ந புனஸ்தவாதிம்
பச்யாமி விச்வேச்வர விச்வரூப ॥ (16)

*''உலகத்தையே வடிவாகக்கொண்ட உலகநாதனே! கணக்கற்ற கைகள், வயிறுகள், முகங்கள், கண்கள் ஆகியவையுடன் எல்லையற்றுத் திகழ்கின்ற உன் உருவத்தை*

*எங்கும் பார்க்கின்றேன். மேலும் உன்னுடைய முதல், இடை, கடை எதுவுமே என்னால் பார்க்கமுடியவில்லை.''*

*(மேற்கூறிய இரண்டு செய்யுட்களின் மூலம் இறைவனின் எங்கும், எதிலும்,· எப்போதும் நீக்கமற நிறைந்திருக்கும் தன்மைகுறிக்கப்படுகின்றது.)*

**கிரீடனம் கதினம் சக்ரிணம் ச**
**தேஜோ ராசிம் ஸர்வதோ தீப்திமந்தம் ।**
**பச்யாமி த்வாம் தூர்நிரீக்ஷ்யம் ஸமந்தாத்**
**தீப்தானலார்கத்யுதி மப்ரமேயம் ॥ (17)**

*''தலையில் மகுடம் அணிந்து, கையில் கதை (ஆயுதம்) தாங்கி ,கையில் சக்கரம் ஏந்தி, சுற்றிலும் ஒளிப்பிழம் பாய்த் திகழ்ந்து காண்பதற்கு அரியதாக விளங்கி,வெப்பத்தைத் தந்திடும் நெருப்புச் சூரியனாகத் திகழ்ந்திடும் உன்னை நான் எங்கும் பார்க்கின்றேன்.''*

*(இங்குப் பேரொளியுடன் இறைவன் திகழ்ந்து, சாதாரண ஊனக்கண்ணுக்கும் மட்டுமன்றி ஞானக்கண் பெற்ற அறிஞருக்குக்கூட திகைப்பூட்டும் வகையில் இறைவன் தன் விஸ்ரூபத்தைக் காட்டுகின்றான். அதாவது ஞானியராலும் அறியமுடியா அரிதான மேன்மையுடையவன் இறைவன்.)*

**த்வமக்ஷரம் பரமம் வேதிதவ்யம்**
**த்வமஸ்ய விச்வஸ்ய பரம் நிதானம் ।**
**த்வமவ்யய: சாச்வததர்மகோப்தா**
**ஸனாதன ஸ்தவம் புருஷே மதோ மே ॥ (18)**

*''தாங்கள் என்றும் குறையாத, அழியாத மூலப்பரம்பொருள்; முழுதும் அறிந்துகொள்ள வேண்டியவர், இந்த உலகத்தினைத் தாங்குபவர்; மாற்றம் இல்லாதவர்; இந்து தர்மத்தின் காவலர்; (தாங்கள்)என்னால் அறிந்து கொள்ளத்தக்கதான பரமாத்மா எனும் பேரருளாளர்.''*

*(எது மாறினாலும், எது அழிந்தாலும் சிறிதும் பாதிக்கப்படாத இறைவனான கண்ணன் தன்னுடைய கருணைமிக்க பேரருளின் காரணத்தால் இந்த உலகை தர்மத்தின்*

*வழிநடத்துகின்றார். இயற்கை அவர்விருப்பப்படி நடக்கின்றது. அதுவே அப்பகவானின் ஈடு செய்யமுடியாத பெருங்குணமாகும். அதனை இங்கு அர்ச்சுனன் உணருகின்றான்.)*

**அனாதி மத்யாந்த மனந்த வீர்ய**
**மனந்தபாஹும் சசி ஸூர்ய நேத்ரம் ।**
**பச்யாமி த்வாம் தீப்தஹுதாச வக்த்ரம்**
**ஸ்வதேஜஸா விச்வமிதம் தபந்தம் ॥** (19)

*''முதல், இடை, முடிவு இல்லாதவரும், முடிவில்லாத சக்தியை கொண்டவரும், கணக்கற்ற கைகளைத்தாங்கியவரும், சூர்ய சந்திரர்களை தன் இரு கண்களாகக் கொண்டவரும், தீ உமிழும் வாயினைப் பெற்றவரும், தன்னுடைய பேரொளியினால் இந்த உலகத்தையே சுடும் தன்மையினரும் ஆகிய உன்னைப் பார்க்கின்றேன்.''*

*(சாதாரணமாக சாராசரி மனிதன் கடல், யானை, இரயில் எஞ்ஜின் ஆகியவற்றைப் பலமுறை பார்த்திருந்தாலும் மீண்டும் மீண்டும் அவற்றைப் பார்ப்பதில் சலிப்பதில்லை. ஏனெனில் இயற்கை வளத்தில் கடலைவிட மிகப்பெரியது, ஆச்சர்யமானது ஏதும் இருக்கமுடியாது. மிருகங்களில் யானையைவிட பெரிய மிருகம் இல்லை. அதேபோன்று இயந்திரங்களில் இரயில் எஞ்ஜினைப் போன்று அந்த அளவு ஒரு குறுகிய இடத்தில் பல இரயில் பெட்டிகளை ஒரு சேர்த்து இழுத்திடும் ஒரு இயந்திரத்தை அருகுசென்று பார்க்கத்தூண்டுவதை சாதாரணமாக பார்க்கலாம். ஆகவே இவை மூன்றும் அடிக்கடிப் பார்த்திடத் தூண்டுகின்றன. மனநிலையில்தான் வியாசர் பகவானின் குணங்களில் பல இடங்களில் பலவாறு ஆழங்கால் பட்டு அக்குணங்களையே, ஆற்றல்களையே அர்ச்சுனன் நிலையில் வைத்து நமக்குக்கூறுகிறார். அவ்வாறு கூறுவதில் அவர் சிறிதும் சலிப்பதில்லை. பகவானின் ஆற்றல்கள் பற்றி கேள்விப்படும் நம்மிடம் மேலும் நமது மனதில் கற்பனையையும் மிஞ்சிடும் வகையில், நம்மிடம் மேலும் பகவானின் பெருமையை அறிந்திட தூண்டுகிறது. அந்த*

*வகையில் இச்செய்யுள் மீண்டும் இறைமைக்குணங்களின் சிறப்பை அறிவிக்கின்றது.)*

**த்யாவா ப்ருதிவ்யோரிதமந்த்ரம் ஹி
வ்யாப்தம் த்வயைகேன திசஸ்ய ஸர்வா: ।
த்ருஷ்ட்வாத்புதம் ரூபமுக்ரம் தவேதம்
லோகத்ரயம் ப்ரவ்யதிதம் மஹாத்மன் ॥**

(20)

*''மகாத்மாவே! விண்ணுலகு, மண்ணுலகு (இவை இரண்டுக்கும் இடைப்பட்ட அண்டகோளங்கள், உலகங்கள் இயங்குகின்ற வெட்டவெளி, எட்டுத்திசைகள் ஆகிய யாவும் உன்னால் வியாபிக்கப்பட்டுள்ளன. உன்னுடைய வியப்பூட்டும் இந்தப் பயங்கரமான வடிவத்தைக் (விஸ்வரூபதரிசனம்) கண்டுமூன்று உலகங்களும் நடுநடுங்குகின்றன.''*

*(அவனன்றி அணுவும் அசையாது என்பதை அர்ச்சுனன் ஐயமற அறிகின்றான்.ஆக்கலும், அழித்தலும் அவ் இறைவன் விருப்பப்படிதான் நடக்கின்றன் என்பதையும், தான் ஒரு கருவிமாத்ரமே என்பதையும் அறிகின்றான்.அதாவது பாரதப்போர் தன் முடிவின்படி தான் நடக்கப்போகிறது என்று மயங்கிய அர்ச்சுனன்,குருக்ஷேத்ரப் போரின் மூலம் அறத்தின் பெருமையை உணர்த்தவே இறைவன் இப்போரை நடத்துகின்றான். ஆக்கலின் பயங்கரத்தையும் காட்டவே அவ் இறைவன் இப்பேருவை அருச்சுனுக்குக் காட்டுகிறான்.)*

**அமீ ஹி த்வாம் ஸுரஸங்கா விசந்தி
கேசித்பீதா : ப்ராஞ்ஜலயோ க்ருணந்தி ।
ஸ்வஸ்தீத்யுக்த்வா மஹர்ஷிஸித்த ஸங்கா:
ஸ்துவந்தி த்வாம் ஸ்துதிபி :புஷ்கலாபி: ॥** (21)

*''வான் உலகத்தைச் சார்ந்தவர் யாவும் உன்னிடம் ஒடுங்குகின்றனர். சிலர் பயந்து கைகூப்பி உன்னை வணங்குகின்றனர்.மாமுனிகள், சித்தர்கள் யாவரும் வாழ்த்தி, உன்புகழ்பாடி உன்னைப் போற்றுகின்றனர்.''*

*(உலக அழிவு எனும் பணியினையும் இறைவன்*

தன்னுடைய ஒரு திருவிளையாடலாகவே எண்ணுகின்றான். ஏனெனின் தன்னுடைய ஒவ்வொரு செயலின் மூலம் ஒவ்வொரு உண்மையை புலப்படுத்துகின்றான். பக்தனைக் காப்பதற்காக, அவன் மூலமாக சத்தியத்தை தர்மத்தை நிலைநாட்ட இறைவன் கற்பனைக்கும் எட்டாத வகையில் அகிலமே நடுங்கும் வண்ணம் பயங்கரமான முடிவுகளை எடுக்கிறான். இதனை அறிந்தும், அறியாத வானவர்கள் மௌனமாக தன் பூவுலக வாழ்விற்குப் பிறகு இறைவனுடன் கலந்துவிடுகின்றனர். மற்றும் சிலரோ இறைவனுடன் பயங்கர முடிவினை அறிந்து அஞ்சி அவ் இறைவனையே தொழுகின்றனர். இறைவனின் எண்ணமும் அதற்கான இறைவன் கொண்ட காரணமும் அறிந்திடும் மாமுனிகள், சித்தர்கள் யாவரும் அவ் இறைவனின் திருவிளையாடலுக்கு 'மங்களாசாஸனம்' செய்திடும் வகையில், அவன் புகழ்பாடிப் போற்றுகின்றனர்.)

ருத்ராதித்யா வஸவோ யே ச ஸாத்யா
விச்வே அச்விநௌ மருதஸ் சோஷ்ம பாஸ்ச ।
கந்தர்வயக்ஷாஸுரஸித்தஸங்கா
வீக்ஷந்தே த்வாம் விஸ்மிதாஸ் சைவ ஸ்ரவே ॥ (22)

''உருத்தினர், ஆதித்யர்கள், வசுக்கள், சாத்தியர், விசுவேதேவர், அசுவினி தேவர், மருத்துக்கள், ஊஷ்மபர், கந்தர்வர், யக்ஷர் ,அசுரர், சித்தர் ஆகியோர் கூட்டம் ஆச்சர்யத்தோடு உங்களையே பார்க்கின்றனர்.''

(மண்ணுலகமட்டுமின்றி, விண்ணுலக மாந்தர்களும் இறைவனின் கற்பனைக்கெட்டாத உருவமைதிகளைக் கொண்டு விளங்கும் விஸ்வரூபதரிசனத்தைக் கண்டு திகைப்பும் வியப்பும் கொள்கின்றனர்.)

ரூபம் மஹத்தே பஹுவக்த்ர நேத்ரம்
மஹாபாஹோ பஹுபாஹூரு-பாதம் ।
பஹூதம் பஹூதன்ஷ்ட்ராகராலம்
த்ருட்வா லோகா: ப்ரவ்யதி தாஸ்ததாஹம் ॥ (23)

''அகன்ற தோள்களை உடையவரே ! (பகவானே) பல முகங்கள், கண்கள், கைகள், தொடைகள், கால்கள், வயிறுகள், வளைந்த கோரமான பற்கள் போன்றவற்றை உடைய உங்களுடைய பெரிய உருவத்தைக் கண்டு உலகங்கள் யாவும் பயந்து நடுங்குகின்றன. நானும் அவ்வாறே நடுங்குகின்றேன்.''

(மனதில் குழப்பமும், தடுமாற்றமும் உள்ள ஒருவனது மனது விரைவில் உணர்ச்சிகளுக்கு அடிமையாகின்றது. அந்த வகையில் போர் விளைவுகளைப் பற்றி குழப்பம் அடைந்துள்ள அர்ச்சுனனது மனமும் கலக்கத்திற்கு உள்ளாகியுள்ளதால் இறைவனது பேருருவம் அவனுக்குப் பேரச்சம் ஏற்படுத்தியது இயற்கையே.)

நப: ஸப்ருசம் தீப்தமனேக வர்ணம்
வ்யாத்தானனம் தீப்தவிசால நேத்ரம் ।
த்ருஷ்ட்வா ஹி த்வாம் ப்ரவ்யதி தாந்தராத்மா
த்ருதிம் ந விந்தாமி சமம் ச விஷ்ணோ ॥

(24)

''விஷ்ணுவே! விண்ணை முட்டும் உயரம் உயர்ந்து, பல வண்ணங்களுடன் ஒளிவிடுகின்ற திறந்த வாய்களைக் கொண்டும், நெருப்பினை உமிழும் வகையில் திகழும் பெரிய கண்களைக் கொண்டும் விளங்குகின்ற உங்களைக் கண்டு கலங்கும் நான். தைர்யத்தையும், மன அமைதியினையும் இழந்து விளங்குகின்றேன்.''

(எதிர்பாராத ஒரு சூழ்நிலையை எதிர்கொள்ளும் ஒருவன் அச்சூழ்நிலையுடன் உணர்வாலும், சிந்தனையாலும் ஒன்றுபடும் வரை அச்சம், கலக்கம், அமைதியின்மை, குழப்பம் போன்றவற்றிற்கு உள்ளாவது இயல்பு. இதனைத்தான் நாம் அர்ச்சுனனிடம் காண்கிறோம்.)

தன்ஷ்ட்ராகராலானி ச தே முகானி
த்ருஷ்ட்வைவ காலானல ஸன்னிபானி ।
திசோ ந ஜானே ந லபே ச சர்ம
ப்ரஸீத தேவேச ஜகந் நிவாஸ ॥ (25)

''தேவர்களின் தலைவனே! பயமுறுத்தும் கோரைப் பற்களைக் கொண்டு விளங்கும் ஊழித்தீயைப்போல் உங்களுடைய முகங்களைக் கண்ட உடனேயே எனக்கு திசைகள் தெரிய வில்லை. மனயமைதி அடைந்துள்ளேன். உலகத்திற்கு ஆதாரமாக இருப்பவனே எனக்கு அருள் புரிவீராகுக,''

*(சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் ஆகியவற்றைக் கொண்டுதான் ஒருவரால் திசைகளை அறிய முடியும். ஒளிவீசும் தன்மையுள்ள இவையாவும், இறைவனின் பேரொளியில் மறைந்து விட்டதால், அர்ச்சுனனால் திசைகளை அறிந்து கொள்ள முடியவில்லை. அதனால் குழப்பமும், அச்சத்தின் எல்லைக்கும் சென்று விட்டான். அந்த நிலையில் அவ் இறைவனின் கருணையை எதிர் பார்த்து, அவன் அருளுக்காக வேண்டுகின்றான்.)*

**அமீ ச த்வாம் த்ருதராஷ்ட்ரஸ்ய புத்ரா**
**ஸர்வே ஸஹைவாவனி பால ஸங்கை: ।**
**பீஷ்மோ த்ரோண: ஸூத புத்ரஸ்த தாஸௌ**
**ஸஹாஸ்மதீயைரபி யோதமுக்யை: ॥ (26)**

**வக்த்ரணி தே த்வரமாணு விசந்தி**
**தன்ஷ்ட்ராகராலானி பயானகானி ।**
**கேசித்விலக்னா தசனாந்த்ரேஷு**
**ஸந்த்ருச்யந்தே சூர்ணிதைருத்த-மாங்கை: ॥ (27)**

''உலகாளும் மன்னர்கள் கூட்டத்துடன் திருதராஷ்டரனின் பிள்ளைகள் எல்லோரும் பீஷ்மர், துரோணர், சூத புத்திரன் (கர்ணன்) மற்றும் நம்மைச்சார்ந்த சில முக்யமான வீரர்களும் பயங்கரமான கோரைப் பற்களை உடைய உமது வாயினுள் வேக வேகமாக புகுவதையும், பொடிப்பொடியா கிவிட்டத் தலைகளுடன் சிலர் உனது பற்களின் இடுக்கில் அகப்பட்டு விளங்குவதையும் நான் பார்க்கின்றேன்.''

*(பாரதப்போர் பூமி பாரத்தைக் குறைப்பதற்காகவே நடந்துள்ளது என்பதுபோல் அறிஞர்கள், ஆசார்யர்கள், சான்றோரகள், வீரர்கள், வல்லுனர்கள் யாவரும் இறுதியில்*

*அழிவதை அர்ச்சுனன் கண்டு, அவ் அழிவை தன்னால் தடுக்க முடியாத ஒன்று என்பதையும் அறிகின்றான்.)*

**யதா நதீனாம் பஹவோ அம்புவேகா:**
**ஸமுத்ர மேவாபி முகாத்ரவந்தி ।**
**ததா தவாமீ நரலோக வீரா**
**விசந்தி வக்த்ராண்யபிவிஜ் வலந்தி ॥ (28)**

**யதா ப்ரதீப்தம் ஜ்வாலனம் பதங்கா**
**விசந்தி நாசாய ஸம்ருத்வேகா: ।**
**ததைவ நாசாய விசந்தி லோகாஸ்**
**தவாவி வக்த்ராணி ஸம்ருத்தவேகா ॥ (29)**

*"பெருக்கெடுத்துக் கரைபுரண்டோடும் நதிகள் யாவும் இறுதியில் கடலையே சென்றடைவது போல், முப்பக்கமும் தீயினை உமிழும் உமது வாய்க்குள் இந்த உலகத்து வீரர்கள் யாவரும் புகுகின்றனர்."*

*"அழிவதற்காகவே விட்டில் பூச்சிகள் எரியும் விளக்கில் விரைந்து வீழ்ந்து மடிகின்றன. (அவ்வாறே) இந்த உலகத்து மக்களும் தங்கள் அழிவைக் தேடிக்கொள்ளும் வகையில் உம் வாயினுள் புகுகின்றனர்."*

*(எரியும் விளக்கில் எவ்வாறு விட்டில் பூச்சிகள் தாமாகவே சென்று வீழ்ந்து மடிகின்றனவோ, அவ்வாறு இவ்வுலக உயிர்கள் தங்கள் வினைப்பயனை அனுபவிப்பதற்காக, தங்களாகவே தங்கள் முடிவினைத் தேடிக்கொள்ளும்வகையில் இறைவனின் வாயில் புகுகின்றனர்.அதாவது நிலையாமையை மறந்து மயக்கத்திலாழ்ந்து, போக வாழ்க்கையினை துய்த்திட விரும்பும் அவர்கள், தங்களது உடல் அழிவை மறந்துவிட்டார்கள். அதனால் நல்வினை மறந்து தீவினைகளைத் தொடர்ந்து செய்து கொண்டே இருக்கிறார்கள். அதாவது மீண்டும் மீண்டும் பிறவியிலேயே உழன்று, துன்பம் கொள்ளவே அழிந்து போகின்றனர்.)*

**லேலிஹ்யஸே க்ரஸமான: ஸமந்தால்**
**லோகான் ஸமக்ரான் வதனைர் ஜ்வலத்பி: ।**

தேஜோபிராபூர்ய ஜத்ஸமக்ரம்
பாஸஸ்தவோக்ரா: ப்ரதபந்தி விஷ்ணோ ॥ (30)

*''வெப்பமுடைய கதிர்களை வீசிடும் உம் வாய்களினால் உலக முழுவதையும் விழுங்கி, எல்லாதிசைகளையும் நாவினால் ருசிபார்க்கிறீர். விஷ்ணுவே, கடுமையான உம்முடைய ஒளிச்சுடர்கள் யாவும் வெப்பத்தில் இந்த உலகம் முழுவதையும் சுட்டெரிக்கின்றன.''*

*(விஷ்ணு என்றால் எங்கும் பரந்து உள்ளவன் என்று பொருள். இவ்இறைவன் இவ்வுலக உயிர்களின் மேன்மையின் பொருட்டு மங்கலமாக எங்கும் பரந்து இருப்பது போன்று, இந்த உலக உயிர்களை மயக்கத்திலிருந்து விடுவிக்க கடுமையான வெளிப்பாடுகளுடன் எங்கும் பரந்து உள்ளான். ஏனெனில் அவ்இறைவன் ஆக்கல், அளித்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களுக்கும் மூலகாரணன் ஆக விளங்குகின்றான்.)*

ஆக்யாஹி மே கோ பவானுக்ர ரூபோ
நமோ அஸ்து தே தேவவர ப்ரஸீத ।
விக்ஞாதுமிச்சாமி பவந்தமாத்யம்
நஹிப்ரஜானாமி தவ ப்ரவ்ருத்திம் ॥ (31)

*''மிகவும் அச்சமூட்டும் வகையில் திகழும் தாங்கள் யார் என்று எனக்குக் கூறுங்கள். உம்மைக் தொழுகின்றேன். தேவர்களின் தலைவனே! எனக்கு அருள் புரியுங்கள். எல்லாவற்றிற்கும் ஆதியான உங்களை அறிய ஆவலாக உள்ளேன். ஏனென்றால் உங்கள் செயல்களை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை.''*

*(எவ்வாறு 'அழகு' ஒரு மனிதனது உள்ளத்தை, சிந்தனையை தடுமாறவைக்கிறதோ, மனதை ஈர்க்கின்றதோ அதேபோன்று, கோரமான பயங்கரமான உருவமைதியும் மனதை சிந்தனையைத் தாக்குகின்றது. பாய்ந்தோடும் அருவிகளைக் கொண்டு விளங்கும் ஒரு பெரிய மலையானது எவ்வாறு கண்ணுக்கும், கருத்திற்கும் விருந்தாக அமைகின்றதோ, நெருப்பினை நெருப்பாற்றினை ஓடவிடும் எரிமலையும் அதே*

கண்களுக்கும், கருத்திற்கும் அதிர்ச்சியையும் பயத்தையும் உண்டாக்குகிறது. அந்தவகையில் மோகனப்புன்னகையும், அருள் முகமும், அபயக்கரங்களும் கொண்ட பரமனது திருவுருவமும் இன்று போர்க்களத்தில் கற்பனைக்கும் எட்டாதவகையில் அச்சமூட்டும் உருவினைக் கொண்டு திகழ்கின்றது. இவ்வாறு உருவமைதிகளைக் கொண்டு விளங்கும் இறைவனின் உள்ளத்தை அறிய விரும்பும் அர்ச்சுனன், அவ்வாறு அறிந்துகொள்ள முடியாமல், இறைவனை அறிந்து கொள்ள இறுதியில் இறைவனையே சரணடைகின்றான்.)

## பகவான் கூறுவது:

காலோ அஸ்மி லோகக்ஷயக்ருத் ப்ரவ்ருத்தோ
லோகன் ஸமாஹர்துமிஹ ப்ரவ்ருத்த: ।
ருதேஅபி த்வாம் ந பவிஷ்யந்தி ஸர்வே
யே அவஸ்திதா: பரத்யனீகேஷு யோதா ॥ (32)

"உலகங்கள் எல்லாவற்றையும் அழித்திடும் ஆற்றல்பெற்ற காலதேவன் நான். இந்த உலகம் யாவற்றையும் அழிப்பதில் ஈடுபட்டிருக்கின்றேன். போர்முனையிலிருந்து நீ விலக நினைத்தாலும் போரிட அணிவகுத்து நிற்கும் எல்லா வீரர்களும் உயிருடன் இருக்கமாட்டார்கள்."

(இச்செய்யுளில் காலத்தின் ஆற்றல், பெருமை பேசப் பெறுகிறது.ஆகாயம் எனும் ஒரு பூதத்தில் எவ்வாறு காற்று, நீர்,நெருப்பு, மண் என்ற மற்றைய பூதங்கள் அடங்கிவிடுகின்றனவோ அவ்வாறே காலம் எனும் பெரும் ஆற்றலில் மற்றைய வாழ்க்கைச் செயல்கள் ஒடுங்கிவிடுகின்றன. ஆம், மனித ஆற்றலின் அளவாக காலம் செயல்படுகின்றது. அவ்வாறு அளப்பவன் அக்கால தேவனான இறைவனாவான். பூமி பாரத்தைக் குறைக்கவே இறைவன் அவதாரம் மேற்கொள்கிறான். பூகம்பமும், வெள்ளமும் அவன் திருவிளையாடல்களே. அந்தவகையில்தான் பாரதப்போரும் இறைவனால் நிகழ்த்தப்பெறுகின்றது. இப்போரில் பங்கேற்க

அர்ச்சுனன் விரும்பாவிட்டாலும், இறை விருப்பத்தால் இப்போர் நடக்கின்றது. இந்த நிலையில்தான் தனது உறவினர்களின் மரணம் தன்னால் அன்று இறைவனால் தான் என்ற ஓர் உண்மையை அர்ச்சுனன் அறிய ஆரம்பிக்கின்றான்.)

**தஸ்மாத் த்வமுத்திஷ்ட யசோ லபஸ்வ**
**ஜித்வா சத்ரூன் புங்க்ஷ்வ ராஜ்யம் ஸம்ருத்தம் ।**
**மயைவைதே நிஹதா: பூர்வமேவ**
**நிமித்தமாத்ரம் பவ ஸவ்யஸாசின் ॥ (33)**

''ஆகவே, நீ எழுவாயாக!புகழைப் பெறுவாயாக! பகைவர்களை அழித்து செல்வம் மிக்க இந்த நாட்டை ஆண்டு அனுபவிப்பாயாக! இவர்கள் யாவரும் (இப்போரில் கொல்லப்படுபவர்கள் யாவரும்) என்னால் முன்னமேயே கொல்லப்பட்டவர்கள்தாம்.இடது கை கொண்டும் அம்பு எய்தும் வல்லமை பெற்றவீரனே! நீ ஒரு கருவியாக மட்டுமே செயல்படுவாயாக.''

(எல்லாச் செயல்களும் இறைவனின் விருப்பத்தால்தான் நடக்கும்.அச்செயல்பாடுகளில் ஒழுங்கும், தர்மமும், உறுதியும் எப்போதும் விளங்கிடும். அவ்வாறு இறைவனால் முடிவெடுக்கப்பட்டு அவனால் நடத்தப்படும் செயல்களுக்கு உறுதுணையாக இருப்பதுதான் மனிதனின் கடமை. அதுவே அவனுக்குப் பெருமையும், புகழையும் வழங்கிடும். இறைவனது அவதார குறிக்கோள் தீயோரை அழித்துத் தர்மத்தை காப்பதுதான்.அந்த வகையில் பகைவர்களை அழித்திடும் இறை முயற்சியில் மனிதனும் பங்கேற்ற வேண்டும். அதுவே உலகாயுத இன்பங்களுக்கும் மேலுலக பயன்களுக்கும் இறுதியில் மோட்சத்தையும் மனிதனுக்கு தரவல்லது. அர்ச்சுனன் போன்ற தேர்ந்தவீரன் தன்னுடைய ஆற்றலை நல்லவற்றிற்கு, நீதிக்கு பயன்படுத்திக் கொள்வதே வீரத்திற்கு சிறப்பு.இவ்வீரம் இறைவனின் விருப்பத்திற்கு ஒரு கருவியாகவே துணை செய்கின்றது.)

**த்ரோணம் ச பீஷ்மம் ச ஜயத்ரதம் ச**
**கர்ணம் ததான்யானபி யோத வீரான் ।**

மயா ஹதான் ஸ்த்வம் ஜஹி மா வ்யாதிஷ்டா
யுத்யஸ்வ ஜேதாஸி ரணே ஸபத்னான்: ॥ (34)

''என்னால் .(முன்பே) கொலை செய்யப்பட்ட துரோணரையும் பீஷ்மரையும், ஜயத்ரதனையும், கர்ணனையும் அதுபோன்று மற்றைய படைவீரர்களையும் என் கருவியாகத் திகழ்ந்து கொல்வாயாக! பயந்து மனவருத்தம் கொள்ளாதே. போரில் பகைவர்களை அழிப்பாயாக.போ,போர்புரிவாயாக!''

*(மேற் செய்யுளில் கூறப்பட்ட நபர்களான துரோணர், பீஷ்மர், ஜயத்ரதன், கர்ணன் ஆகியோர், பலவகைகளில் மற்றைய வீரர்களிடமிருந்து வேறுபட்டு, தங்களுக்கென்ற தனி ஆற்றல் உடையவர்களாவர். துரோணர் அர்ச்சுனனுக்கு குருமட்டுமின்றி , பல தெய்வாம்சம் மிக்க அம்புகளை பெற்றிருப்பவர். பீஷ்மரோ இது வரை யாராலும் வெல்லப்படாதவர். மேலும் அவர் விரும்பினாலன்றி அவர்க்கு இறப்பு இல்லை. ஜயத்ரதனின் தலையை யார் அறுத்து நிலத்தில் வீழ்த்துகிருரோ, அவர்கள் தலை உருத்தெரியாமல் வெடித்துவிடும். கர்ணனை கலச குண்டலமும், ஆற்றல் மிக்க 'சக்தி' என்ற போர்க்கருவியும் பாதுகாக்கின்றன. இவ்வாறு ஆற்றல்மிக்க அவர்களைத் தன்னால் அழிக்கமுடியுமா என்ற அச்சமும், ஐயமும், அர்ச்சுனனை பீடி க்கின்றது. அதைத் துடைத்திடும் வகையில் பகவான் அர்ச்சுனனுக்கு தைர்யமளித்து கையில் வில்லெடுக்கச் செய்கின்றுர்.)*

ஏதச்ச்ருத்வா வசனம் கேசவஸ்ய
க்ருதாஞ்ஜலிர் வேபமான: கிரீடி ।
நமஸ்க்ருத்வா பூய ஏவாஹ க்ருஷ்ணம்
ஸகத்கதம் பீதபீத: ப்ரணம்ய ॥ (35)

''கேசவனுடைய (பகவானுடைய)இந்த உபதேச வார்த்தைகளைக் கேட்டதும், தலையில் கிரீடம் (பொன்முடி) தரித்தவனாகிய அர்ச்சுனன் பயந்து, நடுநடுங்கி கைகளைக் கூப்பியவனாய் (பகவானை)கிருஷ்ணனைப் பார்த்து வார்த்தைகள் தடுமாற கூற ஆரம்பிக்கின்றுன்.''

*(யாருக்கும் தலைவணங்கக் கூடாத, பயப்படக் கூடாத*

*மிடுக்குடன் பேசவேண்டிய அரசனான அர்ச்சுனன் இங்கு பகவானிடம் ஒரு அடிமை நிலையில் விளங்குவது, ஜீவாத்மாக்கள் பரமாத்மாவிடம் ஒடுங்க வேண்டிய அவசியத்தைக் குறிக்கவே ஆகும்.)*

## அர்ச்சுனன் சொன்னது

ஸ்தானே ஹ்ருஷீகேச தவ ப்ரகீர்த்யா
ஜகத் ப்ரஹ்ருஷ்யத் யனுரஜ்யதே ச ।
ரக்ஷாம்ஸி பீதானி திசோ த்ரவந்தி
ஸர்வே நமஸ்யந்தி ச ஸித்தஸங்கா: ॥

(36)

*''ஹ்ருஷிகேசனே! உன்னைப் புகழ்வதால் இந்த உலகம் இன்பம் அடைகின்றது. (உன்னைக்கண்டு) அரக்கர்கள் திசை தெரியாமல் அஞ்சி ஓடுகிறார்கள். சித்தர் போன்ற ஞானிகள் உன்னைக் கண்டு வணங்குகின்றனர். இவையாவும் உன் ஆற்றலுக்கும், பெருமைக்கும் பொருத்தமானதாகத் திகழ்கின்றன.''*

*(சுமார் 60,70, ஆண்டுகளுக்கு முன்பு இரயிலைப் பார்த்ததும் கிராமத்தார் பயந்தனர். அதனைக் கண்டு அஞ்சி ஓடவும் செய்தனர். அதனைப் போன்று, இறைவனின் இயற்கை விநோதங்களைக் கண்டு அரக்கர்கள் அஞ்சி ஒடுவர். இரயிலின் நன்மையை, ஆற்றலை உணர்ந்த கிராமத்தார் பின்னர் புகழவும், பயன் பெறுவும் செய்தனர். அதனைப்போன்று, இறை ஆற்றலை உணர்ந்த பக்தர்கள் அப்பகவானை புகழ்வதும், புகழ்பாடுவதும் மேற்கொள்வார்கள். அவ் இறைவனை உணரும் அளவு, அவன் ஆற்றல்களை அனுபவிக்கும் அளவு பக்தர்கள் சித்தர்களாக உயர்வு பெறுவார்கள். அந்த வகையில் ஒரு சாதாரண போர்வீரன் அரசன்-க்ஷத்திரியன் என்ற நிலையில் இருந்த அர்ச்சுனன் இறைவனின் அமுத மொழிகளை கேட்ட அளவு அவற்றை புரிந்துக்கொண்ட அளவு, அவனுடைய அறிவு விரிவடைகின்றது.அந்த நிலையில் தான் ஒரு கருவிமட்டுமே -தனக்குரிய கடமையை ஆற்றுவதே தனக்குப் பெருமை சேர்க்கும் என்ற எண்ணம் அவனுக்கு ஏற்படுகிறது.)*

**கஸ்மாச்ச தே ந நமேரன் மஹாத்மன்**
**கரீயஸே ப்ரஹ்மணோ அப்யாதி கர்த்ரே ।**
**அனந்த தேவேச ஜகந்நிவாஸ**
**த்வமக்ஷரம் ஸதஸத்தத்பரம்யத் ॥ (37)**

*''மகாத்மாவே! முடிவில்லாது விளங்குபவரே! தேவர்களின் தலைவரே! உலகத்தையே இருப்பிடமாகக் கொண்டவரே, பிரம்மனுக்கும் பெரியவரே! மூலகாரணரே, உங்களை எவ்வாறு வணங்காமல் இருப்பார்கள்? (வணங்கத்தான் செய்வார்கள்) தோன்றியன தோன்றாமல் இருப்பன ஆகியவற்றிற்கு அப்பாற்பட்டு விளங்கிடும் அழியாத பொருளுமாக இருப்பவரே''*

*(இச்செய்யுளில் இறைவனின் பேராற்றல் மறுபடியும் உணர்த்தப்படுகிறது. ஆரம்பமும், முடிவும் இல்லாதவனாக, இவ்வுலக உயிர்களுக்கு மட்டுமன்றி, தேவர்கள் யாவருக்கும் தலைவனாக, உலகைப்படைத்திட்ட அந்த பிரம்மனுக்கும் பெரியவனாக, கண்ணுக்குத் தெரிவதும், தெரியாததுமாக விளங்கிடும் பொருள்களுக்கு அப்பாற்பட்டவனாக, அழிவு அல்லது குறைவுபடாத பொருளாக இருப்பவனாக இறைவன் திகழ்கின்றான்.)*

**த்வமாதிதேவ: புருஷ: புராணஸ்த்வமஸ்ய**
**விச்வஸ்ய பரம் நிதானம் ।**
**வேத்தாஸி வேத்யம் ச பரம் ச தாம**
**த்வயா ததம் விச்வமனந்த ரூப ॥ (38)**

*''கணக்கற்ற உருவங்களைக் கொண்டவனே, முதற்பொருளே, மிகப் பழமையானவனாயும், இந்த உலகங்கள் யாவற்றிற்கும் மேற்பட்ட இடத்தில் இருப்பவனாயும் விளங்குபவர் தாங்களே யாவீர்! அறிபவனும், அறியப்படும் பொருளும், பெரிய நிலமாயும் விளங்குகிறீர்! உங்களால் இந்த உலகம் யாவும் நிறைந்துள்ளது.''*

*(இறைவன் மிகவும் பழமையானவன் என்பதால் 'புராண புருஷன்' எனப்புகழப்பெறுகிறான். எல்லா உயிர்களும் அவனிடமிருந்து தோன்றுவதால், அவன் ஆதிநாயகன்.*

*அறிவாகவும், அறியப்படும் பொருளாகவும் இறைவன் விளங்குகின்றான். கடலாக, வெளியாக அவன் திகழ்வதால் எல்லா தோற்றங்களும் அவனுள் அடங்கும்.)*

வாயுர்யமோ அக்னிர்வருண: சசாங்க:
ப்ரஜாபதிஸ்த்வம் ப்ரபிதா மஹஸ்ச ।
நமோ நமஸ்தே அஸ்து ஸஹஸ்ரக்ருத்வ:
புனஸ்ச பூயோ அபி நமோ நமஸ்தே ॥ (39)

*''வாயு (காற்று), யமன், நெருப்பு, வருணன் (மழை), சந்திரன், பிரஜாபதி, முப்பாட்டனார் ஆகிய எல்லோருமாக விளங்குகிறீர். உங்களை பலமுறை மட்டுமல்ல, ஆயிரம்முறை, அதற்கும் மேலாக வணங்குகின்றேன்''*

*(உலகங்களுக்குத் தந்தையாக காச்யபர் போன்ற ஞானிகள் விளங்குகின்றனர். இவர்களை பிரஜாபதி என்று அழைப்பர். அந்த ஞானிகளின் தந்தையாக பிரம்மன் திகழ்கின்றார். ஆகவே அவர் உலகங்களுக்குப் பாட்டனராக விளங்குகின்றவர். அந்த பிரம்மனுக்குத் தந்தையாக பகவானாகிய விஷ்ணுவானவன் இருப்பதால், பகவான் இந்த உயிர்களுக்கு முப்பாட்டனாராக அழைக்கப்பெறுகிறார். அந்த பகவானை எத்தனை முறை வணங்கினாலும் பக்தனின் பக்தி மேலும் அதிகரிக்கவே செய்கின்றது.)*

நம: புரஸ்தாதத ப்ருஷ்டதஸ்தே
நமோ அஸ்து தே ஸர்வத ஏவ ஸர்வ ।
அனந்த வீர்யாமித விக்ரமஸ்த்வம்

ஸர்வம் ஸமாப்னோஷி ததோ அஸி ஸர்வ: ॥ (40)

*''எல்லாமாக விளங்குபவரே! உம்மை (உன்)முன்னிறும், பின்னிறும் இருந்து வணங்குகின்றேன். எல்லா திசைகளிலிருந்தும் உம்மை வணங்குகின்றேன். அளவில்லாத ஆற்றலையும், வீரத்தையும் கொண்ட நீங்கள் எல்லாவற்றிலும் நன்கு பரவி விளங்குகின்றீர். ஆகவே எல்லாமாக நீங்கள் திகழ்கின்றீர்.''*

(எந்தத் திசையாயினும், எந்தப் பொருளாயினும் அவையாவும் இறைவனாகத்தான் கருதப்படும். ஒவ்வொரு உயிரின் ஆத்மாவிலும் இறைவன் விளங்குவதால், எந்த உயிரினை வணங்கினாலும் அப்பகவானை வணங்குவதாகவே பொருளாகும். ஐம்பூதங்களிலும் அப்பகவான் உறைந்து விளங்குவதால், இயற்கையானது ஆச்சர்யமான, அச்சமிக்க, சிந்திக் கத்தக்க இயல்புகளை கொண்டதாக விளங்குகின்றது. ஆகவே இயற்கையினை, மற்றைய உயிர்களை வணங்குவது மூலம் நாம் அவ் இறைவனையே ஆராதிப்பதாகவே அமையும்.)

ஸகேதி மத்வா ப்ரஸபம் யதுக்தம்
ஹே க்ருஷ்ண ஹே யாதவ ஹே ஸகேதி ।
அஜானதா மஹிமானம் தவேதம்
மயா ப்ரமாதாத் ப்ரணயேன வாபி ॥ (41)

யச்சாவஹாஸார்த்தமஸத்க்ருதோ அஸி
விஹார சய்யாஸன போஜனேஷு ।
ஏகோ அதவாப்யச்யுத தத்ஸமக்ஷம்
தத் க்ஷாமயே த்வாமஹம ப்ரமேயம் ॥ (42)

''என்னுடைய பெருமையை இத்தனை நாள் அறிந்துகொள்வது, நண்பன் என்ற உரிமையால் சிறிதும் யோசிக்காது, 'ஏ கிருஷ்ணா, ஏ யாதவா, ஏ கூட்டாளி' என்று சிறிதும் பணிவில்லாமல் எவ்வாறெல்லாம் என்னால் அழைக்கப்பட்டதோ, அச்சுதனே, (உன்னுடன்)விளையாடிய போதும் படுத்திருந்தபோதும், அமர்ந்திருந்தபோதும், தனித்தும், பிறருடைய எதிரிலும் ஏளனமாக எவ்வாறெல்லாம் அவமதிக்கப்பட்டீரோ அவற்றையெல்லாம் அளவில்லாத பெருமையும் ஆற்றலும் உடையவரே! மன்னித்திடுவீராக!''

(தன்னுடைய உற்ற நண்பனாக இதுவரை கருதியிருந்த கண்ணனைப் பற்றிய உண்மையறிவை அதாவது இறைவனைப்பற்றிய மெய்யறிவை பெற்றவுடன், அக்கண்ணன் மீது பக்தி அர்ச்சுனனுக்கு உண்டாகிறது. முதிர்ந்த அறிவு, பரந்த அறிவு ஆகியவற்றின் விளைவே 'பக்தி' எனும் உணர்வாகும். அதாவது உலக உயிர்கள் யாவும் அவ்

இறைவனின் மறுஉருவமே எனும் உயர்ந்த உணர்வே சிறந்த அறிவாகும், அந்த அறிவால்தான் 'அன்பு' எனும் உயர்பண்பு உருவாகும். இந்த அன்பே புனிதமாகும்போது 'பக்தி'யாக பரிமளிக்கிறது. அதனை அர்ச்சுன் இந்நிலையில் அனுபவிக்கிறுன்.)

பிதாஸி லோகஸ்ய சாரசரஸ்ய
த்வமஸ்ய பூஜ்யஸ்ச குருர்கரீயான் ।
ந த்வத்ஸமோ அஸத்யப்யதிக: குதோ அன்யோ
லோகதகரயே அப்யப்ரதி மப்ரபாவ ॥ (43)

''ஈடு இணையற்ற பெருமை உடையவரே! நகரும், நகரா உயிர்கள் வாழும் இந்த உலகத்திற்குத் தந்தை நீங்கள். வணங்குவதற்கும், குருவுக்கும் குருவாகவும் அமைந்தவர் தாங்கள். மூவுலகத்தில் உங்களுக்குச் சமமானவர்களோ; மிக்கவர்களோ யார் உளர் இங்கு? (யாரும் இல்லை)''

(ஈடு இணையற்ற, ஒப்பாரும் மிக்காரும் இல்லாத தெய்வமாக கிருஷ்ண பகவான் தொழப் பெறுகிறுர். அதனால்தான் உலக இயக்கம் சீராக நடை பெறுவதாக மறைமுகமாக செய்யுளில் குறிக்கப்படுகிறது. 'கட்சி'க்கு ஒரு தலைவன் இருந்தால்தான் கட்சியிலோ, அக்கட்சியால் ஆளப்படும் நிருவாகத்திலோ குழப்பமோ, பிரச்சனையோ ஏற்படாது . அந்த வகையில் ஆக்கம், அளித்தல், அழித்தல் யாவும் கண்ணனின் திருவருளால் சீராக நடைபெறுகிறது.

தஸ்மாத் ப்ரணம்ய ப்ரணிதாய காயம்
ப்ரஸாதயே த்வாமஹமீச மீட்யம் ।
பிதவே புத்ரஸ்ய ஸகேவ ஸக்யு:
ப்ரிய ப்ரியாயார்ஹ ஸி தேவ ஸோடும் ॥ (44)

''ஆகவே, தேவனே, என் உடம்பு தரையில் தொட (என்னால்) வணங்கப்படகூடிய போற்றுதற்குரிய ஈசனாகிய உன்னருளை பெற வேண்டுகின்றேன். பிள்ளைக்குத் தந்தையாகவும், நண்பனுக்கு நண்பனாகவும், காதலிக்கு

காதலனாகவும் அமைந்து(என்குற்றங்களை) பொறுத்தருள்வீராகுக!''

(ஒருவன் தலைகுனிந்து, கைகுவித்துத் தொழும்போது அவனது பணிவு தெரியவரும். அதே நேரத்து எதிர் நபரின் கால்கள் மட்டும் தெரியவர ஒருவனது அங்கம் யாவும் தரையில் சேர்ந்து, தொழுதிடும் போது அவனது, தன்னை முழுமையாக ஒப்புவித்திடும் 'சரணுகதி' உயர்பணிவுநிலை தெரியவரும். இறைவனைப் பற்றிய உண்மை அறிவை பெற்றவுடன், தன்னையே தன் உணர்வுகளையே இறைவனுக்கு அர்ப்பணித்து விடுகிருன் அர்ச்சுனன். இங்கு அன்புப்பிணைப்பின் மூன்று நிலைகள் கூறப்படுகின்றன. தந்தைக்கும் பிள்ளைக்கும் உள்ள அன்பு-பாசம் சிதைக்கப்பட்டாலும், குறைவு பட்டாலும் அவை அற்றுப் போகாது. இருவர் உள்ளங்களின் அடித்தளத்தில் அவ்வுணர்வுகள் உறைந்துதான் இருக்கும். ஆகவே இருவர்க்குமிடையே நிலவும் குற்றங் குறைகள் கண்டிப்பாக மன்னிக்கப்பட்டதாகவே, மறக்கப்பட்டதாகவே அமையும். அடுத்தது நட்பு. தியகம் எனும் உயர் உணர்வில் அவர்களுக்கிடையே நிலவும் குற்றங்குறைகள் அடிப்பட்டுப்போகும். மூன்ருவது காதலன் -காதலி உறவு. முன்னிருவரின் அன்பு, தியாகம் ஆகியன பாசத்தின், நட்பின் கட்டாயமாக .அமைந்தபோது , பாசமும் நட்பும் மீறிய ஓர் இனிமையான உணர்வில் காதல் திகழ்கின்றது. இக்காதலுணர்வில் குற்றங்கள் குறைகள் தெரிவதே இல்லை. இந்த மூன்று நிலையில் விளங்கும் இணக்கத்தையே அர்ச்சுனன் பகவானிடம் கொண்டிருந்தான்.)

அத்ருஷ்ட பூர்வம் ஹ்ருஷிதோ அஸ்மி த்ருஷ்ட்வா
பயேன ச ப்ரவ்யதிதம் மனோ மே ।
ததேவ மே தர்சய தேவ ரூபம்
ப்ரஸீத தேவேச ஜகந் நிவாஸ ॥ (45)

''தேவா, முன்பு எப்போதும் பார்த்திடாத ஒன்றை இப்போது பார்த்து மகிழ்ந்தவனாக உள்ளேன். ஆனாலும் எனது மனம் பயத்தால் நடுங்குகிறது. முன்பு எனக்குக் காட்டிய அந்த

உருவத்தையே எனக்குக்காட்டுவாயாக ! தேவதேவனே! உலகிற்கெல்லாம் இருப்பிடமாக, திகழ்பவனே! எனக்கு (நான் வேண்டியபடி) அருள் புரிவீராக!''

(மீனுக்கு வாழ்விடம் நீர்நிலைதான். ஆனால் அந்த நீர்நிலைகளே கொநதளிக்கும் வகையில் நிகழ்ந்தால், அந்த மீனுக்கு அச்சமேற்படுவது இயற்கையே. தெளிந்த நீர்நிலைகளைத்தான் அந்த மீனும் எதிர்பார்க்கின்றது. அங்குதான் அமைதியை அனுபவிக்கின்றது.

அதேபோலத்தான் போர்க்களத்தில் தனக்கு ஏற்பட்ட மனமயக்கத்தை, இறைவனது விஸ்வரூப தர்சனம் தீர்த்துவைத்திட்டாலும், அந்த நெடிய அச்சம் தரும் உருவத்தை, என்றும் அமைதியும் அன்பையும் எதிர்பார்க்கும் அர்ச்சுனன் தொடர்ந்து பாரத்திட விரும்பவில்லை. ஆகவே இறைவனை அவருடைய 'அன்பு' உருவத்திலேயே காண விரும்பினான்.)

**கிரீடினம் கதினம் சக்ரஹஸ்த**
**மிச்சாமி த்வாம் த்ருஷ்டுமஹம் ததைவ ।**
**தேனைவ ரூபே ண சதுர்ப்புஜேன**
**ஸஹஸ்ரபாஹோ பவ விச்வ- மீர்த்தே ॥ (46)**

''நான் உங்களை முன்பு போலவே மகுடமும், கதையும்,கையில் சக்கரமும் கொண்டவராகவே காண விரும்புகின்றேன். ஆயிரம் கைகளையுடைய உலகநாதனே! நான்கு திருக்கைகளுடன் கூடிய உருவத்தையே காட்டியருள்வீராக.

(மனிதனிடமிருந்து சற்றேமாறுபட்டு காட்டும் வகையில் தெய்வங்களுக்கு ஒரு சில உருவமைதிகளை சமய இலக்கியங்கள் அல்லது சிற்ப வேலைப்பாடுகள் கொண்டு விளங்கும்.இது தெய்வங்களில் தெய்வீக ஆற்றலைக்காட்டுவனாக அமையும். கண்ணின் மனிதவடிவத்தில் நான்கு கைகளை காட்டுவதன் மூலம் இறைவனின் தெய்வ நிலையும் குறிக்கப்படுகிறது. அதனையே அர்ச்சுனன், மனித இனத்தின் சார்பில் ஒரு கோரிக்கையாக வைத்து வேண்டுகிறுன்.)

## பகவான் கூறியது

மயா ப்ரஸன்னேன தவார்ஜுனேதம்
ரூபம் பரம் தரசிதமாத்மயோகாத் ।
தேஜோமயம் விச்வமனந்தமாத்யம்
யன்மே த்வதனன்யேன ந த்ருஷ்ட பூர்வம் ॥
(47)

*"அர்ச்சுனா, என்னுடைய பேரருளாலும், என்னுடைய தெய்வீகம் பொருந்திய யோக வலிமையாலும் இந்த ஒளிமிக்க பேருருவம் (விஸ்வரூபம்) உனக்கு என்னால் காட்டப்பட்டது. நீயும் அதனைத் தரிசித்தாய். உன்னைத்தவிர இந்த விஸ்வரூபத்தை யாரும் இதுவரை பார்த்ததில்லை."*

*(இமயமலை உச்சியில் உள்ளமிக உயர்ந்த சிகரமான எவரெஸ்டினை டென்சிங், ஹில்லாரி ஆகியோர் முதன்முதலாக எட்டிப்பிடித்த மனிதர்கள் என்றால், அதை அடைவதற்காக அவர்கள் மேற்கொண்ட பயிற்சி, உழைப்பு, ஆர்வம் தெரியவரும். இத்தனைப் பண்புகள் தன்னகத்தே கொண்டால் தான் மற்றவர்களும் இச்சிகரத்தினை அடையமுடியும் என்ற போது அச்சிகரத்தின் பெருமை, சிறப்பு தெரியவரும். மனிதர்களின் இந்த வெற்றி இயற்கையின் மற்றைய அரிய உண்மைகளை அறிய அதுவழிவகுக்கும். அதேபோன்றுதான் விஸ்வரூபத்தினைக்கண்ட அர்ச்சுனனுக்கு அப்பகவானின் மேலும் பல அறிய ஆற்றல்களை அறிவதற்கான ஓர் உந்துதலை அவரிடம் விளைவிக்கும். இவ் அரிய விஸ்வ ரூபத்தினை அர்ச்சுனனைப்போன்ற ஜீவாத்மாக்கள் அவன் சென்ற நெறியில் கண்டு அறியலாம் என்ற செய்தியினை பகவான் இங்கு நமக்கு அறிவுறுத்துகின்றார்.)*

ந வேத யக்ஞாத்யயனைர் ந தானைர்
ந ச க்ரியாபிர் ந தபோபிருக்ரை: ।
ஏவம் ரூப: சக்ய அஹம் நிருலோகே
த்ருஷ்டும் த்வதன்யேன குருப்ரவீர ॥ (48)

*''குருகுலத்தின் சிறந்த வீரனே! உன்னைத்தவிர வேறு எவராலும் வேதங்களை ஓதுவதாலோ,(அதில்குறிப்பிட்ட) யாகங்களை புரிவதாலோ, தான்யங்களை மேற்கொள்வதாலோ, பூசைகள், அபிஷேகங்களான கர்ம வகைகளைப் புரிவதாலோ நான் இந்த வடிவத்தில்(விஸ்வரூபத்தில்) காணக்கூடியவன் அல்ல''*

*(வேத அத்யயனம், தவங்கள், தானங்கள் யாவும் மனிதனை மேம்படுத்தும் சமய வழி முறைகள்தாம். அவற்றினாலேயே ஒருவனால் இறை உண்மையை அறிந்து கொள்ளமுடியாது. தன்னையே இறைவனிடம் சரணாகதி செய்யுமிடத்து, அவ் இறைவனால் கிடைக்கப் பெறும் அருள் ஒன்றினாலேயே அவனை அறியமுடியும்; அடைய முடியும்.)*

மா தே வ்யதா மா வீமுட பாவோ
த்ருஷ்ட்வா ரூபம் கோரமீத்ருங் மமேதம் ।
வ்யபேதபீ:ப்ரீதமனா: புனஸ்த்வம்
ததேவ மே ரூபமிதம் பர்பச்ய ॥ (49)

*''இத்தகைய அச்சத்தைத் தரும் என் வடிவத்தைக் கண்டு மனக்கலக்கமும்,பயங்கிய மனமும் கொள்ள வேண்டாம். பயத்தை விடுத்து,மகிழ்ந்த மனதுடன் மீண்டும் என்னுடைய பழைய வடிவத்தைக் காண்பாயாக!''*

## சஞ்சயன் கூறியது:

இத்யர்ஜுனம் வாஸுதேவஸ்த தோக்த்வா
ஸ்வகம் ரூபம் தர்சயாமாஸ பூய: ।
ஆச்வாஸயாமாஸ ச பீதமேனம்
பூத்வா புன:ஸௌம்ய வபுர் மஹாத்மா ॥ (50)

*''வாசுதேவனாகிய கண்ணபெருமான் அர்ச்சுனனுக்கு இவ்வாறு கூறியபின்பு, தமக்குரிய பழைய உருவத்தை உள்ளவாறு மீண்டும் காட்டினார்.மகாத்மாவான கண்ணன் தனது அமைதியான இனிய வடிவத்துடன் விளங்கிய அவனை (அர்ச்சுனனை)தேற்றினார்.''*

*கண்ணனின் விஸ்வரூபம் எவ்வளவுக்கெவ்வளவு அச்சமூட்டியதோ அதற்கு நேர்மாறாக கண்ணனின் குழந்தை வடிவம், சிறுவன் தோற்றம் ஆகியன பார்ப்பவர் மனதில் அமைதியினையும், ஆனந்தத்தையும் விளைவித்தன. இரு வெவ்வேறான உணர்வுகளை உண்டாக்கும் ஆற்றலினால்தான் கண்ணன் மகாத்மாவாக வணங்கப்படுகிறான்.)*

## அர்ச்சுனன் கூறியது:

த்ருஷ்ட்வேதம் மானுஷம் ரூபம் தவ
ஸௌம்யம் ஜநார்தன: ।
இதானீமஸ்மி ஸம்வ்ருத்த : ஸசேதா:
ப்ரக்ருதிம் கத: ॥ (51)

*''ஜனார்த்தனா !உன்னுடைய இந்த அமைதியும் அழகுமுள்ள இனியே உருவத்தைக் கண்டு இப்போது நான் மனம் தெளிந்து பழைய மன இயல்புடன் விளங்குகிறேன்.''*

*(எல்லா உயிரிடத்தும் இறைவன் இருந்தாலும், பூனையை எடுத்து மடியில் கொஞ்சிடும் மனிதன்,ஒரு புலியின் அருகே செல்லவே பயப்படுகிறான். இருபிராணிகளின் உருவ வெளிப்பாடுகள் ஒத்திருந்தாலும்,அவற்றின் குணங்கள் மாறுபடுவதால் இவ் அச்சம் உண்டாகிறது.ஆம் அமைதி, பணிவு, அன்பு போன்ற குணங்களே ஒருவனின் பெருமையைப் பேசும்; கோபம், வஞ்சம் போன்றன ஒருவனை தனிமைப்படுத்தும். ஆகவே அருளும், அன்பும், அழகும் கொண்ட பகவானது உருவமே மனிதனை தொழவைக்கின்றது.)*

## பகவான் கூறியது:

ஸுதுர்தர்தமிதம் ரூபம் த்ருஷ்ட
வானஸி யன்மம ।
தேவா அப்யஸ்ய ரூபஸ்ய நித்யம்
தர்சன காங்க்ஷிண: ॥ (52)

*''தரிசிப்பதற்கு அரியதான எனது இந்த உருவத்தை இப்போது நீ தரிசித்துள்ளாய். இந்த என் உருவத்தைத் தரிசிக்கவே*

*தேவர்களும் என்றும் விரும்புகிறார்கள்.''*

*(தேவர்களும் விரும்புகிறார்கள் எனபதால்; அவர்கள் இன்னும் இறைவனின் விஸ்வரூபத்தினை முழுவதுமாக காணவில்லை என்று பொருள்படுகிறது. அத்தகு அரிய காட்சியினை அர்ச்சுனன் பெற்றதால், அவன் இறைவனை பெரிதும் அறிந்தவனாகத் தெரிகிறது.)*

**நாஹம் வேதைர்ந தபஸா ந**
**தானேன ந சேஜ்யயா ।**
**சக்ய ஏவம் விதோ த்ரஷ்டும்**
**த்ருஷ்ட வானஸி மாம் யதா ॥** (53)

*'' நீ என்னை எவ்வாறு கண்டாயோ, அவ்வாறு நான் வேதங்களாலோ, தவத்தாலோ, தானத்தாலோ, யாகத்தாலோ காணமுடியாதவன்.''*

*(வெறும் சமயச்சடங்குகளாலோ, பூசைகளாலோ, இறைவனை காணமுடியாது, அவனருளை பெறமுடியாது. தீவிரமான 'பக்தி' எனும் உணர்வால் மட்டுமே அவனருளை யார் வேண்டுமென்றாலும் பெறமுடியும் என்பது இச்செய்யுளில் வலியுறுத்தப்படுகின்றது.)*

**பக்த்யா த்வனன்யயா சக்ய:**
**அஹமேவம் விதோ அர்ஜுன ।**
**ஞாதும் த்ரஷ்டும் ச தத்வேன**
**ப்ரவேஷ்டும் ச பரந்தப ॥** (54)

*'' பகைவர்களை கலங்கவைக்ககவல்ல அர்ச்சுனா! மாறாக பக்தியினால் மட்டுமே இவ்வாறு என்னை உள்ளவாறு உண்ரவும், பார்க்கவும் என்னுடன் சேரவும் கூடும்.''*

*(இந்த சுலோகத்தில் 'அனன்யம்' என்னும் சொல் வருகிறது. இதற்கு 'அன்னியமற்றது' என்று பொருள். அதாவது 'பக்தி' அற்ற மற்றது இல்லை என்ற உணர்வாகும். இறைவனே எல்லாம் எங்கும் என்ற உணர்வுடன் அவ் இறைவனை வணங்கிடும் பக்தி உணர்வே இறைவனைக் காண வழிவகுக்கும் சாதனமாகும்.)*

மத்கர்மக்ருன் மத்பரமோ மத்பக்த:
ஸங்கவர்ஜித : ।
நிர்வைர:ஸர்பூதேஷு ய:
ஸ ·மாமேதி பாண்டவ ॥ (55)

*''பாண்டவா! எனக்காக வினைகளை மேற்கொள்பவன், என்னையே (அடையவேண்டுமென்ற) குறிக்கோளுடன் இருப்பவன், என்னிடத்து பூராண பக்தி கொண்டவன், பற்றற்றுத் திகழ்பவன், எல்லா உயிர்களிடத்தும் அன்பாக இருப்பவன் ஆகிய எவனோ அவனே என்னை அடைகின்றுன்.''*

*(இந்த மண்ணில் மனிதன் தான் வாழ கர்மா எனும் வினைகளை தொடர்ந்து தன் மூச்சிருக்கும் வரை மேற்கொண்டு வருகின்ருன். இந்த வினைகள் தன்னல நோக்கத்துடன் விளங்கதுவன. ஆனால் இறைவனை அடைதற்காக வினைகளை மேற்கொள்பவன் உயர்ந்தவனாகக் கருதப்படுகிருன். உலகாயுத ஆசைகளை அடைவது என்பது உன்னதமான குறிக்கோளாகாது. அந்த இறை உண்மையை அறிவதே சிறந்த குறிக்கோளாகும். இறை பக்தியே புனிதமான ஆத்மாவை உருவாக்குகிறது. அவ் இறைவன் மீது கொள்ளும் பக்தியே, நாட்டமே, மனிதனின் மற்றைய பொருள்கள் மீது கொண்டிருக்கும் ஆசையை அகற்றுகின்றது. அதுவே அவனுள் பற்றற்ற மனப்பான்மையை உண்டாக்குகிறது . எல்லா உயிர்களும் அவ் இறைவனின் கருணையின் பிரதிபலிப்பேயாகும். ஈ முதல் யானை வரை எல்லா உயிர்களின் பரமாத்மாவாக இறைவன் இயங்குகிருன். இந்த உயிர்களிடத்து வேற்றுமை பாராட்டுபவன் அவ் இறைவனை காணவே முடியாது. இறை உண்மையை அறிந்துகொள்ளவே இயலாது. ஆகவே உண்மையான பக்தி, நாட்டம், முயற்சி, அன்பு, தியாகம் ஆகியவையே இறைவனை மனிதன் அறிய வழிவகுக்கும்.)*

*(பதினோராம் அத்தியாயம் முற்றும்)*

# பன்னிரண்டாம் அத்தியாயம்

## பக்தி யோகம்

### அர்ச்சுனன் கூறியது:

ஏவம் ஸததயுக்தா யே பக்தாஸ்-
த்வாம் பர்யுபாஸதே ।
யே சாப்ய க்ஷரமவ்யக்தம் தேஷாம்
கே யோகவித்தமா : ॥ (1)

''இதுபோன்று எப்போதும் யோகத்தில் உறுதி உடையவர்களாய் உம்மைத் தொழுதிடும் பக்தர்கள் மற்றும் நிர்க்குண பிரம்மத்தை எண்ணி வணங்கிடும் பக்தர்கள் ஆகியவர்களில் யார் உம்மை நன்ருக அறிந்தவர்களாகக் கருதப்படுகிருர்கள்.

*(இறைவனின் திருவுருவ வழிபாடு சிறந்ததா அல்லது உருவமற்ற அருவநிலையில் வைத்து வணங்கப்படுவது மேலானதா என்ற கேள்வியை இங்கு ஒரு பக்தன் நிலையில் இருந்து அர்ச்சுனன் கேட்கின்ருன்.)*

### பகவான் கூறியது:

மய்ய வேச்ய மனோ யே மாம்
நித்யயுக்தா உபாஸதே ।

**ச்ரத்தயா பரயோபே தாஸ்தே மே**
**யுக்ததமா மதா : ll** (2)

*''என்பால் மனதை ஒருமுகப்படுத்தி, யோகத்தில் நிலைத்த எண்ணமுடையவராய், அதிகமான ஈடுபாடு உடையவர்களாய் யார் என்னை வணங்குகிறார்களோ, அவர்களே யோகத்தில் மேம்பட்டவர்களாக நான் கருதுகிறேன்.''*

*(இந்தப் பாடலின் மூலம் ஒரு யோகியின் தகுதிகளை பகவான் விளக்கியருளுகிறார். இறைவன் தன்னை எல்லாமாக, எங்குமாக, எப்போதுமாக பரந்து விரிந்து அமைந்து இந்த அகிலம் யாவையும் ஆண்டு வருகின்றார். அத்தகு பேராற்றல் கொண்ட அவர் மீது தங்கள் முழு மனதையும் செலுத்தி வணங்குபவர்களே சிறந்த பக்தர்கள். அந்த நிலையில் அவர்களுக்குள்ளே விருப்பு, வெறுப்பு, மனமயக்கம் போன்றவை எழும்பா. தங்கள் உயிரையும், உடலையும் இறைவனுக்கு என்றே அர்ப்பணித்து, இடைவிடாது அவனையே தியானிக்கின்றனர். ஆகையால் அத்தகு பக்தர்களே சிறந்த யோகிகள் ஆவர்.)*

**யே த்வக்ஷரமநிர்தேச்யமவ்யக்தம்**
**பர்யுபாஸதே l**
**யர்வத்ரகம சிந்த்யம் ச**
**கூடஸ்தமசலம் த்ருவம் ll** (3)

*''சொல்லுக்கு அடங்காது, கண்ணுக்குத்தெரியாது, மனதுக்கு எட்டாது, எங்கும் நிறைந்துள்ளதாய், சிறிதும் மாறாததாய், நகராததாய், நிலைப்பெற்றும், அழியாததும் ஆகிய பண்புகளை உடைய பிரம்மத்தை யார் ஒருவர் எந்த நிலையிலும் சீரான அறிவு கொண்டவர்களாய், ஐம்புலன்களையும் அடக்கியவர்களாய் நன்கு வணங்குகிறார்களோ, எல்லா உயிர்களிடத்தும் நலன் பாராட்டும் அவர்களே என்னை வந்து சேருகிறார்கள்.''*

*(நிர்க்குணமாகிய அந்த உருவமற்ற பரம்பொருளான பிரம் மத்தின் பெருமை இச் செய்யுளில் விளக்கப்படுகிறது. இந்த பிரம்மத்தை இத்தகையது என்று வர்ணிக்க முடியாது. ஆகவே அது சொல்லைக் கடந்தது. ஒருபொருள் தோற்றம் மறைவு*

கொண்டு விளங்கலாம். அதாவதுதோன்றும்போது கண்ணுக்குத் தெரிந்தும் மறையும் போது அது மறைந்தும் விடுகிறது. ஆனால் தோற்றமும், மறைவும் இல்லாது, அதனால் எந்தவிதமான உருவ வேறுபாட்டினையோ கொண்டு விளங்காது இருப்பது பிரம்மமாகும். பிரம்மம் இங்கு உள்ளது என்று அதனைச் சுட்டிக்காட்ட முடியாது. ஏனெனில் அது எங்கும் நிறைந்தும்,மற்றைய யாவும் அதனுள் ஒடுங்கியும் உள்ளது. மனதில் கற்பனைக்கெட்டாத அளவு கொண்ட கடலையோ,நிலத்தையோ, மலையையோ, பார்த்திடலாம். ஆனால், அந்த சிந்தனைக்கும், கற்பனைக்கும் அடங்காது பிரம்மம் விளங்குகிறது. மாறுபாடும், சலனமும், கொண்ட இந்த பிரம்மம் தன்னுள் தாங்குகிறது. இந்த பிரம்மம் நகரும் தன்மையற்றது. அசையாது காணப்படும் ஆகாயமும்கூட உலகம் அழியும் தருணத்தில் தான் இருந்த இடத்திலேயே அழிகின்றது. இதற்கு நேர்மாறுனது பிரம்மம். இத்தகு பெருமைமிகு பிரம்மத்தை யாரால் வழிபடமுடியும்? முடியும்! யார் ஒருவர் விருப்பு-வெறுப்பு, இன்பம், துன்பம் போன்ற முரண்பட்டதான உணர்வுகளைக் கடந்து எல்லாவற்றையும் எந்த நேரத்திலும் சமமான மனதுடன் காண்கின்றுர்களோ, ஐம்புலன்களை அடக்கி, உடலையும், உள்ளத்தையும் யார் ஒருவர் தன் கட்டுப்பாட்டில் வைத்திருக்கிறுர்களோ, எல்லா உயிர்களிடத்தும் இறைவனைக் கண்டு அன்பும், நன்மையும் புரிகிறுர்களோ அவர்களால் அந்த பரபிரம்மத்தை வழிபடும் தகுதி பெறுகிறுர்கள்.)

ஸன்னியம் இந்த்ரியக்ராமம் ஸர்வத்ர
ஸமபுத்தய : ।
தேப்ராபனுவந்தி மாமேவ ஸர்வபூதஹிதே
ரதா : ॥ (4)

''(மேலும்) யார் எப்போதும், எங்கும் நிலையான சமமான அறிவுள்ளவர்களாக ஐம்புலன்களை ஒன்றாக அடக்கி, வார்த்தைகளால் விளக்கமுடியாததும் கண்களுக்குத் தெரியாததும், மனதுக்கு விளங்காததும், எங்கும் நிறைந்தும், மாறாது இருப்பதும், நகராததும், நிலைத்ததும் அழிக்க

முடியாததுமான பிரம்மத்தை (அம்மூலபுருஷனை) நன்றாக தியானிக்கிறார்களோ, வழிபடுகிறார்களோ அத்தகைய அவர்கள் எல்லா உலக உயிர்களின் நன்மையை விரும்புவார்களாவார்கள். அவர்கள்தாம் இறுதியில் என்னையே வந்து சேருவார்கள்''.

(இங்கு நிர்க்குண பிரம்மத்தின் இயல்பு பேசப்படுகிறது. இதனை மற்றைய உலகப்பொருள் எதனோடும் ஒப்பிட்டுப் பார்க்கமுடியாது. ஆகவே இது இத்தகையது என்று கூறமுடியாது. இந்த உலகம் தோன்றுகிறது. பின்பு மறைகிறது. இதுமாறுபாடு கொண்டது. ஆனால் பிரம்மத்திற்கு இந்த குணம் இல்லை. ஆகவே இது அவ்யக்தம் நீரின் அடியில் பனிக்கட்டி இருப்பது இல்லாது போல் தோன்றும். ஆனால் இதுபோன்ற இயல்பும் பிம்மத்திற்கு இல்லை. அங்கு உள்ளது. இங்கு உள்ளது என்று கூறமுடியாது. கனவில் நம் சிறிய மனதில் பெரிய பெரிய மலைகள் கடல்கள் நம் அகக்கண்களில் தெரியும். ஆனால் அம்மனதில் கனவில்கூட மனதினால் பிரம்மத்தை பற்றித் தெரிந்து கொள்ள முடியாது. ஆகவே பிரம்மம் சிந்தனைக்கு உட்படாதது. நிலையற்ற உலகத்தை பிரம்மம் தாங்குகிறது. காற்றின் வேகத்தில் மேகங்கள் நகருகின்றன. (மாறுபடும் உருவத்தைத் தாங்கிக்கொண்டு) ஆனால் பிரம்மத்திற்கு இந்த மாறுபாடு கிடையாது. ஆகவே காலத்தால், இடத்தால், சூழ்நிலையால் பிரம்மம் அழியாது இருக்கும்.

இங்கு அத்தகு பிரம்மத்தை வழிபடுபவர்கள் எவ்வாறு இருத்தல் வேண்டும் என்று சொல்லப்படுகிறது. இன்பத்தையும் துன்பத்தையும் சமமாக கருதவேண்டும். யார் ஒருவன் ஐம்புலன்களை அடக்கி ஆள்கின்றானோ அவனது மனமே ஒரு நிலையை வகிக்கும் தகுதி பெறுகின்றது. ஒரு நிலைமை என்பது கவனம் அற்று இருப்பதன்று. பிரம்மத்தை எல்லா உயிர்களிடத்தும் கண்டு அவற்றிற்கு சேவை செய்தல் வேண்டும். இச்சேவையினால் அவற்றிற்கு நல்ல பயன் ஏற்பட வேண்டும். இந்த சேவை மனப்பான்மை, தொடர்ந்து ஒழுகும் எண்ணெய் போன்று தொய்வு இல்லாமல் இருத்தல் வேண்டும். இத்தகு மனப்பக்குவம் உள்ளவர்கள்தாம் அவ்இறைவனை - அந்த

*பிரம்மத்தை எளிதாக அடைய முடியும். பிறவியின் நோக்கம் பெறமுடியும்.)*

**க்லேசோ அதிகதரஸ் தேஷாமவ்-**
**யக்தாஸக்த சேதஸாம் ।**
**அவ்யக்தா ஹி கதிர்து: கம்**
**தேஹவத்பிர வாப்யதே ॥** (5)

*''நிர்க்குண பிரம்மத்தை வழிபடுபவர்களுக்கு அதிக பயிற்சி தேவை. ஏனென்றால், உடல் உணர்ச்சிகளுக்கு உட்பட்டவர்களுக்கு பரபிரம்மத்தின் மீது நாட்டம் கொள்வது என்பது அரிதான ஒரு முயற்சியாகும்.''*

*(வழிபடும் முறைகள் பலவாக அமையலாம். அடைய வேண்டிய குறிக்கோள் இறைவனை உணர்வதாகும். அக் குறிக்கோளை அடைய உள்ளம் சலனமற்றும்,உடல் தூய்மை கொண்டும் இருத்தல் அவசியம். உருவமற்ற நிர்க்குண பிரம்மத்தை வழிபடுவதற்கு, துவக்கத்திலேயே மனிதன் பற்றற்று திகழ்தல் வேண்டும்.நாளும் பிரச்சனைகளால் சூழப்பெற்றுள்ள மனிதனுக்கு உருவமற்ற இறைவனை தியானத்தில் என்பது நடைமுறையில் வெற்றிபெற முடியாத முயற்சியாகும். மனத்தை ஒரு நிலைப்படுத்த, பார்வை சிதறாமல் இருக்க கண்முன் சலனற்ற கடவுளின் ஓர் உருவம் தேவை. இந்த சகுண பிரம்ம உபாசனையே மனிதனை சிறுக சிறுக ஆன்மீகச் சிந்தனையில் ஈடுபடச்செய்யும் ஆற்றல் பெற்றது.)*

யே து ஸர்வாணி கர்மாணி மயி
ஸம்ன்யஸ்ய மத்பரா: ।
அனன் யேனைவ யோகேன மாம்
த்யாயந்த உபாஸதே (6)

தேஷாமஹம் ஸமுத்தர்தா
ம்ருத்யுஸம்ஸாரஸா கராத் ।
பவாமி நசிராத்பார்த்த மய்யா
வேசித சேதஸாம் ॥ (7)

''ஆனால் யார் ஒருவன் தான் புரியும் வினைகள் யாவற்றையும் எனக்கே அர்ப்பணித்து விடுகின்றனோ, யார் என்னை இறுதிப்புகலிடமாக சரணம் அடைகின்றனோ, யார் ஒருவன் எந்தவிதத் தடங்கலுமற்ற யோகத்தால் என்னையே தியானித்து வழிபடுகின்றனோ, யார் ஒருவன் என் மீது மட்டுமே தன் சிந்தனையை செலுத்துகின்றனோ, அவனை (அவர்களை) நான் இறப்பு எனும் பிறவி பெருங்கடலிலிருந்து உடனடியாக கரையேற்றிக் காப்பாற்றுவேன்.''

(இங்கு மனிதன் எந்தவிதப் பற்றுமின்றி, உலாகாயுத ஆசைகளை மறந்து, மனதையும், உடலையும் இறை நினைப்புடனேயே செயல்படுத்துகின்றனோ, அவனை இறைவனே தானே முன்வந்து காப்பாற்றுவதாக பகவான் தன் பக்தனுக்கு நம்பிக்கையும், உறுதியும் இப்பாடல் மூலம் அளிக்கின்றார்.)

மய்யேவ மன ஆதத்ஸ்வ மயி
புத்திம் நிவேசய
நிவஸிஷ்யஸி மய்யேவ ஆத
ஊர்த்வம் ந ஸம்சய:॥ (8)

''மனதை என்னிடமே ஈடுபடுத்தி, அறிவை என்மீதே செலுத்துவாயாக, பிறகு (நீ) என்னிடமேயே இருப்பாய் என்பதில் சிறிதும் ஐயமில்லை.''

(மனிதனை உயர்த்துவதும்-தாழ்த்துவதும், அவனுக்கு செழிப்பையும்-அழிவையும் தருவது அவன் மனமும் அறிவு மேயாகும். மனம் வினாடிக்குக்கொருமுறை மாறிக்கொண்டே இருக்கும். அந்த மனிதனின் எண்ண அலைகளுக்கேற்ப அறிவானது செயல்படுகிறது. ஆகவே மனதைக் கட்டுப்படுத்துவதும், அறிவை ஆக்கப்பூர்வமாகச் செயல்படுத்துவதும் மிகவும் முக்யமாகும். இந்த இரு முயற்சிகளில் மனிதன் வெற்றி பெற்றுவிட்டால், 'இறை தரிசனம்' அவனை நாடிவரும் என்பது உறுதி.)

அதசித்தம் ஸமாதாதும் ந சக்னேஷி
மயிஸ்திரம் ।

அப்யாஸ யோகேன ததோ
மாமிச்சாப்தும் தனஞ்ஜய ॥ (9)

''தனஞ்சயனே!(உன்னால்),இதுபோன்று அறிவை என்மீது உறுதியாக பதிக்க வைக்கமுடியாவிட்டால், 'பயிற்சி'எனும் யோகத்தால் என்னைச் சேரமுயல்வாயாக.''

(மனமானது எவ்வளவுக்கெவ்வளவு நல்லதை எண்ணுகின்றதோ, அதற்கு நேர்மாருக தீயவற்றையும் எண்ணிப்பார்க்கும்.அதனால் மனதை தூய்மையாக வைக்க வேண்டுமென்ருல் அவன் நல்லவற்றையே நோக்கும், எதிர்பார்க்கும் சூழ்நிலையில் அதனை நிறுத்தி வைக்க வேண்டும்.ஆகவே மனதை நல்ல திசையில் திருப்ப வேண்டுமென்ருல் தகுந்த மனப்பயிற்சியினால் மட்டுமே இது சாத்தியமாகும்.)

அப்யாஸே அப்யஸமர்த்தோ அஸி
மத்கர்மபரமோ பவ ।
மதர்த்தமபி கர்மாணி குர்வன்
ஸித்திமவாப்ஸ்யஸி ॥ (10)

''பயிற்சி மேற்கொள்வதில் உனக்கு ஆற்றல் இல்லையாயின் என்பொருட்டு(எனக்காக)வினை மேற்கொள்வதை ஒரு இலட்சியமாகக் கொள்வாயாக! என் பொருட்டு தீவினைகளை (செயல்களை) மேற்கொள்வதாலும் நீ என்னைச் சேரமுடியும்.''

(மனிதனை மேம்படுத்துவதற்காக,அதற்காக அவனை உற்சாகப்படுத்துவதற்காக, அவனுள் நம்பிக்கை ஊட்டுவதற்காக இறைவன் தன் நிலையைவிட்டு, மனிதனின் அடித்தள நிலைக்கு இரங்கி வந்து பலவாறு பல எளிமையான வழிமுறைகளை உபதேசிக்கின்ருன்.இது இறைவனின் கருணைத் திறத்தினை நமக்கு தெரிவிக்கின்றது. தீய காரியங்களை செய்வதிலேயே, எண்ணுவதிலேயே மனிதன் பழக்கப்பட்டுவிட்டதால், நல்ல சூழ்நிலைக்குத் தன்னை வசப்படுத்திக் கொள்வதற்காக பயிற்சியை மேற்கொள்வதில் அவன் தளர்ச்சி அடையக்கூடும்.ஆகவே அவனை உற்சாகப்படுத் துவதற்காக

'எல்லாம் பகவானுக்காக' 'அவன் ஆட்டுவிக்கின்றான் நான் ஆடுகின்றேன்' என்ற மனநிலையில் தன்னை ஒரு கருவியாகக் கொண்ட நிலையில் தன் வினைகளை மேற்கொள்ளுதல் வேண்டும். இதனால்,தான் செய்யும் தீய காரியங்களும் சிறுகச் சிறுக மறைந்து சீரிய சிந்தனையுடன் அறிவு விளங்கிட வழிபிறக்கும்.)

## பகவான் சொன்னது:

அதைததப்யசக்தோ அஸி கர்தும்
கர்தும் மத்யோக மாச்ரித: ।
ஸர்வகர்ம பலத்யாகம் தத:
குரு யதாத்மவான் ।। (11)

''பிறகு, இதனைக்கூட செய்ய முடியாவிட்டால் என்னிடம் சரணம் புகுவதற்குரியவனாய், தன்னடக்கம் கொண்டு, வினைப்பயன் யாவற்றையும் எனக்கு அர்ப்பணித்திடுவாயாக''.

(இறைவன் பக்தன்பால்கொண்ட கருணையினால் அவன் மேன்மைக்காக பல சலுகைகளைத் தருகின்றான். உலகாயுத விஷயங்களில் பற்றுள்ள, அல்லது அப்பற்றுக்களை விடமுடியாத நிலையில் - சூழ்நிலைக் கைதியாகிவிட்ட நிலையில் பக்தன் இறை நினைப்புடன் இருக்கமுடியா விட்டாலும், இறைவனுக்காக வினைபுரியாவிட்டாலும் குறைந்தபட்சம் தான் தன்னுடைய மகிழ்ச்சிக்காக வினைகள் புரியும்போது, ஒரு சில வினைகளையாவது 'இறைவன் ஆணையால் நான் செய்கின்றேன். அவற்றின் பயன் இறைவனுக்குரியது' என்ற எண்ணமானது மனிதனின் மனதில் அவ்வப்போது தோன்றினாலேயே, அந்த பயிற்சியே நாளடைவில் அவனை முழுமையாய் இறைச் சிந்தனையில் மூழ்க வைக்கும். இதனைத்தான் இறைவன் தன் பக்தனிடம் எதிர்பார்க்கின்றான்.)

ச்ரேயோ ஹி ஞானமப்யாஸாத்
ஞானாத் த்யானம் விசிஷ்யதே ।

த்யானாத் கா்மபலத்யாகஸ்த் யாகாச்
சாந்திரனந்தரம் ॥ (12)

''பயிற்சியைவிட ஞானமே சிறந்தது. அந்த ஞானத்தைவிட தியானம் மேன்மையானது. அந்த தியானத்தை விட வினைப்பயனைத் தியாகம் செய்வது மிக உயர்ந்தது. அந்த தியானத்திலிருந்துதான் விரைவில் சாந்தியைப் பெறலாம்.''

(பேருந்து ஒன்றினை ஓட்டுநர் ஒருவர் செலுத்திக் கொண்டிருக்கிறார். எங்கு நிறுத்த வேண்டுமோ, விரைவாகச் செலுத்த வேண்டுமோ, திருப்ப வேண்டமோ, அதற்குத் தகுந்தவாறு அதற்குரிய கருவிகளைப் பயன்படுகிறார். இதனை பயிற்சியினால் அவர் செயல்படுத்துகிறார். போகும்போது பேருந்து நின்று விடுகிறது. எதற்கு நின்றுவிட்டது என்பது ஓட்டுநர்க்குப் புரியவில்லை. அங்கு இயந்திரம் பற்றிய அறிவு அவர்க்கு இல்லை. இந்த அறிவு இருந்தாலொழிய, ஓட்டுநரால் எவ்விதப் பிரச்சனையும் இன்றி பேருந்தினைச் செலுத்தமுடியும். ஆகவே வெறும் பயிற்சியினை விட அறிவு மேலாக விளங்குகிறது. இறைவனைப்பற்றிய அறிவே ஞானமாகிறது. அதாவது இறையுண்மையை அறிவதே ஞானமாகும். அந்த ஞானத்தோடு எல்லா உயிர்களிடத்தும் இறைவனைத் தியானிப்பது. இவ்வாறு தியானிக்கும்போது செய்யும் வினைப் பயன்களைத் தனக்காக பயன்படுத்துவதை விடுத்து, அவ் வினைப்பயன் யாவற்றையும் அவ் இறைவனுக்காகவே அர்ப்பணித்து விடுவது மனிதனைப் பக்குவப்படுத்துவதற்கு வழிவகுக்கும். ஆகவே 'வினைப் பயன் தியாகம்' உயர்ந்ததாக விளங்குகிறது. இதனால் பற்றற்ற மனப்பாண்மையும், அதனால் மனயமைதியும், தானாகவே ஒருவனுக்குக் கிடைத்து விடுகிறது.)

அத் வேஷ்டா ஸர்வபூதானாம்
மைத்ர: கருண ஏவ ச ।
நிர்மமோ நிரஹங்கார:
ஸமது: கஸுக: க்ஷமீ ॥ (13)

ஸந்துஷ்ட: ஸததம் யோகீ
யதாத்மா த்ருடநிஸ்சய : ।
மய்யர் பிதமனோ புத்திர்யோ மத்பக்த:
ஸமே ப்ரிய : ॥ (14)

''எல்லா உயிர்களிடத்தும் எவ்வித வெறுப்பும் காட்டாது, (அவற்றினிடத்தே) இரக்கமும் நட்பும் காட்டி, மமகாரம் மற்றும் அகங்காரம் விடுத்து, இன்ப துன்பங்களைச் சமமாக எண்ணி, பொறுமை காத்து என்றும் மகிழ்ச்சியாக இருப்பவன், யோகியாக, தன்னடக்கம் கொண்டவனாக, மன உறுதி படைத்தவனாக, என்னிடத்து தனது அறிவு, மனதை முழுமையாக ஒப்படைத்தவனாக , (இறுதியாக) என்னுடைய தீவிர பக்தனாக யார் இருக்கிறார்களோ அவர்களே எனக்குப் பிடித்தவர்களாக விளங்குவார்கள்.''

(மனிதன் உணர்ச்சி பூர்வமானவன். தன் உணர்வுகளை அடக்கி, அவனைப் பண்படுத்துவதன் மூலம் அவனை உய்விக்க பகவான் பலவாறு, வாய்ப்பு கிட்டும் போதெல்லாம் கீதையில் உபதேசிக்கின்றான். ஒரு மரமானது அவன் ,இவன் என்று வேற்றுமை பாராட்டாது நிழல் தருகின்றது. அந்த மரத்தைவிட மேலான மனிதன் அம்மரம் காட்டுகின்ற பாடத்தை கற்கவேண்டிய நிலையில் இன்றைய மனிதன் திகழ்கின்றான். ஆகவே மற்ற உயிர்களிடத்து வெறுப்பு காட்டாது இருந்தால் அதுவே அவனை ஒரு மனிதனாக விளங்கச் செய்யும். அந்த வெறுப்பற்ற நிலையே மற்ற மனிதர்களிடம் மட்டுமின்றி மற்றைய உயிர்களிடம் மட்டுமின்றி மற்றைய உயிர்களிடத்தும் இரக்கமும், நட்பும் பாராட்ட வழிவகுக்கும். 'தான்' என்ற அகங்காரம், 'எனது' என்ற மமகாரம் ஒழிந்தால் , 'எல்லாம் அவ் இறைவன்' எனும் உயர் உணர்வு தோன்றிடும். எங்கும் இறைவனைப் பார்த்திடும் போது தன்னலம் மறைந்து பொதுநலம் வந்திடும் போது துன்பத்தையும் இன்பமாகக் கருதிடும் மனப்பக்குவம் பெற்று விடுகின்றான். அப்போது பற்றற்ற துறவிநிலையினை மனம், உடல் பெற்று விடுகின்றன.

அந்த நிலையில் மனிதன் சந்தோஷத்தையே நாளும் பெறு கின்றான். உடல், உள்ள அடக்கம் அவனிடம் தானாகவே

வந்தமைகின்றன. அந்த அடக்கத்தின் காரணமாக மனம் மற்றும் அறிவு , உறுதியான எண்ணங்களை முடிவுகளை முறையே எடுக்கின்றன.அந்த முடிவுகளை பக்தன் என்ற நிலையில் விளங்கி,இறைவனுக்கும் சமர்ப்பித்து விடுகின்றான். இந்த எல்லையை ஒரு பக்தன் அடைந்து விட்டானாகில் அவனே இறைவனுக்கு நெருங்கிய அன்பனாகிவிடுகின்றான்.)

யஸ்மான்னோத் விஜதே லோகோ
லோகான்னோத் விஜதே ச ய: ।
ஹர்ஷாமர்ஷ பயோத்வேகைர் முக்தோ
ய: ஸ ச மே ப்ரிய ॥ (15)

''யாரால் இந்த உலகிற்குத் துன்பம் இல்லையோ, இந்த உலகத்தால் யார் துன்பம் கொள்வதில்லையோ, மேலும் மகிழ்ச்சி, கோபம், பயம், கலக்கம் ஆகியவற்றிலிருந்து யார் ஒருவன் தனித்து இருக்கின்றானோ,அவர்களே எனக்குப் பிடித்தமானவர்கள்.''

(ஒழுக்கம், அடக்கம், நேர்மை, அன்பு, இரக்கம்,பொது நலம் போன்ற உணர்வுகளைக் கொண்ட மனிதனால் இந்த உலகத்திற்கோ (மற்றைய உயிர்களுக்கோ) அல்லது இந்த உலகத்தால் அவனுக்கோ எவ்விதப் பாதிப்போ, துன்பமோ, இடையூறுகளோ, பிரச்சனைகளோ இருக்காது.அத்தகு மனிதன் தான் எதிர்பார்த்தது தனக்குக் கிட்டும்போது அடைகின்றான். ஏமாற்றங்களுக்கு உள்ளாகும்போது அதே மனம் துன்பத்திற்கு உள்ளாகிறது. கோபம், பொறாம, வன்முறை போன்ற தீக்குணங்கள் உருவாக வழி வகுக்கின்றன.ஆகவே இன்பத்தையும், துன்பத்தையும், வெற்றியையும், தோல்வியையும் சமமாகப் பாவிக்கும் மனமே ஒருவனை உயர்த்தும். மனிதனை எந்த நிலைக்கும் தாழ்த்துவன கோபமும், அச்சமும்.கோபம் மனிதாபிமானத்தை மறைக்கும். அச்சம் மனிதனை நாளும் மரணக்குழியில் வீழ்த்தும்.கோபமும், அச்சமும் ஒருவனுடைய மனத்தை பலவீனமாக்கும்.எவ்வாறு கலங்கிய நீரில் உருவம் தெரியாதோ அவ்வாறே கலங்கிய மனதில், அறிவில் ஒரு முடிவோ, ஒரு நிலையோ

காணமுடியாது. அதாவது உணர்ந்த இறை உண்மையை அவன் ஆத்மாவில் காணமுடியாது.ஜீவாத்மா பரமாத்மாவை கண்டவுடன், இரண்டும் ஒன்றாகிவிடுகின்றன.இதனைத்தான் அவ் இறைவன் பக்தனிடம் எதிர்பார்க்கின்றான்.)

**அனபேக்ஷ : சுசிர்தக்ஷ உதாஸீனோ**
**கதவ்யத: ।**
**ஸர்வாரம்ப பரீத்யாகீ யோ மத்பக்த:**
**ஸ மே ப்ரிய ॥** (16)

"ஆசையற்றவனாய், தூய்மை உடையவனாய், திறமை கொண்டவனாய்,நடுவு நிலைமை கொண்டாடுபவனாய், துயரம் அற்றவனாய்,உலகாயுத வினைகளை மேற்கொள்ளாதவனாய், என்மீது பக்தி கொண்டவனாய் யார் விளங்குகிறார்களோ அவர்களே எனக்குப் பிடித்தமானவர்கள்."

('போதும்' என்ற மனமே ஆசைக்கு அணை போடுகின்றது. இந்த ஆசை அறவே போகவேண்டுமென்றால், 'வேண்டாம்' என்ற மனம் தேவை.ஆசை அறவே அற்றுவிடும் போது,ஆசை விளையும் பூமியான மனம் தூய்மை அடைகின்றது. தூய்மையான அறிவு சேரும் போது,திறமை தானாகவே வந்தமைகின்றது. இந்தத் திறமையால் ஓரம் சாராத அதாவது நடுவு நிலைமை வழுவாத குணம் ஒருவனிடம் வந்து சேருகின்றது, இதனால் உற்றார் உறவுகளினர், நண்பர் என்ற உறவுகளின் பால் மனம் பேதலிக்காது. மனம் அமைதி அடைகின்றது. இதன் விளைவாக துன்பம் அவனை நாடுவதில்லை.மேலும் செய்யும் செயல்களைத் தனக்காக கொள்ளாது,பற்றற்ற நிலையில் செயல்படுத்துகின்றான். இதனால் எவரிடத்தும் இறைவனிடத்தும்கூட அவன் எதனையும் எதிர்பார்ப்பதில்லை. அந்த நிலையில் இருக்கும் பக்தனையே இறைவன் விரும்புகின்றான்.)

**யோ ந ஹ்ருஷ்யதி ந த்வேஷ்டி**
**ந சோசதி ந காங்க்ஷதி ।**
**சுபாசுப பரித்யாகீ பக்திமான்ய:**
**ஸ மே ப்ரிய ॥** (17)

''மகிழ்சசி வெறுப்பு, துன்பம், ஆசைபடுதல் ஆகியன இல்லாதவனாய், நன்மை தீமைகளை எதிர்பார்க்காதவனாய் இருக்கும் பக்தனே எனக்கு மிகவும் பிடித்தவனாவான்.''

(மகிழ்ச்சி ஏற்படும்போது அந்த உணர்விலேயே மூழ்கி விடுவதோ, துன்பம் வந்திடும் போது வாழ்வே முடிந்துவிட்டாற் போன்று துவண்டு விடுவதோ மனிதனை நெறிபடுத்தாது.தானாக வந்தாலும், எதிர்பார்த்து வந்தாலும் இன்ப துன்ப உணர்வுகளுக்கு அடிமையாகாத மனிதனே இறை உணர்வை பெறமுடியும்.ஆசையே அனைத்திற்கும் வித்து. அந்த விதை மனிதனைப் பொறுத்தவரை புற்றுநோய் போன்றது. நோயின் கொடுமை வெளியே காணமுடியாது.மனிதனை உருக்குலைத்திடும் நோய் புற்றுநோய். அதே போன்று ஆசையின் பிறப்பு, மனிதனின் சிறப்புக்கு வழிவகுத்திடும்.அதே ஆசையினை இறைநாட்டத்தின்கண் திருப்பினால் அந்த ஆசை புனிதமாகின்றது.அது மற்றறையஆசைகளுக்கு இடம் தருவதில்லை. மனிதன் தனக்கு இன்பம் வந்திடும் போது உலகத்தையே உறவாடுவதும்,துன்பம் தாக்கிடும்போது உலகத்தையே அழிக்க நினைப்பதும் மனிதனின் பலவீனம். இன்பமும் துன்பமும் தன் உடலுக்கேயன்றி, தன் ஆத்மாவுக்கு அல்ல என்ற உயர் பக்குவம் வந்திடும்போது இன்பமும் துன்பமும் அவனுக்கு ஓர் உணர்வாக அமைவதில்லை. இந்த முதிர்ந்த நிலையில் உள்ள மனிதனே இறையருளை பெறமுடியும்.)

ஸம: சத்ரௌ ச மித்ரோ ச ததா
மானா பமான யோ : ।
சிதோஷ்ண ஸுகது :கேஷு ஸம:
ஸங்கவிவர்ஜித : ॥ (18)

''பகைவனையும் நண்பனையும், மானத்தையும் அவமானத்தையும் ஒன்றுகக் கருதுபவனும்,குளிர், வெப்பம் மற்றும் இன்பம் துன்பம் ஆகியவற்றை ஒப்பாகப் பார்ப்பவனும்.''

துல்யநிந்தாஸ்துதிர்மௌனீ
ஸந்துஷ்டோயென கேனசித் ।
அநிகேத: ஸ்திரமதிர் பக்திமான்
மே ப்ரியோ நர: ॥ (19)

''இகழ்பவனையும்,புகழ்பவர்களையும் ஒன்றுகக்கண்டு (அல்லது கேட்டு) மௌனம் கடைப்பிடிப்பவனும், கிடைப்பதைக் கொண்டு மனநிறைவு கொள்பவனும், தனக்கென்ற ஓர் இருப்பிடம் இல்லாதவனும், மன உறுதி கொண்டவனும் ஆகிய பக்திமானே (மனிதனே) எனக்கு மிகப்பிடித்தமானவனாவான்.''

(மனிதனின் தன்னலமே அவனுள் பகைமையை, நட்பினைப் பாராட்ட வழிவகுக்கின்றது. வேண்டுபவன், வேண்டாதவன் என்ற வேற்றுமை உணர்வில் பகைமை, நட்பு உணர்வுகள் மனிதனிடம் ஏற்படுகின்றன. எல்லா உயிர்களும் இறைவனின் படைப்பே, எல்லா உயிர்களிடத்தும் இறைவன் வாழ்கின்றுன் என்ற உணர்வே பகைவனையும், நண்பராக்கும், 'தான்' 'தனது' என்ற அகப்பற்று,புறப்பற்று உணர்வுகளே.' தேகம் அழியக்கூடியது', ஆத்மா அழிவில்லாதது' என்ற உண்மையை மறந்த உணர்வே மனிதருள் மான, அவமான நிகழ்ச்சி உணர்வுகளால் ஏற்படும் இன்பம் துன்பங்கள் மனிதனைத் தாக்குகின்றன.மனிதருள் பற்று,ஆசை இருக்குமிடத்து , வளருமிடத்து துன்பங்கள் தொடரும் , மனி தனைஅலைக்கழிக்கும். மனிதன் மிகச்சாதாரணமாக மிக எளிதாக பிறர் புகழ்ச்சிக்கு அடிமையாகின்றுன்.அதே போன்று பிறர் இகழ்வதால் மிருக உணர்வுகளுக்கு இலக்காகின்றுன். இப்புகழ்ச்சி இகழ்ச்சியால் மனிதன் தன்னை மறக்கின்றுன். புகழப்படும் ஒருவன் காலத்தால் மறக்கப்படுகின்றுன். இகழப்படும் ஒருவன் விரைவில் தன்னையே இழக்கின்றுன். புகழ்ச்சி இகழ்ச்சி யாவும் அழியும் இந்த உடலுக்கு என்ற உயர் உண்மையை மனிதன் என்று அறிகின்றுனோ அன்றே ஒரு மௌனி ஆகின்றுன். அந்நாளே அவன் இறைவனை அறிய முதலடிவைக்கின்றுன் என்று பொருள். மனிதன் தன் குழந்தை

நிலையிலிருந்தே 'வேண்டும் வேண்டும்' என்று அலைகின்றான். அடுத்தவனைப் பார்த்து, தன் தேவைகளை அதிகரித்துக் கொள்கின்றான். தன் சக்தியை, தன் தகுதியைமீறிதன் தேவைகளை அடையத் துடிக்கின்றான். மரணமே அவன் தேவைகளுக்கும் முற்றுப்புள்ளி வைக்கின்றது. மனத் திருப்தி, உடல் திருப்தி உடையவனே ஒரு நல்ல மனிதனாகத் திகழ வாய்ப்புள்ளது.

மிருகம் அடுத்த வேளை தீனியைப் பற்றி எண்ணிப்பார்ப்பதில்லை. மனிதன் தான் நாளை உயிருடன் இருப்போமா என்ற ஒரு உண்மைநிலை தெரியாமல் அல்லது தெரிந்தும் அதனைப் பற்றி சிந்தையில் கொள்ளாமல் நாளைய தேவைகளுக்காக நாளும் பேயாய் பொருள், பதவி, குடும்பம் என்று ஆலாய்ப் பறக்கின்றான். இறந்துவிட்டால் ஒரு சில நிமிடங்களில் சாம்பலாகிப் போய்விடும் மனிதன் தன் வாழ்நாளில் எட்டடுக்கு மாளிகையில் வாழ ஆசைப்படுகின்றான். அதற்காக தனக்கும், தன்னால் முடிந்துவரை வீடு, மனை, தோட்டம் என்று வாங்கிக் குவிக்கத் துடிக்கின்றான். இறந்தவுடன், அவன் அத்தனையும் விட்டு ஊருக்கே வெளியே (காசு கொடுத்து) எரிக்கப்படுகின்றான். இதுதான் வாழ்க்கை. இதனை உணர்ந்தவன் இறைவனுக்கு நெருக்கமாகின்றான். ஆசைகள் தோன்றுமிடத்து துன்பங்கள் தாக்குபிடித்து, மன உறுதியுடன் இறை நாட்டம் கொண்டவன் சிறந்த பக்தனாகின்றான்.)

யே து தர்ம்ய அம்ருதம் இதம் யதோக்தம்
பர்யுபாஸதே ।
ச்ரத்த தாரை மத்பரமா பக்தாஸ்தே அதீவ
மே ப்ரியா: ॥ (20)

(ஈடுபாடுடன் எந்த பக்தர்கள் என்னையே இறுதிப்புகலிடமாக நினைத்துக் கொண்டு, அமுதம் போன்ற இந்த நல்லுபதேசங்களை இங்குக் கூறியபடி பின்பற்றுகிறார்களோ அவர்களே எனக்கு மிகவும் பிடித்தமானவர்கள்.)

40

(எந்த முயற்சிகளுக்கும் ஈடுபாடு தேவை. அப்போதுதான் முயற்சிக்குப் பயன் இருக்கும். இங்கு ஈடுபாடு என்பது பக்தியாகப் கூறப்படுகிறது. இறைவனைக்காண நினைப்பவன் அதனை அடையும் முயற்சியில் தர்மவழிகளை கையாளுகின்றான். இதனால் சமுதாயம் மேம்படுகிறது. யார் ஒருவன் சமுதாய மேம்பாட்டில் இன்பம் அடைகின்றானோ அவனே முக்திக்குத் தகுதியாகின்றான். அதனால் அன்பும், அறநெறிகளும் யாரிடம் இருக்கின்றதோ அவன் இறைவனால் புகழப்படுகின்றான். இன்றைய வன்முறைகளுக்கும், சமுதாய அலங்கோலங்களுக்கும் காரணம் ஒருவர்க்கிடையே இருக்கவேண்டிய அன்பு, தியாகம், பொறுமை போன்ற மனிதநேயங்கள் அழிந்து வருவதே ஆகும்.)

(பன்னிரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.)

# பதின்மூன்றும் அத்தியாயம்

## க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோகம்

### அர்ச்சுனன் கூறியது:

ப்ரக்ருதிம் புருஷம் சைவ க்ஷேத்ரம்
க்ஷேத்ரக்ஞமேவ ச ।
ஏதத் வேதிதுமிச்சாமி ஞானம்
ஞேயம் ச கேசவ ॥

*''கேசவா ! இயற்கை, மற்றும் புருஷனை, க்ஷேத்ரம் (புனிதமான இடம்) மற்றும் க்ஷேத்ரக்ஞனை (புனிதமான அவ் இடத்தை அறிபவனை)ஞானம் (அறிவு) மற்றும் அறிய வேண்டியதை ஆகியனவற்றைப் பற்றி நான் அறிந்து கொள்ள ஆசைப்படுகின்றேன்.''*

*(இந்த கீதைச் செய்யுள் பொதுவாக பல பதிப்புகளில் இடம்பெறவில்லை.)*

*பகவான் பதிலுரைத்தது:*

இதம் சரீரம் கௌந்தேய
க்ஷேத்ரமித்ய பிதீயதே ।
ஏதத்யோ வேத்தி தம் ப்ராஹு :
க்ஷேத்ரக்ஞ இதி தத்வித: ॥ (1)

*''கௌந்தேய! (குந்தியின் மகனே) இந்த உடம்பே க்ஷேத்ரம் என்று அழைக்கப்படுகிறது. யார் இதனை நன்ருக அறிகிருனோ*

அவனையே க்ஷேத்ரத்ஞன் என்று அறிஞர்கள் கூறுகிறார்கள்.''

(க்ஷேத்ரம் என்றால் புனிதமிக்க இடம் என்று கூறப்படுகிறது. திருமலை, திருவரங்கம் போன்றன திவ்ய க்ஷேத்ரங்களாகும். அல்லது ஆற்றல் மிகு அம்மாயவன் இருக்குமிடம் புனிதத் தலங்களாகும். அது போன்றே ஆண்டவன் உறையும் நமது உடம்பே க்ஷேத்ரமாகும். இந்த பேருண்மையை அறிந்த மனிதனே க்ஷேத்ரக்ஞன் எனப்படுவன்.)

**க்ஷேத்ரக்ஞம் சாபி மாம் வித்தி**
**ஸர்வக்ஷேத்ரேஷு பாரத ।**
**க்ஷேத்ரக்ஷேத்ரக்ஞயோர்ஞானம்**
**யத்தஞ் ஞானம் மதம் மம ॥** (2)

''பரதகுலத்தில் தோன்றிவனே(அர்ச்சுனா) க்ஷேத்ரங்களில் எல்லாவற்றிலும் நானே க்ஷேத்ரக்ஞன் என்பதை அறிவாயாக ! க்ஷேத்ரம் க்ஷேத்ரக்ஞன் பற்றிய அறிவே-உணர்வே ஞானம் என்பது என் கருத்து.''

(க்ஷேத்ரம் என்பது இப்போது இயற்கை என்று குறிக்கப்படுகிறது. க்ஷேத்ரக்ஞன் என்பவன் புருஷன் எனப்படுகிறான். அதாவது அந்த இயற்கைய அனுபவிப்பவன் புருஷாகிறான். உடல் , அதனை அனுபவிப்பவன் ஆகியோரை நன்கு தெரிந்தவனே இறைவனாவான். மனிதன் அல்லது ஓர் உயிர் அவன் அல்லது அதனுடைய உடலை மட்டுமே அறிவர். ஆனால் இறைவனோ எல்லா உயிர்களையும் அவ் உயிர்கள் உறையும் உடல்களையும் அறிபவன் . ஏனென்றால் ,எல்லா உயிர்களிடத்தும் ஆத்மாவாக அவ் இறைவன் விளங்குறான். ஆகையால் அவர் எல்லாம் அறிந்தவராக எல்லா செயல்களின் நிலைகளனாகத் திகழ்கின்றார். ஆகவே இயற்கையினையும், அவ் இயற்கையை ஆளும் இறைவனையும் அறிவதே ஞானமாகும். ஜீவாத்மா பரமாத்மா பற்றிய உண்மை அறிவே ஞானமாகும்.)

**தத்க்ஷேத்ரம் யச்ச யாத்ருக்ச**
**யத்விகாரி யதஸ்ச யத் ।**
**ஸ ச யோ யத்ப்ரபாவஸ்ச**
**தத்ஸமாஸேன மே ச்ருணு ॥** (3)

*"அந்த க்ஷேத்ரம் என்பது என்ன,அதனுடைய தன்மைகள் யாவை, அதனுடைய பிரிவுகள் என்ன, அது எங்கிருந்து தோன்றியது,அந்த க்ஷேத்ரக்ஞன் என்பவன் யார்? அவனுடைய ஆற்றல்கள் யாவை ஆகியன பற்றிச்சுருக்கமாகக் கூறுகிறேன் கேட்பாயாக."*

*(இச்செய்யுளில் ஜீவாத்மாவின் இயற்கைக்கூறுபாடுகளை, அதில் உறையும் பரமாத்மாவின் பெருமைகளை ஒவ்வொரு மனிதனும் அறிய வேண்டியதன் அவசியத்தை இறைவன் இங்கு உணர்த்துகிறுர்.)*

ருஷிபிர் பஹுதா கீதம்
சந்தோபிர் விவிதை: ப்ருதக் ।
ப்ரஹ்ம ஸூத்ர பதைஸ்சைவ
ஹேதுமத்பிர் விநிஸ்சிதை : ॥ (4)

*"(க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் பற்றிய) உண்மைகள் பலவகைகளாக பலமுனிவர்களால் பலவகை பண்களைக்கொண்ட பாடல்களில் அழகாகக்கூறப்பட்டுள்ளன. புனிதமான அறிவை வழங்கக்கூடியதும், பகுத்தறிவுடன் கூடியதுமான பிரம்மசூத்திர சாத்திரங்களிலும் இது நன்கு விளக்கப்பட்டுள்ளது."*

*(மனிதன் உய்வதற்காக அவனுக்கு நல்வழிகாட்டுவதற்காக அன்று நம் ஆன்ருேர்கள் பலவகையாக முயற்சித்திருக்கிருர்கள். தங்களுடைய நல்லுபதேசங்களை பிரம்மசூத்திரம் போன்ற புனிதமான நூல்களின் மூலமாக தெரிவித்துள்ளார்கள். தங்கள் உபதேசங்களை ஏதோ சட்டங்களாக விதிமுறைகளாக இயம்பிடவில்லை. அறிவுப்பூர்வமாக ஏன், விஞ்ஞான ரீதியாகவும் விளக்கியுள்ளார்கள். இந்த உபதேசங்கள் பாமரனையும் சென்றடைய வேண்டும் என்ற காரணத்தால், அவற்றை சந்தமிகு பாடல்களின் மூலமும் தெரிவித்துள்ளார்கள். இசை எல்லா உயிர்களையும் கிளர்ச்சியூட்டி ,உணர்ச்சிகளை கிளப்பி இன்பமூட்டக்கூடியது. ஆகவே பரம்பொருளின் மெய்ப்பொருள் விளக்கங்களை மனிதன் அறிவதற்கான ஆர்வத்தை,ஆசையை வளர்த்திட நம்முன்னோர் தங்கள் வாழ்நாளையே அர்ப்பணித்துள்ளனர்.)*

மஹாபூதான் யஹங்காரோ
புத்திரவ்யக்த மேவ ச ।
இந்த்ரியாணி தசைகம் ச பஞ்ச
சேந்த்ரிய கோசரா : ॥ (5)

இச்சா த்வேஷ: ஸுகம் து:கம்
ஸங்காதஸ்சேதனா த்ருதி : ।
ஏத்த க்ஷேத்ரம் ஸமாஸேன
ஸவிகார முதாஹ்ருதம் ॥ (6)

''மகா பூதங்கள் , அகங்காரம், புத்தி, மூலப்பிரகிருதி (மாயை), பத்து இந்திரியங்கள், மனம் ஐந்து இந்திரியார்த்தங்கள், விருப்பு ,வெறுப்பு, இன்பம், துன்பம், உடலமைப்பு, உணர்வு , உறுதி போன்ற வேறுபாடுகள் உடையது 'க்ஷேத்ரம் '' ஆகிய இந்த உடல் என்று இங்குச் சுருக்கமாக கூறப்பட்டுள்ளது.

(ஆகாயம், காற்று, நெருப்பு , நீர் ,மண் ஆகியன கண்ணுக்குத் தெரியாமல் எங்கும் பரந்துள்ளதால் ஐம்பூதங்கள் 'மஹா பூதங்கள்' என்று அழைக்கப்பெறுகின்றன. 'எனது' என்ற அஹங்காரம், (மமதை), அறிவு, மாயை, கண், காது, மூக்கு, நாக்கு, மெய் என்ற தொடுபுலன்கள், ஒலி, கால்கள், கைகள் , குதம் மற்றும் பால் உறுப்புக்கள் ஆகிய செயல்படும் ஐந்து புலன்கள், புலன்களுக்கு உள்ளே இருக்கும் மனம் , மனதாலும் பெறப்படும் விருப்பு,-வெறுப்பு, இன்ப-துன்பம், ஆகிய உணர்ச்சி இடைவிளைவுகள், பலபாகங்கள் பொருத்தப்பெற்ற இயந்திரம் போன்றதான இந்த உடமைப்பு, உடல் செயல்படுவதற்காக தூண்டுகோலாக இருக்கும் மன உணர்வு, மற்றும் நம்பிக்கை ஆகியன கொண்டு விளங்கி, செயல்படுவது இந்த உடலாகும்.)

இனி வரும் ஏழு முதல் பதினொரு செய்யுட்களில் பகவான் ஞானம் பெறுவதற்குரிய குணங்களைப் பட்டியல் போட்டுக்காட்டியுள்ளார்.

அபிமானத்வமதம் பித்வமஹிம்ஸா
க்ஷாந்திரார்ஜவம் ।

ஆசார்யோபாஸனம் சௌசம்
ஸ்தைர்யமாத்மவிநிக்ரஹ : ॥ (7)

''தற்புகழ்ச்சியின்மை, செருக்கின்மை, அகிம்சை, பொறுமை,.......சேவை தூய்மை,......... புலனடக்கம்....''

இந்த்ரியார்த்தேஷு வைராக்ய
மனஹங்கார ஏவ ச ।
ஜன்ம மிருத்யு ஜரா வ்யாதி து:க
தோஷானுதர்சனம் ॥ (8)

''புலனின்பங்களில் நாட்டமின்மை, அஹங்காரம் இல்லாது இருத்தல், பிறப்பு, இறப்பு மூப்பு , நோய் போன்றவைபற்றிய உண்மைகளை அறிதல்...''

அஸக்திரன பிஷ்வங்க : புத்ர
தாரக்ருஹாதிஷு ।
நித்யம் ச ஸமசித்தத்வமிஷ்டானி
ஷ்டோபபத்திஷு ॥ (9)

''உலக விஷயங்களின்மீது பற்றற்று இருத்தல், பிள்ளை,மனைவி, வீடு ஆகியவற்றின் மீது பற்றற்று விளங்குதல், இன்ப துன்ப நிகழ்ச்சிகளில் சமமான மனநிலை பெற்றிருர்தல்.....''

மயி சானன்யயோகேன
பக்திரவ்ய பிசாரிணீ ।
விவிக்த தேச ஸேவித்வமரதிர்
ஜனஸம்ஸதி ॥ (10)

''என்னிடம் சிறிதும் மாறுத, கலப்பற்ற, வேறு சிந்தனையற்ற பக்தி கொள்ளுதல், தனிமையை விரும்புதல், கூட்டத்தோடு சேராது விலகியிருத்தல்......''

அத்யாத்ம ஞானநித்யத்வம் தத்வ
ஞானார்த்த தர்சனம் ।
ஏதஜ்ஞானமிதி ப்ரோக்தமக்ஞானம்
யததோ அன்யதா ॥ (11)

''ஆன்மீக எண்ணங்களில் உணர்வுகளில் தன்னை ஒப்படைத்தல், பரம்பொருளின் பேருண்மையை அறிதற்குரிய

தத்துவ விளக்கங்களைப் படித்தல் ஆகியனயாவும் ஞானத்திற்குரியதாகும். இவையெல்லாவற்றிற்கும் புறம்பானது எதிரானது யாவும் அஞ்ஞான மேயாகும்.''

(மேற்கூரிய ஏழுமுதல் பதினொரு செய்யுட்களில் மனிதன் தன்னை எவ்வாறெல்லாம் திருத்திக்கொள்ள வேண்டும், எவற்றையெல்லாம் பின்பற்றக்கூடாது, எதனையெல்லாம் வளர்த்துக்கொள்ள வேண்டும் என்று அறிவுறுத்தி, ஆரோக்யமான உடலும், உயர்ந்த அறிவும், தெளிந்த மனமும் ஒரு மனிதனை மகானாக உயர்த்திடும் என்று விளக்கியுள்ளார். இச்செய்யுட்களில் கூறப்பட்டுள்ள கருத்துக்களைச் சுருக்கிக் கூறுவோமேயானால் மனிதன் உலகாயுத ஆசையினை விடுதலும் தான்; தனது என்ற மமதை மன ப்பான்மையை மறத்தலும்; தக்க ஒரு ஆசானை வாழ்க்கையில் கைக்கொள்ளுதலும்; ஆன்மீக நாட்டத்தில் உறுதி, சொல்லில் செயலில் நேர்மை ; எக்காலத்தும், பின்பற்ற வேண்டியபொறுமை; பிறப்பு , வாழ்க்கை, இறப்பு ஆகியவற்றில் மனிதன் தெரிந்துகொள்ள வேண்டிய நிலையாமை எனும் உண்மை ; வீண் பேச்சும், ஆடம்பரமான, ஆர்ப்பாட்டமான சூழ்நிலையும் ஏற்படுத்தும் கூட்டத்திலிருந்து விலகி இருத்தல்; தனித்து இருந்து ஆத்மாவை பற்றிய பரிசீலனை போன்ற உயர் கருத்துக்களை பின்பற்றுதலும் ஆகியவையே உண்மையான உயர் அறிவான ஞானத்தைத் தரும் வழிகாட்டிகளாகும். மற்றவையாவும் அறியாமை எனும் இருட்டில் தள்ளச்செய்யும் மனித வாழ்க்கையின் எதிரிகளாகும்.)

**ஜ்ஞேயம் யத்தத் ப்ரவக்ஷ்யாமி**
**யஜ்ஞாத்வா அம்ருதம்ச்னுதே ।**
**அனாதிமத்பரம் ப்ரஹ்ம் ந**
**ஸத்தன்னா ஸதுச்யதே ॥** (12)

''(ஒருவன்) அறிய வேண்டியது எது, எதனை அறிந்து இறைவாத தன்மையை அடைகின்றான் என்பதைப்பற்றி நான் உனக்குக் கூறுகின்றேன். அதுமுதலும் முடிவும் இல்லாத பரப்பிரம்மமாகும். உள்ளது, இல்லாதது என்று கூற முடியாதது,''

*(நிறம், குணம்,உருவம் கடந்த இறைவன் நிர்க்குண பிரம்மம் என்று அழைக்கப்பெறுகின்றான். என்றும் , எங்கும் எதிலும் அவன் மறைந்துள்ளான்.இறைவனுக்கு ஒரு தோற்றமோ, முடிவோ, குறைபாடுகளோ கிடையாது.அத்தகு நிர்க்குணமான அவ் இறைவனை ஒருவன் அறியும்போது, அவன் அதனுடன் இரண்டறக் கலந்து விடுகின்றான். ஜீவாத்மா, பரமாத்மா என்ற வேறுபாடு கடந்து விடுகிறது. அத்தகு பிரம்மத்தை அறிபவன் பிரம்மமாகின்றான். அதுவே முக்திநிலையாகும்.)*

ஸர்வத : பாணிபாதம் தத்ஸர்வதோ
அக்ஷிசிரோமுகம் ।
ஸர்வத:ச்ருதிமல்லோகே ஸர்வ
மாவ்ருத்ய திஷ்டதி ॥ (13)

*''(அந்த நிர்க்குண பிரம்மம்) எங்கும் கைகால்கள், கண் , தலைவாய்கள், காதுகள் ஆகியவற்றுடன் விளங்கி (அது) உலகத்தில் எல்லாவற்றுடனும் ஊடுருவி பரந்து உள்ளது.''*

*(பரப்பிரம்மமான அந்தப் பரம்பொருள் எல்லா உயிர்களிடத்தும் உள்ளும், புறமும் பரந்து உள்ளான். இறை ஆற்றல்கள் யாவும் எல்லா உயிர்களின் கை, கால், தலை என்ற உறுப்புகளின் முகமாகசெயல்படுகின்றன.கடலில் சங்கமமாகும் நதியாக கலந்தும், தனித்துத் தெரிந்திடும் சூரியனாக எட்டாத இடத்தில் திகழ்ந்தும் விளங்குகின்றான். அதாவது நிர்க்குண பிரம்மத்தை அறியாதபோது அதுவிலகியும்,அறிந்தவுடன் அதில்நாம் ஒன்றியும் விடுவோம். ஆகவே இறைவன் நம்மிடமிருந்து விலகுவதோ அல்லது நம்முடன் கலந்து விடுவதோ அப்பரமனைப் பற்றி நாம் அறியும் பேரறிவு மீதுதான் சார்ந்துள்ளது.)*

ஸர்வேந்த்ரியகுணாபாஸம்
ஸர்வேந்த்ரிய விவர்ஜிதம் ।
அஸக்தம் ஸர்வ ப்ருச்சைவ
நிர்குணம் குணபோக்த்ரு ச ॥ (14)

''(பரப்பிரம்மம்) அனைத்துப்புலன்கள் வழியாக பிரகாசிப்பது (செயல்படுவது.) ஆனால் அதே நேரத்து புலன்கள் அற்று விளங்குவது ; பற்றற்றுத் திகழ்வது ஆனால் அனைத்தையும் (பற்றி) தாங்கித் திகழ்வது குணங்களை கடந்தது ஆனால் அக்குனங்களை விளக்குவது.''

(மனிதனுக்கும் இறைவனுக்கும் புலன்கள் உண்டு. ஆனால் உலகாயுத ஆசைகளின் காரணமாக புலன்கள் மாசுடன் திகழ்கின்றன. இறைவனைப் பற்றிய ஞானம் பெற்றவுடன் அவை புனதமாகி விடுகின்றன. சினிமாத் திரையில் காணப்படும் வண்ண உருவங்களுக்கும், அத்திரைக்கும் எப்படி எந்தவிதமான உறவு இல்லையோ அதே போன்று இறைவன், நிற, குண இடவேறுபாடற்று விளங்குகின்றான். எவ்வாறு சூரியன் தன் தொடர்பற்று பிறபொருள்களைக் காண்பிக்கின்றானோ, இறைவனும் புலன்களின் செயல்பாடுகள் உயர்ந்ததாக விளங்கிடும்போது அப்புலன்களும் புனிதமாகி விடுகின்றன.)

**பஹிரந்தஸ்ச பூதானாமசரம்**
**சரமேவ ச ।**
**ஸூக்ஷ்மத்வாத்தத விக்ஞேயம்**
**தூரஸ்தம் சாந்திகே ச தத் ॥ (15)**

''அது (பரப்பிரம்மம்) எல்லா பொருள்களுக்கும் உள்ளேயும் வெளியேயும் இருப்பது; அசையும் அசையா தன்மையைக் கொண்டது; மிகவும் நுண்ணியதாதலால் அறிய முடியாதது; விலகியும் அருகிலும் இருப்பது.''

(இறைவன் ஆத்மாவாக உடல்களிலிருந்து தனித்து இருக்கவல்லவர். அதே சமயத்து உடலுக்குள் இருந்து செயல்படுபவர். ஆகவே உடலுக்கு வெளியேயும் உள்ளேயும் இருந்து நம்மை ஆள்பவர். பனிக்கட்டிக்குள் நீரும், நீரில் பனிக்கட்டியும் இருப்பதுபோன்று இறைவன் இந்த இயற்கையினூடேதனித்தும், இரண்டறக் கலந்தும் தன் ஆற்றலை வெளிப்படுத்துகின்றார். நீர் ஆவியாகும்போது அந்த நீர் கண்ணுக்குத் தெரிவதில்லை. அதேபோன்று இறைவன் இயற்கையில் விளங்கிடும்போது இறை உண்மை

*தெரியாதவர்களுக்கு அவ் இறைவன் அவர்கள்தம் ஊனக்கண்களுக்குத் தெரிவதில்லை. தன் கால்களுக்குக்கீழே பூமிக்கடியில் ஒரு புதயைல் இருப்பது தெரியாதவனுக்கு அந்த செல்வத்திற்கும் அவனுக்கும் உள்ளதூரம் மிகப்பெரியது. தெரிந்து கொண்டவன் அடுத்த நிமிடமே அதற்கு உரியவனாகின்றான். அதே போன்று பரமனைப் பற்றிய பேருண்மையை அறிந்தவன்இறைவனுக்கு மிகுந்த நெருக்கமாகின்றான். தன் உள்ளிருக்கும் பரமாத்மாவை அறியாதவனுக்கு இறைவன் என்றுமே மிகத்தூரமே.)*

**அவிபக்தம் ச பூதேஷு விபக்தமிவ**
**சஸ்திதம் ।**
**பூதபர்த்ரு ச தஜ் ஞேயம்**
**க்ரஸிஷ்ணு ப்ரபவிஷ்ணு ச ॥** (16)

*''அது (பரப்பிரம்மம்) பிரிவு படாதது, அதே சமயத்து பிரிவு பட்டது போல் விளங்குவது. பொருள்களைத் தாங்குவதும், விழுங்குவதும், உண்டாக்குவதும் அதன் (பரப்பிரம்மம்) இயல்பாகும்.''*

*(உலகத்தின் எத்திசைக்கும் சென்றாலும், எவ்வளவு தூரம் சென்றாலும் உதித்திடும், வெளிச்சம் தந்திடும் சூரியன் ஒருவனே. ஆனால் அந்தந்த இடங்களுக்கு, அந்தந்த திசைகளுக்கு சூரியன் தனித்தனியாகத் தெரிகின்றான் . வானம் ஒன்றுதான். ஆனால் அவ் வானத்தில் மிதந்திடும் மேகக்கூட்டங்களால் ஏதோ பிளவு பட்டதாக வானம் தெரிந்திடும். அதேபோன்று உயிர்கள் பலவாக பிரிந்திருந்தபோதும், அவற்றினுள்ளே தனித் தனியாகவும், பரந்து அவ் ஆத்மா விளங்குகிறது. கடலில் தோன்றி அக்கடலிலேயே புரண்டோடி, பின்னர் அக்கடலிலேயே மறைந்துவிடும் அலைகளைப் போன்று உயிர்களின் தோற்றம், செயல், ஒடுக்கம் யாவும் அவ்வாத்மாவுக்குள்ளேயே நடைபெறுகின்றன.)*

**ஜ்யோதிஸாமி தஜ் ஜ்யோதிஸ்தமஸ:**
**பரமுச்யதே ।**

ஞானம் ஞேயம் ஞானகம்யம் ஹ்ருதி
ஸர்வஸ்ய விஷ்டிதம் ॥ (17)

''ஒளிகளுக்கு எல்லாம் பேரொளியாகத் திகழ்ந்திடும் அப்பரப்பிரம்மம் இருளுக்கு அப்பாற்பட்டது என்று கூறுப்படுகிறது. அறிவும்,அறியப்படும் பொருளும், அறிவினால் பெறப்படும் உணர்வும் ஆகிய அந்த பரப்பிரம்மம் எல்லோருடைய உள்ளத்திலும் நிலைத்து நிற்கின்றது.''

(ஊனக்கண்களால் நமக்குத் தெரியும் சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் ஆகியவை வெளிப்படுவதும் ஒளிகளுக்கு எல்லாம் மூலகாரணண், மூலஜோதி அந்த பரமனாவான். மனிதனாகிய ஜீவாத்மாவுக்குத்தான் இருட்டு என்ற உணர்வு இருக்கும். ஆனால் அகத்தில் ஆத்மாவைக் காண்பவன் என்றுமே அந்தப் பேரொளியைத் தான் காண்பான் அந்தப் பேரொளியே மேலான 'ஞான' மாகிய அறிவாகும்.)

இதி க்ஷேத்ரம் ததா ஞானம்
சோக்தம் ஸமாஸத: ।
மத்பக்த ஏதத் விக்ஞாய
மத்பாவா யோபபத்யதே ॥ (18)

''இவ்வாறு உடல், அறிவு, அறியப்படக்கூடியது யாவும் என்னால் சுருக்கமாகக் கூறப்பட்டன. இவற்றை நன்கு அறியும் பக்தன் என்னை அடையக் கூடிய தகுதியைப் பெறுகின்றான்.''

(மனிதன் தன் ஆத்மாவையே அந்த ஆண்டவனாக-பரம்பொருளாகக் காணும்போதுதான் அவன் தேர்ந்த ஞானியாகின்றான். அந்தப் பக்குவத்தை தன் அறிவால் தன் ஆன்மீகத் தொடர்பினால் அடைய முடியும்.)

ப்ரக்ருதிம் புருஷம் சைவ
வித்த்யனாதீ உபாவபி ।
விகாராான்ஸ்ச குணான்ஸ்சைவ
வித்தி ப்ரக்ருதிஸம்பவான் ॥ (19)

''ப்ரகிருதி மற்றும் புருஷன் ஆகிய இரண்டும் ஆரம்பம் இல்லாதவைகள் என்பதை அறிக.. மாற்றங்கள் மற்றும்

குணங்கள் பிரகிருதியில் தோன்றி யவை என்பதை அறிவாயாக.''

(ப்ரகிருதி என்பது இறைவனின் கீழான சக்தியாகும் அதாவது ஐம்பூதங்கள் , மனம், புத்தி, அகங்காரம் யாவும் 'அபரபிரகிருதி' எனப்படும்.புருஷன் என்பது ஜீவாத்மாவாகும். இது இறைவனின் நேரிடையான சக்தியின் பிரதிபலிப்பாகும். இது 'பரபிரகிருதி' எனப்படும். ஆகவே இறைவன் எப்படி 'ஆதி' இல்லாதவனோ. அவனுடைய மேற்கூறிய சக்தி களுக்கும் ஆதி இல்லை. உயிர் பொது வாயினும் ,அவை புகும் உடலாலும், மாறுபாடு கொள்கின்றான்.வேறுபாடுகள் கொண்டு விளங்கும்போது சீறி எழும் அலைகளைக் கொண்ட கடலாகவும், ஜீவாத்மா -பரமாத்மா சங்கமத்தின்போது அமைதியுடன் கூடிய கடலாகவும் அதே புருஷன் விள ங்குகின்றான்.)

கார்யகாரண கர்த்ருத்வே ஹேது:
ப்ரக்ருதிருச்யதே ।
புருஷ: ஸுகது: கானாம்
போக்த்ருத்வே ஹேதுருச்யதே ॥ (20)

''உடலுக்கும்,பொறிகளுக்கும் பிரகிருதியே காரணமாக உள்ளது என்று கூறப்படுகிறது . இன்ப, துன்பங்களை அனுபவிப்பதற்குக் காரணமாக ஜீவன்(ஜீவாத்மா) உள்ளான் என்றும் கூறப்படுகிறது.''

(இரும்பினை எவ்வளவுக்கெவ்வளவு பழுக்கக்காய்ச்சுகிறோமோ, அவ்வுளவுக்கவ்வளவு அது தன்னை நெகிழ்ந்து கொடுக்கும். அப்போதுதான் அதனை சம்மட்டியால் அடித்து சிதைத்து நாம் விரும்பும் உருவத்திற்கேற்றவாறு கொண்டுவரமுடியும். அதே போன்று ப்ரகிருதியுடன் புருஷன் எனப்படும் இந்த ஜீவாத்மா இணைந்திடும் போது எது நல்லது, எது கெட்டது என்பதை அறிந்திடவும்தன்னைத் தூய்மையாக்கிக் கொள்ளவும் முடியும். ஐம் பொறிகளும், அப்பொறி இன்பங்களும் அது சம்மட்டியாக விளங்கி நம்மைப் பக்குவப்படுத்துகின்றன.)

புருஷ:ப்ரக்ருதிஸ்தோ ஹி புங்க்தே
ப்ரக்ருதிஜான் குணான் ।
காரணம் குணஸங்கோ அஸ்ய
ஸதஸத்யோனி ஜன்மஸு ॥ (21)

''புருஷனானவன் (ஜீவாத்மா) இயற்கையில் இருந்துகொண்டு அவ் இயற்கையில் தோன்றிய குணங்களை அனுபவிக்கின்றான். இந்தக் குணப்பற்றுக்களே அந்த ஜீவாத்மாவுக்கு நன்மை, தீமை பயக்கக்கூடிய பிறவிகளை தோற்றுவிக்கின்றன.''

*(பற்றுக்களின் காரணமாக இந்த ஜீவாத்மா-மனித உயிர் பரமாத்மாவுடன் இணையத் தடுமாறுகின்றது. இயற்கையின் காரணமாக , ஐம்புலன்களின் இன்ப நுகர்ச்சிக்காக, மனக்கட்டுப்பாடு அற்று, அறிவு மயங்கி, அகங்காரம் உடன் ஆட்டுவிக்க, மனித உயிர் இன்பத்தைத்தேடி, இன்ப, துன்பங்களை நாளும் அனுபவிக்கின்றது. அதேவேளையில் இயற்கையானது வாழ்க்கை உண்மையை ஜீவாத்மாவுக்குஅதன் (அவன்) அனுபவத்திலேயே காட்டி வருகின்றது. நாட்பட, நாட்பட அந்த அனுபவ முதிர்ச்சியே ஜீவாத்மாவை உலக மாயையிலிருந்து விடுவிக்கின்றது. இதனைத் தான் பரமாத்வாகிய இறைவன் ஜீவாத்மாவாகிய மனிதனிடம் எதிர்பார்க்கின்றான். திருந்திய மனிதன் தேவனாகப் பிறக்கின்றான். திருந்தாத ஜீவாத்மா மீண்டும் மீண்டும் 'ஆசைகள்' எனும் குழியில் விழுந்து பிறவிகள் பலதொடர்ந்து எடுக்கின்றது.)*

உபத்ரஷ்டானுமந்தா ச பர்த்தா
போக்தா மஹேச்வர: ।
பரமாத்மேதி சாப்யுக்தோ
தேஹே அஸ்மின் புருஷ: பர: ॥ (22)

''இந்த உடம்பிலுள்ள பரம்பொருளானவன் சாட்சி, அனுமதிப்பவன், தாங்குபவன், அனுபவிப்பவன், மகேஸ்வரன், பரமாத்தன் என்று இவ்வாறெல்லாம் கூறப்படுகிறான்.''

*(தான் செயயும் செயல்களுக்குக் காரணமானவன் தானே என்று ஜீவாத்மா நினைத்துக்கொள்கின்றான். ஆனால் அவனுள்ளிருந்து கொண்டே அவனை அவ்வாறு இயக்குவது, மற்றொரு சக்தியாம் பரமாத்மா என்பதை அவன் மறந்து விடுகின்றான். இச்சக்தி பரமாத்மாவின் கருணையினால் தான் நடைபெறுகின்றது.உலகாயுத ஆசைகளை மனிதன் அனுபவித்திட இறைவன் ஒருசிறு சுதந்திரத்தினை மனிதனுக்குத் தந்துள்ளான் . தன்அனுபவத்தில் வாழ்க்கை உண்மையை மனிதப் பிறவியின் நோக்கத்தை கண்டறிய மனிதன் தவறும்போதுதான் அவனுக்கும் இறைவனுக்கும் உள்ள இடைவெளி தொடர்ந்து பெருகிக்கொண்டே போகின்றது. விளைவு மீண்டும் இழி பிறவிகள்! மனிதனின் உள்ளே இருந்து கொண்டே அவனைத்திருத்திட இறைவன் விரும்புகின்றான். மனசாட்சியாக இருந்து அவனைத்திருத்த முற்படுகின்றான். மனிதனுடைய செயல்கள் யாவும் இறைவனுடைய அனுமதி பேரில் தான் நடக்கின்றன. அவன் வழியில் விட்டு அவனைத்திருத்திட அவனுள் சுய சிந்தனை வளர்த்திட ஓர் உபாயமாக இது இருக்கின்றது.இயற்கையில் நடைபெறும் செயல்கள் எல்லாம் அவன் ஆணைக்குட்பட்டே நடக்கின்றபடியால் அவன் மகேஸ்வரனாக அழைக்கப்படுகின்றான். ஆகவே இந்த உடம்பில் இயற்கையின் நியதியால் நடைபெறும் எல்லாச் செயல்களுக்கும் ஒவ்வொரு நிலையிலும் இறைவன் காரணமாக இருந்தாலும் அவற்றிற்கு அவர் எந்த நிலையிலும் கட்டுப்படாது விளங்கிறார்.)*

ய ஏவம் வேத்தி புருஷம்
ப்ரக்ருதிம் சகுண: ஸஹ ।
ஸர்வதா வர்தமானோ அலி ந ஸ
பூயோ அபி ஜாயதே ॥ (23)

*''இவ்வாறு ஜீவாத்மாவையும் குணங்களுடன் (இயல்புகளுடன்) கூடிய இயற்கையினையும் அறிந்து கொண்டவன் எவ்வாறு வாழ்ந்தவனாயினும் அவன் மறுபடியும் பிறவி எடுப்பதில்லை.''*

*(இவ்வகையில் புருஷனான ஜீவாத்மாவையும் அதுவாழும் இடமான எட்டுவகை குணங்களுடன்கூடி விளங்கிடும் இயற்கையினையும் அறிந்தவன் முக்தி நிலை விரைவில் எய்துகின்றான். அவனை பிறவி எனும் நோய் மீண்டும் தொடுவதில்லை. ஆன்மீக உலகில் ஜீவாத்மா தன் பங்கு என்ன என்பதையும் இயற்கையின் விளைவுகளால் ஏற்படும்தீமைகள் உலகாயுத பற்றுகளுக்கு வழிவகுக்கும் என்பதையும் அறிந்து, சலனமற்று உலகம் ஒருமாயை- கானல்நீர் என்று தெளிந்து வாழ்வானாயின் அவனுக்குப் பிறவிகள் தொடரா.)*

## பகவான் கூறியது:

**த்யானேனாத்மனி பச்யந்தி**
**கேசிதாத்மானமாத்மனா ।**
**அன்யே ஸாங்க்யேன யோகேன**
**கர்மயோகேன சாபரே ॥ (24)**

*''சிலர் தியானத்தாலும் தெளிந்த அறிவாலும் என்னை அவர்கள் உள்ளத்தில்(ஆத்மாவில்) உணர்கின்றனர். வேறு சிலர் ஞானம் மற்றும் கர்ம யோகங்களாலும் என்னை உணர்கின்றனர்.''*

*(மனிதன் தன்னுடைய அறிவிற்கேற்ப, ஆன்மீக விழிப்புணர்ச்சிக்கேற்ப இறை உண்மையை அறிகின்றனர். மற்றும் சிலரோ, ஞான, கர்ம, யோக முறையாலும் இறைவனைக் காணும் திறன் பெறுகின்றனர். இந்த உண்மையை அவர்கள் தங்கள் உள்ளத்திலேயே அனுபவித்து மகிழ்கின்றனர்.)*

**அன்யே த்வேவமஜானந்த: ச்ருத்வான்**
**யேப்ய உபாஸதே ।**
**தே அபி சாதிதரந்த்யேவ ம்ருத்யும்**
**ச்ருதிபராயணு ॥ (25)**

*''மேலும் பலர் மேற்கூறியவாறு (மேற்கூறிய வழிகளில்) இறை உண்மையை அறிய இயலாதவர்களாயினும். பெரியோர்களின் அறிவுரையினை ஏற்று, அதில் முழு நம்பிக்கையை வைத்து, அதன் படி நடந்து மரணத்தை*

உறுதியாக வெல்லுகின்றனர்.''

(ஓர் இடத்தை அடையச்செல்லும்போது,செல்லும் பாதை ஒரே சீராக இருக்காது. முட்புதர்கள் நிறைந்த காட்டு வழியாகவும், உயர்ந்து அமைந்தகுன்றுகள் அடர்ந்த வழியாகவும், புரண்டோடும் அலைகள் கொண்ட ஆறுகள் குறுக்கே ஓடும் வழியாகவும், காலுக்கு மெத்தென அமையும் புல்வெளி நிறைந்த பரந்த நிலப்பரப்பாகவும் வழிகள் அமையலாம்.அதுபோன்று இறைவனை உணர்வதற்கான வழி முறைகள் கடினமான பாதைகள் போன்று ஞான,ராஜ, கர்ம, யோகங்கள் ஆகியன விளங்குகின்றன. இந்த மூன்று யோகங்களைப் பயில சாத்திர அறிவு, தத்துவ முதிர்ச்சி, நுண் மான் நுழைபுலம் எனும் விவேகம் போன்றன அவசியமாகும். ஆனால் புல்வெளியான பரந்த அகன்ற பாதையாக பக்தியோகம் விளங்குகிறது. இதனைப்பயில உள்ளத்தையோ, உடலையோ வருத்த வேண்டாம். நம்பிக்கையும் முழு ஈடுபாடும் மட்டுமே போதும். இதனை ஆழ்வார்கள், ஆசார்யப்பெருமக்கள் திருத்தொண்டர்கள் ஆகியோர் தங்கள் அருளிச் செயல்கள் எனும் இறை உண்மையை உணர்த்திடும் பக்திப் பாடல்களாலும் மற்றும் தங்கள் வாழ்க்கை நெறியாலும் விளக்கிச் சென்றுள்ளனர். பக்தியோகம் இறைவனைக் காண்பதும் மட்டுமின்றி, அன்பின், கருணையின் ஆற்றலையும் வெளிப்படுத்தி, மனித நேயத்தை வளர்த்திடும் ஆன்மீக ஆயுதமாகத் திகழ்கின்றது.)

யாவத்ஸஞ்ஜாயதே கிஞ்சித் ஸத்த்வம்
ஸ்தாவர ஜங்கமம் ।
க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ ஸம்யோகாத்
தத்வித்தி பரதர்ஷப ॥ (26)

''இந்த உலகத்திலுள்ள நகரும், நகரா உயிர்கள் யாவும் க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞைகளின் சேர்க்கையினால்தான் தோன்றுகின்றன.''

(மரம், செடி,கொடிகள் போன்ற அசையாத உயிர்களும், நீந்துவன , நடப்பன, பறப்பன போன்ற அசையும் உயிர்கள்

*யாவும் அதாவது ஓரறிவு முதல் ஆறறிவு வரை உள்ள உயிர்கள் யாவும் புருஷன், ஜட இயற்கை ஆகிய இரண்டின் கலப்பில் தான் உண்டாக்கப்படுகின்றன. இவையிரண்டும் அந்த இறைவனின் ஆணைக்கு உட்பட்டே செயல்படுகின்றன.)*

**ஸமம் ஸர்வேஷு பூதேஷு திஷ்டந்தம்**
**பரமேச்வரம் ।**
**விநச்யத்ஸ்வவிநச்யந்தம் ய :**
**பசயதி ஸ பச்யதி ॥** (27)

*''படைக்கப்பட்டுள்ள உயிர்கள் அனைத்திலும் ஸமமாக பரவியிருப்பவனும், அழியும் பொருள்களிலும் அழியாது இருப்பவனாகிய அந்த இறைவனை யார் உள்ளபடி அறிகிறானோ அவனே உண்மையில் உணர்ந்தவனாக (ஞானியாக) கருதப்படுகின்றான்.''*

*(பூச்சி இனங்களில் எறும்பு சிறிதென்றாலும், மிருகங்களில் யானை பெரியது என்றாலும் இவையிரண்டிலும் இருக்கும் அந்த இறைவன் சமமாகவே அவற்றுள் இருந்து அவற்றை செயற்படுத்துகின்றான். அதேபோன்று மலரில் மணம் இருப்பது போன்று பாலில் வெண்ணை இருப்பதுபோன்று இறைவன் அனைத்து உயிர்களிலும் பொதுவான உயிராக இருக்கின்றான். ஆகவே அப்பரமன்-அப்பரமாத்மா இல்லையென்றால் இவ்வுலகம் இல்லை என்பதையும், அவனே அணுவுள் அணுவாக இருந்து இந்த ஜகத்தை ஆளுகின்றான் என்ற பேருண்மையை அறிபவனே அந்த இறை உண்மையை அறிந்த ஞானியாகப் போற்றப்படுகின்றான்.)*

## பகவான் கூறியது:

**ஸமம் பச்யன்ஹி ஸர்வத்ர**
**ஸமவஸ்தித மீச்வரம் ।**
**ந ஹிநஸ்த்யாத்மானத்மானம்**
**ததோ யாதி பராம் கதிம் ॥** (28)

*''எங்கும் எதிலும் சரிசமமாக நிலைத்திருக்கும்-பரந்திருக்கும் அப்பரமனை உள்ளபடி உணர்ந்தவன் தன்னைத்*

தானே அழித்துக்கொள்வதில்லை. அதனால் அவன் முக்தி எனும் பரகதியை அடையவே செய்கின்றான்.''

(இறைவன் தன் படைப்பில் கீழானது, மேலானது என்று வேறுபாட்டினைக் காட்டியதில்லை. அதனால்தான் அவன் எல்லா உயிர்களிடத்தும் சரி சமமாகத் தன்னை வியாபித்துக் கொண்டுள்ளான். ஆனால் அவ்இறைவன் படைத்த மனிதனோ தன் உடலையே தன் உலகமாகக் கருதிப் பேணிப்பாதுகாக்கின்றான். உயிர்போனபின்பு உடம்புஅழுகி, அழிந்து, மறைந்துவிடும். ஆனால் உடம்பிலுள்ள ஆத்மாவிற்க்கோ அழிவில்லை என்ற உண்மையை வலுக்கட்டாயமாக மறந்து விடுகின்றான். அதனால் ஆத்மாவிடம் பக்தி செய்யும் பண்பினை இழந்து விடுகின்றான். அதே போன்று இறைவன் படைப்பில் உயிர்கள் யாவும் சமம்போன்ற இறை உண்மையை மறந்து தன் இன உயிர்களிடையே இனம், இடம், மொழி, பிறப்பு வேறுபாடுகளை கற்பித்துக்கொண்டு நேயம், அன்பு, கருனை போன்ற உயர் பண்புகளை ஒழித்துத் தன் பிறப்பின் பயனை மறந்து, மீண்டும் மறுபிறவிகளுக்கே இடம் கொடுக்கின்றான். இந்தத் தவறினை மனிதன் திருத்திக்கொள்வானாயின் அவன் முக்தி எனும் தன் இறுதி வாழ்க்கை இலட்சியத்தினை மிக எளிதில் மரண அச்சமின்றி எய்திடமுடியும்.)

ப்ரக்ருத்யைவ ச கர்மாணி
க்ரியமாணானி ஸர்வச : ।
ய: பச்யதி ததாத்மானமகர்தாரம்
ஸ பச்யதி ॥ (29)

''இயற்கையின் தூண்டுதல்களினால்தான் செயல்கள் யாவும் நடைபெறுகின்றன; (ஆனால்)ஆத்மாவோ எவ்விதமான சலனமுமற்றது என்ற உண்மையை யார் உணர்கின்றார்களோ அவர்களே ஞானி எனும் உண்மையைப் பார்க்கும் திறன் கொண்டவர்களாகக் கருதப்படுகிறார்கள்.''

(உடல், உள்ளம், ஐம்பொறிகள் எனும் ஜட இயற்கையின் காரணமாக செயல்கள் யாவும் நடைபெறுகின்றன. ஆனால் இயங்கிடும் அந்த உடலில் அமைந்திடும் ஆத்மாவுக்கோ எந்த

விதமான பாதிப்பும் கிடையாது. ஒரு ஞானியானவர் நாளும் தன் வாழ்க்கையில் தான் உயிர் வாழ்வதற்காகப் பல காரியங்கள் கணமும் மேற்கொண்டாலும்,அவருடைய ஆத்மா எந்த விதமான ஆசாபாசங்களுக்கும் அடிமையாகாது. அது ஆன்மீக நெறியில் கட்டுப்பட்டு சதா இறை உண்மையை உணர்ந்து, அதில் அனுபவித்துக் கொண்டிருக்கும். ஆகவே உள்ளம் வேறு, ஆத்மா வேறு முன்னது அழிவது, துன்பத்திற்கு இடம் தருவது பின்னது அழிவற்றது உயர்வுக்கு வழிகாட்டுவது என்ற உண்மையை அறிந்தவனே இறைவனைக் காண்பவனாகக் கருதப்படுகிறான்.)

யதா பூதப்ருதக் பாவமேகஸ்தமனு
பச்யதி ।
தத ஏவ ச விஸ்தாரம் ப்ரஹ்ம
ஸம்பத்யதே ததா ॥ (30)

''தனித்தனியாகத் தனித்தன்மைகளுடன் தோன்றிடும் எல்லா உயிர்வாழிகளும் ஒரே பொருளிலிருந்து தோன்றியன;அந்த ஒரு பொருளிலிருந்தே அவை பெருகுகின்றன என்பதை ஒருவன் அறியும்போது அவன் ஞானத்தின் ஊற்றாகக் கருதப்படுகின்றான்.''

(இயற்கை ஜீவாத்மா, இவற்றின் செயல்பாடுகளினால் உருவ , நிற வேறுபாடுகளைக் கொண்ட மற்றைய உயிரினங்கள் தோன்றுகின்றன. இவையாவும் அவ் இறைவனின்மாயா சக்தியிலிருந்தே தோன்றுகின்றன.அந்தச் சக்தியினால்தான் உயிர் இனங்கள் தங்களைப் பெருக்கிக் கொள்கின்றன. வினைப்பயன்களை மேற்கொள்வதற்காகஇறைவன் உடல்களைப் பிறப்பித்துள்ளான். இது பிறவியின் ரகசியமாகும். இதனை அறிந்தவன் பிரம்மம் எனும் இறைவனாகின்றான்.)

ஆனாதித்வாந்நிர்குணத்வாத்
பரமாத்மாய மவ்யய : ।
சரீரஸ்தோ அபிகௌந்தேய ந
கரோதி ந விப்யதே ॥ (31)

''குந்தியின் புதல்வனே! ஆதி எனும் ஆரம்பமில்லாது, குணக்கேடுகள் இல்லாது இப்பரமாத்வா விளங்குவதால், அது இந்த உடம்பில் இருந்தாலும் அது செயலாற்றும் பற்றற்றும் திகழ்கின்றது.''

(எது தோன்றியதோ அது அழியும் . இயற்கையின் செயல்பாடுகளினால் உடல்கள் தோன்றுகின்றன. பிறகு அவை அந்த இயற்கையிலேயே மறைந்து விடுகின்றன. ஆகவே உடல் களுக்கு தோற்றமும், மறைவும் உண்டு . ஆனால்அந்த உடலில் இருக்கும் ஆத்மாவுக்கோ ஆதி எனும் ஆரம்பநிலை எதும் இல்லை. உடல் இறந்தபின், ஆத்மா மற்றொரு உடலுக்குள் சென்று விடுகிறது.ஆகவே அதற்கு மறைவோ,அழிவோ இல்லை.உயிருள்ள உடல்கள் சத்துவ, ரஜோ, தமோ குணங்கள் கொண்டு விளங்குவன இக்குணங்களை மாறி மாறி செயல்படுபவன. மாறும் குணங்களைக் கொண்ட உயிர்கள் அழியும் தன்மை கொண்டன. இதற்கு எதிராக விளங்குவது ஆத்மா. ஆத்மாவில் செயல் இல்லை. குடத்தில் நிறைந்துள்ள நீர் போன்றது. எந்தப் பொருள் அசையாது செயலற்று விளங்குகின்றதோ அதற்கு வினைப்பயன் இல்லை. அத்தகையது ஆத்மா.)

யதா ஸர்வகதம் ஸௌக்ஷ்ம்யா
தாகாசம் நோபலிப்யதே ।
ஸாவத்ராவஸ்திதோ தேஹோ
ததாத்மா நோபலிப்யதே ॥ (32)

''எங்கும் பரந்து விரிந்துள்ள ஆகாயமானது நுண்ணியதாக விளங்குவதால் அது களங்கமடைவதில்லை.அது போன்று உடலெங்கும் பரந்துள்ள ஆத்மாவுக்கும் களங்கமில்லை.''

(மண்,நீர், நெருப்பு,காற்று, ஆகாயம் எனும் ஐம்பூதங்களில் ஆகாயம் தவிர மற்றவை களங்கமடையக்கூடிய தன்மைபெற்றன. களங்கமடையக் கூடிய இவைநான்கும்

*ஆகாயத்தில் பரவியிருந்தாலும் -அடங்கியிருந்தாலும் இவற்றில் ஆகாயம் மேகங்களால் மூடப்பட்டிருந்தாலும், கறைபடிந்தது போல் இருந்தாலும், அம்மேகங்களுக்கும் ஆகாயத்திற்கும் எந்தவிதத்தொடர்பும் இல்லை. அதேபோன்று உடலானது மனம், ஐம்பொறிகள் ஆகியவற்ருல் மாசு அடைந்தாலும், அவ்வுடலில் பரந்துள்ள ஆத்மாவானது அவற்ருல் சிறிதும் அழுக்காவதில்லை.)*

**யதா ப்ரகாசயத்யேக: க்ருத்ஸ்னம்**
**லோகமிமம் ரவி : ।**
**க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ததா க்ருத்ஸ்னம்**
**ப்ரகாசயதி பாரத ॥ (33)**

*''சூரியன் ஒருவன் மட்டுமே எவ்வாறு உலகனைத்திற்கும் ஒளிதருகின்ருனோ அவ்வாறே, அர்ச்சுனா, அகிலமனைத்தையும் பரமாத்மா ஒருவனே ஒளிபெறச் செயகின்ருன்.''*

*(சூரியன் தன் ஒளிக்கிரணங்களால் இந்த உலகமனத்தையும் வெளிச்சத்தில் மூழ்கவைக்கின்ருன், அந்த வெளிச்சத்தின் கீழ் எல்லா உயிர்களும் வெவ்வேருன செயல்கள் மேற் கொள்கின்றன, அவற்றுள் நல்லன தீயன யாவுமே அடங்கும்.அந்த வெளிச்சத்திலே இயற்கையின் பலவிநோ தங்களை பார்க்க முடிகின்றது. ஆனால் நடந்திடும் செயல்கள் யாவும் சூரியனுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. அதேபோன்று பல்வேறு உயிர்கள் யாவற்றிலும் உள்ளிருந்து இயக்கிடும் பரமாத்மாவுக்கும்,அவ்வுயிர்கள் புரிந்திடும் செயல்களுக்கும் தொடர்பில்லை,அவ்வுலக உயிர்களுக்கு அறிவு, குணவிசேஷங்களை அளித்துள்ளார். அதனால் பெறப்படும் செயல்முறைகளுக்கும், அவற்றை வழங்கிய பரமாத்மாவுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. அவை அப்பரமாத்மாவை பாதிப்பதுமில்லை.)*

**க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞயோரேவ**
**மந்தரம் ஞான சக்ஷுஷா ।**
**பூதப்ரக்ருதிமோக்ஷம் ச யே**
**விதுர்யாந்தி தே பரம் ॥ (34)**

''இவ்வாறு க்ஷேத்ரம் க்ஷேத்ரக்ஞன் ஆகியவற்றிடையே நிலவும் வேற்றுமைகளை, ஆத்மாக்கள் இயற்கையிலிருந்து விடுதலைஅடைதல் ஆகியவற்றை தங்கள் ஞானக்கண்களால் காண்பவர்கள் அந்த பரமாத்மாவை சேருகின்றார்கள்.''

(உடலாகிய இயற்கைக்கும் ஜீவாத்மாவாகிய புருஷனுக்கும்-உலகமாகிய இயற்கைக்கும் பரமாத்மாவாகிய இறைவனுக்கும் உள்ள வேற்றுமைகளை கண்டறிபவன் முற்றும் உணர்ந்த ஞானியாகக் கருதப்படுகிறான். இந்த உடல் யாவும் இயற்கையின் மாயவிளையாட்டின் காரணமாகத் தோன்றின என்பதையும், பரமாத்மாவின் ஒரு பகுதியே இந்த ஆத்மா என்பதையும், ஆத்மாவின் விடுதலை முக்தி என்பதையும் அறிய வெறும் சாத்திர அறிவு போதாது. இதனை அறிய மனிதனுக்கு மேற்படி உண்மைகளை அறியும் ஞான அறிவு தேவை. அந்த அறிவே ஞானக்கண் . அக்கண்ணினால் மட்டுமே நாம் இறைவனை அறிய முடியும்; அனுபவித்திட முடியும். இது பற்றற்ற, பாசம் நீங்கிய ஆன்மீக நாட்டம் கொண்ட மனித உள்ளத்தினால் தான் முடியும்.)

(பதின்மூன்றாம் அத்தியாயம் முற்றும்.)

# பதினான்காம் அத்தியாயம்

## குணத்ரய விபாக யோகம்

### பகவான் கூறியது:

பரம் பூய: ப்ரவக்ஷ்யாமி
ஞானானாம் ஞானமுத்தமம் ।
யஜ்ஞாத்வா முனய: ஸர்வே
பராம் ஸித்திமிதோ கதா : ॥ (1)

*''ஞானிகள் எல்லோரும் எதனை அறிந்து கொண்டுஇந்த மண்ணுலக வாழ்க்கைக்குப் பிறகு மேன்மையான முக்தி எனும் பெருநிலையைப் பெற்றார்களோ அதனை, ஞானங்களிலேயே சிறந்தது எதுவோ அதனை , இறைவனைப் பற்றிக் கூறுவதுமாகிய அந்த பேரறிவை-ஞானத்தை(நான்) மறுபடியும் (உனக்கு) கூறுவேன்.''*

இறைவனைப்பற்றிய உண்மையைக் கூறும் ஞானமெனும் பேரறிவைப் பற்றிய விளக்கம் முன்பேயே பகவானால் கூறப்படுவிட்டது .எனினும் , அந்த பேரறிவினைப் பற்றி விளக்கம் வெறொரு கோணத்திலிருந்து இங்கு பகவானால் கூறப்படுகிறது.இயற்கைக்கும் ஆத்மாவுக்கும் உள்ள உறவு இந்த அத்தியாயத்தில் விளக்கப்படுகிறது. ரஜோ, தமோ, சத்துவ குண வேறுபாடுகளால் பல்வேறு உயிர்கள் பிறக்கின்றன. இந்த

*குணங்களின் செயல்பாடுகள் இனிவரும் செய்யுட்களில் விளக்கப்பட்டு உள்ளன. இத்தகு குணங்களைபற்றிய உண்மைகளை அறிந்திடும் ஞானிகள் இயற்கைவழி உடல்கள் ஆற்றிடும் செயல்களுக்கும், அவ்வுடலில் உள்ள ஆத்மாவுக்கும் சிறிதும் தொடர்பில்லை எனும் அடிப்படை ஆன்மீக உண்மையை நன்கு அறிந்தவர்கள். இந்த உண்மை ஞானமே அவர்களுக்குப் பிறவா பேரின்ப பெருநிலையை அளித்திட வல்லது.)*

**இதம் ஞானமுபாச்ரித்ய மம**
**ஸாதர்ம்யமாகதா: ।**
**ஸர்கேஅபி நோபஜாயந்தே**
**ப்ரளயே ந வ்யதந்தி ச ॥** (2)

*''இந்த உண்மை ஞானத்தை அறிந்து தெளிந்து பின்பற்றி என் இயல்பினைப் பெற்றவர்கள், மீண்டும் சிருஷ்டி காலத்தில் பிறப்பதில்லை, அழியும் காலத்தில் துன்பப்படுவதுமில்லை.''*

*(மரணத்திற்குப்பின்பு உடலிலிருந்து வெளிப்படும் ஆத்மா உடனடியாக அது பரமாத்மாவுடன் ஒன்றாகக் கலந்து விடுவதில்லை. பிறப்பு இறப்புகளுக்குப் பிறகு ஆத்மா இறை உண்மையை அறிந்த அளவு அது பக்குவமடைந்து உயர்ந்த ஞான முதிர்ச்சியைப் பெறுகிறது. வேகவைத்த விதை எவ்வாறு மீண்டும் முளைக்கும் திறனை இழக்கின்றதோ, கடலில் கலந்த உப்புப் பொம்மை எவ்வாறு தன் உருவத்தை இழந்து அக்கடலில் தன்னை ஒன்றாக்கிக் கொள்கின்றதோ அவ்வாறு ஞானமுதிர்ச்சி பெற்ற ஆத்மா பிறப்பு இறப்பு என்ற சுழற்சியிலிருந்து நிரந்தரமான விடுதலை பெறுகிறது.)*

**மம யோனிர் மஹத்ப்ரஹ்ம தஸ்மின்**
**கர்பம் ததாம்யஹம் ।**
**ஸம்பவ: ஸர்வபூதானாம் ததோ**
**பவதி பாரத ॥** (3)

*''பரதனின் மைந்தனே! எல்லா உயிர்களுக்கும் பிறப்பிடமாகிய மகாபிரம்மம் எனப்படும் பெரிய இயற்கையே*

எனது பிறப்பின் மூலமாகும்.அதில் எனது கருப்பத்தை (என் மூலவிதையை) வைத்துள்ளேன், அதிலிருந்துதான் உயிர்களெல்லாம் தோன்றுகின்றன.''

(இறைவனுடைய படைப்பில் கீழான இயற்கை (ஜடஇயற்கை) மேலான இயற்கை என்று இரண்டு வகை உண்டு. (இவை முன்பேயே பகவானால் ஏழாம் அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளது.) ஐம் பூதங்களும், மனம், புத்தி, அகங்காரம் என்பன கீழான இயற்கைக் கூறுகளாம். இதனின்று மேம் பட்டு, தன்னை உயர்த்திக் கொள்ளும் ஆத்மாவை உடைய ஜீவனே (உயர்சக்தி) இறைவனின் மேலான இயற்கையின் கூட்டுறவால் கீழான இயற்கை செயல்படுகிறது. இறைவனின் ஆணைக்குட்பட்டு ஜீவன் செயல்படுகின்முன். அதுபோது கீழான இயற்கையின்பால் கொண்ட மயக்கத்தால் ஜீவன் தன் ஆன்மிக மனம், அறிவு ஆகியவற்றைத் தன் கட்டுப்பாட்டிலிருந்து விடுவித்து விடுவதால் ஆத்ம உயர்வு தடைபடுகிறது, 'நான்', 'எனது' என்ற மயக்க உணர்வு விடுத்து, ஆத்மாவின் சிந்தனை உயர்ந்திட, உயர்ந்திட அது இறுதியில் அப்பரமாத்மாவுடன் இரண்டறக் கலந்து விடுகிறது. ஆகவே இறைவனாகிய மஹா பிரம்மத்திலிருந்தே எல்லா உயிர் வாழிகளும் தோன்றுகின்றன.)

ஸர்வ யோனிஷு கௌந்தேய
மூர்தய: ஸம்பவந்தி யா: ।
தாஸாம் ப்ரஹ்ம மஹத்யோனிரஹம்
பீஜப்ரத: பிதா ॥ (4)

''குந்தியின் புதல்வனே! எல்லாவகையான பிறவிகளிலும் பிறக்கின்ற பலவகையான உருவங்களைக் கொண்ட எல்லாவற்றிற்கும் தாயே அந்த ஜடசக்தியாகும். விதை விதைக்கும் தந்தை நானேயாவேன்.''

(தேவர், மக்கள், விலங்கு, ஊர்வன, பறப்பன, நீர்வாழ்வன, தாவரங்கள் எனப்படும் ஏழுவகையான பிறவிகளில் பலவகையான உருவங்களைக்கொண்ட உயிர் இனங்கள் பிறக்கின்றன. ஜீவாத்மாக்களாகிய இந்த உயிர் இனங்களுக்கு

*இயற்கையே தாய் ஆவாள். பரமாத்மாவாகிய இறைவனே விதைநடும் தந்தையாவன். இந்த ஜீவாத்மாவும், பரமாத்மாவும் பிரிக்கமுடியாத ஒன்றாகும்.)*

ஸத்த்வம் ரஜஸ்தம இதி குணா:
ப்ரக்ருதிஸம்பவா : ।
நிபத்னந்தி மஹாபாஹோ தேஹே
தேஹினமவ்யயம் ॥ (5)

*"அகன்ற தோளுடையவனே! இயற்கையிலிருந்து தோன்றிய சத்துவ, ரஜோ, தாமசம் என்ற முக்குணங்களே அழிவற்ற ஆத்மாவை அழியும் இந்த உடலோடு சேர்க்கின்றன."*

*(என்றும் அழிவில்லாத ஆத்மா, முக்குண பேதங்களால் வினையாற்றலினால், அவை கூட (ஆத்மா) கட்டுப்பட்டது போல் தோன்றுவது இயற்கையே. ஒரு தாம்புக் கயிற்றில் முறுக்கி இழைக்கப்பட்ட மூன்று கயிறுகள் போன்று சத்துவ, ரஜோ , தமோ குண பேதங்கள் இயற்கையோடு பிணைக்கப்பட்டுள்ளன. உலகத்தில் காணப்படும் எல்லா வண்ணங்களுக்கும் எவ்வாறு சிவப்பு , நீலம் , மஞ்சள் எனும் வண்ணங்கள் அடிப்படை வண்ணங்களாக அமைகின்றனவோ அவ்வாறு உலக உயிர்கள் யாவும் இந்த முக்குணங்களின் மீதே சார்ந்துள்ளன.)*

தத்ர ஸத்வம் நிர்மலத்வாத்
ப்ரகாசகமனாமயம் ।
ஸுகஸங்கேன பத்னாதி ஞான
ஸங்கேன சானக ॥ (6)

*"பாவமற்றவனே! இவற்றுள் (இந்த முக்குணங்கள்) சத்துவ குணம் அழுக்கில்லாததால் அது ஒளியுடன் திகழ்கின்றது. கேடுவிளைவிக்காது. இது (ஆத்மாவை) சுகத்தோடும், ஞானத்தோடும் பந்தப்படுத்திப் பிணிக்கிறது."*

*(அறிவையும், ஆற்றலையும் உருவாக்கும் சக்தி கொண்டது சத்துவ குணம். மேலும் இதனை ஒரு கண்ணாடியோடு*

ஒப்பிடலாம். எவ்வாறு ஒரு கண்ணாடி அழுக்குப்படியாது, வெளியே உள்ள வெளிச்சத்தை தடங்கலின்றி உள்ளே பாய்ச்சுகிறதோ ,உள்ளே உள்ள பொருட்களை எவ்வித மாறுபாடின்றி வெளியே தெள்ளத் தெளிவாகக் காட்டுகின்றதோ, அவ்வாறே ஆத்ம ஒளியை சத்துவ குணம் காட்டவல்லது. சத்துவ குணத்தில் புறப்பொருள் பற்றிய ஞானம் பெறப்படும்போது, அந்த ஞானத்தை அடைந்த காரணத்தால் அவ் ஞானியிடம் பறப் பொருள் மீது ஒரு நாட்டத்தையும். அதனால் அனுபவிப்பதற்குரிய சுகத்தையும் ஏற்படுத்திவிடுவதால் 'நான்', 'எனது' எனும் அகங்காரத்தையும் உடன் மனிதனுள் உண்டாக்கிவிடுகிறது. இந்த மமதை அற்ற ஞானமேம்பாடும், தெளிந்த மெய்யுணர்வே நிலையான மோட்சத்திற்கு வழிவகுக்கும். அதற்கு ஒரு தடையாக இந்த சத்துவகுணம் விளங்குகிறது. ஆகவே மனிதனை மேம்படுத்தும் இந்தக்குணம்.அதே நேரத்து பொன்விலங்காக அம் மனிதனை சுகத்திற்கும் அறிவிற்கும் அடிமைப்படுத்தி விடுகிறது. )

**ரஜோ ராகாத்மகம் வித்தி**
**த்ருஷ்ணாஸங்கஸமுத்பவம் ।**
**தன்னிபத்னாதி கௌந்தேய**
**கர்மஸங்கேன தேஹினம் ॥ (7)**

''குந்தியின் புதல்வனே! ரஜோ குணமானது ஆசையை உண்டாக்க வல்லது. மேலும் வேட்கையையும் தோற்றுவிக்கும் ஆற்றலுடையது என்பதை அறிவாயாக ! இது வினைப்பற்றினால் உடலில் உள்ள ஆத்மாவை பெரிதும் பிணிக்கிறது.''

(இந்த ரஜோகுணம் தன்னி டம் இல்லாது வெளியில் உள்ள பொருள்களின் மீது, அவற்றை அடையவேண்டும் என்ற தீராத ஒரு வெறியினை- வேட்கையினை மனிதனுள் தோற்றுவிக்கும். மேலும் தன்னிடம் உள்ள பொருள்களின் மீது அதிகமான பற்றுதலையும் உண்டாக்கும் திறன் கொண்டது. தன்னிடம் இல்லாததைப் பெறவேண்டும் என்பதற்காக, தன்னிடம் உள்ள

பொருள்களைத் தக்கவைத்துக் கொள்வதற்காக மனிதன் தொடர்ந்து செயல் புரிகின்முன். இதனால் வினைப்பற்று தொடர்ந்து நடக்கின்றது.அதனால் ஆத்மா ஒரு கட்டுக்குள் பிணிக்கப்படுகின்றது. இன்றைய சாதாரண மனிதனிடம் இந்த ரஜோகுணம் பெரிதும் பரந்து உள்ளது.இந்த ரஜோ குண சம்பந்தத்தால்தான் மனைவி,மக்கள்,வீடு,உற்முர், உறவினர் எனும் உறவுகளுக்காக மனிதன் நாளும் வினையாற்றுகின்முன்.)

தமஸ்த்வக்ஞானஜம் வித்தி
மோஹனம் ஸர்வதேஹினாம் ।
ப்ரமாதாலஸ்யநித்ராபிஸ்தன்னி
பத்னாதி பாரத ॥ (8)

''பரதகுலத்தோன்றலே! தமோ குணமானது அறியாமையால் தோன்றுவது,உலக உயிர்களை எல்லாம் மயக்கவல்லது (இது மனிதனை) சோம்பல், அசட்டை, தூக்கம் போன்றவற்முல் பணித்துவிடுகிறது.''

(ரஜோகுணம் சத்துவ குணத்தைக் கெடுக்கும் இயல்புடையது, இந்த தமோ குணமோ, மற்றைய இரண்டு குணங்களையும் கெடுக்கும் ஆற்றலுடையது. ஒரு பெருளைப் பற்றிய தவமுன செய்தியைத்தரும் அறியாமை எனும் உணர்வில் தோன்றுவது தமோகுணம். இக்குணம் உயிர்களுக்கு மாயமான மயக்கத்தைத் தோற்றுவிக்கும் இயல்புடையது. அதனால் அறிவை மழுங்க வைத்திடும் ஆற்றலுடையது. இந்த மயக்க அறிவின் பயனால் மனிதன் எதனையும் உடனடியாக செய்யாமல்,அவ்வாறு செய்தால் தவமுகசெயல்படவைக்கும் அசட்டைத்தனத்தையும்,எதையும் செய்யாமல் வீணே காலத்தை கழித்திடும் சோம்பல் குணத்தையும்,வினையாற்ற முடியாமல் கடமையை மறக்கச் செய்யும் தூக்கத்தையும் தந்திடும்.)

ஸத்வம் ஸுகே ஸஞ்ஜயதி ரஜ:
கர்மணி பாரத ।

ஞானமாவ்ருத்ய து தம: ப்ரமாதே
ஸஞ்ஜயத்யுத ॥ (9)

*"சத்துவ குணத்தின் இயல்பு சுகத்தோடு இணைப்பதாகும். ரஜோ குணத்தின் இயல்பு தர்மத்தோடு இணைப்பதாகும்.தமோ குணத்தின் இயல்பு அறிவை மறைத்து சலனமின்மையை வளர்ப்பதாகும்."*

*(சத்துவ குணம் ஆத்மாவை இன்பமாக வைத்துக் கொள்வதையே தனது அடிப்படை இயல்பாக கொண்டு விளங்கும். ஆகவே எதனிடத்தில், எதனால், எங்குத்தனக்கு இன்பம் கிடைத்திடும் என்று துடிப்பவனிடத்து சத்துவ குணம் மேலோங்கித்திகழும். ரஜோ குணம் கொண்டவன் தனக்கு இடப்பட்ட தான் விரும்புகின்ற செயல்களைத் தொடர்ந்து மேற்கொள்கிறுன்.அதாவது வினையாற்றுவதையே, அதனையே தனக்கு இடப்பட்ட தர்மமாகக் கொண்டு கடமையாற்றுபவனிடத்து ரஜோ குணம் பரந்திருக்கும்.ஆனால் தமோ குணமானது அதனைக் கொண்டவனை ஒரு பொருளைப் பற்றிய உண்மையை உணராதவாறு செய்து விடுகின்றது. அதனால் தவறுன ஒரு முடிவுக்கு இட்டுச் செல்லும். இதன் விளைவாக எவையெல்லாம் செய்யக்கூடாதோ, எவையெல்லாம் தவிர்க்கப்பட வேண்டுமோ அவற்றையெல்லாம் செய்யதூண்டும்.மேலும் இதனால் காலம் உழைப்பு, பொருள் ஆகியவன வீணுகும்.)*

ரஜஸ்தமஸ் சாபிபூய ஸத்வம்
பவதி பாரத ।
ரஜ: ஸத்வம் தமஸ்சைவ தம:
ஸத்வம் ரஜஸ்ததா ॥ (10)

*"அர்ச்சுனா! சத்துவ குணம் ரஜோ குணத்தையும் தமோ குணத்தையும் தன் கீழே அடக்கித் தான் மேலோங்குகிறது.ரஜோ குணம் சத்துவ ,தமோ குணங்களைத் தன்னுள் அடக்கித் தான்*

மேலெழுகின்றது. அதே போன்று தமோ குணம் மற்றைய இரண்டு குணங்களை தன் கீழே அடக்கி, தான் மெலெழுகின்றது.''

(ஆத்மாவின் வினைப்பயன் காரணமாகவும் உண்ணும் உணவின் காரணமாகவும் உடலில் ஏற்படும் செயல்பாடுகள் காரணமாகவும் மனிதனிடம் சத்துவ, ரஜோ, தமோ குணங்கள் மாறி மாறி ஒவ்வொரு சமயத்தும் ஒன்றை ஒன்று விஞ்சி அமைகின்றன.ஆனால் மனிதனை மீறி முக்குணங்கள் அவனிடம் ஆதிக்கம் செய்வதில்லை. மனிதன் மனது வைத்தால் உயர் நிலைக்கு அழைத்துச் செல்லும் சத்துவ குணத்தை தன்னுள் பயற்சி மூலம், உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்துவதன் மூலம் வளர்த்துக் கொள்ளலாம்.)

ஸர்வத்வாரேஷு தேஹே அஸ்மின்
ப்ரகாச உபஜாயதே ।
ஞானம் யதா ததா வித்யாத்
விவ்ருத்தம் ஸத்வமித்யுத ॥ (11)

''இந்த உடலில் உள்ள ஐம்புலன்கள் எல்லாவற்றிலும் எப்போது ஞான ஒளி வீசுகின்றதோ, அப்போது அவ்வுடலில் சத்துவ குணங்கள் மேலோங்கி உள்ளன என்பதை அறிந்து கொள்ளலாம்.''

(ஒரு நல்ல இசையை கேட்கும் நிலையில் ஒரு அழகான இயற்கைக் காட்சியினைக் காணும் நிலையில் ஒரு மலரின் நறு மணத்தை சுவாசிக்கும் நிலையில், அமைதியை-அன்பினை உருவாக்கும் நல்ல சொற்களை பயன்படுத்தும் நிலையில் தன் தோற்றத்தால் ஒரு ஆன்மீக -மனிதாபிமான சூழ்நிலையை தோற்றுவிக்கும் நிலையில் எப்போது அவனிடம் சத்துவ குணம் மேலோங்கி உள்ளது என்று பொருள்.பொதுவாக மற்ற உயிர்களின் இன்பத்தினை,துன்பத்தினை தனது உணர்வாக அனுபவிக்கின்றானோ அவன் சத்துவகுணத்தவனாக

*அழைக்கப்பெறுகின்றான்.)*

**லோப: ப்ரவ்ருத்திராரமம்ப:**
**கர்மணாமசம: ஸ்ப்ருஹா ।**
**ரஜஸ்யேதானி ஜாயந்தே**
**விவ்ருத்தே பரதர்ஷப ॥ (12)**

*''பரத குலத்தில் சிறந்தவனே! பேராசை, ஏக்கம், முயற்சி, அமைதியின்மை , வினைப்பற்று ஆகிய இயல்புகள் ஒருவனிடம் ரஜோ குணம் நிரம்பி இருக்கும் போது திகழ்வனவாகும்.''*

*(இவ்இயல்புகள் ஒரு சராசரி மனிதனிடம் அமைவனவாகும். மனைவி, மக்கள், சுற்றம் என்ற உறவுகளின் நடுவில் வாழும் மனிதன் நாளும் இவ்வுணர்வுகளால் தாக்கப்படுவது இயற்கையே. 'தான்' 'தனது' என்ற எண்ணம் பேராசைக்கு வித்திடுகின்றது. உலகாயுத விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ள தன்ஐம்புலன்களின் வழியாக மனதை, அறிவை செயல்படுத்துகிறான் மனிதன். இது போது அடைய வேண்டும் என்ற மன ஏக்கம் அவனை நாளும் சூழ்ந்து கொள்கின்றது .பிறகு நினைத்ததை, பார்த்ததை அடைய தொடர்ந்து பலசெயல்களை மேற்கொள்கிறான். அது கிடைக்கும்வரை தன் முயற்சியை மேற்கொள்கிறான்.இதனால் மனயமைதி இழக்கின்றான். இழந்த அமைதியைப் பெற்றிட தொடர்ந்து செயல் புரிவதால் ஐம்புலன் இன்பங்களினால் வினைப்பற்று அவனிடம் மிகுகிறது. விளைவு? மனிதன் உயர வழி தெரியாது நாளும் பிரச்னைகளால் சூழ்ந்துவிடுகிறான். இதுதான் ரஜோ குணத்தின் இலக்கு.)*

**அப்ரகாசோ அப்ரவ்ருத்திஸ்ச**
**ப்ரமாதோ மோஹ ஏவ ச ।**
**தமஸ்யேதான் ஜாயந்தே**
**விவ்ருத்தே குருநந்தன் ॥ (13)**

''குருவம்சத்து வீரனே! அறிவின்மை, முயற்சியின்மை, விழிப்பின்மை, மதிமயக்கம் இவையாவும் மனிதனிடம் தமோ குணம் தலையெடுக்கும் போது அமைகின்றன.''

(குழம்பிடும் அறிவு ஒருமனிதனை அழித்திடும் ஆற்றல் கொணடது. மனதினில் குழப்பம் எனும் இருள் சூழ்ந்திடும் போது அறிவு அழிவுக்கு வித்திடுகின்றது. இதனால் எந்தசெயலிலும் சந்தேகம், பகைமை, சோம்பல் போன்ற உணர்வுகள் உடன் பிறந்திடும் .மதிமயங்கிடும் நிலையில் ஆபத்தான வினைப்பயன்களே விளைவாக அமையும்.)

யதா ஸத்வே ப்ரவ்ருத்தே து
ப்ரலயம் யாதி தேஹப்ருத் ।
ததோத்தமவிதாம் லோ கானமலான்
ப்ரதிபத்யதே ॥ (14)

''உடலெடுத்த ஒருவன் தன்னிடம் சத்துவ குண இயல்புகள் மேலோங்கியிருக்கும் சமயத்தில் தான் இறப்பானாயின், அறியாமை அழியப்பெற்று ஞானம் நிரம்பப்பெற்ற ஞானிகள் உறையும் தூய்மையான உயர்ந்த உலகத்தைச் சென்றடைகிறான்.''

(சத்துவ குணங்கள் ஒருவனைப் பண்படுத்தி, முக்தி நெறியினை அடைந்திட வழிவகுக்கும் ஆற்றலுடையன. ஆகவே, சத்துவ குணங்கள் நிறைந்த ஒருவன் இறந்திட நேரின், உடனடியாக அவனுக்குப் பேரின்ப பெருநிலை, முக்தி நிலை கிடைக்காவிட்டாலும், அடுத்து வரும் பிறவிகளில் அவனை ஒரு நிலைக்கு உயர்த்துகிறது. ஆகவே சத்துவ குணம் ஒருவனிடம் இறைச்சிந்தனையை வளர்க்கிறது. அந்தச் சிந்தனையுடன் ஒருவன் மரணமடைவானாயின், அவனுடைய ஆத்மா புடம்போட்ட பொன்னாக மிளிரும் தன்மை பெறு கின்றது. அதனால்தான் இந்நிலையை அடைய அதற்குரிய சத்துவ குணஇயல்புகள் நம்மிடம் விளங்கிட நல்ல சிந்தனை பழக்க வழக்கங்கள் நம்முள் பயிற்சி மூலம் வளர்த்துக்

*கொள்ளுதல் அவசியமாகும்.)*

ரஜஸி ப்ரலயம் கத்வா
கர்மஸங்கிஷு ஜாயதே ।
ததா ப்ரவீனஸ்தமஸி
மூடயோனிஷு ஜாயதே ॥ (15)

*''ரஜோ குண இயல்புகளுடன் விளங்கும் சமயத்தில் ஒருவன் மரணமடையும் போது அவன் வினைப்பற்றுக்களிடையே பிறக்கின்றான். அதுபோன்றே தமோ குண இயல்புகள் மேலோங்கி விளங்கிடும்போது, மரணம் அடையும் போது அந்த ஜீவனானவன் அறிவற்றவர்களின் இனத்தில் பிறக்கின்றான்.''*

*(சத்துவ குணங்களோடு இறக்கும் போது அவன் மனவமைதியுடன் இம்மண்ணை விட்டுச் செல்கின்றான். ஆனால் ரஜோகுண இயல்புடையவன் ஏமாற்றங்களுடன் இறக்கின்றான். இவன் இன்றைய சராசரி மனிதனை விளக்குகின்றான். நாளும் பிரச்னைகளால் சூழப்பட்டுள்ள மனிதன் 'தான்' 'தனது' என்ற உணர்வால் வாழ்க்கையில் கனவுகள் பல காணுகின்றான். அந்தக் கனவுகளைச் செயலாக்க நாளும் வினையாற்றிக் கொண்டிருப்பதால், நினைத்ததைப் பெற முடியாமல் அமைதியின்றி ஏக்கத்துடன் இறக்கின்றான். ஆசையால், உயிர் போனபின்பும் அவனுடைய ஆத்மா அந்த வினைத் தொடர்பினால் அடுத்தப்பிறவியில் வினைப்பற்று க்களைக் கொண்ட ஒரு சூழ்நிலையில் , ஒரு சமுதாயத்தில் பிறந்து, தொடர்ந்து செயல்புரியும் நிலைமையைப் பெறுகின்றான். தமோ குணத்தவனோ முன்னர்கூறியபடி சோம்பல், தூக்கம், அறிவற்றசெயல் என்ற வினைகளை மேற்கொண்டிருப்பதால், அவன் மீண்டும் அறிவற்ற, சிந்தனையற்ற இனத்தில் மீண்டும் மனிதனாகவே பிறந்து துன்பத்தினையே இதன் வினைப்பயனாகக் கொள்கின்றான்.)*

கர்மண: ஸுக்ருதஸ்யாஹு:
ஸாத்விகம் நிர்மலம் பலம் ।
ரஜஸஸ்து பலம் து:கமக்ஞானம்
தமஸ: பலம் ॥ (16)

''சத்துவகுண செயல்பாடுகளினால் நல்ல செயல்களும், தூய்மையும் பயன்களாக அமைகின்றன. அதேபோன்று ரஜோகுணசெயல்பாட்டினால் துன்பமும், தமோ குண செயல்பாட்டினால் அறியாமையுமே பயன்களாக விளங்கும்.''

(பொதுவாக மனிதன் நல்ல குணங்களோடு திகழும்போது அவனுடைய சிந்தனை, செயல்கள் யாவும் பிறருக்குத் துன்பம் தராது. தன்னை உயர்த்திக் கொள்ளும் ஒரு சூழ்நிலையே அவனைச் சுற்றி விளங்கும். அதுபோது அவனது மனம், மொழி மெய்யாவும் தூய்மையாகவே திகழும். அத்தகு உயிரின் ஆத்மா, அடுத்தப்பிறவியில் சாதாரண மனிதனைவிட மேலான மகான்களின் நடுவில் பிறந்திடும் வாய்ப்பைப் பெறுகிறது. அதுபோது 'முக்தி நிலை' அவனுக்கு எளிதான ஒரு இலக்காக அமைந்துவிடுகிறது. அடுத்தது ரஜோகுணம். இக்குண இயல்புகளினால் ஒருவன் இவ்வுலக இன்பங்களில் முழுகுவதையே தனது அன்றாட ஆசையாக வைத்துக்கொண்டுள்ளான்.

அந்த ஆசைகளை நிறைவேற்றிக்கொள்ள தன்னைப் பல வாறு உடலாலும் உள்ளத்தாலும், அறிவாலும் வருத்திக் கொள்கிறான். உதாரணமாக சொந்தவீடு கட்டிக்கொள்ள வேண்டும் என்ற ஆசையில் வீட்டுமனை வாங்குவதுமுதல், 'புதுமனை புகுவிழா' கொண்டாடும்வரை அவன் மேற்கொள்ளும் முயற்சிகளும் அதனால் அவன் எதிர்கொள்ளும் உடல் மற்றும் மன உளைச்சல்களுக்கு அளவேது? 'சொந்தவீடு' என்ற ஒரு நினைப்பும், அதனால் பெறப்படும் சுகமும் இனிமையானதுதான். அந்த இனிமையைப் பெற அவன்படும் துன்பம் எத்தகையது ? அது அவனை மறுபடியும் மறுபடியும் துன்பத்திற்கே இட்டுச் செல்லும் வலிமை பெற்று விடுகிறது.

இந்த ஒரு சூழ்நிலையிலிருந்து அவன் விடுபடவேண்டுமென்றால் அவன் பற்றற்ற மனநிலையை பெற்றுத்தரும் சத்துவகுண இயல்புகளைத் தன்னுள் வளர்த்துக்கொள்ள தகுந்த மன பயிற்சியை மேற்கொள்ள வேண்டும்.அடுத்து வரும் தமோ குணமோ ஜடவாழ்க்கையே ஒருவனது இறுதிப் புகலிடம் என்பது போன்று அவனுள் முயற்சியின்மை, மனக்குழப்பம், தவறுகளைத் தொடர்ந்து செய்யும் மனப்போக்கு ஆகியவற்றை வளர்த்து, மனிதனை ஒரு மிருக நிலைக்கு இட்டுச் சென்றுவிடுகிறது. ஆசையால், தகுந்தபயிற்சி மூலம் தமோ குணத்தவன் படிப்படியாக ரஜோ, சத்துவ குண இயல்புகளை வளர்த்துக் கொள்ளுதல் அவசியம்.)

ஸத்வாத்ஸஞ் ஜாயதே ஞானம்
ரஜஸோ லோப ஏவ ச ।
ப்ரமாதமோஹெள தமஸோ
பவதோ அக்ஞானமேவ ச ॥ (17)

''சத்துவ குணத்திலிருந்து ஞானமும்,ரஜோ குணத்திலிருந்து பேராசையும் தமோ குணத்திலிருந்து அறியாமை அலட்சியம், மனக்குழப்பம் ஆகியவையும் பிறக்கின்றன.''

(நல்ல குணங்கள் மனிதனிடமிருந்து அவை மேலும் வளரும்போது,அவன் சமுகத்தில் பேரறிவு மிக்க மகானாகத் திகழ்கின்றான்.உண்மையான சமயத்தலைவர்களை இவ்வரிசையில் சேர்க்கலாம் அடுத்துவரும் ரஜோ குணத்தவர்கள் உலகாயுத ஆசைகளின் மீது பற்றுவைத்து, அதனை அடைய தனக்குத் தகுதி இருக்கிறதா இல்லையா என்பதையும் மறந்து பேராசைக்காரார்களாக மாறி, ஏமாற்றத்தையும் துன்பத்தையும் தங்கள் நிரந்தர சொத்தாக வைத்துக் கொள்கிறார்கள். தமோகுணத்தவர்களோ பிறவியின் நோக்கம் தெரியாது , வாழ்க்கையின் இலக்கு புரியாது 'கொண்டதே கோலம் கண்டதே காட்சி ' என்று அறியாமையின் மொத்த உருவமாக-குழப்பத்தின் பிறப்பிடமாகத் திகழ்கிறார்கள்.)

**ஊர்த்வம் கசசந்தி ஸத்வஸ்தா**
**மத்யே திஷ்டந்தி ராஜஸா : ।**
**ஜகன்யகுணவ்ருத்திஸ்தா அதோ**
**கச்சந்தி தாமஸா : ॥ (18)**

*''சத்துவ குண இயல்பு உடையவர்கள் மேலேறும் தன்மை பெறுகின்றனர். ரஜோகுணத்தவர்கள் இடையிலேயே இருக்கும் நிலையைப் பெறுகின்றனர். தமோ குணத்தவர்களோ என்றும் கீழ்நோக்கிச் செல்லும் இயல்பைப் பெறுகின்றனர்.''*

*(நல்ல பண்புள்ளவர்கள் மனித நிலையிலிருந்து மேலும் 'மேன்மையான நிலைக்குச்செல்லும் தகுதிபெறுகின்றனர். ரஜோ குணத்தவர்கள் நாளும் தம் தேவைகளுக்காக உழைத்து உடல்மேன் மைக்காக தங்கள் வாழ்நாளை செலவிடுகின்றனர். ஆத்ம சிந்தனை -இறை நினைப்பு இன்றி பற்றுள்ள ஆசையுள்ள எண்ணங்களை நாளும் வளர்த்துக் கொள்வதால் அவர்கள் மேலான நிலைக்கு போக முடியாமல்,பிறப்பு -இறப்பு என்று வாழ்க்கைச் சக்கரத்தில் அகப்பட்டு ஒரு நடுவுபட்ட நிலையிலேயே இருந்து விடுகின்றனர்.தமோ குணத்தவர்கள் எவ்வித வாழ்க்கைக்குறிக்கோள் இன்றி உண்டு,உறங்கிடும் வாழ்க்கையினையே மேற்கொள்வதால் மேலும் ஒரு இழிவான பிறவி எடுக்கவே தங்களை வைத்துக் கொள்வதால் அவர்கள் நாளுக்குநாள் ஒரு கீழான நிலைக்கே தள்ளப்படுகின்றனர்.'')*

நான்யம் குணேப்ய: காதாரம்
யதா த்ரஷ்டானுபச்யதி ।
குணேப்யஸ்ச பரம் வேத்தி
மத்பாவம் ஸோ அதிகச்சதி ॥ (19)

*''ஜீவாத்மா, எப்பொழுது இந்த மூன்று குணங்களுக்கு வேறான வேறொன்றையோ, வேறெவரையோ வினையாற்ற க்கூடியத் தலைவனாக காண்பதில்லையோ(அதே நேரத்து) இந்த மூன்று குணங்களுக்கு அப்பாற் பட்டவனாக-மேலாக அந்த பரமாத்மாவை காண்கின்றானோ, அன்று அந்த ஆத்மா என்னை*

அறிகின்றான்.''

(உலகில் நடைபெறும் எல்லா வினைகளுக்கும் இந்த முக்குணங்களே முக்கிய காரணமாகும். இவையாவும் இயற்கையின்மறு உருவங்களே. ஐம்புலன் இன்பங்களை மனித மனம் நாட இவையே காரணமாக அமைகின்றன. ஆகவே எல்லா வினைகளுக்கும் செயல்களுக்கும் இந்த சத்துவ, ரஜோ, தமோ ஆகிய மூன்று குணங்களே வினைபுரியும் கர்த்தாக்களாகும். சத்துவ குணத்தவன் இந்த உண்மையை நன்கு அறிந்தவனாவான். அதே நேரத்து பரமாத்மாவான இறைவன் குணங்களால் தாக்கப்படாதவன் அவற்றிக்கு அப்பாற்பட்டவன், வினைகளின் கர்த்தாவாக இல்லாது அவற்றின் காட்சியாக இருப்பவன். இந்த இரு உண்மைகளை உணர்ந்தவனே இறைவனை அறிந்து அவனை அடையும் ஒரு நிலை பெறுகின்றான்.)

குணானேதானதீத்ய த்ரீன் தேஹீ
தேஹஸமுத்பவான் ।
ஜனம் ம்ருத்யு ஜரா துக்கைர்வி
முக்தோ அம்ருதம்ச்னுதே ॥ (20)

''உடலை உருவாக்கும் இந்த மூன்று குணங்களையும் கடந்து, பிறப்பு இறப்பு கீழ்த்தன்மை ஆகிய துன்பங்களிலிருந்து விடுதலை அடைந்த ஜீவாத்மா மரணமில்லாத பெருவாழ்வினைப் பெறுகின்றான்.''

(பிறவியாவும் வினைப்பயன்களால் தோன்றுவனவாகும். அந்த வினைப்பயன்களும் முக்குண செயல்பாடுகளினால் தான் விளைகின்றன. மரணம் உடலுக்கே அன்றி ஆத்மாவுக்கு அல்ல என்பது முன்பேயே விளக்கப்பட்டுள்ளது. ஆத்மாவின் உயர்வே உயிருக்கு மேன்மை அளிக்கின்றது. மனிதனிடம் சத்துவ குணங்கள் இருந்தாலும் அவன் மற்றைய இரண்டு குணங்களான ரஜோ, தமோ குண வலிமையினால் அவனால் ஆத்ம சிந்தனையில் முழுவதுமாக மூழ்க முடியவில்லை. ஆகவே தன் சத்துவ குண இயல்புகளிலிருந்து விடுபட்டு, ஆத்ம

*விடுதலைக்காக அவன் முயற்சித்தல் வேண்டும். காலில் குத்திய முள்ளை மற்றொரு முள்ளால் எடுத்துவிட்டு , பிறகு அந்த இரண்டு முட்களையும் தூர எறிவது போன்று, சத்துவ குணத்தில் மற்றைய குணங்களை அழித்து, பின்னர் மூன்றுகுண இயல்புகளையும் கடந்து முக்திநிலைபெற முயற்சித்தல் ஜீவாத்மாவின் கடமையாகும். அது போதுதான் பிறப்பு இறப்பு அற்ற பேரின்ப பெருவாழ்வினைப்பெற முடியும்.)*

## அர்ச்சுனன் சொன்னது:

**கைர்லிங்கைஸத்ரின் குணனே**
**தானதீதோ பவதி பர்போ ।**
**கிமாசார : கதம் சைதான் ஸ்த்ரீன்**
**குணனிவர்ததே ॥** (21)

*''பரம் பொருளே ! இந்த மூன்று குணங்களையும் (சத்துவ , ரஜோ ,தமோ) கடந்து விளங்கும் ஜீவனானவன் எவ்விதமான அடையாளங்களுடன் கூடி இருப்பான்? அவனுடைய இயல்புகள் எவ்வாறு இருக்கும்? இந்த முக்குணங்களை அவன் எவ்வாறு கடக்கிறான்?''*

*(இந்த மூன்று குணங்களைக் கடந்து இருப்பவனை எவ்வாறு அறியமுடியும், அவ்வாறு கடந்து விட்டவனின் வாழ்க்கை நிலை எவ்வாறு அமையும், அந்த மூன்று குணங்களைக் கடந்திட உதவும் உபாயம் என்ன என்பதையும் அர்ச்சுனன் இச்சுலோகத்தில் கேட்கிறான்.)*

## பகவான் சொன்னது:

ப்ரகாசம் ச ப்ரவ்ருத்திம் ச
மோஹமேவ ச பாண்டவ ।
ந த்வேஷ்டி ஸம்ப்ரவ்ருத்தானி ந
நிவ்ருத்தானி காங்க்ஷதி ॥ (22)

''பாண்டவா! சத்துவ குணத்தின் இயல்பான ஒளி, ரஜோ, குணத்தின் இயல்பான செயல், தமோ குணத்தின் இயல்பான மயக்கம் ஆகியவற்றை ஊழ்வினையால் ஒருவன் தான் பெறும்போது அவற்றை அவன் வெறுப்பதில்லை. அவ் இயல்புகள் அவனைவிட்டு விலகும் போது, அவற்றிற்காக அவன் ஆசை கொண்டு ஏங்குவதில்லை.

(ஜீவனானவன் மூன்று குணங்களைக் கொண்டே விளங்குகின்றான். சத்துவம் முதலிய மூன்று குணங்களைக் கடந்தவன் பற்றிய விளக்கம் இங்குக் கூறப்படுகிறது. சத்துவ குண இயல்புடைய வன் ஞானம்,நேர்மை , நல்லொழுக்கம் போன்ற குணங்களால் அடிமைப்பட்டிருக்கும்போது அவற்றை மேலும் வளர்த்துகொள்ளவே நாளும் விழைவான். ஏனெனில் அக்குணங்களோடு அவன் கணமும் தன்னை ஈடுபடுத்திக் கொண்டு,அவற்றையே நாடுகின்றான். ஆனால் இக்குணத்தைக் கடந்தவனோ அதன் பிறகு அக்குண இயல்புகளுக்காக விருப்பம் கொள்வதில்லை. அதற்காக ஏங்குவது மில்லை.அதேபோன்று ரஜோ குணத்தவன், அக்குண இயல் பினால் அடிமைப்பட்டிருக்கும் போது அவன் தொடர்ந்து செயல்புரிந்து கொண்டேஇரு ப்பானன் . இச்செயல்களை 'தான்', 'தனது' என்ற பற்றின் காரணத்தால் வெறுப்பு, விருப்புணர்வுகளின் பின்னணியில் மேற்கொண்டிருப்பான். ஆனால் முக்குணங்களைக் கடந்து விளங்கிடும் போது அவனுள் ரஜோகுணம் தோன்றினால், அவன் முன் போலன்றி, தன் காரியங்களை எவ்விதமான விருப்பு, வெறுப்பு அற்று மேற்கொள்வான். தமோ குண த்தவன் நல்லனவற்றிற்கு எதிரான சோம்பல், சூது, வஞ்சனை ,கோபம் , பொறாமை எனும் உணர்வுகளுடன் செயல்பட்டு, அமைதியின்றிகுழப்பத்துடன் விளங்கிடுவான்.அத்தகையவன் முக்குணங்களைக் கடந்து விளங்கிடும் போது அவனுள் தமோ குண இயல்புகள் ஒரு சிலநேரங்களில்தேன்றினாலும், அவை அவனைவிட்டு, உடனடியாக வந்த சுவடு தெரியாமல் விலகிவிடும்.)

உதாஸீனவதாஸீனோ குணை
யோநவிதசால்யதே ।
குண வர்கந்த இத்யேவ யோ
அவதிஷ்டதி நேங்கதே ॥ (23)

*"யார் எதிலும் பற்றற்று வெறும் காட்சியாக இருந்து, குணங்களால் சலனப்படுவதில்லையோ, குணங்களால் தான்வினைகள் ஆற்றப்படுகின்றன என்று தன் ஆத்மாவின் கண் நிலைத்து யார் இருக்கிறார்களோ..."*

ஸமது: கஸுக: ஸ்வஸ்த:
ஸ்மலோஷ்டாச் மகாஞ்சன: ।
துல்ய ப்ரியாப்ரியோ தீரஸ்
துல்ய நிந்தாத்ம ஸம்ஸ்துதி: ॥ (24)

*"யார் இன்பத்தையும் துன்பத்தையும் சமமாகக் கருதுகிறானோ, தன் ஆத்மாவில் நிலைத்து நிற்கிறானோ, மண்ணையும், கல்லையும், பொன்னையும் சமமாகக் காண்கிறானோ, யார் இனியவற்றையும் இன்னாதனவற்றையும் ஒன்றாக உணர்கின்றானோ, யார் பேரறிஞனோ, யார் புகழ்ச்சியையும் இகழ்ச்சியையும் ஒன்றாக ஏற்றுக் கொள்கிறானோ...."*

மனாபமானயோஸ் துல்யஸ்துல்யோ
மித்ராரி பக்ஷயோ: ।
ஸர்வாரம்ப பரித்யாகீ குணாதீத:
ஸ உச்யதே ॥ (25)

*"யார் மான அவமானங்களை ஒன்றாக ஏற்றுக்கொள்கிறானோ, யார் நண்பனிடத்தும், பகைவரிடத்தும் ஒன்றாக பழகுகிறானோ, யார் தனக்கெனச் செயல்புரியாதவனோ, அவனே குணாதீதன் என்று அழைக்கப்படுகிறான்."*

*(அர்ச்சுனன் கண்ணபெருமானைப் பார்த்து முக்குணங்களைக் கடந்தவன் எவ்வாறு இருப்பான், அவ்வாறு விளங்கிடும்போது அவனிடம் காணப்படும் இயல்புகள் என்ன*

*என்று கேட்ட கேள்விக்கு, மேற்சொன்ன மூன்று சுலோகங்களில் பகவான் விடை தருகின்றார். முக்குணங்களைக் கடந்தவன் குணாதீதன் என்றழைக்கப்படுகின்றான். அவன் தன் வாழ்க்கையில் எதிலும் பற்றற்று, நாடகத்தைப் பார்த்திடும் ஒரு காட்சியாளனாகவே- சாட்சியாளனாகவே இருந்திடுவான். மாறி மாறி வரும் சூழ்நிலைக் காட்சிகளால் அவன் மனம் சலனப்படுவதில்லை. எவ்வாறு மலை மீது உள்ள மரம், செடி, கொடிகளை காற்றில் அசைந்தாலும் அம்மலை எவ்வாறு அசையாது திகழ்கின்றதோ அவ்வாறு முக்குண செயல்பாடுகளினால் குணாதீதனின் ஆத்மா பாதிக்கப்படாமல் நிலைத்து விளங்கும். மேலும் அவன், நடைபெறும் செயல்கள் யாவும் முக்குண இயல்புகளினால்மட்டுமே என்பதையும், ஆத்மா அதனால் சலனப்படுவதில்லை என்பதையும் அறிந்தவன். அடுத்துகுணாதீதன் இன்பம்-துன்பம், பொன்-மண், இகழ்ச்சி -புகழ்ச்சி, மானம்-அவமானம், நட்பு-பகை, இனிமை-இன்னாதது ஆகியவற்றிடையே எந்த விதமான பேதம் வேற்றுமை பார்க்காது பேரறிஞனாகத் திகழ்ந்திடுவான். ஆகவே எதிலும் பற்றற்றுத் திகழ்பவனே முக்குணங்களைக் கடந்தகுணாதீதன் ஆவான்.)*

மாம் சயோ அவ்ய பிசாரேண
பக்தியோ கேன ஸேவதே ।
ஸகுணான் ஸமதீத்யைதான்
ப்ரஹ்ம பூயாய கல்பதே ॥ (26)

*"மாறுபடாத பக்தி யோகத்தால் என்னை யார் தொழுகின்றார்களோ, அவர்கள் இந்த மூன்று குணங்களையும் கடந்து பிரம்மம் ஆவதற்குத் தகுதியாகின்றான்."*

*(எண்ணை ஒழுக்கு போன்று யார் ஒருவர் தொடர்ந்து சலிப்பில்லாது, மன உறுதியுடன் பகவானை தன் ஆத்மாவில் நிலை நிறுத்தி பக்தி செய்கின்றார்களோ அவர்கள் எளிதாக*

விலக்கமுடியாத கடக் கமுடியாத அந்த முக்குணங்களையும் கடந்து , அந்த பரபிரம்மத்தை அடையும் தகுதி பெறுகின்றனர்.)

ப்ரஹ்மணோ ஹ ப்ரதிஷ்டாஹமம்
ருதஸ்யாவ் யயஸ்ய ச ।
சாச்வதஸ்ய சதர்மஸ்ய ஸுகஸ்யை
காந்தி கஸ்ய ச ॥ (27)

''என்றும் அழிவில்லாத முக்தி நிலையாகிய பிரம்மத்திற்கும், நித்தியமான தர்மத்திற்கும், இணையற்ற சுகத்திற்கும் நானே இருப்பிடம்.''

(பரப்பிரம்மம் என்றும் அழியாதது , நித்யமான நிலைபேறு கொண்டது. அதேபோன்று முக்தி நிலையான நிர்க்குண நிலையும், கர்மமும், ஈடுஇணையற்ற ஆனந்தமும் நிலை பேறுடைய தன்மை கொண்டவையோகும். இச்செய்யுட்களின் மூலம்,முக்குணங்களைக் கடக்கும் நிலையில் குணாதீதன் பக்தி,கர்ம, ஞான ராஜ யோகங்களையும் அனுபவித்தவனா கின்றான்.அதாவது இறைவனே காணப்படும் கண்ணனாகவும் காணப்படாத பரப்பிரம்மமாகவும், கருமசொரூபியாகவும் ஆனந்த ரூபியாகவும் இருக்கின்றான் தீவிரமான பக்தி ஒன்றினால்மட்டுமே அவன் அம் முக்குணங்களையும் கடந்து ,சேர்ந்திடமுடியும் என்று அர்ச்சுனனின் இறுதிக் கேள்விக்குப் பதிலாக பகவான் இதன்மூலம் விளக்கம் தருகின்றார்.)

(பதினான்காம் அத்தியாயம் முற்றும்.)

# பதினைந்தாம் அத்தியாயம்

## புருஷோத்தம யோகம்

பகவான்சொன்னது:

ஊர்த்வமூலமத : சாகமச்வத்தம்
ப்ராஹு ரவ்யயம் ।
சந்தாம்ஸி யஸ்ய பர்ணானி
யஸ்தம் வேத ஸ வேதவித் ॥ (1)

"மேலே வேர்களைக் கொண்டதும் கீழே கிளைகளைக் கொண்டதுமான ஆலமரத்தினை அழிவற்றது என்பர். வேதங்களே அதன் இலைகள். இதனை அறிபவனே வேதத்தை அறிந்தவனாகக் கருதப்படுகிறான்."

*(அச்வத்தம் என்றாலே இங்கு அரச மரத்தைவிட ஆலமரமே சிறந்த உபமானமாக இருக்கிறது. இங்கு ஆலமரம் உலகத்தோடு ஒப்பிடப்படுகிறது. ஆலமரத்தின் தோற்றமும் வளர்ச்சியும் மற்றைய மரங்களுக்கு எதிர்மறையாகஅமைந்துள்ளது. மற்றை மரங்களுக்கு அதன் வேர்கள் மண்ணில் புதைந்திருக்க கிளைகள், பூக்கள், காய்கள், கனிகள் பூமிக்குமேல் இருக்க, ஆலமரத்தின் வேர் ..... அகண்ட வெளியில் பரப்பி பூமியை நோக்கி ஊன்றியுள்ளன. அதாவது ஆலமரம் இயற்கைக்குப் புறம்பாக தலை கீழாக அமைந்துள்ளது. இவ் அதிசய மரம் மாறுதலு*

க்குட்பட்டாலும் அழிவற்ற இயற்கை மரமாகும். அச்வத்தம் என்றால் நிலையற்றது என்பதாகும். இந்த அண்டம் ஆலமரத்திற்கு ஒப்பிடப்படுவதால், இந்த வாழ்க்கை நிலையற்றது என்பது தெளிவுறுத்தப்படுகிறது. சாதாரணமாக வேர்கள் மண்ணிலிருந்து சக்தியைப் பெற்று (சக்தினைப் பெற்று) மரம் வளர, அங்கு விழுதுகள் ஆகாயத்திலிருந்து சத்தினைப் பெற்று மரம் வளருவது போன்று, இந்த மாய உலகம் மேலே உள்ள பரம்பொருளிலிருந்து சக்தியினைப்பெற்று, பின்னர், கீழே இயற்கையாக உருவெடுக்கின்றது. இலைகள் இல்லாவிட்டால் மரம் பட்டுவிடும். அதே போன்று வேதம் எனும் நூல்கள் உலகறிவை புகட்டுவதால் இந்த உலகமானது நடமாடிக்கொண்டிருக்கின்றது. ஆகவே இலைகள் எவ்வாறு உயிராக, ஒரு மரத்திற்கு விளங்குகின்றதோ, அதே போன்று உலக அறிவைப்பு கட்டும் நூல்கள் பரம் பொருளை அந்த இயற்கையை அறிவுறுத்தும் உயிர்நாடியாக விளங்குகின்றது. இந்த நூவல்களைப் படித்துக் தெளிவு பெறுபவன் வேத விற்பன்னன் என்று அழைக்கப்பெறுகின்றான்.)

அதஸ்சோர்த்வம் ப்ரஸ்ருதாஸ்தஸ்ய சாகா
குணப்ரவ்ருத்தா விஷயப்ரவாலா : ।
அதஸ்ச மூலான்யனுஸந்ததானி
கர்மானுபந்தீனி மனுஷ்யலோகே ॥ (2)

''அந்த ஆலமரத்தின் கிளைகள் முக்குணங்களால் நன்றாக வளர்ந்து விஷய சுகங்கள் எனும் தளிர்விட்டு மேலும் கீழுமாகப் படர்ந்து விரிந்து உள்ளன. மனித உலகிலே வினையை விளைவிப்பவனாக அதன் வேர்கள் கீழ்நோக்கி படந்த்து பரவி உள்ளன.''

(ஒரு மரத்திற்கு நீர், உரம், உயிர்ப்பு (காற்று) எனும் மூன்றும் அந்த மரம் உயிர்வாழ்வதற்கு மிகவும் தேவை. அப்போதுதான் அந்த மரம் ஆரோக்யமாக வளரும். இதற்கு அறிகுறியாக அந்த மரம் தளிர்கள் விட்டுத் திகழும். அதே போன்று வாழ்க்கைச் சக்கரம் எனும் மரம் தமோ, ரஜோ, சத்துவ குணங்களால் சுழன்று

கொண்டிருக்கின்றது. இதற்கு அறிகுறியாக மனிதன் ஐம்புலன் இன்ப நுகர்ச்சிகளில் மூழ்கி விடுகின்றான். இதற்கு தளிர்கள் உபமானமாகக் கூறப்பட்டுள்ளது. நாளுக்குநாள் மரத்திலிருந்து தோன்றிடும் தளிர்களால் மரத்தின் உறுதி தென்படுவது போன்று, மனிதன் நாளும் விஷய சுகங்களில், புலன் இன்பங்களில் பற்று ஆசை வைக்குமளவு அவன் இந்த உலக வாழ்க்கையில் பெரிதும் விருப்பம் கொண்டுள்ளதை அறியலாம். தளிர்கள் கருகியோ, காய்ந்தோ போகும்போதுதான் மரத்தின் அழிவு தெரிவது போல் விஷய சுகங்களில் மனிதன் வெறுப்பைக் காட்டும் போதுதான் அவன் சம்சாரம் எனும் குழியிலிருந்து வெளியேறி பிறவியற்ற பேரின்ப நிலையினைப் பெறமுடியும் மேலும் ஆலமரத்திற்கு அதன் விழுதுகளே வேர்களாக அமைகின்றன. அந்த வேர்கள் பூமியை நோக்கி வளர்ந்து, பின்னர் அதற்குள் மறைந்து பின்னர் படர்ந்து மரத்தினை பூமியோடு நன்றாக, உறுதியாக பிணைத்து விடுகின்றன. இந்த வேர்கள் வளரும்வரை மரத்திற்குப் பயம் இல்லை. ஆம் இந்த வேர்கள் போன்றனவே மனிதனின் ஜென்மாந்திர வாசனைகளாகும், இதனால் ஆசை பேராசை, இன்பம், துன்பம், வெறுப்பு, கோபம் போன்ற உணர்ச்சிகள் மனிதனிடம் வளருகின்றன. இந்த வினைகளால் ஏற்படும் வினைப்பயன்களால் மனிதன் உலக வாழ்க்கையோடு நன்றாக பிணைக்கப்பட்டும் விடுகிறான். இதன் விளைவால் மனிதன் மீண்டும் மீண்டும் பிறப்புஇறப்பு எனும் உறவால் இந்த உலக வாழ்க்கையை மேற்கொள்கிறான்.)

ந ரூபமஸ்யேஹ ததோ பலப்யதே
நாந்தோ ந சாதிர்ந ச சம்ப்ரதிஷ்டா ।
அச்வத்தமேனம் ஸுவிரூடமூலமஸங்க
சஸ்த்ரேண த்ருடேன சித்வா ॥ (3)

''இவ்வுலகில் இந்த மரத்தினது (ஆலமரம்) உருவம் புலப்படுவதில்லை. மேலும் இந்த மரத்திற்கு முதலோ, முடிவோ, ஒரு நிலையோ இல்லை. மிகவும் உறுதியுடன் பூமியில் ஆழ்ந்து வேரூன்றிய இந்த ஆலமரத்தினை

பற்றின்மை என்ற வாளால் வெட்டவேண்டும்.

(இங்கு ஆலமரம் வாழ்க்கை எனும் மரத்துடன் ஒப்பிடப்படுகிறது. வினைகளின் பயனாக பிறவி தொடர்கின்றது. இந்த பிறவியின் ரகசியத்தை மனிதனால் புரிந்துகொள்ள முடியவில்லை. அம்மரம் எவ்வாறு தளிர்கள் காய், கனிகள் என்று செழிப்புடன் இருக்கின்றதோ, மனிதன் வாழ்க்கையும் பாசம், காமம், ஆசை விருப்பம் எனும் ஐம்புலன் இன்பங்களால் வாழ்க்கை சொர்க்கமாக அவனுக்குத் தெரிகிறது. இந்த மயக்க உலகிலிருந்து அவனால் பிறவிதோறும் விடுபட முடியவில்லை. மரம் எவ்வளவு செழிப்புடன் இருந்தாலும் அதனை ஒரு கூர்மையான கோடாலி எனும் வாளால் வெட்டி எறிந்திட முடியும். அதேபோன்று இந்த மயக்கம் தரும் மாய வாழ்க்கைகையை பற்றின்மை எனும் ஆயுதத்தால் வீழ்த்திட முடியும்.)

தத: பதம் தத்பரிமார்கிதவ்யம்
யஸ்மின் கதா ந நிவர்தந்தி பூய: ।
தமேவ சாத்யம் புருஷம் ப்ரபத்யே
யத: ப்ரவ்ருத்தி : ப்ரஸ்ருதா புராணி ॥ (4)

''(பற்றின்மை எனும் வாளால் உலகவாழ்க்கையை அறுத்தவர்கள்) எந்த் இடத்திற்குச் சென்ருல் மீண்டும் பிறவி எனும் சக்கரத்தில் அகப்படுவதில்லையோ அந்த இடத்தைத் தேடி அடைய வேண்டும். எந்த பரம புருஷனிடமிருந்து நிலையான-அழியாத மகாசக்தி பெருகி உள்ளதோ, அந்த ஆதி சக்தியை(ஆதிபுருஷனை) சரணமாக அடைதல் வேண்டும்.''

(இங்கு பற்றின்மை- ஆசைத்துறவு என்பதின் ஆற்றல், இன்றியமையாமை தெரிவிக்கப்பட்டு, வலியுறுத்தப்படுகிறது. ஒருவன் துன்பம் அடையக் காரணம் பொருமை, கோபம், புலனடக்கம் இல்லாமை ஆகியவற்றினால் தான். 'தான்', 'தனது ' என்ற அகங்கார மமகாரம் ஒருவனிடமிருந்து விட்டொழிந்தால் தான் அவனிடம்'அமைதி' எனும் பேரின்பம் சுரக்கும்.

புகழ், பெயர், உல்லாசம் ஆகியவற்றிற்கு அடிமையானவன் ஒருபொழுது பிறவியின் நோக்கத்தை இறைவனின் பேருண்மையை அறிய முடியாது. ஐம்புலன் இன்ப உணர்வினை அழித்திட மனத் துறவும் உடல் துறவும் மிகவும் அவசியம். துறவுமட்டுமல்ல , அவற்றின் மீது வெறுப்புணர்வு மிக வேண்டும். அப்போதுதான் அவனிடம் ஆன்மிக, உணர்வு செழித்தோங்கும் அந்த நிலையில்தான் அவன் பிறவி எனும் படுகுழியில் விழாத ஒரு வாய்ப்பு அவனுக்குக் கிடைத்திடும். அந்த வாய்ப்பினை அவன் நன்ருக, இப்பிறவியில் பயன்படுத்திச் கொள்வானாயின் , அவனால் அந்தப் பரமன் எனும் ஆதிசக்தியில் ஒன்றிடமுடியும். அதற்கும் அவன் அந்த பரமனையே சரணமாக- இறை உணர்வினையே பற்ருகக் கொள்ளவேண்டும்.)

நிர்மானமோஹா ஜிதஸங்கதோஷா
அத்யாத்மநித்யா விநிவ்ருத்தகாமா : ।
த்வந்த்வைர் விமுக்தா:ஸுகது:க ஸம்ஞைர்
கச்சந்த்யமூட: பதமவ்யயம் தத் ॥ (5)

'' யான், எனது' என்ற கர்வத்தை விட்டவர்கள், விவேகமின்மை இல்லாதவர்கள், பற்றினை வெற்றி கொண்டவர்கள், ஆசையை ஒழித்தவர்கள், இன்பத்தையும் துன்பத்தையும் ஒன்ருகக் காண்பவர்கள், மயக்கநிலையை விட்டவர்கன் ஆகியோர்களே அந்த அழியாதப் பேரின்ப பெருநிலையை அடைவார்கள்.''

(எப்போது ஒருவன் அகப்பற்று, புறப்பற்று விடுகின்ருனோ அவனிடம் மேற்கூறிய இறைக்குணங்கள் வந்து கூடி விடுகின்றன . இந்த நிலையில் அவனிடம் இரு செயல்கள் நடைபெறுகின்றன. மனதின்கண் ஏற்படும் அழுக்குகள் நீங்குகின்றன. மற்ருென்று இறைநாட்டம் எனும் பேருணர்வு ஏற்படுகின்றது. இதிபோது அவன் மனம் பக்குவநிலை

அடைந்து அந்த ஆதிசக்தியில் கலந்த்திடும் ஒரு தகுதியைப் பெற்றுவிடுகின்றது.)

ந தத்பாஸயதே ஸூர்யோ ந
சசாங்கோ ந பாவக: ।
யத்கத்வா ந நிவர்தந்தே
தத்தாம பரமம் மம ॥ (6)

''எந்த இடத்திற்குச் சென்றவர்கள் மறுபடியும் திரும்பி வருவதில்லையோ, சூரியனாலும் சந்திரனாலும், நெருப்பினாலும் எதனை விளக்கமுடியாததோ, அதுவே எனது (இருப்பிடமான) பரமபதமாகும்.''

(கடலில் சேர்ந்த நதி தன் உருவத்தை, ஆற்றலை, தன்மையை எவ்வாறு இழந்து, மீண்டும் நதியாக உருவெடுப்பதில்லையோ, அதேபோன்று தன் வினைப் பயன்களைத் தூய்த்தபின்னர் ஜீவாத்மா அந்த பரமாத்வாவுடன் சேர்ந்தவுடன்,அது பிறகு பிறப்பு, இறப்பு எனும் நிலைகளைப் பெறுவதில்லை மேலும் பரமாத்மா பேரொளியானவர்.அந்தப் பேரொளியை விளக்கிட சூரியனாலோ, சந்திரனாலோ, நெருப்பாலோ முடியாது . தன் ஒளியை வெளிக்காட்டியவுடன்அலை அந்கப் பேரொளியில் தம் ஆற்றலை இழந்துவிடுகின்றன.இவை மூன்றும் இந்த உலகில் ஜீவனையும்,இயற்கைப்பொருட்களையும் மட்டுமே சந்திக்க வைக்க முடியும் . அதாவது, இயற்கைப்பொருட்களை நகரும் தன்மை கொண்ட ஜீவராசிகளுக்கு விளக்கிடவே பயன்படும். ஆனால் ஆத்மாவை பிரகாசிக்க வல்மை பெற்றவை யோகம், பக்தி, ஞானம் ஆகியவைகளே. ஆகவே இறைவனைச் சரணடைதலே அப் பேரொளியைக்காண வழிவகுக்கும்.)

மவைமாம்சோ ஜீவலோகே
ஜீவபூத: ஸநாதன: ।
மன: ஷஷ்டானீந்த்ரியாணி
ப்ரக்ருதிஸ்தானி கர்ஷதி ॥ (7)

''எந்தக் காலத்திலும் ஜீவாத்மாவானது எனது அம்சமேயாகும். அவ்வாறு ஜீவாத்மாவாகத் தோன்றி, (உலக உயிர்கள்) இந்த மண்ணுலகத்தில் உள்ள இயற்கையின், உணர்வுகளான ஐம் பொறிகள் மற்றும் அவற்றினை இயக்கும் ஆறுவது உணர்வான மனதுடன் ஈர்க்கச் செய்து ,சம்சாரமாகிய போகத்தில் (இந்த பிறவிப் பெருங்கடலில்) இழுத்துவிடுகிறது.''

(ஜீவாத்மாவானது ஒரு பானையின் உள்ளே இருக்கும் ஒரு வெளி என்றால் , பரமாத்மாவானது அப்பானைக்கு வெளியே எங்கும் பரந்துள்ள வெளி என்று கூறலாம். அதாவது பானையின் வெளி, அப்பானையைச் சுற்றி உள்ளே உள்ள வெளிக்குள் அடக்கம் என்றே சொல்லவேண்டும். அப்பானை உடைந்து விடும்போது, அதற்குள் உள்ள வெளி, வெளியே பரந்துள்ள வெளியுடன் கலந்துவிடுகிறது. ஆம் ஜீவாத்மா இந்த உடம்பிலிருந்து மரணத்திற்குப் பிறகு வெளிவந்தவுடன் அந்த பரமாத்மாவுடன் சேர்ந்திடும். ஆனால் அவ்வாறு சேர்வதற்கு முன்பு அந்த ஜீவாத்மா புனிதமடைந்ததாக இருத்தல் வேண்டும். அந்தப் புனிதத்தை, அந்த ஜீவாத்மா பல்வேறு பிறவிகளில் தன் வினைகளுக்கேற்பப் பக்குவப்பட்ட பின்னரே அடைய முடிகிறது. பானைக்குள் இருக்கும் வெளியாக இருக்கும் ஜீவாத்மா,இயற்கை எனும் மாயை வசப்பட்டு ஐம் பொறி இன்பங்களை தன் மனது செல்லும் வழியில் துய்த்திடவே விரும்புகிறது . இதுவே போக வாழ்க்கை என்பதாகும். இதனை புலனடக்கத்தால் வென்று, தன்னை புனிதமான ஆத்மாவாக மாற்றிக்கொள்ளும் போதுதான் அந்த ஜீவாத்மா யோகியாக அழைக்கப்பெறுகிறன்.அப்போது ஜீவபோதம் விடுபடும்போது அந்த ஜீவாத்மா பரமாத்மாவுடன் ஒன்றி, பரமாத்மாவாகவே திகழ்கிறது.)

**சரீரம் யதவாப் னோதி**
**யச்சாப்யுத்க்ராம தீச்வர : ।**
**க்ருஹீத்வைதானி ஸம்யாதி**
**வாயுர் கந்தானி வாசயாத் ॥** (8)

''எவ்வாறு காற்றுனது மலர்களிலிருந்து மணத்தை எடுத்துச் சென்று வீசுகிறதோ, அவ்வாறு இந்த ஜீவனானவன் பிறவி (உடல்) எடுக்கும் போதெல்லாம், அந்த பிறவியை விட்டுப்போகும் போதெல்லாம் ஐம்பொறிகளைத் தன்னுடன் பற்றிக் கொண்டே விளங்குகிறுன்.''

(காற்றிற்கு இயற்கையாக எந்தவிதமான மணம் கிடையாது. ஆனால் அக்காற்று தான் தொடும் பொருள்களின் மணத்தை தன் மணமாகக் கொண்டு மணக்கும். மல்லிகை மலர்களைத் தாண்டி காற்று வீசிடும் போது, அக்காற்று மல்லிகை மணம் கொண்டு விளங்கும் அதுபோன்றே ஜீவாத்மாவுக்கு இயற்கையாக எந்த உடலை எடுக்கிறதோ அந்த உடல் கொள்ளும் ஐம்பொறி இன்பங்கள், மனதின் எண்ணங்கள் ஆகியவற்றைத் தனதாக்கி விளங்குகிறது. மரணதித்ற்குப் பின், அந்த ஜீவாத்மா அந்த உடலைவிட்டு போகும்போது, தன்னுடன் அந்த உடலுக்குரிய வினைப் பயன்களை சேர்ந்துக் கொண்டு, மற்ெறுர் பிறவியில் எடுக்கும் உடலுடன் இணைந்து விடுகிறது. உலக இன் பங்களில் பற்று இருக்கும் வரை, இந்த வினைப் பயன்கள் ஜீவாத்மாவுடன் உறவாடிக் கொண்டே தான் இருக்கும்.)

**சரோத்ரம் சக்ஷு: ஸ்பர்சனம்**
**சரஸனம் க்ராணமேவ ச।**
**அதிஷ்டாய மனஸ்சாயம்**
**விஷயானு பஸேவதே ॥ (9)**

''ஜீவனானவன் அதாவது மனிதன் தன்பிறவியில் காது, மூக்கு, கண், உடம்பு, மனது ஆகியவற்றைத் தன்னுடையதாக எண்ணிக்கொண்டு உலக இன்பங்களை அனுபவிக்கிறுன்.''

(மனிதனை ஐம்பூதங்களுடன் இணைத்து வைப்பன ஐம்புலன்களாகும். அவ்வாறு இணையும்போது, மனமானது அவற்றை இணைத்திடும் பாலமாகத் திகழ்கிறது. நம் வினைப்பயன்களுக்கேற்ப நம் உடல் துன்பமோ, இன்பமோ துய்த்திட இந்த ஐம்பொறிகளை, மனதை இந்த ஜீவன் ஒவ்வொரு பிறவி தோறும் தன்னுடன்

*தக்கவைத்துக்கொள்கிறான்.)*

**உத்க்ராமந்தம் ஸ்திதம் வாபி**
**புஞ்ஜானம் வா குணான்விதம் ।**
**விமுடா நானுபச்யந்தி பச்யந்தி**
**ஞான சக்ஷுஷ: ॥** (10)

*"ஒரு உடலைவிட்டு மற்றொரு உடலுக்குச் செல்லும்போதும், ஒரு உடலில் வாழ்ந்திடும்போதும் உடலில் இருந்துகொண்டு உலகஇன்பங்களை அனுபவித்திடும்போதும், (மூன்று) குணங்களோடு கூடியிருக்கும்போதும் (அவ்) உடலில் உள்ள ஜீவனை அறியாதவர்கள் மூடர்களாவர். அறிந்தவர்கள் ஞானக்கண் உடையவர்கள்."*

*(உலக இன்பங்களுக்காக நாளும் தேடி அலையும் மனிதர்கள் அவற்றை அனுபவிக்கும் போதும் தங்கள் உடலையே மறந்திடும்போதும், தங்கள் உடலுக்குள் இருக்கும் அந்த பரமாத்மாவை நினைப்பது என்பது எதிர்பாக்கமுடியாத ஒன்று, மனிதன் தன் ஐம்புலனின்பங்களை நாடும்வரை, உலக ஆசைகளின்மீது பற்றுள்ளவரை அவனால் பரமனை நினைப்பது என்பது கைகூடா முயற்சியாகும். இந்த உடல் உலகவிஷயங்களை அனுபவிப்பதற்காகவே உள்ளது என்ற நினைப்பு மாறி, மறந்து, தம்முள் இருந்துகொண்டு, தம்மைக் கண்காணித்துக் கொண்டிருக்கும் தன் நலனை விரும்பிக் கொண்டிருக்கும் பரமாத்மாவை ஒரு கணம் நினைப்பவனே, தம் பிறவியின் நோக்கத்தை அறிபவனாவான். பாலைவனத்து கானல்நீரை உண்மை நீரென்று, தன் பயணத்தைத் தொடர்பவன் தாகத்தால் வருந்தவே நேரிடும். பிறவி எனும் பயணம் முடித்துக் கொள்ள; மனிதன் கானல்நீரான உலக இன்பங்களை மறந்து பற்றற்ற, ஆசையற்ற நித்ய வாழ்க்கையை மேற்கொள்வதே அவனை அப்பரமாத்மாவின் அருகே அழைத்துச்செல்லும் ஒரு பாதையாக அமையும்.)*

யதந்தோ யோகினஸ்சைனம்
பச்யந்த்யாத்மன்யவஸ்திதம் ।
யதந்தோ அப்யக்ருதாத்மானோ
நைனம் பச்யந்த்யசேதஸ : ॥ (11)

*''முயற்சியுடைய ஞானிகள் அந்த பரமாத்மாவை தங்களுக்குள்ளேயே காணும் பேறுபெற்றவர்களாவர். தகுந்த முயற்சி மேற்கொண்டாலும் தக்க மனப்பக்குவம், தூய சிந்தனை அற்றவர்கள் மூடர்களாக விளங்கி, அப்பரமனைக் காண்பதில்லை. (அவர்களால் காணமுடியவில்லை.)*

*(இறைவனைக் காண்பதற்கு அப்பரமாத்வாவை அறிவதற்கு முயற்சிமட்டும் பயனளிக்காது. மனக்கட்டுப்பாடு, மனமுதிர்ச்சி, சிந்தனை உயர்வு ஆகியனவே மிகவும் முக்யமானவை. ஞானிகள் இவற்றை தியானம்,யோகம், பக்தி எனும் தூயவழிகளில்,சிறந்த முயற்சியால் இறைவனைக் கண்டனர்.ஆகவே ஆதம் பரிபாகம் எனும் மனமுதிர்ச்சி இல்லாது முயற்சி எனும் ஒரு நூலினைக் கொணடே மேலேற முடியாது. மனமுதிர்ச்சி-ஆன்மீக உயர்வு எனும் தாம்புக் கயிற்றினைக் கொண்டே நாம் அப்பரமனைக் காண மேலேற முடியும்.)*

யதாதித்யகதம் தேஜோ
ஜகத்பாஸயதே அகிலம் ।
யச்சந்த்ரமஸி யச்சாக்னௌ
தத்தேஜோ வித்திமாமகம் ॥ (12)

*''எந்த ஒளி சூரியனிடமிருந்து தோன்றி இந்த உலகப் பொருள்களைக் (கண்களுக்கு,) காட்டுகின்றதோ, எந்த ஒளி சந்திரனிடமிருந்து தோன்றுகிறதோ, எந்த ஒளி நெருப்பிலிருந்து காணப்படுகிறதோ அவையாவும் (அந்த ஒளியாவும்) என்னுடைய மேலான பேரொளியின் பிரதிபலிப்புகளே என்பதை அறிவாயாக.''*

*(இறைவனை பரஞ்சோதியாக, தேஜோமயானந்தனாக*

இந்து சமயம் அழைத்து வழிபடுகிறது. கண்களுக்குத் தெரியும் உலகப் பொருட்களான ஜடப் பொருள்களை சூரியன், சந்திரன், நெருப்பு ஆகியன தங்களிலிருந்து வெளிப்படும் வெளிச்சம் மூலம் நம் கண்களுக்குக் காட்டிடும் ஆற்றல் கொண்டன. ஆனால் கண்களுக்குத்தெரி யாத அப்பரம்பொருளை அறிதற்கு, அதற்குரிய சத்துவ குணத்தினை நம்முள் ஏற்படுத்துவது ஆத்ம பிரகாசம் என்னும்ஆன்ம ஒளியேயாகும். சூரிய ஒளியினையும், அது வெளிச்சம் போட்டு காட்டும் பொருளினையும் நமக்கு அறிவுறுத்துவது நமது ஆன்ம ஒளியேயாகும்.இந்த ஆன்ம ஒளியின் முன் முன்புகூறிய மூன்றும் தங்கள் ஒளியினை இழ்ந்துவிடும் குறைபாடு உடையவானாகும். ஆகவே உண்மையில் ஜடப்பிரகாசத்தை நமக்கு அறிவுறுத்துவது ஆத்ம பிரகாசமேயாகும்.அதுவே அந்த இறைவனாவான். உடலைக் காண்பிப்பது இயற்கை ஒளி உயிரைக் காண்பிப்பது இறை ஒளி.)

காமாவிச்ய சபூதானி
தாரயாம்யஹ மோஜஸா ।
புஷ்ணுபி சௌஷதீ : ஸர்வா:
பூத்வா ரஸாத்மக : ॥ (13)

''என் ஆற்றலினால் பூமியுள் புகுந்தே அங்குள்ள உயிர்களைத் தாங்கியுள்ளேன். நானே இனிமைதரும் சுவையான வடிவம் கொண்ட சந்திரனாகவும் விளங்கி பயிர்கள் யாவற்றையும் வளர்த்து வருகின்றேன்.''

(இறைவனுடைய ஆற்றலுக்கு சக்திக்கு ஓஜஸ் என்று பெயர். அந்த ஓஜஸ்ஸினால் இறைவன் இந்த அண்டசராசரங்களை, அங்கு வாழும் நகரும் நகரா உயிர்களையும் தாங்கி, வளர்த்துவருகின்றான். இந்த செய்யுள்மூலம் மற்றொரு உண்மையும் நமது சமயம் மறைமுகமாகச் சுட்டிக் காட்டுகிறது. மண்ணில் வளரும் பயிர்களுக்கு அவை அவைகளுக்குக்கென்ற ஒரு சுவை உள்ளது. உப்பு, காரம் கசப்பு என்று ஒன்பதுவகை சுவைகள் உள்ளன.

இவையாவும் தனித்தும், மிகுந்தும்,கலந்தும் மண்ணில் வளரும் பயிர்களில் பெற்று விளங்குகின்றன. இந்தச் சுவைகளை இப்பயிர்களுக்குச் சந்திரனிடமிருந்து வெளிவரும் வெளிச்சக் கதிர்களே தருகின்றன என்றும், அத்தகு ஆற்றல் உள்ள உயிர்ச்சக்தியான சந்திரனாக தான் இருப்பதாகவும் இறைவன் இங்குக் கூறுகிருன்.)

அஹம் வைச்வானரோ பூத்வா
ப்ராணினாம் தேஹமாச்ரித: ।
ப்ராணுபானஸமாயுக்த: பசாம்யன்னம்
சதுர்விதம் ॥ (14)

''உதரக்கனலாக உயிர்களின் உடல்களில் நான் விளங்கி பிராண அபான காற்றுகளுடன் செயல்பட்டு. நான்கு வகையான உணவுப் பொருட்களை ஜீராணிக்கின்றேன்.''

(இங்கு உதரக்கனல் என்பது வயிற்றில் இருக்கும் ஓர் ஆற்றலாகும். அதனை ஜடராக்னி என்று கூறுவர். வெப்பம் மிகுந்த அந்த ஆற்றலினால்தான் வயிற்றுக்குள் இருக்கும் உணவுப் பொருட்கள் ஜீரணிக்கப்படுகின்றன. இந்த அக்னி செயல்பட பிராணன், அபானன் எனும் இரண்டு காற்றுக்களும் உள்ளன. இவற்றின் உதவியினால் -செயல்பாடினால் , மனிதன் மெல்லுதல், உறிஞ்சுதல், நக்குதல், விழுங்குதல் போன்ற செயல்களின் மூலம் வாய்வழியாக வயிற்றுக்குள் போகும் உணவுப் பொருட்கள் ஜீரணிக்கப்படுகின்றன. எனவே வயிற்றுக்குள் ஒரு ரசாயன மாற்றம் ஏற்பட்டாலொழியே உணவுப்பொருட்கள் செரிக்கமாட்டா . இந்த ரசாயன ஆற்றலே அந்த இறைவனின் கூற்ருகத் திகழ்கிறது.)

## பகவான் சொன்னது:

ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸன்னிவிஷ்டோ
மத்த:ஸ்ம்ருதிர்ஞானம- போஹனம் ச ।
வேதைஸ் ச ஸர்வைரஹமேவ வேத்யோ
வேதாந்தக்ருத்வேதவிதேவ சாஹம் ॥ (15)

''எல்லோருடைய உள்ளங்களிலும் நான் அமர்ந்துள்ளேன். நினைவாற்றலும், பேரறிவும் அவற்றின் அழிவும் ஆகியனவும் என்னிடமிருந்தே தோன்றுகின்றன. எல்லா வேதங்களின் அறியப்படும் பொருளும் நான்தான். மேலும் வேதாந்தத்தை செய்தவனும் வேதங்களை அறிந்தவனும் நான் தான்.''

(இந்த அண்டசராசரங்களில் உள்ள எல்லா ஜீவாத்மாக்களுக்குள்ளும் அந்தர்யாமியாக இறைவன் பரந்து விளங்கிவருகின்றான். உயிர்களின் நினைவாற்றலாக இறைவன் இருக்கின்றான். நினைவாற்றல் என்பது அனுபவத்தால் பெறப்படும் அறிவு அடுத்தது பேரறிவு. தன் சிந்தனையால் பெறப்படும் அறிவு. இவை வளருவதும் தேவையில்லாதபோது மறப்பதும் இயல்பு.ஆகவே ஞாபக சக்தி எனும் நினைவாற்றல், அறிவாற்றல் மறந்திடும் இயல்பு ஆகியனவாக இறைவன் இருக்கின்றான். மனதிற்கும் ஓர் ஆற்றல் உண்டு.தேவையற்றன மறக்கப்பட்டால் தான் தேவையானவை உருவாகும். இது அறிவியல் உண்மை. வேதமே உருவானவன் இறைவன்.வேதம் என்பது இயற்கைவிளக்கம்அவ் இயற்கை அவ் இறைவனின் ஆற்றலை, மாட்சிமையினை வெளிபப்டுத்துவதாம். அவ்இயற்கையின் மூலம் இறை ஆற்றல் தெரியப்படுவதால் அவ்வேதத்தில் அறியப்படும் பொருளாக இறைவன் விளங்குகின்றான்.அதாவது ஞானத்தின் மறு உரு இறைவன். தத்துவ விளக்கங்களின் ஊற்றாக இறைவன் இருப்பதால், அவ் விளக்கங்களைத் தந்திடும் வேதாந்தமாகவும் இறைவன் இருக்கின்றான்

த்வாவிமௌ புருஷௌ லோகே
க்ஷரஸ்சாக்ஷர ஏவச ।
க்ஷர: ஸர்வாணி பூதானி கூடஸ்தோ
அக்ஷர உச்யதே ॥ (16)

''இந்த உலகத்தில் க்ஷரன், அக்ஷரன் என்ற இரண்டே புருஷர்கள் தாம் உண்டு.உடல் அல்லது உருவம் எடுத்தவர்கள் யாவரும் க்ஷரன் எனப்படுவர் . கூடஸ்தனோ அழியாத

*நிலைபெற்ற அக்ஷரன் எனப்படுவான்.''*

*(கிணற்றுநீர், ஆற்று நீர், ஊற்று நீர், குளத்து நீர் ,கடல்நீர் என்று நீரானது இடத்தைப் பொறுத்துப் பல பெயர்களில் அழைக்கபப்டுகிறது. ஊற்றுநீர் கிணற்றுநீராகலாம், குளத்துநீர் ஆற்றுநீராகலாம் ,ஆற்று நீர் கடல்நீராகலாம். ஆகவே நீரின் வடிவங்கள் மாறலாம் அளவுகள் குறைவுபடலாம். மாறும் தன்மை கொண்ட இவை க்ஷரம் என்று அழைக்கப்பெறும். ஆனால் அடிப்படையனை நீர் ஒன்றே யாகும். உலகம் அழியும்வரை நீர் நிலைத்திருக்கும். இதனை அக்ஷரம் என்று அழைக்கலாம். இதுபோன்றே உலகத்தில் உயிர்கள் எடுத்துக் கொள்ளும் உடலகள் பல உருவங்களை, பல நிறங்களை, அளவுகளை கொண்டு விளங்கலாம். இவையாவும் க்ஷரம் என்று கூறப்படும். ஆனால் இவ்வுயிர்களை உண்டாக்கப்படும் ஒரு மாபெரும் சக்தியின் ஆற்றல் என்றும் குறைவுபட்டோ செயலிழந்தோ விளங்காது. இதுவே சைதன்ய சக்தியாகும். இது பரபிரம்மமான கூடஸ்தன் என்று அழைக்கப்பெறும் பரமாத்மாவையே சார்ந்துள்ள அவனுடைய மாயா சக்தியாகும்.)*

உத்தம: புருஷஸ்த்வன்ய :
பரமாத்மேத் யுதாஹ்ருத: ।
யோ லோகத்ரய மாவிச்ய
பிபர்த்யவ்யய ஈச்வர : ॥ (17)

*''இனி, இவைகளிடமிருந்து (க்ஷரம், அக்ஷரம்) தனித்துவேருக இருப்பவர் புருஷோத்தமன். அவரே எந்தவிதமான மாற்றங்களுக்கு உட்படாத (நிர்விகார) அழிவற்ற பரமாத்மா எனப்படுவார். அகில உலகத்தையும் (மூவுலகத்தையும்) ஊடுருவி இருந்து அவரே அவற்றைத் தாங்கவும் செய்கிருர்.''*

*(இந்த உலகம், அந்த உலகத்துள்ள உயிர்கள் யாவும் அழியும் தன்மை கொண்டவை. ஆகவே அவை அநித்யம். இந்த அழியும் பொருட்களின் உள்ளிருந்து அவற்றை இயக்குபவன் இறைவன்*

பகவான் . ஆகவே அவன் நித்தியன்(ம்) எங்கும் எதிலும் எப்போதும் அந்த நித்யம் வாசம் செய்து வருகிறது.)

யஸ்மாத்க்ஷரமதீதோ அஹமக்ஷராதபி
சோத்தம: ।
அதோ அஸ்மி லோகே வேதே
ச ப்ரதித : புருஷோத்தம : ॥ (18)

''க்ஷரத்தைக் கடந்தவனாகவும், அக்ஷரத்திற்கு மேலானவனாகவும் நான் (பகவான்) இருப்பதால் நான் உலகத்தாராலும் வேதங்களாலும் புருஷோத்மன் என்று பெரிதும் புகழப்பட்டு அழைக்கப்பெறுகின்றேன்.''

(அழியும் தன்மை கொண்ட உலக உயிர்கள் இயல்புகளுக்கு அப்பாற்பட்டு விளங்குபவன் இறைவன் அழியாத தன்மை கொண்டு பரமாத்மாவின் அங்கமாக இருப்பது ஆத்மா. இந்த ஆத்மாவையும் கடந்து நிற்பவன் அந்த இறைவன் .ஆகவே அவன் புருஷோத்தமன். இந்த புருஷோத்தமனைக் கண்டு அவனுடன் இரண்டறக் கலப்பதே ஆத்மாவின் நோக்கம். அந்த நோக்கம் நிறைவேறவே அழியும், மாறுதல்களுக்குட்பட்டு விளங்கும் இயற்கையானது ஒரு சாதனமாக ஒரு கருவியாக உள்ளது.)

யோ மாமேமைஸம்மூடே ஜானாதி
புருஷோத்தமம் : ।
ஸ ஸர்வ வித்பஜதி மாம்
ஸர்வபாவேன பாரத ॥ (19)

''பாரதா(அர்ச்சுனா!) இவ்வாறு மயக்கமற்றவனாய் யார் என்னையே புருஷோத்தமன் என்று அறிகின்றனோ,அவனே எல்லாம் அறிந்தவனாகத் திகழ்ந்து என்னையே முழுமனதோடு வணங்குகின்றன்.''

(சந்தேகங்களாலும் தடுமாற்றங்களாலும் ஒருவன் மனமயக்கம் கொள்கிறன்.அவனால் உண்மைகளை

*சரிவரபுரிந்துகொள்ளமுடியாது. அழிவனவற்றை அழியும் தன்மை கொண்டவையாகவும், அழியாதவற்றை அழியும் பொருளாகவும் கருதும் மனநிலை பெறுகின்ருன். வாடும் பயிரைக்காணும்போதெல்லாம் தானும் வாடுவதாக வள்ளலார் கூறிகிருர். ஆம் இறைவனால் படைக்கப்பட்ட எல்லா உயிர்களிடத்தும் இறைவனைக் காணும் தகுதி மனபக்குவம் ஒருவனிடம் உண்மையான பக்தியால், ஞான முதிர்ச்சியால் மட்டுமே உருவாகும். எல்லா உயிர்களிடத்தும் புருஷோத்தமனின் மாயா சக்தி-சைதன்ய சக்தியான ஆத்மா உள்ளது என்பதை அறியும்வரை, அவன் கோழி, ஆடு என்று அவற்றைக் தன் உணவாகக் கொள்கிருன். நாய் கழுதை என்று ஏளனமாக பிறரை ஏசுகின்ருன். நிறம், இனம் என்ற வேறுபாடுகளினால் மற்றவரை நேசிக்க மறுக்கின்ருன். ஆனால் தூய சிந்தனையால், சிறந்த பக்தியால், ஞானத்தெளிவு பெற்றவுடன் தாரத்தையே தாயாகப் பார்க்கின்ருன். தன் குழந்தையையே குருவாக ஏற்றுக் கொள்ளகிருன். இதனால் ஆசை, பற்று எனும் தளைகளிலிருந்து விடுபட்டு, அந்த பரமாத்வாவையே- புருஷோத்தமனையே இறுதிப்புகலிடம் என்று கெளிந்து, அவனையே சரணமாக அவன் தாள்களைப் பற்றுகிருன்.)*

இதிகுஹ்யதமம் சாஸ்த்ரமிதமுக்தம்
மயா அனக ।
ஏதத்புத்வா புத்திமான் ஸ்யாத்
க்ருதக்ருத்யஸ்ச பாரத ॥ (20)

*''குற்றங்களைக் கடந்தவனே! இவ்வாறு இந்த அரிய சாத்திரம் உனக்கு என்னால் கூறப்பட்டுள்ளது.அர்ச்சுனா! இதை அறிபவன் மேலான அறிவாளியாகவும் தன் கடமைளைக் சரிவர செய்யவனாகவும் ஆகின்ருன்.''*

*(எந்த அத்தியாயத்தையும் பகவான் சாத்திரம் என்று குறிப்பிடவில்லை. இந்த அத்தியாத்தை மட்டும் இறைவன்*

'சாத்திரம்' என்று அழைக்கின்றான்-மனிதனின் குறிக்கோள் அறிவுறுத்தப்பட்டுள்ளது. ஜீவாத்மாவின் இலட்சியம் பரமாத்மாவையே சென்று அடைவதேயாகும்.அழியும் இந்த உலகத்தினை விட்டாலொழிய, அழியா அந்த பரம்னை அறியமுடியாது; அறிந்து அவனுடன் சேர முடியாது. எனவே பிறவியின் நோக்கத்தை அறிபவனே உண்மை ஞானி. அவனேதன் வாழ்க்கையில் விதிக்கப்பட்டுள்ள கடமைகளைத் தவறுது செய்தவனாகக் கருதப்படுகிறுன்.)

(பதினைந்தாம் அத்தியாயம் முற்றிற்று.)

# பதினாறும் அத்தியாயம்

## தெய்வாஸுர ஸம்பத் விபாகயோகம்

## (தெய்வத்தன்மையும் அரக்கத்தன்மையும்) பகவான் சொன்னது:

*(முதல் மூன்று செய்யுட்களிலும் தெய்வ இயல்பு கொண்டவனிடம் குடிகொண்டுள்ள குணங்களைப் பட்டியல் இட்டு பகவான் கிருஷ்ணர் அர்ச்சுனனுக்குக் கூறுகிறார்.)*

அபயம் ஸத்த்வஸம்சுத்திர்ஞான
யோகவ்யவஸ்திதி : ।
ஞானம் தமஸ்ச யக்ஞஸ்ச
ஸ்வாத்யாயஸ்தப ஆர்ஜவம் ॥ (1)

*''பயமின்மை, உள்ளத்தூய்மை, ஞானம் மற்றும் யோகத்தில் மன உறுதி, ஈகை, ஐம்புலன்களை அடக்கும் திறன், வேள்வி, சாத்திர அறிவு தவம் ,நேர்மை''*

அஹிம்ஸா ஸத்யமக்ரோதஸ்த்யாக:
சாந்திரபைசுனம் ।

தயா பூதேஷ்வலோலுப்த்வம்
மார்தவம் ஹ்ரீர சாபலம் ॥ (2)

''பிறர்க்குத் தீங்கு செய்யாமை, உண்மை, கோபமின்மை, துறவு, அமைதி, புறங்கூறுமை, பிற உயிர்களிடத்து கருணை, பிறர் பொருளை விரும்பாமை, இனிமை, வெட்கம், மனச்சலிப்பு கொள்ளாமை''

தேஜ:க்ஷமா த்ருதி: சௌசமத்
ரோஹோ நாதி மானிதா ।
பவந்தி ஸம்பதம் தைவீமபிஜாதஸ்ய
பாரத ॥ (3)

''தைர்யம்,பொறுமை, மன உறுதி, தூய்மை, வஞ்சகமின்மை, செருக்கில்லாமை ஆகிய இக் குணங்களே தெய்வ இயல்புடன் பிறந்திடும் மனிதர்களிடம் சாதாரண மாகவே காணப்படும்.''

(மனிதன் பிறக்கும்போது பொதுவாக நல்லவனாகத்தான் பிறக்கின்றான். வளர வளர அவனிடம் அசுர இயல்புகள் பெரிதும் குடிகொண்டு விடுகின்றன. மனிதன் இறுதிவரை நல்லவனாக விளங்கிடும்போது அவனிடம் மேற்கூறிய 26 நற்குணங்கள் இயல்புகள் வந்தமைகின்றன. இவை தெய்வ குணங்களாகப் போற்றப்படுகின்றன. இந்த 26 குண இயல்புகளில் பல எல்லோர்கும் தெரிந்த ஒன்றாகும். அச்சம் எனும் உணர்வு அறியாமையால் வருவது. கடமையை இறைப்பணியாக மேற்கொள்பவன் வாழ்க்கையில் எதற்கும் அஞ்சமாட்டான் இதனை இறை தன் அபய கரத்தால் தன் பக்கதர்களைக் காத்திடும் அவன் திருக்கோலமே காட்டிடும். தூய உள்ளம் என்பது ஆத்மாவின் தனித்தன்மை. ஆத்மா தூய்மையாக விளங்கிடும்போது அமைதி, அன்பு, ஆசையற்று இருத்தல் போன்ற, நற்பண்புகள் வந்து கூடிடும். எது உண்மை, எது பொய் எது அழியாது, எது அழியும் என்ற தத்துவமனத்தெளிவை தருவது ஞானம்.அந்த 'ஞான' அறிவுடன் தன் வாழ்க்கையை மேற்கொள்வது ஒருவனுக்கு யோகமாகிறது. யாகம் அல்லது வேள்வி என்பது தனக்கு அளிக்கப்பட்ட தான் மேற்கொண்ட

பணிகளை சரிவர செய்தலே யாகும். இது போது தன் எண்ணங்களை,தன் உணர்வுகளை அப்பணியிலேமுழுமையாக அர்ப்பணித்தல்- பலியாக்குதலே யாகமாகும். சாத்திரம் படித்தல் என்பது உலகாயுத பயன்களுக்காகப் பயன்படும் ஏட்டுப்படிப்பு அல்ல. வாழ்க்கை உண்மையினை, இயற்கையின் ஆற்றலை, இறைவனின் பெருமையை உணர்த்திடும் சமயதத்துவ விளக்கங்களே உண்மையான சாத்திரங்களாகும். அவற்றைப் பயில்வதே, அறிந்துகொள்வதே மனிதனின் மேம்பாட்டிற்கு வழிவகுக்கும்.துறவு அல்லது தியாகம் என்பது மற்றுமொரு அரிய பண்பாகும். தியாகத்தில்தான் மனிதனின் மாண்பு தெரியவரும் . தாய் தன் தியாகத்தால் ஒரு வம்சத்தை உருவாக்குகிறாள். ஆசிரியர் தன் அறிவு தியாகத்தால் ஒரு நல்ல மாணவ சமுதாயத்தை ஏற்படுத்துகிறார். இத்தியாகத்தால் ஆசிரியர்களின் அறிவு மேலும் சிறந்தோங்குகிறது என்பதும் மற்றுமொரு சிறப்பாகும்.மனிதனின் 'உழைப்பு தியாகத்தால் ஒரு நல்ல சமுதாயம் உருவாகிறது. ஆகவே தியாகம் அதாவது தன்னிட மிருப்பதை பிறருக்குப் பயன் கருதாது தரும் இயல்பு, தெய்வ இயல்பாக மதிக்கப்படுகிறது. மனத்திட்பம் அல்லது மனச்சலிப்பு இல்லாமை மனிதரிடம் இருக்கவேண்டிய ஒரு முக்யமான குணமாகும். மனம் சஞ்சலப்படும் போது உடல் எந்த விதமான ஆக்கப்பூர்வமான செயலையும் மேற் கொள்ளாது. விளைவுகள் ஆபத்தையே தரும். தகுந்த பயிற்சியினால் மட்டுமே , மனக்கட்டுப்பாட்டினால் மட்டுமே ' இந்த இயல்பை வளர்த்துக் கொள்ளமுடியும் மற்று மொருகுணம் 'தைர்யம்' 'அச்சம்' என்பது தனக்குள் வரும் உணர்வு . தைர்யம் என்பது வெளிச்சூழ்நிலையில் தான் மேற்கொள்ள வேண்டிய உணர்வாகும். அச்சம் மனச் சாட்சியை பொறுத்தும்,'தைர்யம்' வெளி உலகத்தைப் பொறுத்தும் பெறுவது ஆகும். ஆகவே மேற் கூறிய வாறு விளக்கப்பட்ட குணங்களுடன் கூடிய 26 குண இயல்புகள் உடையவர் இறைவனுக்குச் சமமாகக் கருதப்படுவர். இறைவனாகவே கொண்டாடப்படுவர்.)

தம்போ தர்போ அபிமானஸ்ச
க்ரோத: பாருஷ்யமேவ ச ।
அக்ஞானம் சாபிஜாதஸ்ய பார்த்த
ஸம்பதாமஸுரீம் ॥ (4)

*''பார்த்தா ! (அர்ச்சுனா) பகட்டு, இறுமாப்பு, தற்பெருமை கோபம் , கடுமை, அறியாமை ஆகியன யாவும் அசுர இயல்பு கொண்டு பிறந்திடும் மனிதர்களிடம் இயல்பாக விளங்கிடும்.''*

*(முதன் மூன்று செய்யுட்களில் இறை இயல்புகள் கூறிய பின்பு, அவற்றிற்கு நேர்மாறான அரக்க இயல்புகள் இந்தச் செய்யுளில் கூறப்படுகிறது. நல்ல இயல்புகள் 26 என்று பட்டியல் போட்டு கூறிய பகவான் அசுர இயல்புகள் 6 மட்டுமே என்று கூறும்போது , ஒரு துளிநஞ்சே ஒரு குடத்து பாலைநஞ்சாக்குவது போல இந்த ஆறு குணங்களோ மேற்கூறிய 26 குணங்களை அழித்திடும் ஆற்றல் பெறுகின்றன என்பதை பகவான் கூறாமல் கூறுகிறார். தன்னிடம் இயலாததை உள்ளதாகக் கூறிக்கொள்ளும் பகட்டு,தன் குல, செல்வ கல்வி நிலையால் பெறப்படும் கர்வம், தற்பெருமை , எளிதில் நண்பனையும் எதிரியாக்கிடும் கோபம், இன்முகம் காட்டாது-அன்பு கொண்டு விளங்காது சிடுசிடு வென விளங்கிடும் கடுமை நல்லனவற்றை தீயனவாகும் - தீயனவற்றை நல்லவையாகவும் கருதிச் சொல்லாலும் செயலாலும் விளங்கிடும் அறியாமை ஆகியனவே மனிதனை மிருகமாக்கி விடுகின்றன. இவற்றை தன்னிடமிருந்து ஒருவன் விலக்கினாலொழிய, அவனிடம் மனிதநேயமோ ' அதன்மூலம் இறை உணர்வோ ஸம்பத் தோன்றிடாது.)*

தைவீ ஸம்பத் விமோக்ஷாய
நிபந்தாயாஸுரீ மதா ।
மா சுசு: ஸம்பதம் தைவீமபிஜாதோ
அஸி பாண்டவே ॥ (5)

*''தெய்வ சம்பத்து (இயல்புகள் -குணங்கள்) மோக்ஷத்திற்கும், அசுர சம்பத்து பந்த பாசத்திற்கும் இட்டுச்*

*செல்வனவாகக் கருதப்படும். பாண்டவா! வருந்த வேண்டாம். நீ தெய்வ சம்பத்து உடையவனாகப் பிறந்துள்ளாய்.''*

*(இறை உணர்வுகளே மனிதனை மகானாக மாற்றுகின்றன. அம்மகானே தன்னுடைய தியான , யோக, ஞான பயிற்சிகளினால் அவ் இறைவனைக் காணும் தகுதி பெறுகின்றான் .இந்த குண இயல்புகள் அர்ச்சுனனிடம் இருப்பதால்தான், அவன் பகவானைக் காணும், உரையாடிடும் விவாதித்திடும் ஆற்றலைப் பெறுகின்றான். இதற்கு நேர்மாறாக அசுர இயல்புகள் தன்னைக் கொண்ட மனிதனை ஆசைகளுக்கும், பற்றுகளுக்கும் ஆட்படுத்தி, அவனிடம் இறைச்சிந்தனை இல்லாது செய்து விடுகின்றன. இதன் விளைவாக பிறப்பு இறப்பு என்னும் சுழலிலே மாட்டிக்கொண்டு பிறவிதோறும் அல்லலுறுகின்றான்.)*

த்வௌ பூதஸர்கௌ லோகே அஸ்மின்
தைவ ஆஸுர ஏவச ।
தைவோ விஸ்தரச: ப்ரோக்த
ஆஸுரம் பார்த்த மே ச்ருணு ॥ (6)

*''பார்த்தா தெய்வ இயல்புகள் கொண்ட தெய்வீகம் மற்றும் தீய இயல்புகள் கொண்ட அசுரம் என்று இருவகையான பிறவிகள் இந்த மண்ணிலே உண்டு. (இதுவரை) தெய்வ இயல்புகள் பற்றி விரிவாகக்கூறப்பட்டன அசுர இயல்புகளின் தன்மைகளை இனிமேல் என்னிடமிருந்து நீ கேட்பாயாக.''*

*(அசுர இயல்புகள் எந்த வகையில் ஒரு மனிதனுக்கு பகையாக அமைந்து அவனை பலவகைகளில் துன்புறுத்தும் என்பதை விரிவாகக் கூறி, அதன் முகத்தான் அவனைத்திருத்திட பகவான் இங்கு ஒரு வாய்ப்பாக அமைத்துக் கொண்டு அறிவுரை கூறுகிறார்.)*

ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச ஜனா
ந விதுராஸுரா : ।
ந சௌசம் நாபி சாசாரோ
ந ஸத்யம் தேஷு வித்யதே ॥ (7)

''செய்யவேண்டிய நல்ல செயல்களையும் செய்யக்கூடாத தீயசெயல்களையும் அசுர இயல்புகள். கொண்டோர் அறியார் அவர்களிடத்து தூய்மையோ, நல்ல ஒழுக்கங்களோ இருக்காது. மேலும் நல்ல வாய்மையும் விளங்காது.

(செயல்கள் அல்லது வினைகள் இரண்டு வகைப்படும். அவை நல்லன தீயனவாகும். நல்ல செயல்கள் அறத்திற்கு உட்பட்டு விளங்குவதால் அவை நல்லன வற்றையே வழங்கும் இதற்கு நேர்மாறாக அமைவன தீயச்செயல்கள். அறத்திற்கு எதிராக விளங்குவதால் அதனால் விளையும் பயன்கள் கெடுதிக்கே இட்டுச் செல்லும். ஆகவே செயல்களின் பாகு பாட்டை அறியாதோ அல்லது அறிந்தோ அசுர இயல்பு கொண்டவர்கள். இதனால் அவர்களிடத்து மனத்தூய்மை இருக்காது தூய்மை-சுத்தம் இல்லாத இடத்தில் எவ்வாறு அசுத்தம் அழுக்கு சேருமோ அவ்வாறு தூய்மை இல்லாத அவர்களிடம் நல்ல பழக்க வழக்கங்கள் அமையா. ஒழுக்கமுடைய நல்ல செயல்களை மேற்கொள்ளார். இதனால் வாய்மை என்னும் சத்தியம் அவர்களிடம் இருக்காது. எப்போதும் பொய் ஏமாற்றுதல் போன்றதீய குணங்களே மிக்கு விளங்கும்.)

அஸத்யமப்ரதிஷ்டம் தே
ஜகதாஸுரநீச்வரம் ।
அபரஸ்பரஸம்பூதம் கிமன்யத்கா-
மஹைதுகம் ॥ (8)

''(அசுர இயல்பு கொண்டோர் பார்வையில்) இந்த உலகத்தில் உண்மை என்றும் ஏதும் இல்லை. கடவுள் இல்லை. காமத்தை அடிப்படையாகக் கொண்டு ஆண்பெண் உடலுறவால் இந்த உலகம் இயங்குகிறது. இதைத்தவிர இந்த உலகத்தில்வேறு ஒன்றும் இல்லை.''

(காம உணர்வே இந்த உலகின் இயல்பு என்று கூறுவோர் உலகில் இன்பம் துய்ப்பது மட்டுமே இந்த மனிதப் பிறவியின்

பயன் என்று எண்ணுவர். இவர்கள் 'கண்டதே காட்சி கொண்டதே கோலம்' என்று உண்டு உறங்கி மகிழ்வது தவிர வேறு எந்தவிதமான இலட்சியமும் மனிதப்பிறவிக்கு இல்லை என்று நினைப்பர். அந்த நினைப்பில் மூழ்கி இருப்போர்க்கு இந்த உலக வாழ்க்கைக்கென ஒரு நியதி, தர்மம் என்பதையோ இந்த உலகத்தை கடவுள் என்னும் சக்தி தாங்கி இயக்கிவருகின்றது என்பதையோ சிறிதும் அறியார். அறிந்தகாலும் அதனைப்பற்றி சிந்திக்க மாட்டார். காமத்தின் பயனாக அன்பு, அமைதி, மனிதநேயம் மறைந்து, சினம், பொறாமை, வன்முறை மட்டுமே மிஞ்சும் என்பதை அறியார். அறியாத இவர்களோ அசுரர்களோ அல்லது அசுர இயல்பு கொண்ட மனிதர்கள்.)

## பகவான் கூறியது:

> ஏதாம் த்ருஷ்டிமவஷ்டப்ய
> நஷ்டாத்மானோ அல்ப்புத்தய: ।
> ப்ரவந்த்யுக்ரக்ர்மான :
> க்ஷயாய ஜகதோ அஹிதா: ॥ (9)

''இதுபோன்ற கொள்கை உடையவர்கள் (அசுர இயல்பு மனப்போக்காளர்கள்) அற்பபுத்தி கொண்டவர்கள் (புல்லறிவாளர்கள்); ஆன்ம பலத்தை இழந்தவர்கள்; கொடுமையான செயல்களைப் புரிபவர்கள்; உலகத்திற்கு எதிரிகள்; இந்த உலகத்தை அழிப்பதற்கென்றே பிறந்தவர்கள்.''

(சினம் எனும் ஒரு தீய மன உணர்வே மற்றைய நல்ல இயல்புகளையும் அழித்துவிடும். ஆகவே அசுர இயல்பு கொண்டவர்களிடத்து விளகிடும் ஒருகுறையே பல குறைகளுக்கு பலஅழிவுகளுக்கு வழிகாட்டிடும். புலனின் பங்களுக்கு அடிமைப்பட்டும், இறை உணர்வை-மனித நேயத்தை மறக்கும் ஒருவன் தன் அறிவைப் பயன்படுத்தும் ஆற்றலை இழக்கிறான். இவனே புல்லறிவாளன். அறம் எனும்

*தர்ம நெறி அவ்விடம் மறைந்துவிடுகிறது. இதன் விளைவாக தன் அழிவுக்குத் தானே காரணமாகின்றான். மனச்சாட்சி, ஆன்மா ஆகியன அவன் வசம் இருப்பதில்லை. மனச்சாட்சி, மறக்கின்றான். ஆன்மாவை இழக்கின்றான். இதனால் அவையே அவனுக்குப் பகையாகின்றன இதனால் மன அமைதியினை இழக்கின்றான். இதன் விளைவாக அவன் சொல்லும், செயலும் அழிவுக்கு வித்திடுகின்றன. அதனால் அவன் பிறப்பே அழிவிற்கே என்று உறுதியாகி விடுகின்றது. ஏனென்றால் அவனால் அவனுக்கோ , வாழும் சமுதாயத்திற்கோ எந்த விதமான பயனும் இல்லை.)*

**காமமாச்ரித்ய துஷ்பூரம்**
**தம்பமாமைதான்விதா : ।**
**மோஹாத் க்ருஹீத்வா**
**ப்ரவர்த்தந்தே அசுதி வ்ரதா : ॥**

(10)

*''(தொடர்ந்து எழும் உணர்வால்) நிறைவேறுக நெடுங்காம உணர்வு கொண்டவர்களாய், ஆடம்பரம், தற்பெருமை, மதம் உடையவர்களாய், அறிவு மயக்கத்தால் தீய எண்ணங்களை மேற்கொண்டு அழிவு நோக்கி செயல் புரிகின்றனர்.''*

*(எல்லா உணர்வுகளைவிட மிகவும் ஆபத்தானது காம உணர்வு, காமம் கண்களை மறைக்கும்போது மனிதன் எந்த நிலைக்கும் தள்ளப்படுகின்றான். சினம், பொறாமை, வன்முறை ஆகியன காம உணர்வை நிறைவேற்றிக்கொள்ள துணைபோகின்றன. காமம், உறவு, வயது நிலைகளைக்கூட மறைத்துவிடுகிறது. இந்த இன்ப உணர்வுகளுக்கு அடிமையாகும்போது மனிதனிடம் தற்பெருமை , தான், தனது எனும் மதம், வீண் ஆடம்பரம் போன்ற உள்ள உடல் ஆசைகள் தலையெடுக்க ஆரம்பித்து விடுகின்றன. காமவயப்பட்டவனின் அறிவு, சிந்திக்கும் திறன் தன் ஆற்றலை இழந்து மன மயக்கத்தில்*

தவருன எண்ணங்களை மேற் கொண்டு அவற்றை செயல்படுத்திட முனையும் போதுஅவன் தீய விளைவுகளையே முடிவுகளையே எதிர் படுகின்ருன்.)

> சிந்தாமபரிமேயாம் ச ப்ரலயாந்தா-
> முபாசரிதா :।
> காமோபபோகபரமா ஏதாவிதிதி
> நிஸ்சிதா ॥ (11)

"இவர்கள்(அசுர இயல்பு கொண்டவர்கள்) இறக்கும்வரை அளவு கடந்த மனக்கவலை கொண்டவர்களாய், காமத்தால் பெறும் இன்பமே நிலையானது,உயர்வானது இதனைத்தவிர மேலானது ஒன்றும் இல்லை என்று தீர்மானித்தவர்களாய்."

> ஆசாபாசசதைர்பத்தா : காமக்ரோத-
> பராயணு :।
> ஈஹந்தே காமபோகார்த்மன்யா
> யேனார்த்தஸஞ்சயான் ॥ (12)

"நூற்றுக்கணக்கான ஆசை எனும் கயிறுகளால் கட்டப்பட்டவர்களாய் காமம் மற்றும் குரோத உணர்வுகளுக்கு அடிமைப்பட்டவர்களாய், காம இன்பத்திற்காக பெருஞ் செல்வம் சேர்த்திடும் முயற்சியினை மேற்கொண்டவர் களாகவும் விளங்குவர்."

(இவ்விரண்டு செய்யுட்களிலும், காமத்தின் இயல்பு சொல்லப்பட்டுள்ளது.காமத்தையே பெரிதாக நினைத்திடும் இவர்கள் தங்கள் மூச்சு உள்ளவரை மனக்கவலைகளாலேயே சூழ்ந்திருப்பர். திரும்பத்திரும்பப் பெற்றிடும் இவ்வுணர்வுகளால், மற்ற நல்ல இயல்புகளை மறந்து காமமே வாழ்வின் அடிப்படை தேவை என்று 'சிட்டுக்குருவி' போன்று காமத்திலேயே ஆழ்ந்திருப்பர். மது, மங்கை, மாமிசமே இவர்களது அன்ருடத் தேவைகளாக அமையும். தொடர்ந்துவரும் இவர்களது காம ஆசை அவர்களது பிறவியைத் தொடர்ந்தும் வரும்.நிறைவேருத அந்த ஆசையே ஒரு பெரும்

*கவலையாக அவர்கள் வாழ்வில் அமைந்திடும். முட்செடிகள் என்றாலும் அவற்றின் தளிர்களைத்தங்கள் வாயினை பதம் பார்த்து ரத்தத்தை வழியவிட்டாலும் தின்னும்போது அம்முட் செடிகளையே நாடிச்சென்றுத் தின்றிடும் ஒட்டகங்கள் போன்றே மக்களும் விளங்குகின்றனர். இந்த அசுர இயல்பு கொண்டவர்கள் தங்கள் எண்ணம் நிறைவேற்றிக்கொள்ள எந்நேரமும்செயல்படுவதால் அவர்கள் பேராசை கொண்டவர்களாக விளங்குவர். தங்கள் போக வாழ்க்கைக்காக அதர்ம வழியில் சென்று லஞ்சம், ஏமாற்றம் என்ற வழிகளில் பெரும் செல்வத்தை சேர்க்கவே நாளும் பாடுபடுவர். அதனால் ஆசை என்னும் கயிறுகளால் எந்நேரமும் கட்டுண்டு, காமம், என்று நாளும் பல தீயமன இயல்புகளால் அலைகழிக்கப்பட்டு வருந்தி வாடுவர். ஆனாலும் காம மயக்கத்தில் இவற்றை தாங்கவும் செய்வர்.)*

இதமத்ய மயா லப்தமிதம்
பர்ாப்ஸ்யே மனோரதம் ।
இதமஸ்தீதமபி மே பவிஷ்யதி
புனர்தனம் ॥ (13)

*''இன்று, இது என்னால் கிடைக்கப்பெற்றது; இன்று என் ஆசையை நிறைவேற்றிக் கொள்வேன்: இது இந்தச் செல்வம் மேலும் என்னிடம் பெருகும்.''*

அஸௌ மயாஹத: சத்ருர்
ஹனிஷ்யே சாபரானபி ।
ஈச்வரோஹ மஹம் போகீ ஸித்தோ
அஹம் பலவான்ஸுகீ ॥ (14)

*''அந்த பகைவன் என்னால் அழிக்கப்பட்டான் ; மற்றவர்களயும் அழிப்பேன்; நான் ஆளப்பிறந்தவன்; போகத்தை அனுபவிப்பவன்; எந்தக் காரிய மேனும் நான் நிறைவேற்றுவேன் ; நான் பலமுள்ளவன்; இன்பத்தை அனுபவிப்பவன்.''*

**ஆட்யோ அபிஜனவானஸ்மி கோ**
**அன்யோ அஸ்தி ஸத்ருசோ மயா ।**
**யக்ஷ்யே தாஸ்யாமி மோதிஷ்ய**
**இத்யக்ஞான விமோஹிதா ॥** (15)

*''நான் செல்வம் மிக்கு உடையவன்; நான் உயர்குலத்தில் பிறந்தவன்; எனக்குச் சரிசமமாக யார் இருப்பவர்? வேள்விசெய்வேன், தானம் அளிப்பேன், மகிழ்ச்சி அடைவேன்' என்று அறியாமையால் பலவாறு பிதற்றிக் கொண்டு, அறிவு மயங்கி, எல்லாம் எதுவும் தன்னால் தான் நடக்கின்றது என்று அசுர இயல்பு கொண்டோர்) நினைப்பார்கள்.''*

**அநேகசித்தவிப்ராந்தா மோஹ**
**ஜால ஸமாவ்ருதா : ।**
**ப்ரஸக்தா: காமபோகேஷு பதந்தி**
**நரகே அசுசௌ ॥** (16)

*''(இவ்வாறு பிதற்றித் திரிவதால் இவர்கள்) பல எண்ணங்களால் குழப்பப்பட்டுக் குழப்பமடைந்தவர்கள்; மோகமெனும் வலையிலே அகப்பட்டவர்கள் ; காமபோக இன்பங்களிலே பற்று மிக்கவர்கள் பாழும் நரகத்திலே வீழ்பவர்கள். ''*

*(மேற்கூறிய நான்கு செய்யுட்களிலும் அசுர இயல்பு கொண்டோர் எத்தகைய மன இயல்புகளுடன் விளங்குவார்கள் என்பதையும் அத்தகையோர் இறுதியில் துன்பமே சூழ்ந்த நரக வாழ்விலே வீழ்ந்து பிறவிதோறும் அல்லலுறுவர் என்பதையும் இறைவன் நமக்கு விளக்கமாகக் கூறுகிறார். இந்த உடம்பையே தாங்கள் பெற்ற செல்வமாக கருதுவதால், இவர்கள் (அசுர இயல்பு கொண்டோர்)தான், தனது எனும் மமதையுடன் விளங்கி, எதுவும் எல்லாமே என்னால்தான் நடைபெறுகின்றது என்று எண்ணுவர். பிற உயிர்களை அழிப்பதையும், பிற உயிர்கள் துன்புறுவதையும் கண்டு மகிழும் இவர்கள் எல்லோரையும் கொல்வேன் அழிப்பேன் என்று மமதை*

கொண்டு திரிவார்கள். இதுபோன்ற மக்களை, இயக்கங்களை நாம்நம் வாழ்நாளில் இன்று கண்கூடாகவே பார்க்கின்றோம். உடல் பலமே போதும் என்று எண்ணுவர் இவர். வயது, நோய் பற்றி கவலைப்படாதவர்கள் தள்ளாமை வந்த போது புல் தடுக்கியும் வீழ்வர் என்பதை மறந்து வாழ்வோர் இவர் . கண்ணையும் அறிவையும் மறைக்கும் காமம் மற்றும் ஆசை பற்றுக்களினால் பல தவறுகளை தொடர்ந்து மேற்கொண்டு மனக் குழப்பத்திலேயே வாழ்வர். மோக வலையில் பின்னப்பட்ட இவர்கள் அதுவே உலகம் என்று இருப்பர். இறுதியில் உடல் தளர்ந்து , ஆன்ம பலம் குன்றி, உள்ளம் சோர்ந்து நரகமெனும் படுகுழியில் நிரந்தரமாக வீழ்ந்து துன்பப்படவே தங்களை ஆளாக்கிக் கொள்வர்.)

## பகவான் கூறியது:

ஆதமஸம்ரபாவிதா : ஸ்தப்தா
தனமானமதான் விதா : ।
யஜந்தே நாம யக்ஞைஸ்தே
தம்பேனோவிதிபூர்வகம் ॥ (17)

''தற்புகழ்ச்சியில் விருப்பம் உள்ளவர், பணிவு இல்லாதவர், செல்வச் செருக்கும் (நான் எனும்) அகந்தையும் பெயரளவில் விதிப்படி ஆடம்பரத்திற்காக வேள்விகளை நடத்துகின்றனர்.''

(புகழ்ச்சியில் மயங்காதவர்கள் எவரும் இல்லை என்றே சொல்லலாம். அதுவும் பதவியால், பொருளால் உயர்ந்து இருப்பவர்கள் தங்களையும் மீறி புகழ்ச்சியில் மூழ்கிவிடுகின்றனர். சமுதாயம் அவர்களை புகழ்ச்சி வெள்ளத்தில் தள்ளிவிடுகிறது என்று கூறினாலும் அதுமிகையாகாது. புகழ்ச்சியில் மயங்கும் மக்கள், தங்கள் நிலையைத் தக்கவைத்துக் கொள்ள பொது நிகழச்சிகளை முன்வந்து நடத்துவர். இதற்காகத் தங்கள் பதவியைத்தவறுகப் பயன்படுத்தித் தங்கள் பணத்தை தண்ணீராகவும் செலவழிப்பர்.

இத்தகையோர் பலர் கோயில் கட்டுவதையும் அக்கோயில் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளையும் தங்கள் சுயவிளம்பரத்திற்காக வீண்ஆடம்பரத்திற்காக மேற்கொள்வர். இதனால் அவர்கள் தற்காலிக மனத்திருப்தி மட்டுமே பெறமுடியுமே தவிர, மனயமைதி என்பது அவர்கள் பொறுத்தவரை கானல்நீராகவே இருக்கும்.)

**அஹங்காரம் பலம் தர்பம் காமம்**
**க்ரோதம் ச ஸம்ச்ரிதா : ।**
**மாமாத்மபரதேஹேஷு ப்ரத்விஷந்தோ**
**அப்ய ஸூயகா : ॥** (18)

*''அகங்காரம், வலிமை (பலம்), இறுமாப்பு, காமம், குரோதம் ஆகியவற்றை உடையவர்கள் தங்கள் உடலிலும் மற்றைய உயிர் உடல்களிடத்தும் உறைகின்ற என்னை வெறுத்து அவமதிக்கின்றனர்.''*

*(மதம், இனம் மொழி , இடம் எனும் வேற்றுமைகளைக் கடந்து மனிதனாகத் திகழ்ந்தால் போட்டி பொறாமை, வன்முறை போன்ற தீயபண்புகள் தோன்ற-வளரா என்பதை இந்து சமயம் இச்செய்யுளில் நன்றாக கோடிட்டுக்காட்டியுள்ளதை பகவான் மூலம் அறிகின்றோம். தன் பலத்தை தீயனவற்றிற்குப் பயன்படுத்துவதும் 'என்னால்மட்டும் முடியும், நானே அனுபவிப்பேன்' போன்ற அகங்கார மமதை இறுமாப்பு உணர்வுகள் அமைவதும் எனக்குக் கிடைக்காதது , நான் அனுபவிக்காது எனக்கு இன்பம் தராதது யாவும் பிறர்க்கும் அமையக் கூடாது எனும் பகைமை உணர்வால் பெறப்படும் குரோதம் எனும் பகைமை உணர்வு வளருவதும் மனிதனை மிருகமாக்கி விடுகின்றன. மற்ற உயிர்கள் யாவும் அவ் இறைவனின் படைப்பாற்றலே என்பதை, அவ்வுயிர்களின் ஆத்மாவாக அவ் இறைவன் திகழ்கின்றான் என்பதை உடல்களின் தோற்றங்கள் மாறுபட்டாலும் அவற்றுள் இருக்கும் உயிர்*

எல்லோர்க்கும் போல்தான் என்பதை ஒரு சிறிது கணநேரம் நினைத்தாலே அதுவே மனிதனைக் திருத்திடும் நல்வாய்ப் புக்களாக அமையும்.)

> தானஹம் த்விஷத:க்ருரான்
> ஸம்ஸாரேஷு நராதமான் ।
> க்ஷிபாம்யஜஸ்மமசுபானாஸு
> ரீஷ்வேவ போனிஷு ॥ (19)

''பகைமை உணர்வு கொண்டவர்கள் சிந்தனையாலும் செயலாலும் கொடியவர்களாகத் திகழ்வோர் கீழான குணம் கொண்ட கடைமக்கள் இழிந்த குணம் உடையோர் ஆகியோரை நான் மறுபடியும் மறுபடிம் பிறந்து இறந்து உழலும் இந்த அசுர குணம் மிக்க (மக்கள்) இனத்திலேயே பிறப்பிக்கின்றேன்.''

(பித்தளைப் பாத்திரத்தின் மீது களிம்பு இருக்கும் வரை அப்பாத்திரங்கள் பளபளப்பதில்லை. அக்களிம்பினை புளியினால் நன்ருகத் தேய்த்து அழித்திடும்போதுதான் பாத்திரம் பளிச்சிடும். மனிதனின் சிந்தனை, செயல், மனம் ஆகியன ஆணவம், குரோதம், காமம் எனும் களிம்பினால் மூடப்பட்டிருக்கும் வரை மனிதனின் ஆன்மா இறைவன் எனும் பளபளப்பை அடைவதில்லை. இங்கு இறைவன் எனும் மனிதனின் கீழான குணங்களைக் கண்டு பெறுதற்கரிய மனிதப்பிறவி அளித்தும் அதனைத்தன் தூயசிந்தனையினால் பயன் படுத்தி இயற்கை எனும் இறைவனை அறிந்துகொள்ள சிறிதும் விரும்பமின்றி, மிருகத்தைப் போன்று வாழ்தலைக்கண்டு சிறிதே கோபம் கொண்டு, அவனுக்கு மேலும் பாடம் புகட்ட, அவனை மீண்டும் மீண்டும் அந்தக் கீழான குண இயல்புகளைக் கொண்ட உணர்வுகளையே தந்து கரைசேரமுடியாத பிறவிப்பெருங்கடலில் இறைவன் தள்ளிவிடுகின்ருன்' சொல்லறிவை விட பட்டறிவே அவனைத் திருத்துமென்ருல் அந்த வழியினையே இறைவன் மனிதனுக்கு காட்ட விரும்புகின்ருன்.)

ஆஸுரீம் யோனிமாபன்னா மூடா
ஜன்மனி ஜன்மனி ।
மாமப்ராப்யைவ கௌந்தேய ததோ
யாந்த்யதமாம் கதிம் ॥ (20)

''குந்தியின் புதல்வா இந்த மூடர்கள் (காம குரோத, காமஉணர்வுகளால் பின்னப்பட்டு மீண்டும் மீண்டும் அசுரப்பிறவி எடுக்கும் மக்கள் ) பிறந்து, இறந்து என்று பல பிறவிகள் தோறும் அசுர குணம் கொண்டவர்களின் குடும்பத்தில்தோன்றி அதனால் என்னை அடையாமல் கீழான நிலையையே அடைகின்றனர்கள்.''

(இறைவனை மறந்த மனிதன் இறைமைப்பண்புகள் தன்னைஅண்டவிடுவதில்லை. அதனால் அவனிடம் தீய உணர்வுகளே தீயசிந்தனைகளே குடிபுகுவதால் தவறுகள் தொடர்ந்து அவன் தன் வாழ்க்கையில் ஒவ்வொரு நிலையிலும் மேற்கொள்வதால், மீளமுடியா படுகுழியில் தானே விழ வழிவகுத்துக்கொள்கிறான்.சிற்றின்பங்களை அனுபவித்தலே வாழ்க்கையின் குறிக்கோளாகக் கருதி அவற்றை அடைய, அனு பவிக்க பொய் பொறாமை, சூது, வன்முறை என்ற உணர்வு களுக்கு அடிமையாகி விடுகின்றான். அதனால் மிருகத்தைவிட கேவலமான வாழ்க்கையை மேற்கொள்கிறான். இருந்தாலும் மனிதனிடம் உள்ள ஒரு பெருமை அவனிடம் இருக்கும் சிந்திக்கும் ஆற்றலாகும். இந்த ஆற்றல் அறிவுடன் சேரும் போது மனிதன் தன் பிறவியின் சிறப்பினை அறிகின்றான். இந்த 'அறியும்' அரிய வாய்ப்பு ஒரு கணநேரம் அவன் வாழ்க்கையில் பல சமயங்கள் இறைவனால் கொடுக்கப்படுகின்றன. இது இறைவனின் இலட்சியம்கூட மனிதனை உயர்த்திட வேண்டும் என்பது தான். ஏனென்றால் அந்த மனிதனுள் ஆத்மாவாக அவ் இறைவன் இருக்கின்றான். ஆகவே இறைவன் மனிதனை அடியோடு அவிய விடுவதில்லை.)

த்ரிவதம் நரகஸ்யேதம் த்வாரம்
நாசனமாத்மன: ।
காம: க்ரோதஸ் ததா லோபஸ்
தஸ்மாதேதத் த்ரயம் த்யஜேத் ॥ (21)

''நரகத்தின் நுழைவாயிலாகக் கருதப்படும் காமம், குரோதம், லோபம் ஆகியன ஜீவாத்மாவான மனிதனைக் கெடுக்கும் ஆற்றல் உடையன. ஆகவே இந்த மூன்றையும், (ஒருவன் தன்னிடமிருந்து) விலக்கிடுதல் வேண்டும்.

(மனிதனை எந்த நிலைக்கும் தள்ளிவிடும் அசுரத்தன்மை கொண்டன காமம், குரோதம் மற்றும் லோபம் எனும் மூன்று பண்புகளாகும். ஐம்பொறிகளை சிற்றின்பங்களுக்காக உடல் இன்பங்களுக்காக எந்தச் சூழ்நிலையிலும் தள்ளிவிடும் ஆற்றல் வாய்ந்தது காமம். காம இச்சையை அனுபவித்திட மறுக்கும் எதனையும், எவரையும் அழித்திடும். கோபம் குரோதம் மனிதனை மிருகமாக்கிவிடும் தன்மை கொண்டன. காமவயப்பட்ட மனிதன், அனுபவித்திடும் பொருளை தனக்கு மட்டுமே சொந்தம் என்று எண்ணும் உணர்வு லோபம் என்று கொள்ளலாம். அல்லது சிற்றின்பங்களை அனுபவிப்பதற்கான பொருளை அலைந்து அலைந்து சேர்த்து வைக்கவும், பேராசை காரணமாக, அப்பொருளின் மீது பேய்த்தனமாக உரிமை கொண்டாடுவதும் லோபம் என்றும் பொருள்கொள்ளலாம். இந்த மூன்று குணங்களே மற்ற அசுர குணங்களுக்கு மூல காரணங்களாக விளங்கும். இம்மூன்றையும் மனிதன் தன்னிடமிருந்து விலக்கினால் - அழித்தால் அவனுடைய செயல், சிந்தனை தூய்மையாக்கப்பட்டு மயக்கம் ஒழிந்து ஜீவாத்மா பரிசுத்தமாகிவிடும்.)

ஏதைர்விமுக்த: கௌந்தேய
தமோத்வாரைஸ்த்ரிபிர்நர: ।
ஆசரத்யாத்மன: ச்லேயஸ்ததோ
யாதி பராம் கதிம் ॥ (22)

''அர்ச்சுனா! (மேற்சொன்ன) இம் மூன்று நரகவாயில்களிட மிருந்து விடுபட்டவன், தனக்குத்தானே நலம் செய்தவனாக

விளங்கி, பின்பு மோக்ஷம் எனும் முக்திநிலையை அடைகின்றான்''.

(முன்சொன்ன காமம், குரோதம், லோபம் எனும் அசுரப் பண்புகள் மனிதனிடம் அவனுடைய அறியாமையின் காரணமாகவே அவனிடம் குடிபுகுகின்றன. எப்போது அறியாமையாகிய இருள் விலகி ஞானம், எனும் ஒளி அவனுள் தன் ஒளிக்கிரணங்களை பாய்ச்சுகின்றதோ- அதாவது மனிதன் பிறவியின் பயனை உணர்ந்து அன்பு, தியாகம், கருணை போன்ற இறைமைப்பண்புகள் அவன் சிந்தனையில், செயலில் படர ஆரம்பிக்கின்றதோ அப்போதே மனிதனை அழித்திடும் முன்பு கூறிய காமம், குரோதம், லோபம் எனும் பண்பு அசுரப்பண்புகள் அழிய ஆரம்பிக்கின்றன. அதுவே நரகம் எனும் வாயிலை கடந்திட வழி காட்டுகின்றது.)

ய: சாஸ்த்ரவிதிமுத்ஸ்ருஜ்ய
வர்ததே காம காரத: ।
நஸ ஸித்திமவாப்னோதி ந ஸுகம்
ஸுகம் ந பராம் கதிம் ॥ (23)

''காம உணர்வுகளுக்கு அடிமைப்பட்டு சாத்திர விதிகளை மீறி நடப்பவன் யாராயினும், அவன் முழுமைய டையமாட்டான். சுகம் பெற மாட்டான். முக்திநிலை அடையப்பெறுன்''.

(பரிபூரணம் அல்லது முழுமை நிலை என்பது சித்தி எனும் ஞான அருளின் முடிவுநிலை. அதனை அடைய வேண்டுமென்றுல் காமம் எனும் சிற்றின்ப- உடலின்ப - புகழின்ப உணர்வுகளுக்கு ஆட்படக்கூடாது. அதுவுமின்றி, வாழ்க்கை உண்மைகளை இறைஉண்மைகளை இயற்கையின் ஆற்றலை உணர்த்திடும் சாத்திரம் எனும் அறநூல்கள் - சமயநூல்கள் கூறிடும் - உணர்த்திடும் அறவுரைகளை மீறி ஒருவன் நடக்கக் கூடது. ஏனென்றுல் எது நல்லது எது கெட்டது என்று பகுத்துப் பார்க்கமுடியாத ஒரு மயக்க நிலைக்கே அவனை காமம் தள்ளிவைத்திருக்கும். அந்த காம உணர்விலிருந்து விடுப்பட்டால்தான் சாத்திரம் கூறிடும் உபதேசங்களை

அவனால் சிந்தித்துப்படித்தல் முடியும். அதுவரை அவன் சுகம் எனும் ஆத்மானுபவ இன்ப உணர்வினையோ, அதனால் பெறப்படும் முக்தி எனும் பேரின்ப பெருநிலையினையோ அவனால் எண்ணிப்பரர்க்கமுடியாது.

தஸ்மாச்சாஸ்த்ரம் ப்ரமாணம் தே
கார்யாகார்யவ்யவஸ்திதௌ ।
ஞாத்வா சாஸ்த்ரவிதானோக்தம்
கர்மகர்துமிஹார்ஹஸி ॥ (24)

''ஆகவே, சாத்திரங்களே உனக்கு, எவை செய்யக்கூடாதன, எவை செய்யக்கூடியன என்று அறுதியிடுவதற்கு - வழிகாட்டுவதற்கு தகுந்த சத்தியவாக்காக - பிரமாணங்களாக உள்ளன. (ஆதலால்) சாத்திரங்கள் ஆணையிட்டுக் கூறுவனவற்றை அறிந்து- உணர்ந்து வினைகளை (பணிகளை) மேற்கொள்வாயாக''.

(மனிதன் ஆசைகளை அடக்குமளவு அவன் உயர்ந்தவனாகின்றான். புலனின்பங்களை மறக்குமளவு அவன் பக்குவப்படுகின்றான். ஆசைகள் பெருகுமளவு மனிதன் பொறுமைக்கும், கோபத்திற்கும் இரையாகின்றான். ஆகவே அவன் தன்னைத் திருத்திக்கொள்ள, தன்னை மேம்படுத்திக் கொள்ள அவனால் சுயமாக சிந்திக்கமுடியாதபோது, நமது முன்னோர்கள் - மாமுனிவர்கள், மெய்யடியார்கள் தந்துவிட்டுப்போன மனுபோன்ற சாத்திரங்கள் - அறநூல்கள் ஆகியனமட்டுமே நமக்கு வழிகாட்டுவனவாகும். புரட்சி என்ற பெயரில், பகுத்தறிவு என்ற போர்வையில் சாத்திரங்கள் கூறும் அரிய வாழ்க்கை உண்மைகளை நாம் ஒதுக்கி வாழ்ந்தோமேயானால், நம் அழிவை நாமே விரைந்து தேடிக்கொள்கிறோம் என்றே பொருளாகும்.)

(பதினாறும் அத்தியாயம்முற்றும்.)

# பதினேழாம் அத்தியாயம்

## சிரத்தாத்ரய விபாக யோகம்

### அர்ச்சுனன் கூறியது

யே சாஸ்த்ர விதிமுத்ஸ்ருஜ்ய
யஜந்தே ச்ரத்தயான்விதா: ।
தேஷாம் நிஷ்டா து கா க்ருஷ்ண
ஸத்வமாஹோ ரஜஸ்தம: ॥ (1)

*''கிருஷ்ணா, யார் ஒருவர் சாத்திர விதிமுறைகளை மீறி, அதே சமயம் ஆர்வமுடையவர்களாய் இறைவழிபாடு செய்கின்றார்களோ அவர்களது நிலை சாத்விகமா? ரஜஸமா? தமஸமா? எத்தகையது''?*

*(அர்ச்சுனன் ஒரு சாதாரண மனித நிலையில் நின்று சந்தேகம் ஒன்றினை எழுப்பி, அதற்கு இறைவன் மூலம் விடை காணமுயலுகின்றான். வேதங்களின் பால் பெரிதும் ஈடுபாடுகொண்டவர்கள்கூட, சாத்திரங்களில் கூறப்பட்ட*

விதிமுறைகளை, சமயச் சடங்குகளை சரிவர மேற்கொண்டாலும், அவற்றிற்கு ஏற்ப நடந்து கொள்வதில்லை. சொல்வேறு, செயல்வேறு, எண்ணம் வேறு என்று நடந்து கொள்வதால் அவர்கள் ஒரு போலியானசமயவாதிகளே ஆவர். ஆனால் சாதாரண மனிதர்கள் பலரும் சாத்திரங்களில் கூறப்பட்ட அறிவுரைகளை, நியதிகளை அறியாவிட்டாலும், மனதில் பக்தி என்ற உணர்வின் உந்துதலினால் நாளும் இறைவழிபாட்டை மேற்கொள்கின்றனர். இதுபோது அப்பக்தனின் சிரத்தை, பூரண நம்பிக்கை, அக்கரை தெரியவரும். நாளும் காலை நாலாயிரம் பாடினாலும், தேவாரம் பாடினாலும், தேவாரம் இசைத்தாலும் மேற்கூறிய மூன்று பண்புகள் இல்லாவிடின், அவர்கள் போலியான ஒரு வாழ்க்கையே மேற்கொண்டவராவர். ஆகவே சாத்திர அறிவு இன்றி, மேற்கூறிய மூன்று பண்புகளுடன் ஒருவன் இறைவனை வழிபட்டால் அவன் தன் வாழ்க்கையில் மேன்மை அடைகின்றானா? இல்லையெனில் இடையிலேயே நின்று விடுகின்றானா? அல்லது சாத்திர அறிவு இல்லையாதலால் கீழான நிலையை அடைகின்றானா? அதாவது சாத்திர அறிவு இல்லாத இறைவழிபாடு ஒருவனுக்கு சத்துவ அல்லது ரஜோ அல்லது தமோ குணபயன்களைத் தந்திடுமா என்பது அர்ச்சுனனின் கேள்வியாகும்.)

## கிருஷ்ணபகவான் கூறியது

த்ரிவிதா பவதி ச்ரத்தா
தேஹினாம் ஸா ஸ்வபாவஜா ।
ஸாத்விகீ ராஜஸீ சைவ தாமஸீ
சேதி தாம் ச்ருணு ॥ (2)

''தேகிகளிடம் (உடலோடு கூடிய உயிர்களிடம்) இயல் பாக அமைந்துள்ள சிரத்தையே (ஈடுபாடே) சாத்வீகம், ராஜஸம் மற்றும் தாமஸம் என்று மூன்று வகையாக உள்ளது. அதனைக் கேட்பாயாக''.

*(தேகம் (உடல்) தன்னுள்ளே உயிரைக் கொண்டுள்ளதால், அத்தேகம் தேகி என்று அழைக்கப்பெறுகிறது. மரணம் அடைந்த உயிர்க்கு அதன் முன்வினைப் பயன்களுக்கேற்ப அடுத்தப்பிறவி என்று உள்ளது என்பது இந்து சமயத்தின் பெரு நம்பிக்கையாகும். அவ்வகையிலே, இப்பிறவியில் மனிதப்பிறவியாக எடுக்கும் உயிரானது முற்பிறவியில் அது மேற்கொண்ட வினைகளின் தொடர்பினால் அவற்றின் இயல்பு, தன்மை, ஆகியவற்றை இப்போதும் பெறுகின்றது. அந்த குண இயல்புகளே ரஜோ, தமோ, சத்துவ குணங்களாகப் பகுக்கப்பெறுகின்றன.)*

**ஸத்வானுரூபா ஸர்வஸ்ய**
**ச்ரத்தா பவதி பாரத ।**
**ச்ரத்தாமயோ அயம் புருஷோ**
**யோ யச்ச்ரத்த: ஸ ஏவ ஸ: ॥** (3)

*''பார்த்தா (அர்ச்சுனா) ஒவ்வொருவரின் மன இயல்புகளுக்கேற்ப அவர்களது ஈடுபாடு (சிரத்தை) அமைந்திடும். மனிதன் எதிலும் (இயற்கையாகவே) ஈடுபாடு உடையவன். அவனது ஈடுபாடே அவனாக விளங்குகிறது''.*

*(ஈடுபாடு எனும் இயல்பு ஒவ்வொரு உயிருள்ள உடலிலும் உள்ளது. அதுவும் மனிதனிடம் அவன் சிந்திக்கத் தெரிந்தவனாதலால் அந்த ஈடுபாடு எனும் உணர்வு என்றும் அதிகமாகவே அமைந்திடும். சிந்தனையும், மன உணர்வும் என்றும் விழிப்புடன் இருத்தல், வினையாற்றிட வேண்டும் என்ற உள்ளத்துடிப்பு, அவ்வாறு வினையாற்றிடும் போது எழும் மகிழ்ச்சி, நாம் நினைத்திடும் பணி, எண்ணம் நிறைவேறிவிடும் என்ற நம்பிக்கை ஆகியன ஒன்று சேர்தலே ஈடுபாடு என்பது ஆகும். மனிதன் ஈடுபாடு கொள்ளும் அளவு அவனது இயல்பு, அவன் அடைந்திடும் வெற்றி ஆகியனவற்றை அறிந்து கொள்ளலாம். மனிதனின் ஈடுபாடு உயர்ந்ததாக அமைந்திடும் போது அவன் மேன்மையுறுகின்றான். கீழானவற்றில் அவன்*

மனமும், சிந்தனையும் ஈடுபடும்போது அவன் அழிவை அவனே தேடிச்செல்கிறான்.)

**யஜந்தே ஸாத்விகா தேவான்**
**யக்ஷர க்ஷாம்ஸி ராஜஸா: ।**
**ப்ரேதான் பூதகணாம்ஸ்சான்யே**
**யஜந்தே தாமஸா ஜனா: ॥** (4)

''சாத்விக குண இயல்புகளுடன் ஈடுபாடு கொண்டவர்கள் கடவுளர்களை வணங்குவார்கள்; ரஜோ குணத்தில் ஈடுபாடு உள்ளவர்கள் யக்ஷர்கள் மற்றும் ராக்ஷசர்களை வணங்குவர்; தாமஸ குண இயல்புகளின்பால் ஈடுபாடு மிக்கவர்கள் ஆவிகளை, பூத கணங்களை பூஜை செய்வார்கள்''.

(சாத்துவீகம் என்பது மேன்மைக்கு இட்டுச் செல்லும் குண இயல்புகளைக் கொண்டது. இக்குணம் கொண்டவர்களது சொல், செயல், எண்ணம், மட்டுமின்றி உடலும் தூய்மையானவற்றையே நாடும். தூய்மையாகவே இருக்கும். பொதுநலம் நாடும் இவர்கள் கடவுளர்களை எப்போதும் வணங்குவர். அறிவு மேம்பட்டிருக்கும். ஞானத்தின் கண் நாட்டம் பெரிதும் இருக்கும். ஆகவே பயன் கருதாது, பெரிய கடவுளர்களாகப் போற்றி வணங்கப்படும் விஷ்ணு, சிவன் என்று அவர்களையே நாளும் வழிபடுவர். அடுத்துவரும் குணமான ராஜஸ பிரிவினர் தங்கள் சுயநலம் காரணமாக, தங்களை மட்டுமே மனதிற்கொண்டு பதவி, புகழ், பொருள் எனும் உலகாயுத ஆதாயங்களுக்காக சிறு சிறு ஆற்றல்களை தந்திடும் சிறு தெய்வங்களை வணங்குவர். அடுத்து மூன்றாவதாக தாமஸ குணத்தவர் தங்கள் சுயலாபங்களுக்காக மற்றவர் அழிவைப்பற்றியும் கவலைப்படார். பிறர்துன்பங்களின் வழியில் தங்கள் மகிழ்ச்சியை எதிர்பார்ப்பர். தூய்மையற்ற மனமும், சிந்தனையும் கொண்ட இவர்கள் அற்பசுகங்களுக்காக ஆவிகளை, தீய தேவதைகளை பூதகணங்களை அச்சம்தரும்

*(தேகம் (உடல்) தன்னுள்ளே உயிரைக் கொண்டுள்ளதால், அத்தேகம் தேகி என்று அழைக்கப்பெறுகிறது. மரணம் அடைந்த உயிர்க்கு அதன் முன்வினைப் பயன்களுக்கேற்ப அடுத்தப்பிறவி என்று உள்ளது என்பது இந்து சமயத்தின் பெரு நம்பிக்கையாகும். அவ்வகையிலே, இப்பிறவியில் மனிதப்பிறவியாக எடுக்கும் உயிரானது முற்பிறவியில் அது மேற்கொண்ட வினைகளின் தொடர்பினால் அவற்றின் இயல்பு, தன்மை, ஆகியவற்றை இப்போதும் பெறுகின்றது. அந்த குண இயல்புகளே ரஜோ, தமோ, சத்துவ குணங்களாகப் பகுக்கப்பெறுகின்றன.)*

**ஸத்வானுரூபா ஸர்வஸ்ய**
**ச்ரத்தா பவதி பாரத ।**
**ச்ரத்தாமயோ அயம் புருஷோ**
**யோ யச்ச்ரத்த: ஸ ஏவ ஸ: ॥** (3)

*''பார்த்தா (அர்ச்சுனா) ஒவ்வொருவரின் மன இயல்புகளுக்கேற்ப அவர்களது ஈடுபாடு (சிரத்தை) அமைந்திடும். மனிதன் எதிலும் (இயற்கையாகவே) ஈடுபாடு உடையவன். அவனது ஈடுபாடே அவனாக விளங்குகிறது''.*

*(ஈடுபாடு எனும் இயல்பு ஒவ்வொரு உயிருள்ள உடலிலும் உள்ளது. அதுவும் மனிதனிடம் அவன் சிந்திக்கத் தெரிந்தவனாதலால் அந்த ஈடுபாடு எனும் உணர்வு என்றும் அதிகமாகவே அமைந்திடும். சிந்தனையும், மன உணர்வும் என்றும் விழிப்புடன் இருத்தல், வினையாற்றிட வேண்டும் என்ற உள்ளத்துடிப்பு, அவ்வாறு வினையாற்றிடும் போது எழும் மகிழ்ச்சி, நாம் நினைத்திடும் பணி, எண்ணம் நிறைவேறிவிடும் என்ற நம்பிக்கை ஆகியன ஒன்று சேர்தலே ஈடுபாடு என்பது ஆகும். மனிதன் ஈடுபாடு கொள்ளும் அளவு அவனது இயல்பு, அவன் அடைந்திடும் வெற்றி ஆகியனவற்றை அறிந்து கொள்ளலாம். மனிதனின் ஈடுபாடு உயர்ந்ததாக அமைந்திடும் போது அவன் மேன்மையுறுகின்றான். கீழானவற்றில் அவன்*

மனமும், சிந்தனையும் ஈடுபடும்போது அவன் அழிவை அவனே தேடிச்செல்கிறான்.)

**யஜந்தே ஸாத்விகா தேவான்**
**யக்ஷர க்ஷாம்ஸி ராஜஸா: ।**
**ப்ரேதான் பூதகணான்ஸ்சான்யே**
**யஜந்தே தாமஸா ஜனா: ॥** (4)

''சாத்விக குண இயல்புகளுடன் ஈடுபாடு கொண்டவர்கள் கடவுளர்களை வணங்குவார்கள்; ரஜோ குணத்தில் ஈடுபாடு உள்ளவர்கள் யக்ஷர்கள் மற்றும் ராக்ஷசர்களை வணங்குவர்; தாமஸ குண இயல்புகளின்பால் ஈடுபாடு மிக்கவர்கள் ஆவிகளை, பூத கணங்களை பூஜை செய்வார்கள்''.

(சாத்துவீகம் என்பது மேன்மைக்கு இட்டுச் செல்லும் குண இயல்புகளைக் கொண்டது. இக்குணம் கொண்டவர்களது சொல், செயல், எண்ணம், மட்டுமின்றி உடலும் தூய்மையானவற்றையே நாடும். தூய்மையாகவே இருக்கும். பொதுநலம் நாடும் இவர்கள் கடவுளர்களை எப்போதும் வணங்குவர். அறிவு மேம்பட்டிருக்கும். ஞானத்தின் கண் நாட்டம் பெரிதும் இருக்கும். ஆகவே பயன் கருதாது, பெரிய கடவுளர்களாகப் போற்றி வணங்கப்படும் விஷ்ணு, சிவன் என்று அவர்களையே நாளும் வழிபடுவர். அடுத்துவரும் குணமான ராஜஸ பிரிவினர் தங்கள் சுயநலம் காரணமாக, தங்களை மட்டுமே மனதிற்கொண்டு பதவி, புகழ், பொருள் எனும் உலகாயுத ஆதாயங்களுக்காக சிறு சிறு ஆற்றல்களை தந்திடும் சிறு தெய்வங்களை வணங்குவர். அடுத்து மூன்றுவதாக தாமஸ குணத்தவர் தங்கள் சுயலாபங்களுக்காக மற்றவர் அழிவைப்பற்றியும் கவலைப்படார். பிறர்துன்பங்களின் வழியில் தங்கள் மகிழ்ச்சியை எதிர்பார்ப்பர். தூய்மையற்ற மனமும், சிந்தனையும் கொண்ட இவர்கள் அற்பசுகங்களுக்காக ஆவிகளை, தீய தேவதைகளை பூதகணங்களை அச்சம்தரும்

*சூழ்நிலையில் வைத்து வணங்கி மகிழ்வர்.)*

**அசாஸ்த்ரவிஹிதம் கோரம்**
**தப்யந்தே யோ தபோ ஜனா: ।**
**தம்பாஹங்காரஸம்யுக்தா:**
**காமராகபலான்விதா: ॥** (5)

**கர்ஷயந்த: சரீரஸ்தம்**
**பூதக்ராமமசேதஸ: ।**
**மாம் சைவாந்த: சரீரஸ்தம் தான்**
**வித்யாஸுரநிஸ்சயான் ॥** (6)

*''வீண் பகட்டும், மமதையும் உடையவர்களாய், காமமும் மற்றும் மிக்கப்பெற்றவர்களாய் விளங்கி யார் ஒருவர் தங்கள் உடலையும், அவ்வுடல் பெற்றுள்ள ஐம்பொறிகளையும் அவர்கள்தம் உள்ளத்தில் உறையும் என்னையும் பலவாறு துன்புறுத்தி, சாத்திரங்கள் கூறுத கடுமையான தவத்தை மேற்கொள்கிறுர்களோ அவர்கள் அசுரத்தன்மை கொண்ட வழிமுறைகளை மேற்கொள்வர் என்பதை அறிவாயாக''.*

*(மேற்குறிப்பிட்ட இரண்டு செய்யுட்களிலும் இந்து சமயத்தின் பெருமை கோடிட்டுக் காண்பிக்கப்படுகின்றது. சிலர் சமயப் பண்டிகைகளின்போது நெருப்பில் நடந்தும், உதட்டிலும், நாக்கிலும், கன்னத்திலும் கம்பியைச் செருகிக்கொண்டும், ஆணித்தரையில் படுத்தும் 'சாகசங்கள்' என்ற பெயரில் தங்களை விளம்பரப்படுத்திக்கொள்கின்றனர். இதனைப் பார்த்து பகுத்தறிவாளர்கள் இந்த சமயம் மூடநம்பிக்கைகளின் உறைவிடம் என்று கூக்குரலிட்டு தங்களுக்கு விளம்பரம் தேடிக்கொள்கின்றனர். ஆனால், இந்த இரண்டு செய்யுட்களிலும் பகவான் நேரிடையாக இத்தகுச் செயல்களைக் கண்டித்துள்ளது நமது சமயத்தின் 'சாத்துவிக' பண்பு தெரியச் செய்துள்ளது. 'தான்' என்னும் மமதையால், 'தனது' என்ற அகங்காரத்தில தங்கள் உடலை வருத்திக்கொண்டு, சுய விளம்பரம்*

*செய்துகொள்கின்றனர். அல்லது மனப்பக்குவமின்மை காரணமாக நரம்பு வீரிய தளர்ச்சியினாலும் பிறரின் தூண்டுதலின் பேரிலும் தங்கள் உடலினை, சமயத்தின் பெயரால் பலவாறு வருத்தி ,பிறர்க்கும் தனக்கும் துன்பத்தையே தருகின்றனர். இத்தகு மனப்போக்குமிக்கவர்களுக்கு காமமும், பதவி, புகழ்மேல் கொண்ட பற்றுதல்களே துணைபோகின்றன. இத்தகையோரால் இறைவன் மகிழ்ச்சி அடைவதில்லை. இவர்கள் இறைவனைப் பொறுத்தவரை சமுதாயத்தை அழித்திடும் வேர்ப்பூச்சிகளே ஆவர். இவர்களது வழிமுறைகளை, என்றுமே இந்து சமய சாத்திரங்கள் புகழ்ந்ததில்லை. ஏற்றுக்கொண்டதில்லை. சாத்திரங்களை மீறி நடந்திடும் இவர்கள் அரக்கர்களே ஆவர்.)*

**ஆஹாரஸ்த்வபி ஸர்வஸ்ய**
**த்ரிவிதோ பவதி ப்ரிய: ।**
**யக்ஞஸ்தபஸ்ததா தானம்**
**தேஷாம் பேதமிமம் ச்ருணு ॥** (7)

*''ஒவ்வொருவர் மேற்கொள்ளும் உணவு வகைகளில் கூட மூன்று வகை உள்ளன. அவ்வாறே வேள்வி (யாகம்), தவம், தானம் ஆகியனவும் மூன்றுவகையாக உள்ளன. அந்த வேற்றுமைகளை கேட்பாயாக''.*

*(முன்பு கூறியபடி மூன்று குண இயல்புகொண்டவர்களுக்கு ஈடுபாடு என்பது எவ்வாறு வேறுபடுகிறதோ, அதே போன்று சத்துவ, ரஜோ, தமஸ குண இயல்புகொண்டவர்களுக்கென்று உணவு வகைகளும் மாறுபடுகின்றன. அதுமட்டுமின்றி அவர்களுக்கென்று வேள்வி, தவம், தானம் வகைகள் கூட மாறுபடுகின்றன.)*

**ஆயு: ஸத்வபலாரோக்ய ஸுக**
**ப்ரீதி விவாதனா: ।**
**ரஸ்யா: ஸ்நிக்தா: ஸ்திரா**
**ஹ்ருத்யா ஆஹாரா:**
**ஸாத்விக ப்ரியா:॥** (8)

*சூழ்நிலையில் வைத்து வணங்கி மகிழ்வர்.)*

**அசாஸ்த்ரவிஹிதம் கோரம்**
**தப்யந்தே யோ தபோ ஜனா: ।**
**தம்பாஹங்காரஸம்யுக்தா:**
**காமராகபலான்விதா: ॥ (5)**

**கர்ஷயந்த: சரீரஸ்தம்**
**பூதக்ராமமசேதஸ: ।**
**மாம் சைவாந்த: சரீரஸ்தம் தான்**
**வித்யாஸுரநிஸ்சயான் ॥ (6)**

*''வீண் பகட்டும், மமதையும் உடையவர்களாய், காமமும் மற்றும் மிக்கப்பெற்றவர்களாய் விளங்கி யார் ஒருவர் தங்கள் உடலையும், அவ்வுடல் பெற்றுள்ள ஐம்பொறிகளையும் அவர்கள்தம் உள்ளத்தில் உறையும் என்னையும் பலவாறு துன்புறுத்தி, சாத்திரங்கள் கூறுத கடுமையான தவத்தை மேற்கொள்கிறுர்களோ அவர்கள் அசுரத்தன்மை கொண்ட வழிமுறைகளை மேற்கொள்வர் என்பதை அறிவாயாக''.*

*(மேற்குறிப்பிட்ட இரண்டு செய்யுட்களிலும் இந்து சமயத்தின் பெருமை கோடிட்டுக் காண்பிக்கப்படுகின்றது. சிலர் சமயப் பண்டிகைகளின்போது நெருப்பில் நடந்தும், உதட்டிலும், நாக்கிலும், கன்னத்திலும் கம்பியைச் செருகிக்கொண்டும், ஆணித்தரையில் படுத்தும் 'சாகசங்கள்' என்ற பெயரில் தங்களை விளம்பரப்படுத்திக்கொள்கின்றனர். இதனைப் பார்த்து பகுத்தறிவாளர்கள் இந்த சமயம் மூடநம்பிக்கைகளின் உறைவிடம் என்று கூக்குரலிட்டு தங்களுக்கு விளம்பரம் தேடிக்கொள்கின்றனர். ஆனால், இந்த இரண்டு செய்யுட்களிலும் பகவான் நேரிடையாக இத்தகுச் செயல்களைக் கண்டித்துள்ளது நமது சமயத்தின் 'சாத்துவிக' பண்பு தெரியச் செய்துள்ளது. 'தான்' என்னும் மமதையால், 'தனது' என்ற அகங்காரத்தில தங்கள் உடலை வருத்திக்கொண்டு, சுய விளம்பரம்*

செய்துகொள்கின்றனர். அல்லது மனப்பக்குவமின்மை காரணமாக நரம்பு வீரிய தளர்ச்சியினாலும் பிறரின் தூண்டுதலின் பேரிலும் தங்கள் உடலினை, சமயத்தின் பெயரால் பலவாறு வருத்தி ,பிறர்க்கும் தனக்கும் துன்பத்தையே தருகின்றனர். இத்தகு மனப்போக்குமிக்கவர்களுக்கு காமமும், பதவி, புகழ்மேல் கொண்ட பற்றுதல்களே துணைபோகின்றன. இத்தகையோரால் இறைவன் மகிழ்ச்சி அடைவதில்லை. இவர்கள் இறைவனைப் பொறுத்தவரை சமுதாயத்தை அழித்திடும் வேர்ப்பூச்சிகளே ஆவர். இவர்களது வழிமுறைகளை, என்றுமே இந்து சமய சாத்திரங்கள் புகழ்ந்ததில்லை. ஏற்றுக்கொண்டதில்லை. சாத்திரங்களை மீறி நடந்திடும் இவர்கள் அரக்கர்களே ஆவர்.)

ஆஹாரஸ்த்வபி ஸர்வஸ்ய
த்ரிவிதோ பவதி ப்ரிய: ।
யக்ஞஸ்தபஸ்ததா தானம்
தேஷாம் பேதமிமம் ச்ருணு ॥ (7)

''ஒவ்வொருவர் மேற்கொள்ளும் உணவு வகைகளில் கூட மூன்று வகை உள்ளன. அவ்வாறே வேள்வி (யாகம்), தவம், தானம் ஆகியனவும் மூன்றுவகையாக உள்ளன. அந்த வேற்றுமைகளை கேட்பாயாக''.

(முன்பு கூறியபடி மூன்று குண இயல்புகொண்டவர்களுக்கு ஈடுபாடு என்பது எவ்வாறு வேறுபடுகிறதோ, அதே போன்று சத்துவ, ரஜோ, தமஸ குண இயல்புகொண்டவர்களுக்கென்று உணவு வகைகளும் மாறுபடுகின்றன. அதுமட்டுமின்றி அவர்களுக்கென்று வேள்வி, தவம், தானம் வகைகள் கூட மாறுபடுகின்றன.)

ஆயு: ஸத்வபலாரோக்ய ஸுக
ப்ரீதி விவாதனா: ।
ரஸ்யா: ஸ்நிக்தா: ஸ்திரா
ஹ்ருத்யா ஆஹாரா:
ஸாத்விக ப்ரியா:॥ (8)

''நீண்ட ஆயுள், அறிவு, வலிமை, உடல்நலம், சுகம், சுவை ஆகியனவற்றை வளர்ப்பவைகள், சாறு உள்ளவைகள், பசை உள்ளவைகள் (மிருதுவானவைகள்) ,வலிமை தருபவைகள், இன்பம் தருபவைகள் ஆகிய உணவு வகைகளையே சாத்வீக குணத்தோர் விரும்பி உண்பர்''.

(சத்துள்ள உணவே சாத்வீக குணத்தை வளர்த்திடும். மிருகங்களில் அவற்றின் மிருக நிலையிலே எண்ணிப்பார்த்திடும் போது பசு, ஆடு, யானை போன்றன சாத்வீகம் கொண்டன என்றே துணிந்து கூறலாம். வெறும் தாவர இன உணவினையே உட்கொள்ளும் அவற்றிடையே நிலவும் வலிமை, பயன் ஆகியவையே அவை உட்கொள்ளும் உணவின் சிறப்பினைக் கூறும். விரைவில் ஜீரண மாகி பசியை உண்டாக்கிடும் உணவு, அதிக நேரம் வயிற்றில் இருந்து, உடல் சக்தியை உண்டாக்கிடும் உணவு ஒருவனது ஆயுளை நீடிக்கச் செய்யும் பெருமை கொண்டன. சாறு அதிகமுள்ளபழ வகைகள், மாவு பகுதி அதிகமுள்ள பழங்கள், உணர்ச்சியைத் தூண்டாத அரிசி, பருப்பு போன்ற தானியங்கள் ஒருவனது அறிவை, உடல் நலத்தை, வளர்த்திடும் ஆற்றல் வாய்ந்தன. மா, பலா போன்ற கனிகள் இனிமைகொண்டு, பெயர் கூறியவுடன் சுவைத்துப் பார்க்கத் தூண்டும் பழங்கள் இரத்தச் சேர்க்கையை அதிகரிக்கும். இவையாவும் இயற்கை நமக்குத் தந்திட்ட சாத்துவிக உணவு வகைகளாகும்.)

கட்வம்லல வணுத்யுஷ்ண<br>
தீஷ்ண ரூக்ஷ விதாஹின: ।<br>
ஆஹாரா ராஜஸஸ் யேஷ்டா<br>
து:கசோகாமயப்ரதா: ॥ (9)

''கசப்பு, புளிப்பு, உவர்ப்பு, சூடுமிக்கன, காரம், வறட்சி, எரிச்சல் தருபவை, துன்பம், துயரம், நோய் ஆகியனவற்றைத் தருபவன ஆகிய உணவு வகைகள் ரஜோ குணத்தாருக்குப் பெரும் விருப்பமானவையாகும்.

*(ரஜோ குணத்தவர்களே நம்மில் அதிகம் உள்ளவர்கள். யாரிடம் அதிகமான வியாதிகள் உள்ளதோ, அவர்கள் ரஜோ குணத்தவர் என்று கூறிவிடலாம். ஒருவனுடைய வாழ்க்கையில் 'உணவு' பெரிதும் அங்கம் வகிக்கின்றது. எப்போது மனிதன் 'நெருப்பின்' ஆற்றலை அறிந்து கொண்டானோ, அதன் ஆற்றலை தன் உணவுக்குப் பயன்படுத்திக்கொண்டு, இறுதியில் மனிதன் நாக்குக்கு அடிமையாகிவிட்டான். அதனால் உண்ணும் உணவிற்கேற்ப அவன் செயல்பட ஆரம்பித்து விட்டான். மேலும் அளவுக்குமீறி ரஜோ குணத்தார் இவ்வுணவு வகைகளை சுவைத்திட ஆரம்பித்ததால் விரைவில் உணர்ச்சிகளுக்கு அடிமையாகி விடுகின்றனர். இதனால் அவன் அறிவை முந்தி சொல் வெளிவந்து விடுகின்றது. சொல்லை முந்தி செயல்வெளிப்பட்டு விடுகிறது. அதாவது அவன் கட்டுப்பாட்டுக்குள் இருப்பதில்லை. உணர்ச்சி மயமான ஒரு உயிராகத் திகழ்கின்றான். காரம் அதிகமுள்ள வர்கள் கோபத்திற்கு அடிமையாகிவிடுகின்றனர். புளிப்பு, உவர்ப்பு, சூடுமிக்க உணவு போன்றவற்றை அதிகமாக உட்கொள்பவர்கள் பலவகையான நோய்களுக்கு அடிமையாகிவிடுகின்றனர். சாதாரணமாக நுணுகிப்பார்த்தால் ரஜோ குணத்தார் நாடிடும் மேற்கூறிய உணவுவகைகள் மிருகங்கள் கூட பெரிதும் விரும்புவதில்லை.)*

**யாதமாமம் கதாஸம் பூதி**
**பர்யுஷிதம் ச யத் ।**
**உச்சிஷ்டமபி சாமேத்யம் போஜனம்**
**தாமஸப்ரியம் ॥ (10)**

*''யாமம் கழிந்த, ருசியற்ற, துர்நாற்றம் கொண்ட, பழைய, எச்சிற்படுத்தப்பட்ட, தூய்மையற்ற உணவினையே தமோ குணத்தார் விரும்பி உண்பர்''.*

*(தமோ குணத்தினர் என்றால் ஏதோ சேரிவாழ் மக்கள் என்று எண்ணுவது தவறு. இக்குணம் கொண்டோர் எல்லா நிலை*

''நீண்ட ஆயுள், அறிவு, வலிமை, உடல்நலம், சுகம், சுவை ஆகியனவற்றை வளர்ப்பவைகள், சாறு உள்ளவைகள், பசை உள்ளவைகள் (மிருதுவானவைகள்) ,வலிமை தருபவைகள், இன்பம் தருபவைகள் ஆகிய உணவு வகைகளையே சாத்வீக குணத் தோர் விரும்பி உண்பர்''.

(சத்துள்ள உணவே சாத்வீக குணத்தை வளர்த்திடும். மிருகங்களில் அவற்றின் மிருக நிலையிலே எண்ணிப்பார்த்திடும் போது பசு, ஆடு, யானை போன்றன சாத்வீகம் கொண்டன என்றே துணிந்து கூறலாம். வெறும் தாவர இன உணவினையே உட்கொள்ளும் அவற்றிடையே நிலவும் வலிமை, பயன் ஆகியவையே அவை உட்கொள்ளும் உணவின் சிறப்பினைக் கூறும். விரைவில் ஜீரண மாகி பசியை உண்டாக்கிடும் உணவு, அதிக நேரம் வயிற்றில் இருந்து, உடல் சக்தியை உண்டாக்கிடும் உணவு ஒருவனது ஆயுளை நீடிக்கச் செய்யும் பெருமை கொண்டன. சாறு அதிகமுள்ளபழ வகைகள், மாவு பகுதி அதிகமுள்ள பழங்கள், உணர்ச்சியைத் தூண்டாத அரிசி, பருப்பு போன்ற தானியங்கள் ஒருவனது அறிவை, உடல் நலத்தை, வளர்த்திடும் ஆற்றல் வாய்ந்தன. மா, பலா போன்ற கனிகள் இனிமைகொண்டு, பெயர் கூறியவுடன் சுவைத்துப் பார்க்கத் தூண்டும் பழங்கள் இரத்தச் சேர்க்கையை அதிகரிக்கும். இவையாவும் இயற்கை நமக்குத் தந்திட்ட சாத்துவிக உணவு வகைகளாகும்.)

கட்வம்ல்ல வணுத்யுஷ்ண
தீஷ்ண ரூக்ஷ விதாஹின: ।
ஆஹாரா ராஜஸஸ் யேஷ்டா
து:கசோகாமயப்ரதா: ॥ (9)

''கசப்பு, புளிப்பு, உவர்ப்பு, சூடுமிக்கன, காரம், வறட்சி, எரிச்சல் தருபவை, துன்பம், துயரம், நோய் ஆகியனவற்றைத் தருபவன ஆகிய உணவு வகைகள் ரஜோ குணத்தாருக்குப் பெரும் விருப்பமானவையாகும்.

*(ரஜோ குணத்தவர்களே நம்மில் அதிகம் உள்ளவர்கள். யாரிடம் அதிகமான வியாதிகள் உள்ளதோ, அவர்கள் ரஜோ குணத்தவர் என்று கூறிவிடலாம். ஒருவனுடைய வாழ்க்கையில் 'உணவு' பெரிதும் அங்கம் வகிக்கின்றது. எப்போது மனிதன் 'நெருப்பின்' ஆற்றலை அறிந்து கொண்டானோ, அதன் ஆற்றலை தன் உணவுக்குப் பயன்படுத்திக்கொண்டு, இறுதியில் மனிதன் நாக்குக்கு அடிமையாகிவிட்டான். அதனால் உண்ணும் உணவிற்கேற்ப அவன் செயல்பட ஆரம்பித்து விட்டான். மேலும் அளவுக்குமீறி ரஜோ குணத்தார் இவ்வுணவு வகைகளை சுவைத்திட ஆரம்பித்ததால் விரைவில் உணர்ச்சிகளுக்கு அடிமையாகி விடுகின்றனர். இதனால் அவன் அறிவை முந்தி சொல் வெளிவந்து விடுகின்றது. சொல்லை முந்தி செயல்வெளிப்பட்டு விடுகிறது. அதாவது அவன் கட்டுப்பாட்டுக்குள் இருப்பதில்லை. உணர்ச்சி மயமான ஒரு உயிராகத் திகழ்கின்றான். காரம் அதிகமுள்ள வர்கள் கோபத்திற்கு அடிமையாகிவிடுகின்றனர். புளிப்பு, உவர்ப்பு, சூடுமிக்க உணவு போன்றவற்றை அதிகமாக உட்கொள்பவர்கள் பலவகையான நோய்களுக்கு அடிமையாகிவிடுகின்றனர். சாதாரணமாக நுணுகிப்பார்த்தால் ரஜோ குணத்தார் நாடிடும் மேற்கூறிய உணவுவகைகள் மிருகங்கள் கூட பெரிதும் விரும்புவதில்லை.)*

**யாதமாமம் கதாஸம் பூதி**
**பர்யுஷிதம் ச யத் ।**
**உச்சிஷ்டமபி சாமேத்யம் போஜனம்**
**தாமஸப்ரியம் ॥** (10)

*''யாமம் கழிந்த, ருசியற்ற, துர்நாற்றம் கொண்ட, பழைய, எச்சிற்படுத்தப்பட்ட, தூய்மையற்ற உணவினையே தமோ குணத்தார் விரும்பி உண்பர்''.*

*(தமோ குணத்தினர் என்றால் ஏதோ சேரிவாழ் மக்கள் என்று எண்ணுவது தவறு. இக்குணம் கொண்டோர் எல்லா நிலை*

மக்களிடையேயும் உள்ளனர். பொதுவாக மேற்கூறிய உணவு வகைகளை உண்போர் அறிவுமந்தமாக உடற்கோளாறுகளின் இருப்பிடமாக விளங்குபவர். அதிக சூடோ அல்லது அதிக குளிர்ந்தோ உள்ள உணவு வகைகள் உடலின் ஜீரணப்பகுதிகள், வாயின் உட்பகுதிகள் ஆகியவற்றிற்குக் கெடுதல் செய்திடும். ஆகவே சமைத்த ஒன்று இரண்டு மணி நேரத்திற்குள் உணவு உட்கொள்ளுதல் விரைவான செரிமானத் தன்மையை உடல் அளித்திடும். சமைத்த உணவிற்கே இத்தகு முன்எச்சரிக்கை வேண்டுமென்றால், கடினமான உணவான இறைச்சி, துர்நாற்றம் அளித்திடும் மீன் உணவு வகைகள் ஆகியவற்றை உட்கொள்ளுவதற்கு ஒருவர் எடுத்துக் கொள்ள வேண்டிய எச்சரிக்கைகள் எவ்வளவு என்பதை அறிதல் அவசியம். உடல் வலிமைக்கும், உள்ள ஆற்றலுக்கும், அறிவு மேம்பாட்டிற்கும் தேவையான 'சக்தி' யினை தாவர வகைகளே அளித்திடும்போது உடல் உட்பகுதிகளுக்கு தீங்கிழைத்திடும் அசைவ உணவு வகைகளைத் தவிர்த்தலே நலம் தரும்.)

அபலாகாங்க்ஷிபிர்யக்ஞோ
விதித்ருஷ்டோ ய இஜ்யதே ।
யஷ்டவ்யமேவேதி மன:
ஸமாதாய ஸ ஸாத்விக: ॥ (11)

''சாத்திரங்களில் கூறியபடி நியமிக்கப்பட்டுள்ள வழிபாடுகளை எந்தவிதமான பயன்கருதாது பின்பற்றப்படுவதே மேலானது என்று கருதி, அந்த வகையில் எந்த எந்த வழிபாடுகள் செய்யப்படுகின்றனவோ அவையாவும் சாத்விகமானவையாகும்''.

(தன்னலமற்று, ஈடுபாடுடன், எவ்விதமான நன்றியையும் எதிர்பார்க்காது எவ்வாறு ஒரு தாய் தன் குழந்தையை வளர்க்கிறாளோ அந்த நிலையில் எந்த விதமான பயன்கருதாது, சாத்திரங்களில் கூறியபடி, பக்தி ஒன்றினையே தன் குறிக்கோளாக நினைத்து, அறவழியில் ஒருவன் செய்யும் கடவுள் வழிபாடே சாத்வீக வழிபாடு என்றழைக்கப்படுகிறது.)

**அபிஸந்தாய து பலம் தம்பார்த்த-**
**மபி சைவ யத் ।**
**இஜ்யதே பரதச்ரேஷ்ட தம்**
**யக்ஞம் வித்தி ராஜஸம் ॥ (12)**

*"பரதகுலத்து உத்தமனே! பயன்கருதி ஆடம்பரத்துடன் செய்யப்படும் வழிபாடு ராஜஸ வழிபாடாகும் என்பதை அறிவாயாக".*

*(புகழ், பதவி, செல்வம் ஆகியவற்றை அடைந்திட, பெரும் பொருள் செலவில் பொது இடங்களிலும் தங்கள் வீடுகளிலும் மேற்கொள்வதும், ஆடம்பர உற்சாகத்துடன் தங்கள் பெருமை, வலிமைகளைப் பறைசாற்றிக்கொள்ளும் வகையில் பலரையும் கவரும் வகையில் சமய வழிபாடுகளை நிகழ்த்துவதும் ராஜஸ வழிபாட்டில் அடங்குவனவாகும். இது ஒரு வகையில் இறைவனை வியாபார நோக்கில் வழிபடும் செயலாகும்.)*

**விதிஹீனமஸ்ருஷ்டான்னம்**
**மந்த்ரஹீன மதக்ஷிணம் ।**
**ச்ரத்தாவிரஹிதம் யக்ஞம்**
**தாமஸம் பரிசக்ஷதே ॥ (13)**

*"வேதவிதிகளுக்கு புறம்பானதும், அன்னதானமற்று விளங்குவதும் மந்திரங்கள் கூறப்படாததும், தக்ஷிணையின்றியும், ஈடுபாடு இல்லாததுமாகிய வழிபாடு தாமச வழிபாடாகும்."*

*(வேத விதிகள் என்பது குற்றமற்ற நெறிமுறைகள் என்றுபொருளாகும். எந்தவிதமான குற்றம் குறைகள் இல்லாத வழிபாடே மனிதனை உயர்த்தும். தானங்களிடையே உயர்வானது, உடனடியாக பயன்தருவது அன்னதானமேயாகும். மனிதனது மதியை முட்டாளாக்குவது பசி எனும் பெரும் பிணியை அன்னதானம் எனும் ஒருசெயல் மூலமே குணப்படுத்த*

*மக்களிடையேயும் உள்ளனர். பொதுவாக மேற்கூறிய உணவு வகைகளை உண்போர் அறிவுமந்தமாக உடற்கோளாறுகளின் இருப்பிடமாக விளங்குபவர். அதிக சூடோ அல்லது அதிக குளிர்ந்தோ உள்ள உணவு வகைகள் உடலின் ஜீரணப்பகுதிகள், வாயின் உட்பகுதிகள் ஆகியவற்றிற்குக் கெடுதல் செய்திடும். ஆகவே சமைத்த ஒன்று இரண்டு மணி நேரத்திற்குள் உணவு உட்கொள்ளுதல் விரைவான செரிமானத் தன்மையை உடல் அளித்திடும். சமைத்த உணவிற்கே இத்தகு முன்எச்சரிக்கை வேண்டுமென்றால், கடினமான உணவான இறைச்சி, துர்நாற்றம் அளித்திடும் மீன் உணவு வகைகள் ஆகியவற்றை உட்கொள்ளுவதற்கு ஒருவர் எடுத்துக் கொள்ள வேண்டிய எச்சரிக்கைகள் எவ்வளவு என்பதை அறிதல் அவசியம். உடல் வலிமைக்கும், உள்ள ஆற்றலுக்கும், அறிவு மேம்பாட்டிற்கும் தேவையான 'சக்தி' யினை தாவர வகைகளே அளித்திடும்போது உடல் உட்பகுதிகளுக்கு தீங்கிழைத்திடும் அசைவ உணவு வகைகளைத் தவிர்த்தலே நலம் தரும்.)*

**அபலாகாங்க்ஷிபிர்யக்ஞோ**
**விதித்ருஷ்டோ ய இஜ்யதே ।**
**யஷ்டவ்யமேவேதி மன:**
**ஸமாதாய ஸ ஸாத்விக: ॥** (11)

*''சாத்திரங்களில் கூறியபடி நியமிக்கப்பட்டுள்ள வழிபாடுகளை எந்தவிதமான பயன்கருதாது பின்பற்றப்படுவதே மேலானது என்று கருதி, அந்த வகையில் எந்த எந்த வழிபாடுகள் செய்யப்படுகின்றனவோ அவையாவும் சாத்விகமானவையாகும்''.*

*(தன்னலமற்று, ஈடுபாடுடன், எவ்விதமான நன்றியையும் எதிர்பார்க்காது எவ்வாறு ஒரு தாய் தன் குழந்தையை வளர்க்கிறாளோ அந்த நிலையில் எந்த விதமான பயன்கருதாது, சாத்திரங்களில் கூறியபடி, பக்தி ஒன்றினையே தன் குறிக்கோளாக நினைத்து, அறவழியில் ஒருவன் செய்யும் கடவுள் வழிபாடே சாத்வீக வழிபாடு என்றழைக்கப்படுகிறது.)*

**அபிஸந்தாய து பலம் தம்பார்த்த-**
**மபி சைவ யத் ।**
**இஜ்யதே பரதச்ரேஷ்ட தம்**
**யக்ஞம் வித்தி ராஜஸம் ॥ (12)**

*''பரதகுலத்து உத்தமனே! பயன்கருதி ஆடம்பரத்துடன் செய்யப்படும் வழிபாடு ராஜஸ வழிபாடாகும் என்பதை அறிவாயாக''.*

*(புகழ், பதவி, செல்வம் ஆகியவற்றை அடைந்திட, பெரும் பொருள் செலவில் பொது இடங்களிலும் தங்கள் வீடுகளிலும் மேற்கொள்வதும், ஆடம்பர உற்சாகத்துடன் தங்கள் பெருமை, வலிமைகளைப் பறைசாற்றிக்கொள்ளும் வகையில் பலரையும் கவரும் வகையில் சமய வழிபாடுகளை நிகழ்த்துவதும் ராஜஸ வழிபாட்டில் அடங்குவனவாகும். இது ஒரு வகையில் இறைவனை வியாபார நோக்கில் வழிபடும் செயலாகும்.)*

**விதிஹீனமஸ்ருஷ்டான்னம்**
**மந்த்ரஹீன மதக்ஷிணம் ।**
**ச்ரத்தாவிரஹிதம் யக்ஞம்**
**தாமஸம் பரிசக்ஷதே ॥ (13)**

*''வேதவிதிகளுக்கு புறம்பானதும், அன்னதானமற்று விளங்குவதும் மந்திரங்கள் கூறப்படாததும், தக்ஷிணையின்றியும், ஈடுபாடு இல்லாததுமாகிய வழிபாடு தாமச வழிபாடாகும்.''*

*(வேத விதிகள் என்பது குற்றமற்ற நெறிமுறைகள் என்றுபொருளாகும். எந்தவிதமான குற்றம் குறைகள் இல்லாத வழிபாடே மனிதனை உயர்த்தும். தானங்களிடையே உயர்வானது, உடனடியாக பயன்தருவது அன்னதானமேயாகும். மனிதனது மதியை முட்டாளாக்குவது பசி எனும் பெரும் பிணியை அன்னதானம் எனும் ஒருசெயல் மூலமே குணப்படுத்த*

*முடியும். 'உப்பிட்டவரை உயிருள்ளவரை நினை' என்றதன் மூலம் அன்னதானமே மக்களிடையே நன்றி எனும் உணர்வின் பின்னால் ஒரு பிணைப்பினை யாரும் அறியாமலே உருவாக்கிடும். மந்திரங்கள் மனதில் நல்ல எண்ண உணர்வுகளை ஏற்படுத்திடும் வகையில் மனதில் ஒரு ஆன்மீகச் சிறப்பு உடையன. வீடு அல்லது சமுதாயம் பயன்பெற பல சமயச் சடங்குகள் நடைபெறுகின்றன. இவற்றை புரோகிதர்கள் என்போர் நடத்துவர். இதனை இவர்கள் தங்கள் குலத்தொழிலாக நடத்தினாலும் பயன்கருதாது, பொருள் நோக்கது மேற்கொள்ளவேண்டும் என்பது சாத்திரவிதி. இவர்கள்தம் சேவை, அவர்களது எவ்விதமான தனிப்பட்ட துன்பங்கள் இடையூறாக அமைந்து தடைபடக் கூடாது என்ற எண்ணத்தில், மக்களே மனமுவந்து தட்சிணை எனும் பெயரில் தொகை அளிப்பர். இந்தத் தொழில் இலக்கணம் உண்மையான புரோகிதர்களுக்கே பொருந்தும். அவ்வாறு சேவை செய்யும் புரோகிதர்களுக்குத் தட்சிணை தரும் போதுதான் செய்யும் சடங்குகளுக்குப் பொருள் இருக்கும்: பயன் விளங்கும். எந்தவிதமான ஈடுபாடு இன்றி, கடனுக்காக செய்யும் வழிபாடு பயனற்றது. ஆகவே மேற்கூறிய குறைபாடுகள் கொண்ட வழிபாடு தாமச வழிபாடாகும்.)*

**தேவத்விஜகுருப்ராக்ஞபூஜனம்**
**சௌசமார்ஜவம் ।**
**ப்ரஹ்மசர்யமஹிம்ஸா ச சாரீரம்**
**தப உச்யதே ॥** (14)

''தேவர்கள், அந்தணர்கள், குருமார்கள், ஞானிகள் ஆகியோரைப் போற்றுவதும், தூய்மை, நேர்மை, பிரம்மசர்யம், கொல்லாமை ஆகியவற்றைத் தன்னிடம் கொண்டு விளங்குவதும் உடலால் செய்யப்படும் தவம் என்று அழைக்கப்படுகிறது.

*(தபஸ் என்ற வடமொழிசொல்லே தவம் என்ற தமிழில் மாறியுள்ளது. தப: என்றால் உருக்குதல் என்று பொருளாம்.*

மூலப்பொருட்களை உருக்குதல் மூலம் அவை தூய்மையாகின்றன. அதுபோன்றே உடல், மொழி, மனம் ஆகியவற்றை சிறந்த தவம் மூலம் தூய்மையாக்கலாம். இதுவே உடல்தவமாகும். மேலும் இறைவனது பிரதி பிம்பங்களாக - தூதுவர்களாக - அங்கங்களாக தேவதைகள் - தேவர்கள் விளங்குகின்றனர். இவர்களையே நாம் வருணன், அக்னி, வாயு என்று அழைக்கிறோம். அந்தணர்கள் என்போர் அறவழியில் வாழ்வோர். எதற்கு அஞ்ச வேண்டுமோ அதற்கு அஞ்சி, எங்கு போராட வேண்டுமோ அங்கு எதிர்நின்று, தர்மத்தின் வழியில் வேத அறிவோடு உலக நன்மைக்காக வாழ்வோரே பிராம்மணர்கள். தக்க கல்வி, உலக அனுபவத்தைக்கற்றுத்தருவோரே ஆசிரியர்கள் எனும் குருமார்கள். இறை உண்மை உணர்ந்து, இறைத்தத்துவத்தை - இயற்கை உண்மையை விளக்குபவரே ஞானிகள் அல்லது மாமுனிவர்கள். இத்தகையோரை மேற்கூறிய மனம், மொழி, மெய் (உடல்) ஆகியவற்றால் வழிபடுவதே 'தேக தவம்' என்பர். அதுமட்டுமின்றி, உடலை சுத்தமாக்கிக் கொண்டு, இந்திரியங்களை நல்ல உணர்வில் செலுத்தி செயலாற்றிடும் இயல்பான நேர்மை எனும் குணம் கொண்டு, சிற்றின்பத்தில் மூழ்கடித்துப் பின்பு வாழ்க்கை எனும் சிக்கலை, துன்பத்தை உண்டாக்கிடும் போக வாழ்க்கை மறந்து யோக நிலையான பிரம்மசர்ய நிலை கொண்டு, தன் உடலால் பிற உடல்களுக்குச் சிறிதும் தீங்கிழைக்காத, துன்புறுத்தாத கொல்லாமை இயல்பு கொண்டு வாழ்ந்திடும் இவ் உடல் கொண்ட செயலே 'உடல் தவ' மாக அழைக்கப் பெறுகின்றது.)

**அனுத்வேககரம் வாக்யம்**
**ஸத்யம் ப்ரியஹிதம் ச யத் ।**
**ஸ்வாத்யாயாப்யஸனம் சைவ**
**வாங்மயம் தவ உச்யதே ॥** (15)

''பிறர்க்கு துன்பம் தராத வாய்மை, இனிமை, நலன் ஆகியவற்றைக் கொண்ட வார்த்தைகள் மற்றும் வேத

மந்திரங்களைக் கூறுதல் 'வாக்குத் தவம்' என்று அழைக்கப்பெறுகிறது''.

(ஒருவரை கைகொண்டு அடித்து துன்புறுத்த வேண்டுமென்றால் மற்றொருவர் அவர் இருக்கும் இடம் வரை செல்லுதல் அவசியமாகும். அதற்கு சில நிமிட நேரங்கள்கூட செலவாகும். ஆனால் இருந்த இடத்திலேயே ஒருசில வினாடிகளிலேயே ஒருவர் மற்றொருவரை சொல் கொண்டு தாக்கித் துன்புறுத்தலாம். ஆகவே சொற்களுக்கு அவ்வளவு ஆற்றல் உண்டு. எனவே துன்பம் தராத சொற்களையே பயன்படுத்தல் வேண்டும். மேலும் பிறர்க்கு கோபமோ, துன்பமோ, சத்தியத்திற்கு எதிராகவோ அமையாத சொற்களையே கூறுதல் வேண்டும். கேட்பவர்களின் மனம் அமைதியுறும் வகையில் பேசுதலும் அவசியமாகும். பிறர் சொல்லி மற்றொருவர் அவற்றைக் கேட்கும் போது கேட்பவர்க்கு அவற்றால் நல்ல பயன் ஏற்படும் வகையில் அமைதல் வேண்டும். அடுத்தது வேதம் ஓதுதலின் சிறப்புப் பேசப்படுகின்றது. இறைவனின் ஆற்றல், இயற்கையின் மேன்மை, சமயத்தின் மாண்பு ஆகியவற்றைக் கூறுவன வேதமும் வேதாந்தமுமாகும். அத்தகுவேத மந்திரங்களை வாய்விட்டு உச்சரித்துக் கூறுவோமேயானால், மனம், சொல் ஆகியனதூய்மையாகின்றன.)

மன: ப்ரஸாத: ஸௌம்யத்வம்
மௌனமாத்மவிநிக்ரஹ: ।
பாவஸம்சுத்திரிதயேதத்தபோ
மானஸமுச்யதே ॥ (16)

''மன அமைதி, அன்புடைமை, மௌனம், தன்னடக்கம், தூய்மையான நோக்கம் ஆகியவற்றைப் பெற்றிருத்தலே மனத்தவம் என்று கூறப்படுகிறது''.

(மன அமைதி என்பது மனிதனிடம் இருக்கவேண்டிய அவசியமான இறைவனது திருவருளாகும். மனக்குழப்பம்

*மற்றும் மனச்சோர்வு இன்றி மகிழ்ச்சியுடன் இருத்தலே மன அமைதியாகும். மன அமைதிக்கு எதிரி கோபம், பொறாமை, காமம் போன்றனவாகும். இவற்றைத் தவிர்த்திடும் போது மனம் அமைதிபெறுகின்றது. அன்பு இல்லாத மனம் பாலை வனமாகும். இங்கு முட்செடிகள் மட்டுமே பயிராகும். அன்பே கடவுளாகும். அன்பு உள்ளமே மனிதனை மகானாக்கும். மௌனம் போன்ற ஒரு சிறந்த யோகம் ஏதும் இல்லை. இங்கு மௌனம் என்பது வாய்மூடிபேசாது இருத்தல் அல்ல. மன மௌனமே சொல், செயல், சிந்தனையை தூயதாக வைத்திடும் பெருமை உடையது. அடுத்தது தன்னடக்கம். மனஅடக்கமே சிறந்த அறிவினைத்தந்திடும். அறிவு சீர்மையாக இருக்கும் போது சொல், செயல் ஆக்கப்பூர்வமான பயன்களைத் தந்திடும். எண்ணங்கள் தூய்மையாக விளங்கிடும்போது, சமுதாயம் ஆரோக்யமாகத் திகழ்ந்திடும். இவையே மானச தவம் என்றழைக்கப்படுகிறது.)*

**ச்ரத்தயா பரயா தப்தம் தபஸ்தத்**
**த்ரிவிதம் நரை: ।**
**அபலா காங்க்ஷிபிர்யுக்தை:**
**ஸாத்விகம் பரிசக்ஷதே ॥** (17)

*''பயன் எதிர்பார்க்காது யோகத்தில் உறுதியாக இருந்து மக்களால் பெருமுயற்சியுடன் செய்யப்படும் மேற்கூறிய (முன்மூன்று செய்யுட்களில் கூறிய) தவங்கள் 'சாத்துவிக தவம்' என்று அழைக்கப்பெறும்''.*

*('கடமையைச் செய், பயன் எதிர்பாராதே' என்பதே கீதையின் அடிப்படைத் தத்துவம். ஆகவே பயன் எதிர்பார்த்து செய்யும் எந்தவிதமான தவமும் மாசு உடையாதாகிவிடுகிறது. அடுத்தது தவம் என்பது ஒரு யோகமாக நினைக்கப்படுவதால் அத்தவத்தினை மேற்கொள்ளும்போது இடையில் ஏமாற்றமோ, குறுக்கீடோ, தோல்வியோ ஏற்பட்டால் அவற்றைக் கண்டு துவளாமல், தவத்தைக் கைவிடாமல் இருப்பதே சிறந்த*

உறுதியாகும். இதற்கு நம்பிக்கை, பெருமுயற்சி மிகவும் அவசியமாகும். இவ் இயல்புகள் கொண்டு செய்யப்படும் தவமே 'சாத்துவிக தவ' மாகும்.)

## பகவான் சொன்னது:

ஸத்காரமானபூஜார்த்தம் தபோ
தம்பேன சைவயத் ।
கிரியதே ததிஹ ப்ரோக்தம்
ராஜஸம் சலமத்ருவம் ॥ (18)

''புகழுக்காகவும், பெருமைக்காகவும், பலர் போற்றவும் செய்யப்படும் ஆடம்பரமான எவ்விதமான தவமும் உறுதியற்றது. மேலும் தற்காலிகமானதுகூட. ஆகவே அந்தத்தவம் ராஜஸ தவம் என்று கூறப்படுகிறது''.

(தவம் என்பதை தன்னைத்தானே திருத்திக் கொள்ளும், உயர்த்திக்கொள்ளும் ஒரு 'முயற்சி' என்றே வைத்துக் கொள்ளலாம். தனது எண்ணங்கள், செயல்கள் தன் ஆன்ம மேம்பாட்டிற்காகவும் அதனாற்றுன் சமுதாயம் செம்மையுறவும் உறுதுணையாக அமைதல் அவசியம். ஆகவே ஒருவனது செயல்கள் தன்னலத்திற்காகவோ, வெறும் ஆடம்பரத்திற் காகவோ, பலர் போற்றிப் புகழவோ அமைதல் கூடாது. எப்போது ஒருவன் தன் புலனின்பங்களை மறந்து, மனத்தை அடக்கி, செயல்களை மேற்கொள்கின்றுனோ, அப்போதுதான் அச்செயல்கள் தூயனவாக அமைந்து புனித இலக்கை அடைவனவாக அமையும். ஒரு சமய நிகழ்ச்சியில் பங்கேற்கும் சமயத் தலைவரோ, பொது நிகழ்ச்சியில் கலந்துகொள்ளும் அரசியல் தலைவரோ தங்களை இனம் காட்டிக் கொள்வதற்காகத் தங்களைச் சுற்றிக் கூட்டம் ஏற்படுத்திக் கொள்வதையும் தங்கள் காலில் வீழ்ந்து வணங்குவதையும், தங்களைப் போற்றி ஒலிப்பெருக்கியில் பேசுவதையும் தவிர்க்கும்போதுதான் அவர்கள் உண்மையான வழிகாட்டிகளாக, தலைவர்களாக மக்கள் உள்ளங்களில் என்றென்றும் வாழ்வார்கள். அவ்வாறு

அல்லாது ஒரு வாழ்க்கை நெறியினை மேற்கொள்பவர்களின் செயல்களின் பயன்கள் தற்காலிகமாகவே அமையும். உறுதியற்றே விளங்கும். அவர்கள்தம் செயல்களாகிய தவம் ராஜஸதவம் என்றே அழைக்கப்பெறும்.)

**மூடக்ராஹேணாத்மனோ யத்பீடயா**
**க்ரியதே தப: ।**
**பரஸ்யோத்ஸாதனார்த்தம் வா**
**தத்தாமஸ முதாஹ்ருதம் ॥** (19)

''மூடக்கொள்கைகளைப் பின்பற்றி, அதன்மீது உள்ள ஆர்வத்தால் தன்னையோ, பிறரையோ துன்புறுத்துவதற்கோ அல்லது பிறரது வாழ்க்கையை அழித்தற்காகவோ மேற்கொள்ளப்படும் தவம்'தாமச தவம்' என்று அழைக்கப்படும்.

(அறிவினைப் பயன்படுத்தி மேற்கொள்ளப்படும் பாசம், அன்பு, தியாகம் போன்றவற்றிற்கு மதிப்பு இருக்கும். ஆனால் உணர்ச்சியின் வெறியால் மேற்கொள்ளப்படும் எந்தவிதச் செயலும் ஆக்கப்பூர்வமான பயன்களை விளைவிக்காது. இவ்வகையில் பலர் தங்கள் உடலைப் பலவாறு வருத்தித் தங்கள் சமய ஈடுபாட்டினைப் பறைசாற்றிக் கொள்வர். பலர் வீம்புக்காக, பகட்டுக்காக பட்டினி இருந்து விரதங்களை மேற்கொள்வர். இவர்களைவிட ஒருபடி மேலே சென்று, மற்றவர்களது வாழ்க்கையை நாசமாக்க வேண்டும் அதனாற்றுன் அவர்கள் படும் வேதனையைக் கண்டு மகிழ வேண்டும் என்ற ஒரு மனிதாபிமானமற்ற எண்ணத்தில் அவர்களுக்கு பில்லி, சூன்யம் என்ற மந்திர, தந்திர வகைகளைப் பயன்படுத்திக்கேடு விளைவிப்பவரும் உண்டு. இத்தகையோரின் தவம் தாமசதவம் என்று அழைக்கப்பெறும். இவர்கள் ஆத்ம ஞானம்' என்பதை பெறத்தகுதியற்றவர்கள்.)

**தாதவ்யமிதி யத்தானம் தீயதே**
**அனுப்காரிணே ।**

தேசே காலே ச பாத்ர ச
தத்தானம்ஸாத்விகம் ஸ்ம்ருதம் ॥ (20)

''தக்க இடத்தில், தக்க காலத்திலே பிரதிபலன் செய்யாதவர் என்றாலும், தகுதி உள்ளவர்களுக்கு எந்த தானம் (கொடை) கொடுக்கப்படுகிறதோ, அந்த தானம் சாத்விக தானமாகக் கருதப்படும்''.

(தானம் என்பதை பதவி, புகழ், பாராட்டு என்பனவற்றிற்காக அளிக்காதபோது அந்த தானம் சாத்வீக தானமாகிறது. எந்தவிதமான தன்னலப்பயனையும் எதிர்பார்க்காது தானம் அளிப்பதே சிறந்தது. இல்லாதார்க்கு, வேண்டுவோர்க்கு அதுவும் தக்க காலத்தில் அளிக்கப்படும் தானத்தில் சுயநலம் இருக்காது. செய்யும் தானம் யாவுமே அந்த இறைத்தொண்டிற்கே, தான் அளிப்பது அந்த இறைவனின் திருவுள்ளமே என்ற உணர்வினால் செய்யப்படும் தானம் சாத்வீக தானமாக (சத்துவதானமாக) பெயர் பெறுகிறது.)

யத்து ப்ரத்யுபகாரார்த்தம்
பலமுத்திச்ய வா புன: ।
தீயதே ச பரிக்லிஷ்டம் தத்தானம்
ராஜஸம் ஸ்ம்ருதம் ॥ (21)

''மேலும் நன்றிக்கடன் செலுத்தவோ பிரதிபலன் எதிர்பார்த்தோ மனவருத்தத்துடன் அளிக்கப்படும் தானம் ராஜஸ தானம் என்று அழைக்கப்பெறுகிறது''.

(தருவது 'நான்' என்பதும். கொடுப்பது அவனுக்கு' என்பதும் இல்லாது ஒரு உணர்வுடன் பொருள் மற்றவர்க்குத் தருவதே 'தானம்' ஆகும். ராஜஸதானம் என்பது தானம் தருவதை பிரதிபலன் எதிர்பார்த்து செய்வதாகும். அடுத்தவனைவிட தான் அதிகமாகத் தானம் தந்து பெயர், புகழ், பாராட்டு பெற வேண்டும் என்று எண்ணி அரைமனதோடு மேற்கொள்பவர்களின் தானம் ராஜஸதானம் என்றழைக்கப்படும். கோயிலுக்கு குழல் விளக்கு தானம் செய்யும்போது தன் பெயரை, தன் நிறுவனத்தின்

*பெயரை அதன் மீது எழுதிக்கொள்ளும் போது, அங்கு தங்களை விளம்பரப்படுத்திக் கொள்கின்றனர். இது ராஜஸ தான வகையாகும். கோயில்களில் தன் பெயர்களால் அர்ச்சனை, அபிஷேகம், ஆராதனை ஆகியவற்றிற்காகப் பணத்தை தானமாக அளிக்கும்போது இறைவனிடம் பல வரங்களை வெளிப்படையாகவோ, மனதினிலோ வேண்டுகின்றான். இதுவும் ராஜஸ தான வகையில் அடங்கும்.)*

**அதேசகாலே யத்தானமபாத்**
**ரேப்யஸ்ச தீயதே ।**
**அஸத்க்ருதமவக்ஞாதம்**
**தத்தாமஸ முதாஹ்ருதம் ॥** (22)

*''தகாத இடத்திலும் தகாத காலத்திலும் தகுதியில்லாதவர்களுக்குப் பணிவின்றி இகழ்ச்சியுடன் ஆணவத்தோடு செய்யப்படும் தானமானது தாமஸ தானமாகும்''.*

*(தானம் அளிப்பவர்களுக்கு மட்டுமின்றி, தானம் பெறுபவர்களுக்கும் சில தகுதிகள் இருத்தல் வேண்டும். வஞ்சகர்கள், எத்தர்கள், சோம்பேறிகள், கயவர்கள், கொடியோர் போன்றோர்க்கு அளிக்கப்படும் தானம் பொருளற்றது; குறைவுடையது; பயனில்லாதது. மேலும் தானம் கொடுக்கும்போது, ஏதோ கடனுக்காக அளிப்பதோ, அல்லது ஆணவத்துடன் அளிப்பதோ, அல்லது பிறரை எள்ளி நகையாடி அளிப்பதோ கூடாது. அத்தகு தானம் பெருமையுடையது அன்று. தானம் அளிக்கப்படும்போது அதன் சிறப்பு தரும் இடத்தைப் பொருத்தும், காலத்தைப் பொருத்தும் அமையும். அவ்வாறின்றி தேவையில்லாத இடத்தில், அவசியமில்லாத இடத்தில், அவசியமில்லாத நேரத்தில் அளித்திடும் தானத்திற்கு எந்தவிதமான பயனும் இருக்காது. இத்தகு தான உணர்வுகள் தமோ குணத்தாரிடமே மேலோங்கி அமையும்.)*

**ஓம் தத் ஸதிதி நிர்தேசோ**
**ப்ரஹ்மணஸத்ரிவித ஸ்ம்ருத: ।**

ப்ராஹ்மணாஸ்தேன வேதாஸ்ச

யக்ஞாஸ்ச விஹிதா: புரா ॥ (23)

''பிரம்மமானது ஓம், தத், ஸத் என்று மூன்றுவிதமாகக் கூறப்பட்டுள்ளது. இந்த பிரம்மத்திலிருந்தே அந்தணர்கள், வேதங்கள், வேள்விகள் தோன்றின''.

(இந்த உலகமே ஓசையின் மொத்த உருவமாக உள்ளது. அந்த ஓசையிலிருந்து தான் எல்லா உயிர்களும் உருவாகின்றன. இந்த ஓம்- அகர, உகர, மகர சேர்க்கையாகும். இந்த 'நம' என்பதே அந்தப் பரம்பொருளாகும். பிரணவத்தின் எதிரொலியே 'ஓம்' ஆகும். இந்த ஓசை ஓயாது ஒரே மாதிரியாக இந்த அண்டத்தில் ஒலித்துக் கொண்டிருக்கிறது.

அடுத்துவரும் 'தத்' என்பதற்கு அது என்றும் பொருளுடையது. ஞானிகள் அந்த நாத பிரம்மத்தை பிரம்மம் என்றே குறிப்பிடாமல் 'அது' என்றே குறிப்பிடுகின்றனர். வேதங்களும் அந்த பரம்பொருளை பெயரிட்டுக் குறிக்காமல், 'அது' என்று தான் பல இடங்களில் அழைக்கின்றன. 'ஸத்' என்றால் உண்மைப்பொருள். அந்த உண்மை காலத்தால், இடத்தால் மாறுபடாதது. இறைவன் அந்த உண்மையாக விளங்குகின்றான். ஆகவே ஓம், தத், சத் என்றால் ஓசை வடிவாக உள்ள அந்தப் பொருள் (அந்த பிரம்மம்) மெய்ப்பொருளாகும் என்பதாகும்.

இந்த பிரம்மத்திலிருந்து எல்லா உயிர்களும் தோன்றினாலும் முக்யமாக அந்தணர், வேதங்கள், வேள்விகள் என்று குறிப்பிட்டு அவை அந்த பிரம்மத்திலிருந்து தோன்றியதாக இச்செய்யுளில் பகவான் கூறியுள்ளார். இங்கு இறைவன் வர்ணாசரம் பேதத்தைப் பகரவில்லை. வர்ணாசர தர்மத்தையே அறிவுறுத்தியுள்ளார். ப்ரம் பொருளின் இயல்பை, வாழ்வின் இலக்கணத்தைக் கூறுவனவேதங்கள். அந்த வேதங்களை நன்றாக செவிவழிச் செய்தியாகப் பயின்று, உண்மைப்பொருளை அறிந்து உலக

*தர்மத்தைக் காக்க தங்களை மூன்றுதாரணமாக்கி மானிட இனம் மாண்புற வேதத்தைக் காப்பாற்றுவார் யாரோ அவர்களே அந்தணர்கள். ஆகவே இந்த அந்தணர்கள் வாழ்க்கை முக்யமானதாகக் ·கருதப்படுவதால் அவர்களை அந்த பிரம்மத்திலிருந்து தோன்றியதாகக் கூறப்படுகின்றனர். வாழ்க்கை நலமுடன் சமய சிந்தனையுடன் மனிதாபிமான சிந்தனையுடன் விளங்கிட மேற்கொள்ளும் நற்செய்கைகளே வேள்விகள் என்பதாகும்.)*

**தஸ்மாதோ மித்யுதாஹ்ருத்ய**
**யக்ஞதானதப: க்ரியா: ।**
**ப்ரவர்தந்தே விதாநோக்தா:**
**ஸததம் ப்ரஹ்மவாதினாம் ॥** (24)

''ஆகையால் 'ஓம்' என்று கூறியபிறகே, சாத்திரங்கள் கூறிடும் வேள்வி, தானம், தவம் ஆகியன சாத்திரங்கள் அறிவுறுத்தும் வகையில் வேதம் அறிந்தவர்களால் மேற்கொள்ளப்படுகின்றன.''

*(இறைவன் 'ஓம்' எனும் ஓசை வடிவானவன். அவன் இந்த அண்டத்தில் ஒவ்வொரு அணுவிலும் நீக்கமற நிறைந்துள்ளான். அதாவது இயற்கையின் மறு உருவமாக அவ் இறைவன் இருக்கின்றான். ஆகவே அவன் வழிபடும் முகத்தான் 'ஓம்' என்று கூறுதல் வேண்டும். மனிதன் நாளும் ஒவ்வொருகணமும் செயல்புரிந்து கொண்டிருக்கவேண்டும் போது அச்செயல் மேற்கொள்வதில் பல குறைபாடுகளை மனிதன் தெரிந்தோ தெரியாமலோ புரிகின்றான். அக்குறைபாடுகள் அவனுக்குத் தெரிந்தாலும், அவனால் செயல்களை நிறுத்தமுடிவதில்லை. செயலாற்றமல் இருக்கவும் முடிவதில்லை. தான் புரிந்திடும் செயல்குறைபாடுகளை மன்னித்திடுமாறு எங்கும் எதிலும் உள்ள இறைவன் 'ஓம்' என்ற பிரணவச்சொல்லால் விளித்து, (உச்சரித்து) செயல்களை மேற்கொள்கின்றான். ஆகவேதான் மந்திரங்களைச் சொல்லி வேள்வி, தானம் போன்ற சமயச்*

செயல்களை மேற்கொள்ளும் முன்னர் வேதம் அறிந்த சான்றோர்கள்; சாத்திரம் அறிந்த அறிஞர்கள் 'ஓம்' என்று கூறுகிறார்கள்.)

**ததித்யனபிஸந்தாய பலம்**
**யக்ஞதப: க்ரியா: ।**
**தானக்ரியாஸ்ச விவிதா: க்ரியந்தே**
**மோக்ஷகாங்க்ஷி: ॥** (25)

"'தத்' என்று சொல்லைக்கூறிய பிறகு, மோட்சமெனும் உயரிய குறிக்கோளை இகத்திலிருந்து அடையவிரும்புவர்களால் பலவிதமான வேள்வி, தவம் மற்றும் தானம் என்ற செயல்கள் மேற்கொள்ளப்படுகின்றன."

('தத்' என்றால் முன்னர் கூறியவாறு நம்மிலிருந்து இயற்கைப் பிறப்பிலிருந்து வேறுபட்டு விளங்கிடும் இறைவனான 'அது' என்று பொருளாகும். 'தத்' என்று அழைக்கப்பெறும் இறைவன் எல்லா ஜீவாத்மாக்களுக்கும் தலைவன். நாம் அவன் அடிமை ஆகும். ஆகவே அடிமை மேற்கொள்ளும் எல்லா செயல்களும் அவனால் ஆணையிடப்பட்டே நடைபெறுகின்றன என்ற உண்மைய அறிதல் வேண்டும். பொத்தானை அழுத்தியவுடன் மின்விசிறி சுழல்கிறது: வானொலிப்பெட்டி ஒலிக்கிறது: தொலைக்காட்சியில் படம் தெரிகிறது. இவற்றிற்கான 'சக்தி' நம் கையிலிருந்து வருவதில்லை. மின்சாரம் எனும் கண்ணுக்குத்தெரியாத சக்தி இவற்றை இயக்குகின்றவன் நம்மை செயல் புரியவைக்கின்றான். நாம் வெறும் கருவி மாத்ரமே உலகாயுத வாழ்க்கையை மேற்கொள்கொண்டிருக்கும் மக்கள், வீடுபேறுஎனும் மோட்ச உலகத்தை அடைய விரும்பும் போது, வேள்வி, தானம், தவம் போன்ற செயல்களை மேற்கொள்ளும்போது பயனை எதிர்பாராது செயல்புரிவர் 'அவன் ஆட்டுவிக்கின்றான், நாம் ஆடுகின்றோம்'.)

**ஸத்பாவே ஸாதுபாவே ச**
**ஸதித்யேதத் ப்ரயுஜ்யதே ।**

ப்ரசஸ்தே கர்மணி ததா ஸச்சப்த :
பார்த்த யுஜ்யதே ॥ (26)

''அர்ச்சுனா ! 'ஸத்' என்ற சொல்லுக்கு உண்மை என்றும், நன்மை என்றும் பொருள் உண்டு. மங்களகரமான செயல்களின்போதும் 'ஸத்' என்ற சொல் பயன்படுத்தப்படுகிறது.''

('சத்' என்றால் எந்த நிலையிலும், எந்தக் காலத்திலும் அழியாத குறைபடாத ஒன்று என்பதாகும். அந்த ஒன்றே இறைவன். ஆனால் குறைவுடைய எண்ணங்களைக் கொண்ட, அழியும் உடலைக் கொண்ட மனிதன் 'சத்'திற்கு எதிரான 'அசத்' ஆவான். இந்த 'அசத்' ஆன மனிதனையும் 'சத்'தாக எண்ண வேண்டும் என்பது இறைவனது கருணை வெளிப்பாடாகும். இறைவனால் படைக்கப்பட்ட மனிதன் தீயோனல்லன். அவனுள்ளத்தில் இறைவன் இருக்கின்றான். கோயில் அசுத்தமாக இருந்தாலும், கருவரையில் இறைவன் இருப்பதால் அக்கோயில் புனிதமாகிறது. தீயோனை நல்லோன் என்று இச்சமுதாயம் பலமுறை கூறி அழைத்திடும் போது தீயோன் நல்லோனாக மாறலாம். அத்தகு புனிதமிகு 'சத்' என்ற சொல் மங்களகரமாகவே எண்ணப்படுகிறது. மாயை நிறைந்த வாழ்க்கையை, ஏமாற்றமும், வஞ்சமும் கொண்ட வாழ்வை 'உண்மை' (சத்) என்று நினைத்திடும்போதுதான் அவ்வாழ்க்கையில் மனிதனுக்குப் பற்றுமிகும். தன் வாழ்க்கையில் ஒரு பொருள் - இலக்கு இருப்பதாக அவன் ஒருநாளன்றி ஒரு நாளாவது நினைத்திடுவான். அந்த நினைப்புதான் அவன் வாழ்க்கையை இனிதாக்குகின்றது. அந்த இனிமையில் தான் அவன் வாழ்க்கை உண்மையை உணரவோ சமுதாய சிந்தனையை உணரவோ சமுதாய நிந்தனையை வளர்த்துக்கொள்ளவோ முடியும். ஆகவே 'அசத்' தான மனிதன், அசத்தான உலகம் 'சத்' தாகக் காணப்படுகிறது.)

யக்ஞே பதஸி தானே ச ஸ்திதி:
ஸதிதி சோச்யதே ।

கா்ம சைவ ததா்த்தீயம்
ஸதித்யேவாபிதீயதே ॥ (27)

''வேள்வி, தவம், தானம் ஆகியவற்றில் ஊடுருவி இருப்பது 'ஸத்' என்பதாகும். மேலும் மெய்ப்பொருளான பிரம்மத்திற்காக மேற்கொள்ளப்படும் எந்த செயல்களும் 'ஸத்' என்றே கூறப்படுகிறது.''

*('சத்' என்பது புனிதமான சொல் மட்டுமல்ல, புனிதத்தை ஏற்படுத்தும் சொல்லும்கூட இறைவன் 'சத்' ஆவான். அவனை அடைய வழிவகுக்கும் வேள்வி, தவம், தானம் ஆகியனகூட சத்தாகவே அழைக்கப்படுகின்றன. ஒரு இலக்கினை மனிதன் அடைய உதவுவதால் இறைவனை வணங்கிட பலவகையான சமயச் சடங்குகள் உள்ளன. அவற்றில் ஒன்றுன உயிர்ப்பலியினை பலர் புரிந்து வருகின்றனர். நோக்கமோ புனிதமானது. ஆனால் போக்கோ கொடுமையானது. ஆனால், உயிர்ப்பலியினை இந்துக்கடவுள் என்றுமே வரவேற்றதில்லை, கேட்டதில்லை என்று கூறும் அறிவுரைகளே அத்தகையோரின் எண்ணங்களை மாற்றிடும். மாறிடும்போது அவன் செய்திட்ட வினைகள் சத்தாக மாறிவிடுகின்றன. ஆகவே இறைவனை அறிய மேற்கொள்ளும் வழிமுறைகள் தவருக இருந்து திருந்திடும்போது, அத்தவறுகளே 'சத்' செயல்களாக அமைந்துவிடுகின்றன).*

அச்ரத்தயா ஹுதம் தத்தம்
தபஸ் தப்தம் க்ருதம் ச யத் ।
அஸதித்யுச்யதே பார்த்த ந ச
தத்பரேத்ய நோ இஹ ॥ (28)

''ஈடுபாடின்றிச் செய்யப்படும் வேள்வி, தவம், தானம் செயல்கள் ஆகியன 'அஸத்' என்று அழைக்கப்பெறும். அர்ச்சுனா! அத்தகு செயல்கள் இம்மைக்கோ, மறுமைக்கோ பயன்படா''.

*(ஓர் அலுவலகத்தில் பணிபுரியும் ஒருவர் எவ்விதமான பணி ஈடுபாடின்றிச் செயல்படும்போது அவர் ஒரு 'செக்குமாடாகவே'*

தன் உழைப்பினை அளிக்கின்றார். அதனால் பணியில் பிடிப்பின்றித் தனி மேன்மையில் நாட்டமின்றி விளங்கிடும்போது, அவருக்கோ, அவரைச் சார்ந்த குடும்பத்திற்கோ, சிந்தனை இன்றி நல்கிடும் உழைப்பினால் அவர் பணிபுரியும் நிறுவனத்திற்கோ எந்தவிதமான ஆக்கப்பூர்வமான பயனும் இல்லை. மற்ற கர்மங்களான படித்தல், வியாபாரம் செய்தல், உடலைப் பேணுதல் போன்றவற்றை மேற்கொள்ளும் போது ஆர்வமின்றி விளங்கினால் அதனால் அவர்கள் தோல்வியைத் தான் தழுவ முடியும். அதேபோன்று அவ் இறைவனை அடைய தவம், தானம், வேள்வி போன்றவற்றை மேற்கொள்ளும்போது, எவ்விதமான ஈடுபாடின்றி, ஆர்வமின்றி சமயச்சடங்குகளை புரிந்திடும் போது அவர்கள் 'பரபோதம்' எனும் ஆன்ம உயர்வினை உயர்த்திடும்பயனை அடைவதில்லை. ஆகவே, இறை சம்பந்தமான நற்காரியங்களை செய்திடும்முன்னர், 'ஓம் தத், சத்' என்று கூறிடும்போது, அவர்கள்தம் காரியங்கள் குறைபாடுகள் நீங்கி, புனிதத்தன்மையோடு விளங்கிடும்.)

(பதினேழாம் அத்தியாயம் முற்றும்.)

# பதினெட்டாம் அத்தியாயம்

## மோட்ச சந்நியாச யோகம்

### அர்ச்சுனன் கேட்டது:

''ஸன்யாஸஸ்ய மஹாபாஹோ
தத்வ மிச்சாமி வேதிதும் ।
த்யாகஸ்ய ச ஹ்ருஷீகேச ப்ருதக்
கேசிநிஷுதேன ॥ (1)

''ஹ்ருஷீகேசா! (இந்திரியங்களை அடக்கியவனே) மகாபாகுவே! (பரந்த தோள்களை உடையவனே) கேசி நிஷுதனா (கேசி என்ற அரக்கனை அழித்தவனே) சந்நியாசம், தியாகம் ஆகியவற்றின் தத்துவ இயல்புகளைத் தனித்தனியாக அறிந்துகொள்ள ஆசைப்படுகிறேன்''.

(அறிவு என்பது ஒரு நிலையில் நின்று விடுவதல்ல, அறிவு வளர வளர அறிந்து கொள்ளவேண்டும் என்ற மன இயல்பு பெருகிக் கொண்டுதான் இருக்கும். அதுதான் அறிதலின் இயல்பு. முன்பு பதினேழு அத்தியாயங்களிலேயே சந்நியாசம், தியாகம்

போன்றவற்றின் விளக்கங்களை பகவான் கூறினாலும் அர்ச்சுனன் அதனைக் கேட்டாலும், அவனுக்கு மேலும் மேலும் அவற்றை அறிந்து கொள்ள வேண்டும் என்ற அவா எழுகின்றது. அவனுடைய ஐயங்களை தீர்க்கவே - விளக்கவே இறைவனும் விரும்புகின்றான். அதற்குரிய தகுதியினையும் பகவான் பெற்றுள்ளான். பரந்த தோள்கள் உடையவன் எனும் போது, இறைவன் உடலால் - வலிமையால் உயர்ந்தவனாகின்றான். கேசி எனும் அரக்கனைக் கொன்றதால், தீமையை அழித்து தர்மத்தை நிலைநாட்டுவதற்குரிய மன உறுதியை இறைவன் பெற்றுள்ளதைக் காணலாம். இந்திரியங்களை அடக்கியவனே, மற்றவர்களுக்கு உபதேசம் செய்யும் தகுதி பெறுகின்றான். ஆகையினால் தான் இறைவன் 'ஹ்ருஷீகேசா' என்று விளிக்கிப்படுகின்றான். இங்கு அர்ச்சுனன் தன் ஐயத்தின் மூலமாக, ஸந்நியாசம், தியாகம் ஆகியவற்றின் பெருமையை தெரிவிக்க ஆசைப்படுகிறான். இறைவனை அடைய இவ்விரண்டும் முக்கிய பங்கு வகிக்கின்றன. தன்னல ஆசையற்று உலக நன்மைக்காக கருமங்களை ஏற்றுத் தனக்காக எந்த கருமங்களையும் ஏற்காது வாழ்தலே ஸந்நியாசம் ஆகும். வினைப்பலன்களை எதிர்நோக்காது, வாழ்தலே தியாகம் அல்லது துறவு ஆகும்.)

## பகவான் சொன்னது:

காம்யானம் கர்மணும் ந்யாஸம்
ஸந்யாஸம் கவயோ விது: ।
ஸர்வகர்மபலத் யாகம் ப்ராஹு
ஸத்யாகம் விசக்ஷணு ॥ (2)

''காமிய கர்மங்களைத் துறப்பதே சந்நியாசம் என்று ஞானிகள் கூறுகின்றனர். எல்லா வினைப்பயன்களையும் துறப்பதே தியாகம் என்று தீர்க்க தரிசிகள் நினைக்கிறார்கள்''.

(தன்னல ஆசையின் காரணமாக ஒரு சாதாரண மனிதன் (காமிய கருமங்கள் எனப்படும்) பதவி, புகழ், செல்வம், ஆயுள்

ஆகியவற்றிற்காகப் பலவினைகளை மேற்கொள்கிறான். ஆனால் இவற்றிற்காக வாழ்தலையோ, வினை ஆற்றவதையோ மேற்கொள்ளாமல், தன் அன்றாட இன்றியமையாத தேவைகளின் காரணமாக அதாவது நடத்தல், பேசுதல், உண்ணுதல் போன்ற வினைகளை ஆற்றுபவனே சந்நியாசி என்பது அறிஞர்களின் கருத்தாகும். அடுத்து வருவது தியாகம், அல்லது துறவு என்பதாகும். ஒரு துறவியானவன் தன்னுடைய தினசரி தேவைகளுக்காகவும், சமுதாயத் திற்காகவும் வினைகளை மேற்கொள்ளும்போது, அதனால் ஏற்படும் பயன்கள் அவனைச் சிறிதும் பாதிப்பதில்லை. ஏனெனில் அவன் தன் சுயநலத் திற்காக அவ்வினைகளை மேற்கொள்ளவில்லை. அதனால் அவனுக்கு எதனுடனும், எப்போதும் பிணைப்பு இருப்பதில்லை.)

த்யாஜ்யம் தோஷவதித்யேகே
கர்ம ப்ராஹுர்மனீஷிண: ।
யக்ஞதானதப: கர்ம ந
த்யாஜ்யமிதி சாபரே ॥ (3)

''வினைகள் யாவுமே குற்றங்குறை உடையவைகளே. ஆகவே அவற்றை முழுவதுமாக மேற்கொள்ளக் கூடாது என்று ஒரு சில அறிஞர்கள் கூறுகின்றனர். ஆனால், வேள்வி, தவம், தானம் ஆகிய வினைகளை மேற்கொள்ளாமல் இருத்தல் கூடாது என்று மற்ற சில அறிஞர்கள் பகர்கின்றனர்''.

(இறைவன் மனிதனை இம்மண்ணில் தவழவிட்டது அவன்வாழ வேண்டும் என்பதற்காகத்தான். தன்னிடமிருந்து வந்த மனிதன் தன்னிடமே வந்து சேர வேண்டும் என்பது மட்டுமே இறைவனின் விருப்பமெனின் அவனை இம்மண்ணில் பிறக்கவைக்கத்தேவையே இல்லையே! பிறப்பின் நோக்கம் மனிதன் தன் நிலையிலிருந்து தன் வினையாற்றல்களின் மூலம் மகானாகத் திகழவேண்டும் என்பது தான். அப்போதுதான் இம்மண்ணில் பிற உயிரினங்கள் மேம்பட

ஏதுவாகும். அப்போதுதான் முற்பிறவியின் காரணமாகப் பிறவி எடுத்து இன்னலுரும் மற்ற மனிதப்பிறவிகள் தங்களை மேம்படுத்திக்கொண்டு, பிறவியில்லாப்பெருவாழ்வை பெற்றிட முடியும். எந்த வினையை மேற்கொண்டாலும் அது நல்லது கெட்டது கொண்டே விளங்கும். சுவாசித்தல் என்பது மனிதனுக்குத் தேவையான ஒரு வினையாகும். அவன் சுவாசிக்கும் போது, எந்தவித உயிர்களுக்கும் அவனைப்பொறுத்தவரை தீங்கு விளைவிக்க வேண்டுமென்ற எண்ணம் இல்லை. ஆனால், அவ்வாறு அவன் சுவாசிக்கும்போது, பல கிருமிகள் அழிந்துவிடுகின்றன. இருட்டில் ஒளி ஏற்படுத்துவதற்காக தீபம் ஏற்றுகிறோம். ஒளிபிறக்கின்றது. அதே சமயம் பல பூச்சிகள் அத்தீபத்தைத் தேடிவந்து அதன் சூட்டினால் மடிகின்றன. ஆகவே தீங்கு, கெடுதி ஏற்படுகின்றது என்று ஒருவனால் வினை செய்யாமல் இருக்கமுடியாது. வினையாற்றல் என்பது வாழ்க்கையின் நியதி. ஆனால் அவ்வினைகளே தவம், யாகம், தானம் எனும் சமுதாய மேம்பாட்டிற்காக மேற்கொள்ளும்போது, அவை புனிதமாகின்றன. ஆகவே பொது நலவினைகளை ஆற்றுதலே மனிதனின் கடமையாகும்.)

**நிஸ்சயம் ச்ருணு மே தத்ர த்யாகே**
**பரதஸத்தம ।**
**த்யாகோ ஹி புருஷவ்யாக்ர**
**த்ரிவித: ஸம்ப்ர கீர்த்தித : ॥** (4)

"பரதகுலத்தலைவனே! புருஷர்களில் புலி போன்றவனே! தியாகத்தைப்பற்றி நான் கொண்டுள்ள கருத்தை அறிவாயாக. தியாமானது மூன்று வகையாகக் கூறப்பட்டுள்ளது."

(மனிதனது வாழ்க்கைக்கு பெருமையைத் தருவது தியாகமேயாகும். தாய் தன் பிரசவவலியினை ஒரு தியாகமாகக் கொண்டு ஒரு உயிரைப் பெற்றுத்தருகின்றாள். தாயின் தியாகத்தால் மனிதன் பிறக்கின்றான். பூமி தனது சாரத்தை தியாகம் செய்வதால் செடி வளருகின்றது. மெழுகுவர்த்தி

தன்னை உருக்கிக்கொள்ளும் தியாகத்தால் ஒளியைத் தருகின்றது. கனி தன்னை வளர்த்த மரத்தை தியாகம் செய்வதால் மனிதருக்கு உணவாகின்றது. ஆகவே மற்றொருவர் இன்பம் பெற, சுகம் காண ஒருவரது தியாகம் அவசியமாகின்றது. அத்தகைய தியாகம் மூன்று வகையாக உள்ளது.)

யக்ஞதானதப: கர்ம ந த்யாஜ்யம்
கார்யமேவ தத் ।
யக்ஞோ தானம் தபஸ்சைவ
பாவனானி மனீஷிணாம் ॥ (5)

''வேள்வி,தானம் தவம் ஆகிய வினைகள் விடமுடியாதவையாகும். அவைகள் மேற்கொள்ள வேண்டியனவாகும். (ஏனெனின்) அவை மூன்றும் அறிஞர்களுக்குத் தூய்மை எனும் பண்பினை வழங்கும் ஆற்றலுடையனவாகும்.''

(வேள்வி என்பது இறைவனுக்காகச் செய்யப்படும் வினையாகும். தானம் சமுதாய உணர்வுடன் ஆற்றப்படும் வினையாகும். தவம் என்பது தன்னுடைய ஆன்ம மேம்பாட்டிற்காக மேற்கொள்ளப்படும் வினையாகும். ஆகவே வேள்வி தானம், தவம் ஆகியன இன்றியமையாத ஒரு நிலையில் மனிதனால்மேற்கொள்ளப்படவேண்டிய வினைகளாகும். மனிதன் தன்னுடைய அன்றாடத் தேவைகளுக்காவும் தன்னல பயன்களுக்காவும் மேற்கொள்ளும் காமிய கர்மங்கள் என்பன தவிர்க்கமுடியாத வினை ஒழுக்கங்களாகும். அனுபவித்த பின்னர், ஏமாற்றங்களுக்குப் பின்னர், திகட்டிய பின்னர் மனிதனுக்குத் தானாகவே காமிய கர்மங்கள் மீது வெறுப்பு ஏற்பட்டும் மேற்கூறிய வினைகளை ஆற்றிட விருப்பம் கொள்கிறான். அப்போதே அவன் தூய்மையாவதற்குரிய ஒரு பக்குவத்தைப் பெறுகின்றான். அந்த நிலையிலே அவன் அறிஞானகின்றான்.)

ஏதான்யபி து கர்மாணி ஸங்கம்
த்யக்த்வ பலானிச ।

கர்த்தவ்யானீதி மே பார்த்த
நிஸ்சிதம் மதமுத்தமம் ॥ (6)

''பார்த்தா, மேற்கூறிய (வேள்வி, தானம், தவம்) வினைகளை பற்றற்று, பயன் எதிர்பார்க்காது மேற்கொள்ள வேண்டும். இதுவே எனது உறுதியான மேன்மையான உபதேசக்கொள்கையாகும்.''

(வேள்வி, தானம் , தவம் ஆகியவற்றை 'நான்' எனது ' எனக்கு' என்ற அகந்தையுடன், பலன் எதிர்பார்த்து செய்யும் போது அவை காமியகர்மங்களாகிவிடுகின்றன அதாவது உலகாயுத ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ளத்தான் பயன்படும். அவை மனிதனுக்கு உண்மையான மேன்மையைத் தராது. அவை முதலில் பலன் தந்து ஆசைகாட்டி புதைமண்ணில் வீழ்ந்தநிலையை இறுதிவரை தந்திடும் மனிதன் பிறர்க்காக எண்ணும்போதுதான் அவன் மனிதனாகின்றான்; புனிதமடைகின்றான். ஆகவே குழந்தையை வளர்க்கும் ஒரு தாயைப்போல் பாலைத்தரும் ஒரு பசுவைப்போல் ஒளியைத்தரும் ஒரு மெழுகுவர்த்தியைப் போல் மனிதன் மேற்கூறிய வினைகளை தியாக உணர்வுடன் தன் வினைப் பலனைப் ஒரு தானமாகக் கருதி , அதனால் மேற்கொள்ளும் தன் வாழ்க்கையை ஒரு வேள்வியாக அமைத்துக் கொண்டால் அதுவே அவ்வினைகளுக்கும், அவற்றை செயல்படுத்தும் மனிதனுக்கும் புனிதமும் பெருமையும் ஆகும். பொது நலக் கருத்து இவ்வினைகளில் இருப்பதால் இறைவன் இவ் வினைமுயற்சியினை 'ஆற்றுதலே தனது சிறந்த அறிவுரையாக -கொள்கையாகக் கூறுகிறான்.)

நியதஸ்ய து ஸந்யாஸ:
கர்மணோ நோபவத்யதே ।
மோஹாத்தஸ்ய பரித்யாக
ஸ்தாமஸ: பரிகீர்த்தித: ॥ (7)

''அன்றாடம் செய்யவேண்டிய நித்ய கர்மங்களைச் செய்யாது விடுவது தவறாகும். அறிவில்லாமல் அவற்றை

செய்யாது விடுவது தாமச துறவு என்று அழைக்கப்படும்.''

(இந்த உடலும் வாழ்க்கையும் 'ஒன்ருேடு ஒன்று பிணைந்திருப்பன. வாழ் வதற்காக இந்த உடல் சில தவிர்க்க முடியாத வினைகளை நாளும் மேற்கொண்டே இருக்கவேண்டும். இதுபோது மனிதன் நாளுக்குநாள் ' தூய்மையாகின்ருன். அதன்பிறகு அவனை சமுதாய நிலையில் சிந்திக்க வைக்கும். இதனை விடுத்து அந்த நித்ய கர்மங்களைச் செய்யாது விடுத்தால் மனிதன் சிந் திக்க சக்தியற்று, ஜடம் போல் வாழ்வை மேற்கொண்டு பல உள்ள உடல் கேடுகளுக்கே வழிவகுக்கும். ஆகவே இந்த நித்ய வினைகளைக் கண்டிப்பாக மேற்கொள்ள வேண்டும் இந்த நிலையில் அவன் செய்யும் வினையில் ஒரு பற்றும் பலன் மீது விருப்பமும் கொள்கிருன். இதுவே தாமச துறவு அல்லது தாமச தியாகம் என்று அழைக்கப்படுகிறது.)

துஃகமகித்யேவ யத்கர்ம காயக்லே-
சபயாத் த்யஜேத் ।
ஸ க்ருத்வா ராஜஸம் த்யாகம்
நைவ த்யாகபலம் லபேத் ॥ (8)

''உடல் துன்பத்திற்குப் பயந்து வினையாற்று தலையே ஒரு துன்பமெனக் கருதி வினை மேற்கொள்வதை கைவிடுபவன் ராஜஸ தியாகம் புரிகின்ருன். அதனால் அவன் தியாகத்தின் பயனை அனுபவிப்பதே இல்லை.''

(வாழ்க்கையில் வினையாற்ருமல் 'சும்மா' இருக்கமுடியாது. பிறப்பின் நோக்கம் வினையாற்றுதல் தன்னலத்திற்காக முதலில் செய்யப்படும் வினையாற்றுதல் போகப்போகப் பிறர் நலத்திற்காகச் செயல்படவேண்டும். 'வினைபுரிந்தால்தானே கெடுதி, துன்பம் வருகிறது சும்மா இருந்தால் எல்லாவற்றையும் துறந்து மலையிலோ, ' குகையிலோ சும்மாவே உட்கார்ந்தாலே போதும். மற்றவர் நமது தேவையைப் பூர்த்தி செய்வார்களே' என்று ஒருவன் நினைத்து

விட்டால் அவனது பிறவி பயனற்றதொன்றாகிவிடும். பிறப்பின் நோக்கம் இல்லாது, பிறப்பினை மேன்மைப்படுத்தாது அவன் வாழ்க்கை பொருளற்றதாகிவிடும். இங்கு அர்ச்சுனன் ''எங்கே போர் தொடங்கினால், போரில்தன் உற்றார், உறவினர் இறக்கநேரிடுமே, நாம் பழிக்கு ஆளாகிவிடுவோமே'' என்று அஞ்சி, துன்புற்று போரைத் தவிர்க்க முயலுகிறான். தர்மத்தைக் காப்பாற்ற உறவை இழக்க அவன் தயாராக இல்லாத போது, கிருஷ்ணன் இவ் அறவுரையை வழங்குகிறான். இங்கு அர்ச்சுனன் போரைத் தவிர்ப்பது ராஜச தியாக உணர்வின் வெளிப்பாடாகும். இது பயனற்ற , மோட்சத்தை நல்காத தியாகமாகும்.)

**கார்யமித்யேவ யத்கர்ம நியதம்**
**க்ரியதே அர்ஜுன ।**
**ஸங்கம் த்யக்த்வா பலம் சைவ**
**ஸ த்யாக: ஸாத்விகோ மத : ॥ (9 )**

''அர்ச்சுனா! பற்றையும் பலனையும் விடுத்து, செய்யவேண்டிய எந்த நித்ய கர்மங்கள் செய்யப்படுகின்றனவோ, அவையே சாத்துவிக தியாகமாகக் கருதப்படுகின்றன.''

(எல்லோரும் நாளும் கர்மங்கள் எனும் வினைகளை செய்து கொண்டே இருக்கிறார் கள். எல்லா வகைகளுக்கும் பலன் உண்டு .'இன்ன பயன்' என்றும் செய்கின்றவன் 'நான் ' என்ற உணர்வுடனும் நித்யவினைகள் செய்யப்படுகின்றன. ஆனால் சாத்துவிக தியாகம் என்பது வினைகளை மேற்கொள்ளும் போது செய்பவன் 'நான்' என்ற உணர்வு இல்லாது, வினைப்பயன்களை மறந்து, எதிர்பார்க்காது சேவை- கடமை என்ற உணர்வுடன் வினைகளை மேற்கொள்வது ஆகும். இந்த நிலையில்தான் வினையாற்றுபவனின் மனமும், இந்திரியங்களும் புனிதமடைகின்றன. மனிதன் நாளும் சுவாசிக்கின்றான். ஆனால் 'நாம்' சுவாசிக்கின்றோம், அதனால் நம் உயிர் இருக்கிறது'' என்ற எண்ணம் சிறிதே இன்றி ஒ ரு கடமையாக தன்னையறியாது

*அதனைச் செய்கின்றான். அந்த மனோபாவமே சாத்விகதியாகத்திற்கு தேவையாகும். ஆகவே சாத்துவிக தியாகியானவன் ஒருமுனைப்புடன், பற்றற்று பயன் எதிர்பார்க்காது செய்யும்போது பந்த, பாசம் எனும் உறவு நிலை கடந்து, ஒரு துறவி நிலையில் பணியை மேற்கொள்கிறான். இந்த மனஉணர்வை அர்ச்சுனன் பெறவே கிருஷ்ணன் இவ்வாறு உபதேசிக்கின்றான்.)*

**ந த்வேஷ்டயகுசலம் கர்ம**
**குசலே நானுஷஜ்ஜதே ।**
**த்யாகீ ஸத்வஸமா விஷ்டோ**
**மேதாவீ சின்னஸம்சய : ॥** (10)

''*(ஆகவே)* சத்துவ உணர்வு மிக்க உள்ளவனும், பேரறிஞனும், சந்தேகங்களை விலக்கியவனும் சிறந்த தியாகியாவான். அவன் துன்பம் ஏற்படுத்தும் வினைகளை வெறுக்கமாட்டான். இன்பம் தரும் வினைகளை மேற்கொள்ளமாட்டான்.''

*(சத்துவகுணம் கொண்ட தியாகியானவன் -துறவியானவன் பற்றற்று விளங்குவதால் அவன் ஆத்ம அறிவை பெற்றவனாகத் திகழ்கின்றான். எப்போது அவன் 'நான்', 'எனது' 'பயன் இது' என்ற உணர்வின்றி வினையாற்றுகின்றானோ அவன் சமுதாயத்தில் நண்பனாக -வழி காட்டியாக மாறிவிடுகின்றான். வருத்தம் தரும், துன்பம் தரும் வெறுப்புக்கும் நகைப்புக்கும் இடம் தரும், வினைகளை அவன் மனமுவந்து செயற்படுதுகிறான். அதே சமயத்து உடலைப் பேணிப்பாதுகாக்கவும், இந்திரியங்களுக்குத் துன்பம் தரும்படியாகவும் உள்ள வினைகளை அவன் ஏற்காது, அவற்றை வெறுக்கவும் செய்கின்றான். அந்த நிலையில் அவன் இறை உண்மையை உணர்ந்த ஞானியாகின்றான். அவன் மனதில் எந்த நிலையிலும் எதிலும், ஐயமோ, அச்சமோ ஏற்படுவதில்லை. எதிரில் இருக்கும் உருவங்களோ, எண்ணங்களோ ஒரு நிலைக்கண்ணாடியை எவ்வாறு சிறிதும்*

களங்கமோ, பாதிக்கவோ செய்வதில்லையோ அவ்வாறுஇயற்கை நிகழ்ச்சிகள் சாத்துவிக தியாகியின் உள்ளத்தைச் சிறிதும் பாதிப்பதில்லை. இவ்வாறு அர்ச்சுனனை அறப்போரில் ஈடுபடுத்த பலவாறு உபதேசித்து, கண்ணன் நம்மை சிந்திக்க வைக்கிறான்.)

ந ஹி தேஹப்ருதா சக்யம்
த்யக்தும் கர்மாண்ய சேஷத: ।
யஸ்து கர்மபலத்யாகீ ஸ
த்யாகீத்யபிதீயதே ॥ (11)

"இப்பூமியில் பிறப்பெடுத்தவர்கள் வினைகள் ஆற்றாமல் இருக்க முடியாது. ஆனால் அதே சமயத்து அவ்வினைகளை மேற்கொள்ளும்போது அவ்வினைப் பலன்களை யார் ஒருவன் துறந்து விடுவாரோ அவனே சிறந்த தியாகியாகப் போற்றப்படுகிறான்."

(வினையாற்றாமல் யாரும் சும்மா இருக்கமுடியாது. தன் அன்றாட தேவைகளுக்காவது அவன் நாளும் வினைகளை கர்மங்களைமேற்கொள்ள வேண்டும். இது சாதாரண மனிதனின் நிலை.ஆனால் ஆன்மீகச் சிந்தனை கைவரப் பெற்ற இந்த மனிதன் செய்வதுதான் அல்ல, செய்யும் வினை தனக்காக அல்ல. அந்த வினைகளால் ஏற்படும் பலன்கள் எனக்கல்ல' என்று எண்ணி, எப்போது அவன் வினைப்பயன்களுக்கு உரிமை கேட்காது இருக்கிறானோ,அப்போதே அவன் சிறந்த துறவி அல்லது தியாகி ஆகின்றான்.)

அனிஷ்டமிஷ்டம் மிச்ரம் ச
த்ரிவிதம் கர்மண : பலம் ।
பவத்யத்யாகினாம் ப்ரேத்ய ந து
ஸந்யாஸினாம் க்வசித் ॥ (12)

"துறவுநிலை அடையாதவர்களுக்குத் தீமை பயக்கும் வினைப்பயன்கள், நன்மை பயக்கும் வினைப்பயன்கள்,

நன்மையும் தீமையும் கலந்த வினைப்பயன்கள் என்று மூன்றுவகை வினைப்பயன்கள் அவர்களது மரணத்திற்குப் பிறகு உண்டாகின்றன. ஆனால் தியாகிகள் எனும் துறவிகளுக்கு மேற்படி வினைப்பயன்கள் எக்காலத்தும் இல்லை.''

(நன்மை தரும் வினைப்பயன் என்பது அதனால் ஒருவன் சுவர்க்கம் செல்லும் வாய்ப்பினையும் தேவர்களாகப் பிறந்திடும் நிலையினையும் அடைவதாகும். அதேபோன்று தீமை தரும் வினைப்பயன்களினால் ஒருவன் நரகத்தில் வீழ் வதும் மிருகங்களாகப் பிறப்பதும் ஆகும். நன்மையும் தீமையும் கலந்த வினைபப்யன்களினால் உயிரானது இந்த மண்ணுலகில் மனிதனாகப் பிறத்தலாகும். இந்த மூன்று நிலையினையும் வினைப்பயன்களின் மீது பற்று கொண்டவர்கள் அனுபவிப்பதாகும். ஆனால் வினைப்பயன்களின் மீது ஆசையோ, பற்றோ கொள்ளாத துறவிகள் எனப்படுவோர்க்கு இந்தப்பலன்கள் யாதும் இல்லை. அவர்கள் தங்கள் உடலை ஒரு நிழலாகவே கொள்வர். நீரிலிருந்து எண்ணெய் தனித்திருப்பது போன்று தாங்கள் செய்யும் வினைப்பயன் களிலிருந்து தனித்து இருந்து செயல்படுவர். அந்த நிலையில் அவர்களுக்கு முக்தி எனும் பிறவிப்பயன் தானாகவே வந்தமைகிறது. மனிதன் தன்னுடைய தீய, நல்ல வினைப்பயன்களால் இம்மண்ணில் பிறவி எடுத்துள்ளான். சிந்திக்கத் தெரிந்த மனிதன், தான் மேற்கொள்ளும் வினைகளின் பாதிப்பினை நன்றாகவே அறிவான். தன்னை மேம்படுத்திக் கொள்ளவதும், தன்னைத் தாழ்த்திக் கொள்வதும் அவனுடைய வினை களைப் பொறுத்தே அமைகின்றது. மேலும் சிந்திக்கத் தெரிந்த மனிதன், வினைப் பயன்களின் மீது கொள்ளும் பற்று தன்மை மேன்மேலும் வினைகளை மேற்கொள்ளவே செய்கின்றது என்பதையும் அதனால் தான் மீளாப் பிறவிப்பெருங்கடலில் மீண்டும் மீண்டும் தள்ளப்படவே செய்வோம் என்பதையும் அறிகின்றான்.)

பஞ்சைதானி மஹாபாஹோ
காரணானி நிபோத மே ।

ஸாங்க்யே க்ருதாந்தே ப்ரோக்தானி
ஸித்தயே ஸர்வகர்மணும் ॥ (13)

*''பரந்த தோள்களையுடையவனே! எல்லா வினைகளையும் செய்து முடிப்பதெற்கென்று , கரும காண்டத்தின் முடிவை காட்டும்படியான சாங்கிய சாஸ்த்திரத்தில் கூறப்பட்டுள்ள (இந்த) ஐந்து காரணங்களையும் என்னிடமிருந்து அறிந்து கொள்வாயாக.''*

*(நாம் நாளும் வினைகளை மேற்கொள்வதெல்லாம், நாம் நம் வாழ்க்கையில் நம் கடமைகளை சரிவரச் செய்து இறுதியில் மோட்சம் எனும் வீடுபேற்றை அடைவதற்கேயாம் .வினைகளை மேற்கொள்ளும் போது நமது மனம் , உடல் தூய்மையாக்கப்படுகின்றன. இந்த இயற்கையானது. நமக்கு ஒரு பள்ளிக்கூடம் போன்றது. இப்பள்ளியில் படித்திடும் போது அவன் அறிவைப் பெறுகின்றான். சிந்தனை சீரியதாக் கப்படுகிறது. பிறகு படிப்பு முடிந்த பின் அவன் அந்த பள்ளியை விட்டுச் செல்லுதலே வேண்டும் என்பதே அவன் குறிக்கோள். வகுப்பில் தேர்ச்சி பெறுவிட்டால் அவன் அப்பள்ளியிலேயே இருந்திடல் வேண்டும். ஆம் மனிதன் வினைகளை மேற் கொள்ளும்போது தன்னை மேன்மையாக்கிக் கொள்ளா விட்டால் ,ஆசை, காமம் இவற்றின் துன்பத்தை அறியாவிட்டால், அவன் பிறவி எனும் பள்ளியை விட்டு வெளியே வரமுடியாது. ஆகவே மனிதன் வினைகளுக்குரிய பயன்களை -அதன் இயல்புகளை அறிந்து கொள்ளுதல் வேண்டும்.)*

அதிஷ்டானம் ததா கர்த்தா
கரணம் ச ப்ருதக்விதம் ।
விவிதாஸ்ச ப்ருதக்சேஷ்டா தைவம்
சைவாத்ர பஞ்சமம் ॥ (14)

*''உயிரின் இருப்பபிடமாக விளங்கிடும் உடல், வினைகளை மேற்கொள்ளும் மனிதன் (கர்த்தா), வெவ்வேறு விதமான இந்திரியங்கள், பலவகையான மாறுபட்ட செயல்கள்,*

மற்றும் தெய்வச் செயலும் சேர்ந்தனவே ஐந்து காரணங்களாகும்.''

(அதிஷ்டானம் என்றால் இருப்பிடம் என்று பொருள். விருப்பு,வெறுப்பு ,இன்பம் துன்பம்,ஞானம் என்பவைகளை அனுபவிக்கும் இடமாக- இருப்பிடமாக இந்த உடல் உள்ளது. அதாவது ஆசைகளின், உணர்ச்சிகளின் ஊற்றாக இந்த உடல் உள்ளது. இந்த உணர்வுகளை அனுபவிக்கும் ஜீவாத்மாவே இந்த இருப்பிடத்திற்கு, இந்த உடலுக்கு உரிமையாளன் அதாவது கர்த்தா என்று அழைக்கப்படுகிறான். கண், காது, மூக்கு போன்ற ஐந்து புறக்கரணங்கள், மனம், புத்தி போன்ற அந்தக் கரணங்கள், வாய் கால் கை, போன்ற செயற்கருவிகள் ஆக பதினான்கு செயல்புரியும் கருவிகள், நாம் உயிர் வாழ, சக்தி பெற்றிட-உடல் இயங்கிட நமக்கு உதவிடும் பிராணன், அபாணன் போன்ற பத்துவகை வாயுக்கள், மனித முயற்சிகளை, செயல்களை பலன்களை தோற்றுவித்து அனைத்தையும் கட்டுப்படுத்திடும் தெய்வ ம் ஆகியான ஐந்து காரணங்களே நம் வினைகளுக்குத் துணையாக நின்று செயல் புரிகின்றன.)

சரீர வாங்மனோபிர்யத்கர்ம
ப்ராரபதே நர : ।
ந்யாய்யம் வா விபரீதம் வா
பஞ்சைதே தஸ்ய ஹேதவ : ॥ (15)

''மெய்யாலும் மொழியாலும், மனதாலும் எவனொருவன் நேர்மையான வழியிலோ, அல்லது தீய வழியிலோ வினைகள் மேற்கொண்டாலும் அவையாவற்றிற்கும் மேற் கூறிய ஐந்து காரணங்களே துணையாக செயல் புரிகின்றன்.''

(உடலில் கண், மூக்கு, காது என்று பல பகுதிகள் இருந்தாலும் ''மனம்'' ஈடுபாடு இல்லையென்றால் அவற்றிற்குப் பயன் இல்லை. சாக்கடை பக்கத்தில் வழிந்தோடினாலும் ஒருவன் முகம் சுளிக்காமல் மூக்கை மூடிக்கொள்ளாமல் இருந்தானேயானால் அவன் மனம் வேறு

எங்கேயோ லயித்துக் கொண்டிருகிறது என்று பொருள். அவன் சிந்தனை வேறெதின் மீதோ படர்ந்து உள்ளது என்று பொருள். ஆகவே மனம் ஒத்துழைத்தால் அன்றி, அவனால் செயல்புரிய முடியாது. அந்த மனதின் கட்டளையினால்தான் அவன் உடல் அசைகின்றது. வாய் பேசுகின்றது. கை, கால், காது, மூக்கு அவற்றிற்கு துணை புரிகின்றன. மருத்துவர் கையில் இருக்கும் கத்தி நோயாளியின் கட்டியை அப்புறப்படுத்தப் பயன்படுகிறது. கொலையாளியின் கத்தி மற்றொரு உயிரைப் பறிக்கிறது, அந்தக் கத்தியைப் போன்றே நமது மனத்தினை நல்லவற்றிற்கும், தீயவற்றிற்க்கும் செலுத்தி வினை புரிகின்றோம். இந்த வினைகளை மனதின் ஆணையால் நாம் உடலாலும், பேசிடும் வாக்கினாலும் மேற்கொள்கின்றோம். இத்தகு செயல்களுக்கு மேற்கூறிய ஐந்து செயற்கருவிகளே துணை புரிகின்றன.)

தத்ரைவம் ஸதி கர்தாரமாத்மானம்
கேவலம் து ய: ।
பச்யத்யக்ருத புத்தித்வான்ன
ஸ பச்யதி துர்மதி: ॥ (16)

''அது அவ்வாறு இருக்க (மேற்கூறியவற்றிற்கு ஐந்து காரணங்களே துணையாக இருக்க) முழுமுதற் பொருளாகிய ஆத்மாவையே கர்த்தாவாக- செய்பவனாக-யார் ஒருவன் எண்ணுகிறானோ, அவன் அறிவு தெளிவற்றவன். அவனால் மெய்யறிவை அறியமுடியாது.''

(ஒரு இரயில் வண்டி அல்லது விமானம் உருவாகி ஓடுவதற்கு தேவையான பொருட்கள் -எரிபொருள், காற்று, இரும்பு, ரப்பர் யாவுமே மண்ணுலிருந்துதான் கிடைக்கின்றன. ஆனால் அவற்றின் துணையால் உருவாகிய வண்டி, அந்த மண்ணின் துணையின்றியே அது இயங்குகிறது- செயல் படுகின்றது. ஆகவே பூமி அவ்வண்டிக்கு கர்த்தா என்று கூறமுடியாது. எது வினைகளை செய்கின்றதோ அது கர்த்தா வாகும். மேலே முன்செய்யுளில் சொன்ன ஐந்து காரணங்களில்

ஒன்றான தெய்வம் என்று கூறப்படும் ஜீவாத்மாவும் இயற்கையின் ஒரு கூறுபாடே .அது ஜடமான அசையாத இயற்கை. ஆனால் ஆத்மாவின் சிறப்பு நிலையில் அது வினை புரிகின்றது.ஆகவே தான் புரியும் எந்த வினைகளுக்கும் தானே காரணமானவன் என்ற அகங்கார மனப்பான்மையுடன் இருப்பவன் உண்மையறியாத அறிவற்றவனாவான் . உள்ளதை-உண்மையை அறியாதவன்.)

யஸ்ய நாஹம்க்ருதோ பாவோ
புத்திர்யஸ்ய ந லிப்யதே ।
ஹத்வாபி ஸ இமான் லோகான்ந
ஹந்தி ந நிபத்யதே ॥ (17 )

''யாருக்கு தான் கர்த்தா என்ற அகங்கார உணர்வு இல்லையோ , யாருக்டுகு உலக ஆசைகளின் மீது பற்று இல்லையோ, அவன் இந்த உலகத்தில் யாரைக் கொன்றாலும் கொல்லாதவனாவான். அதனால் அவன் அவ்வினை மேற் கொள்ளலில் சம்பந்தபடாதவனாவான்.''

('நான்' செய்தேன் என்ற அகங்கார உணர்ச்சி இல்லாமல் அதனைக் கடந்து இருப்பவன் எவனோ, ஆத்மா என்பது உள்ளத்தைக் கடந்து விளங்குவது என்று அறிபவன் எவனோ . யார் ஒருவன் ஆசையின் பின்னணியில் அறிவை பயன்படுத்துவதில்லையோ, வினைப் பயன்களின் ஆசையால் ஈர்க்கப்படவில்லையோ அவன் தங்களுடைய வினைகளுக்கும் பலன்களுக்கும் பொறுப்பாகமாட் டான்.மேலும் விளைவுகளின் தாக்கத்தாலும் அவன் பந்தப்படுவதில்லை. கண்ணாடியில் ஒரு வனின் உருவம் தெரிகிறது. அவன் ஆடும்போது உருவமும் ஆடுகிறது . ஆனாலும் அவனுக்கும் கண்ணாடிக்கும் ஒரு சம்பந்தமும் இல்லை, அவன் உருவம் கண்ணாடியில் பதிவதும் இல்லை. ஆகவே இங்கு கண்ணாடி கர்த்தா இல்லை , அர்ச்சுனன் தனது 'தான்' என்னுடைய' என்ற அகங்கார உணர்வுகளை விட்டதனால் -பந்த பாச பற்றுக்களை விட்டதனால், போர்க்களத்தில் பீஷ்மரைக் கொல்வது போன்ற அவனுடைய

செய்கைகளுக்கு -தான் கர்த்தா இல்லை என்ற உணர்வு மேலோங்கி விளங்குகிறான்.)

ஞானம் ஞேயம் பரிக்ஞாதா
த்ரிவிதா கர்மசோதனா ।
கரணம் கர்ம கர்த்தேதி
த்ரிவித : கர்ம ஸங்க்ரஹ : ॥ (18)

''வினையாற்றுவதற்கு அறிவு, அறியப்படும் பொருள், (ஞேயம்) அறிபவன் ஆகிய மூன்றும் காரணங்களாக உள்ளன. (அது போன்று) வினைக்கு இருப்பிடமாக கருவி, வினை (கர்மம்), செய்பவன் (கர்த்தா) ஆகியன விளங்குகின்றன.''

(உலகத்தைப் பற்றிய சிந்தனை ஓட்டமே அறிவு அந்த உலகத்தில் காணப்பெறும்பொருட்கள் நிகழ்சட்சிகள் யாவுமே அறியப்படும் பொருள்களாகும். அறிவால் உலகத்தை அறிபவன் ஜீவனாவன், இம்மூன்றும் ஒன்றோடு ஒன்று பிணைந்தவையாகும். ஜீவனானவன் தன் அறிவு மயக்கத்தால் இடத்தால், குணபேதத்தால் சிந்தனை ஓட்டத்தால் பல மாறுபட்ட வினைகளை மேற்கொள்கிறான். புத்தி, சித்தம், அகங்காரம் எனும் அகக்கருவிகளின் துணையாக மெய்,வாய், கண், மூக்கு, செவி மற்றும் கை, கால், வாய், எருவாய், கருவாய் எனும் பத்து புறக்கருவிகளின் துணையாக, மயக்க அறிவுடைய ஜீவன் வினைகளை மேற்கொள்கிறான். இந்த ஜீவனே கர்த்தாவாவான். அறிவும் வினையும் இந்த ஜீவாத்மாவிடமே இணைந்து விளங்குகின்றன. சீரிய அறிவுடன் பலன் எதிர்பாராத வினையாற்றும் போதுதான் ஜீவன் முக்திக்குரிய பக்குவத்தை அடைகின்றான். மனம், மொழி, மெய் சிறந்திட ஜீவன் பரமனைக் காணுகின்றான்.)

ஞானம் கர்ம ச கர்த்தா
ச த்ரிதைவ குணபேதத :।
ப்ரோச்யதே குணஸங்க்யானே
யதாவச்ருணு தான்யபி ॥ (19)

''அறிவும், வினையும், செய்பவனும் குணவேற்றுமையினால் மூன்று வகையாக உள்ளனர் என்று குணநலன்களைப் பற்றி பேசிடும் சாங்கியம் எனும் நூல்கூறு கின்றது .அதனைக் கேட்பாயாக''.

(இயற்கை பற்றிய தத்துவ விளக்கங்களை அறிதற்கு கபிலர் இயற்றிய 'சாங்கியம்' எனும் நூல் விதிநூலாக உள்ளது. குண வேறுபாடுகளைப் பற்றிய விளக்கங்களை இந்நூல் தெள்ளத்தெளிவாக கூறுகின்றது. மனிதன் அறிவால், செய்யும் செயல் திறனால் பலவகையாகத் திகழ்கின்றான். ஆகவே குணவேறு பாடுகள் மனிதனை எவ்வகையில் மாற்றியமைக்கும் என்பதை அர்ச்சுனன் முகமாக பகவான் நமக்கு அறிவுறுத்துகின்றார்.)

ஸர்வபூதேஷு யேனைகம்
பாவமவ்யயமீக்ஷதே ।
அவிபக்தம் விபக்தேஷு தஜ்ஞானம்
வித்தி ஸாத்விகம் ॥ (20)

''வேறுபட்டு விளங்கும் பூதங்களில் வேறுபடாத, அழியாத, ஒன்றேயாக இருக்கும் பொருளை எதனைக் கொண்டு பார்க்கிறாயோ, அந்த அறிவை 'சாத்விக அறிவு' என்று அறிவாயாக.''

(இங்கு பரமாத்மாவின் சிறப்பு பேசப்பெறுகிறது. இந்த பரமாத்மா எல்லாஅசையும் அசையா உயிர்களிடத்தும் உயிரின் உயிராக ஊடுருவி கலந்து உள்ளது. இந்த பரமாத்மாவிற்கு உயர்வு தாழ்வு என்ற பாகுபாடு கிடையாது. பரந்திருக்கும்போது எவ்வாறு ஆகாயம் பிளவுபடாது இருக்கிறதோ அவ்வாறு கூடுதல், குறைதல்,அழிதல் என்ற நிலைகளை கடந்து உள்ளது. ஆகவே தனித்தனியாக பிரிந்து உள்ள உயிரிகளிடத்து உள்ள பரமாத்ாமாவை எவன் 'ஒன்றுதான் அது ,அதுவே எங்கும் எதிலும் உள்ளது, என்று அறிகின்றானோ அவனுடைய அறிவே

*சாத்விக அறிவாக விளங்குகிறது. இது வேற்றுமையில் ஒற்றுமை காண்பதாகும்.)*

**ப்ருதக்தவேனது யஜ்ஞானம்**
**நானாபாவான் ப்ருதக்விதான் ।**
**வேத்தி ஸர்வேஷு தஜ்ஞானம்**
**வித்தி ராஜஸம் ॥** (21)

*"(அடுத்ததாக) எல்லா பூதங்களிலும் வேறு வேருன பல ஜீவாத்மாக்களை ஒன்றிலிருந்து ஒன்று வேறு வேறு விதமாகத் தனித்தனியாக உள்ளன என்று அறியும் அறிவே 'ராஜஸ அறிவா'கும்".*

*(இங்கு ஒற்றுமையில் வேற்றுமை பார்க்கப்படுகிறது. ஓர் உயிரின் உருவம், நிறம் ஒருவரின் பதவி, இனம், மொழி, பண்பு குணம் கண்டுவேறு வேறு உயிர்களாக யார் ஒருவன் பார்க்கின்ருனோ அவன் ராஜஸ அறிவை உடையவனாகக் கருதப்படுகின்ருன். இங்கே அவனுடையஅறிவு மயங்கிய நிலையில் விளங்குகிறது. மேகம் மழை பொழிகிறது. மேலிருந்து கீழே விழும்வரை அதற்குரிய நிறம் ஒன்றுதான் பெயர் ஒனறுதான். ஆனால் அந்நீரே பூமியில் விழு ந்திடும் போது ஆறு , அருவி, குளம், ஓடை, ஏரி, கடல், என்று அந்த இடங்களைப் பொறுத்து பலநீர்நிலைகளாக பெயர் பெறுகின்றது. ஆனால் எல்லா இ டங்களிலும் மழைநீர் ஒன்றே வியாபித்துள்ளது.அந்த வழியில்தான் எல்லா உயிர்களிலும் ஒரு ஆத்மாவே உள்ளது. இதனை அறியாதவன் அறிவு ராஜஸமாகின்றது.)*

**யத்து க்ருத்ஸ்வைதேகஸ்மின்**
**கார்யே ஸக்த மஹைதுகம் ।**
**அதத் வார்த்தவதல்பம் ச**
**தத்தாமஸமுதாஹ்ருதம் ॥** (22)

*"(தான் செய்யும்) ஒரு செயலே சகலமும் என்று பற்றிக்கொண்டு, யுக்திக்குப் பொருந்தாததாகவும், உண்மைக்கு*

*ஒத்து வராததாகவும், மிகவும் அற்பமானதாகவும் விளங்கிடும் அறிவே தாமஸ ஞானமாகும்.''*

*(தன் மனத்திற்கும், தன் உடலுக்கும் எது இன்பம் அளிக்கின்றதோ அதுவே தனது வாழ்க்கையின் பயனாகக் கருதுவது தமோ குணத்தானின் இயல்பாகும்.தன் மனைவியே, தன் குழந்தைகளே, தன் குடும்பமே தனது சகலமும் என்று கருதுவது, அழனுடைய மயக்க அறிவின் விளைவாகும். தனது உடலையே தனது ஆத்மாவாகக் கருதுவதும், தான் வழிபடும் திருவுருவங்களையே உண்மையான கடவுள்களாகக் கருது வதும் தமோ குணத்தின் இயல்பாகும். இது அவனுடைய அறிவின் கீழ்நிலையினையே குறித்திடும் . இதுவே 'அற்பஞா ன'மாகும்.)*

**நியதம் ஸங்கரஹிதமராகத்**
**வேஷத:க்ருதம் ।**
**அபலப்ரேப்ஸுனா கர்மயத்தத்**
**ஸாத்விக முச்யதே ॥** (23)

*''வினைப்பயனில் சிறிதும் ஆசை வைக்காத ஒருவனால் பற்று இல்லாது ,விருப்பு, வெறுப்பு கொள்ளாது தனக்கென நியநிக்கப்பட்ட எந்த வினை மேற்கொள்ளப்படுகிறதோ அதுவே (அந்தவினையே) சாத்துவிக வினை என்று அழைக்க ப்படும்''*

*(ஒரு தாய் தன் குழந்தைக்குப் பால் ஊட்டுவதிலோ, உணவு தருவதிலோ எந்தவிதபயனையும் அந்த குழந்தையிடம் எதிர்பார்க்காது செய்யப்படும் ஒரு வினையாகும். அவள் அந்த வினையில் ஈடுபட்டாலும் பற்றுவைத்தாலும் அதில் அவள் எந்தவிதமான நன்றியினையோ, லாபமோ அக்குழந்தை யிடமிருந்து எதிர்பார்பதில்லை. அதனை தனக் குரிய இயல்பான ஒரு கடமையாகவே மேற்கொள்கிறுள். இதுவே சாத்துவிக வினை யாகும். மேலும் ஒருவன் வினைகளை- கர்மங்களை -செயல்களை தனது வளர்ச்சிக் கேற்றவாறு*

மேற்கொள்கிறான். இங்கே அர்ச்சுனன் போர்க்களத்தில் தனது பொறுப்பினை உணர்ந்து விளைவுகளை எதிர்பார்க்காது தர்மத்தைக் காப்பாற்ற வினைகளை மேற்கொள்ள வேண்டும் என்று பகவான் இங்கு அறிவுறுத்துகிறார். ஆகவே செய்வது 'தான்' என்ற நினைப்பை ஒழித்து, பயன் இன்னது விளையும் என்று எதிர்பார்க்காது செய்யும் வினையே சாத்துவிக வினையாகும்.)

யத்து காமேப்ஸுனா கர்ம
ஸாஹங்காரேண வாபுன : ।
க்ரியதே பஹுவாயாஸம் தத்ரபி
ஜஸமுதாஹ்ருதம் ॥ (24)

''ஆசையின் பாற்பட்டு அல்லது மமதை உணர்வுடன் எவன் ஒருவன் பெரும் முயற்சி மேற்கொண்டு வினைகளை மேற் கொள்கிறானோ, அந்த வினை (களே) ராஜச வினைகளாகும்.''

(மனிதனுடைய ஆசைக்கு அளவில்லை. தன்னை, தன்னை விட பொருளால், பதவியால், புகழால் மேலான ஒருவனுடன் ஒப்பிட்டுக்கொண்டுஉழைப்பைபின்னேதள்ளிவிட்டு, குறுக்கு வழியில் தன்னை மேம்படுத்திக்கொள்ளவே விழைகின்றான். இதனால் அவனுடைய ஆசை பேராசைக்கு வித்திடுகின்றது. அந்த பேராசையினை அடைந்திட பெரும் முயற்சிகளை மேற்கொள்கின்றான். அதற்காக தன் உடலை நன்றாகப் பேணிப் பாதுகாத்துக் கொள்கிறான். தான் தனது என்ற எண்ணங்கள் உருவாக வழிவகுத்துக்கொள்கிறான்.இந்த உணர்வுகளைப் பின்னணியாகக் கொண்டு வேண்டியதைப் பெற வினைகளை மேற்கொள்கிறான். இவை யாவும் ராஜச வினைகளாகும்.)

அனுபந்தம் க்ஷயம் ஹிம்ஸாமன
பேக்ஷ்ய ச பௌருஷம் ।
மோஹாதாரபிப்யதே கர்ம யுத்தத்
தாமஸ முச்யதே ॥ (25)

''(செய்யும்) வினையின் விளைவு, அதனால் ஏற்படும் நஷ்டம்,துன்பம், தன்னுடைய ஆற்றல் ஆகியவற்றைச் சிறிதும்

எண்ணிப்பார்க்காது, (அறிவு)மயக்கத்தில் எந்த வினைகள் மேற்கொள்ளப் படுகின்றனவோ அவையாவும் தாமச வினைகளாகும்.''

(புகழ், பொருள், பெயர், பெண் ஆகியவற்றிற்காக மனிதன் சிறிதும் சிந்திக்காது வினைகளை பலர்மேற்கொள்ளுதலை நாம் பார்க்கின்றோம் அதுபோது அவர்கள் எதிர் நோக்கிடும் சமுதாய, அரசியல், எதிர்ப்புகளையும் பார்க்கிறோம். அவர்களது வீழ்ச்சிகளையும் காணுகின்றோம். இவையாவும் அம்மனிதன் மதிமயக்கத்தால் ஆசையின் அடிமையால் மேற்கொள்கின்றான். இவ்வினைகளை தன் உடலையும் உள்ளத்தையும் வருத்தி, தனது செயல் திறனைப்பற்றி சரியாக எடைபோடாது மேற்கொள்கின்றான். இங்கே அவன் தன் அறிவிற்கு மதிப்பினைத் தராது, தன் உணர் ச்சிகளுக்கே அடிமை யாகின்றான். மேலும் இது போன்ற வினையாற்றல்களின் போது, ஒரு சிலரும் பாதிக்கப்படலாம் என்பதையும் மறந்து விடுகின்றான்.)

முக்தஸங்கோ அனஹம்வாதீ<br>
த்ருத்யுத்ஸாஹஸமன்வித: ।<br>
ஸித்யஸித்யோர் நிர்விகார : கர்தா<br>
ஸாத்விக உச்யதே ॥ (26)

''பற்று வைக்காது , மமதையற்று, உறுதியும், ஊக்கமும், கொண்டுவெற்றி தோல் விகளின்போது தன்னிலை இழக்காது வினையாற்றுபவன் எவனோ அவனே சாத்துவிக கர்த்தா ஆவான்.''

(எல்லா உயிர்களிடத்தும் இறைவன் இருக்கின்றான் என்ற உணர்வுடன் எந்த வினைப்பயனிலும் பற்றுவைக்காது இருப்பவன் சாத்துவிகன் எனப்படுகின்றான். தான், தனது என்ற மமதையற்று தன்னுடைய உடலையே இறைவன் இருக்கும் கோயிலாக எண்ணி , துன்பத்தின் போதும் ,மகிழ்ச்சியின் போதும் தன் உணர்ச்சிகளை கட்டுப்படுத்தித் தன் மனதை,

அறிவை சமநிலையாக வைத்துக்கொள்பவன் சாத்துவிகன் எனப்படுகின்றான். செய்யும் வினைகளின் மீது பற்று வைக்காது தன் முயற்ச்சியில் அவன் நேர்மை, உழைப்பு, பொறுமை, ஊக்கம் ஆகியவற்றை ஒருமுனைப்புடன் செலுத்துகிறான் ; வெற்றியை காணுகின்றான். அதனால் சமுதாயமும் பயனடைகின்றது.)

ராகீ கர்மபலப்ரேப்ஸுர்லுப்தோ
ஹிம் ஸாதமகோ அசுசி : ।
ஹர்ஷசோகான்வித: கர்தா ராஜஸ :
பரிகிர்தித: ॥ (27)

''ஆசை கொண்டு, வினைப்பயன்களின் மீது நாட்டம் கொண்டு ,பேராசை உணர்வுடன் பிறரைத் துன்புறுத்திடும் மன இயல்புடன் தூய்மையற்று, மகிழ்ச்சிக்கும் துன்பத்திற்கும் எளிதில் ஆட்பட்டு வினையாற்றுபவன் 'ராஜச கர்த்தா' எனப்படுகிறான்.''

அயுக்த: ப்ராக்ருத: ஸ்தப்த:
சடோ நைஷ்க்ருதிகோ அலஸ : ।
விஷாதீ தீர்க்க ஸூத்ரீ ச
கர்த்தா தாமஸ உச்யதே ॥ (28)

''தனஞ்ஜயா! யோகத்திற்கு மாறுபட்ட மன இயல்புகொண்டு, அறிவு சரிவரவளரப்பெறாது. முரட்டுத்தனம் கொண்டு வஞ்சக மனதுடன் பழிவாங்கும் எண்ணத்துடன் சோம்பேறித் தனத்துடன் துயர உணர்வுடன், வீணே காலத்தைக் கழித்திடும் இயல்புடன் எவன் ஒருவன் வினைகளை மேற்கொள்கிறானோ அவனே தாமச கர்த்தா எனப்படுகின்றான்.''

(அடக்கமும்,ஒழுக்கமும் சாதனமும் கொண்டு விளங்கும் மனத்தைக் கொண்டவனே சிறந்த யோகி ஆகின்றான். இப்பண்புகள் அற்றவன் தாமசவினைகளை புரியும் கர்த்தா ஆகின்றான். மேலும் இவன் அறிவு வளர்ச்சியற்றும் , பணிவு இல்லாது திகழ்ந்திடும் முரடனாகவும் தனக்கு இடப்பட்ட

வினைகளை செய்வதற்குரிய தன் உடல் ஆற்றலைப் பயன் படுத்தவிரும்பாது வாளா இருந்திடும் வஞ்சகனாகவும் தன் வினைகளைமேற்கொள்வதன் மூலம் பிறர்க்கு அவர்களிடையே பகைமையை தோற்றுவித்திடும் பழி உணர்வு கொண்ட வனாகவும் இடப்பட்ட வினைகளை செயயாது சோம்பித்திரி பவனாகவும் துன்பமோ தோல்வியோ நேரிடின் உடனே மனத்தளர்ச்சி அடை பவனாகவும் எதனையும் காலக்கிரமத்தில் செயயாது 'பிறகு செய்யலாம' என்று காலத்தின் அருமை தெரியாது காலத்தைக் தள்ளிப்போடுபவனாகவும் விளங்கிடு வான் இத்தகு பண்புகளை உடையவனே 'தாமஸ கர்த்தா' என்ற ழைக்கப்படுகிறான்.)

புத்தேர்பேதம் த்ருதேஸ்சைவ
குணதஸ்த்ரிவிதம் ச்ருணு ।
ப்ரோச்யமானமசேஷேன
ப்ருதக்தவேன தனஞ்ஜய ॥ (29)

''தனஞ்ஜயா! முக்குண வேற்றுமைகளின் தாக்கத்தால் புத்தியிலும் மன உறுதியிலும் ஏற்படும் மூன்று பிரிவுகளை, சிறிதும் மிச்சம் மீதி இல்லாமல் உனக்கு விவரிக்கின்றேன் கேட்பாயாக.''

(இங்கு அர்ச்சுனன் 'திக்விஜயம்' என்று மற்றைய அரசர்களை போரில் வென்று வரும் வேளையில் தேவலோகத்திலிருந்தும் பூலோகத்திலிருந்தும் பொன்பொருளையெல்லாம் வெற்றி கொண்டு தன் வசம் கொண்டு வந்ததால் 'தனஞ்ஜயன்' என்று பகவானால் விளிக்கப்படுகிறான். வினைகளை மேற்கொள்ளும் போது அறிவும், மன உறுதியும் பெரும்பங்குவகிக்கின்றன. எது செய்யவேண்டும், எது செய்யக்கூடாது என்று பகுத்துப்பார்ப்பது அறிவின் இயல்பாகும். அதேபோன்று வினைகளை மேற் கொள்ளும்போது, செய்பவனின் மன உறுதிக் கேற்றவாறு வினைகள் முடிக்கப்படுகின்றன. இதனால் மேற் கொள்ளப்படும்

வினைகளின் பயன்கள் மாறுபடுகின்றன. ராஜஸ,சாத்விக, தமோ மனங்களின் பின்னணிக்கு ஏற்ப அறிவும் மனஉறுதியும் மாறுபாடு கொண்டு விளங்கிடும்.

ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம்ச
காா்யாகாா்யே பயாபயே ।
பந்தம் மோக்ஷம் ச யா வேத்தி
புத்தி: ஸா பாா்த்த ஸாத்விகீ ॥ (30)

"பார்த்தா! பிரவிருத்தியையும் நிவிருத்தியையும், செய்யக் கூடியனவையும், செய்யக்கூடாதவையும், அச்சத்தையும், அச்சமில்லாததையும் பந்தத்ததையும், முக்தியையும் அறியும் அறிவே சத்துவ அறிவாகும்".

(உலகாயுத- அதாவது இம்மை வாழ்வுக்குரிய இன்பங்களை, ஆசைகளை அடைவதற்கு மேற்கொள்ளப்படும் வினைகளே - செயல்களே பிரவிருத்தியாகும். இதற்கு நேர்மாறாக முக்தி எனும் மறுமை வாழ்வுக்குரிய ஆன்மிக வினைகளை மேற்கொள்ளுதல் நிவிருத்தியாகும். எது உலக நன்மைக்கு உதவிடும் செயல்கள், எவை தீமைக்கு வழிவகுத்திடும் செயல்கள் என்று எண்ணிப்பார்த்து கடமைகளை மேற் கொள்வது பகுத்திறிவு ஆகும். இது மனிதனுக்கு மிகவும் தேவையாகும் வீட்டின் ஊரின் நாட்டின் இறுதியாக உலகின் மேன்மைக்கு இப்பகுத்தறிவு வழிகாட்டிடும். அஞ்ச வேண்டிய வற்றிற்கு அஞ்சுதலே அறிவின் பயனாகும். அதே போன்று சமுதாய மேன்மைக்கு மனித நேயத்திற்கு வழிகாட்டிடும் கடமைகளைக் கண்டு அஞ்சுவதும் தகாது. அப்போதுதான் எளியோரும் பெண்களும் சுதந்திரமாக மகிழ்ச்சியாக இம்மண்ணில் உலவிடமுடியும். மேலும் பிறவிப் பிணியினை நல்கிடும் விஷயங்களை ஒதுக்குவதும், மோட்ச இன்பத்திற்கு வழிகாட்டிடும் ஈனப் பிறவியில்லா பெரும் பயனைத் தந்திடும் விஷயங்களை மேற்கொள்வதும் அறிவுடையவனின் செயலாகும். இதுவே சத்துவ அறிவு என்பதாகும்.)

யயா தர்மமதர்மம் ச கார்யம்
சாகார்யமேவ ச ।
அயதாவத் ப்ரஜானாதி புத்தி:
ஸாபார்த்த ராஜஸீ ॥ (31)

*''பார்த்தா! தர்மத்தையும், அதர்மத்தையும்,தக்க காரியத்தையும், தகாத காரியத்தையும் உள்ளபடி அறியாமல் தாறுமாறாக எந்த அறிவு எண்ணுகின்றதோ அந்த அறிவு ராஜச அறிவாகும்''.*

*(ராஜஸ குண ஈடுபாட்டினால் எந்த அறிவு செயல்படுகிறதோ அந்த அறிவு ராஜச அறிவாகும். இந்த அறிவு உடையவன் குழப்பத்தின் இருப்பிடமாக விளங்குவான். உழைப்பு அதிகமாக இவன் உழைத்தாலும், அவனிடம் நேர்மையோ, நாணயமோ காணமுடியாது. இதனால் அவன் நல்லனவற்றை தீயனவாகவும் தீயனவற்றை நல்லனவாகவும் எண்ணி செயல்படுவான். தான் சுகமாக வாழ்ந்திட, தன்னை உணர்வால், பிறருடைய புகழை, உழைப்பை, செல்வத்தை தனக்குச் சொந்தமாக்கிடவே விரும்புவான். இதனால் அவன் மேற்கொள்ளும் உழைப்போ மிகவும் அதிகமானது. இவனிடம் இறைபக்தி என்பது காணமுடியாது. சமுதாய நலனைப் பற்றி சிறிதும் துன்பப்படமாட்டான். பிறர் துன்பத்தில் ஆனந்தம் காண்பான். இவ் ராஜஸ அறிவின் உறைவிடமாக துரியோதனன் திகழ்வதைக் காணலாம்.)*

அதர்மம் தர்மமிதி யா மன்யதே
தமஸாவ்ருதா ।
ஸர்வார்ததான் விபரீதான்ஸ் ச
புத்தி: ஸா பார்த்த தாமஸீபி ॥ (32)

*''பார்த்தா! அறியாமை எனும் இருளால் மூடப்பெற்ற அறிவானது அதர்மத்தைத் தர்மமாகவும், நல்லனவற்றை வித்தியாசமாகவும், விபரீதமாகவும் எந்த அறிவு எண்ணுகின்றதோ அந்த அறிவு தாமச அறிவாகும்''.*

*(மனம் மற்றும் அறிவு மயக்கத்தில் மூழ்கியிருப்பது தாமச அறிவாகும். இந்த அறிவு நல்லது கெட்டது, நியாயம் அநியாயம் என்பதை பகுத்தறியும் ஆற்றல் இல்லாதது. மேலும் தீயோரையே நல்லவராக மயங்கி எண்ணும் இயல்புடையது. எப்போதும் தீயவற்றையே எண்ணி, தீயசெயல்களையே விரும்பி, தீயோரிடையே நட்பு கொள்வது இவ் அறிவின் பலவீனமாகும். சமுதாயத்தில் அஞ்சப் படும் தீய குணங்களின் இருப்பிடமாக இவ் அறிவு உடையவன் விளங்கிடுவான். வீண்பேச்சு, விணுகக் காலத்தைப் போக்குதல் ஆகியவற்றில் அதிகம் நாட்டம் கொள்வான்.)*

**த்ருத்யா யயா தாரயதே மன:**
**ப்ராணேந்த்ரியக்ரியா: ।**
**யோகேனோவ்ய பிசாரிண்யா**
**த்ருதி: ஸா பார்த்த ஸாத்விகீ ॥** (33)

*''பார்த்தா! யோகப்பயிற்சியின் உதவியால், தளராத உறுதியினால் யார் ஒருவன் மனம், பிராணன் பொறிகளை காக்கின்றனோ, அவனுடைய அந்த அறிவே சாத்துவிக உறுதியாகும்.''*

*(திருதி என்றால் மனமும், அறிவும், ஆற்றலும் சேர்ந்து ஒரு முனைப்புடன் இருந்திடும் நிலையாகும். இதனைமனத்திட்பம் என்பர். இந்தமன உறுதியானது தத்துவகுண இயல்புகளுடன் சேர்ந்திருக்கும்போது மனமோ - உள்ளமோ குழம்புவதில்லை. உறுதியுடன் விளங்கிடும். ஒரு முனைப்பு அல்லது மன உறுதி ஒருவனுக்கு யோகப்பயிற்சியினால் எளிதில் பெறப்படும். இந்த மன உறுதியினால் அலைபாயும் மன எண்ணங்களை ஒரு கட்டுக்குள் வைத்திருக்கும். மற்றும் பிராணனையும், ஐம்புலன்களையும் ஒழுங்குபடுத்திடும். இதனால் மனிதன் உயர்ந்த நெறியில் விளங்கிட ஏதுவாகும். இதனையே இவ் 'சாத்துவிக உறுதி' அளிக்கின்றது.)*

**யயா து தர்மகாமார்த்தான் த்ருத்யா**
**தாரயதே அர்ஜுன ।**

ப்ரஸங்கேன பலாகாங்க்ஷி த்ருதி:
ஸா பார்த்த ராஜஸீ ॥ (34)

''பார்த்தா! எந்த உறுதியால் அறம், பொருள், இன்பங்களை காத்திடுகின்றானோ' எந்த உறுதியால் தன் செயல்களின் (வினைகளின்) பயன்களை அனுபவிக்க விரும்புகின்றானோ அந்த உறுதியே ராஜஸ உறுதியாகும்''.

(அறம், பொருள், இன்பம், வீடு எனும் நான்கும் புருஷார்த்தங்கள் எனப்படும். இவற்றில் முதல் மூன்றின் மீது உலகாயுத ஆசைகளுக்காக மனிதன் அதிகமாக பற்று வைத்திருக்கின்றான். பதவி, பொருள் அடைய தன்னையே வருத்திக்கொண்டாவது செயல்பட முனைகின்றான். உற்றார், உறவினர், வீடு, நாடு என்பவற்றைவிட பொருள், பதவிமீதுள்ள மோகத்தின் வீர்யத்தை, இன்றைய இளைஞர்கள் பொருள் ஈட்ட அயல்நாடுகளுக்கு பொறியியல், மருத்துவ சம்பந்தமான பதவிகளை நாடி ஓடுவதிலிருந்து தெரிந்து கொள்ளலாம். இவற்றினை அடைய ஒருவர் மேற்கொள்ளும்மன, உடல் உறுதியே ராஜஸ உறுதியாகும். இந்த உறுதி மனிதனை மேலும் உலகப்பற்றினிலேயே உழல வைக்கின்றது.)

யயா ஸ்வப்னம் பயம் சோகம்
விஷாதம் மதமேவச ।
ந விமுஞ்சதி துர்மேதா த்ருதி:
ஸா பார்த்த தாமஸீ ॥ (35)

''பார்த்தா! எந்த உறுதிகொண்டு ஒருவன் தூக்கம், அச்சம், துயரம், மனக்கலக்கம், செருக்கு ஆகியவற்றின் மீது சிறிதும் தளராது நாட்டம் மிகக்கொள்கின்றானோ அந்த உறுதியே தாமஸ உறுதியாகும்''.

(ஒருவரிடம் அவருடைய பாட்டனாரோ, தந்தையாரோ விட்டுச்சென்ற ஆஸ்தி நிறைய இருக்கும். ஆனால் அப்பொருளை பாதுகாத்திடவோ, வளர்த்திடவோ வழி தெரியாது விழித்திருப்பர். மேலும் அப்பொருள்தம்மை விட்டுப் போய்விடுமோ என்ற பயம் ஒவ்வொரு வினாடியும் அவனை வாட்டி வதைக்கும். அப்பொருளை மேலும்

பெருக்கத் தெரியாமல், வீணாக சிறிது பொருளை செலவழித்து, நட்டம் கண்டு மனக்கலக்கமும் சிலர் அடைவதும் உண்டு. இந்த நிலையிலும் அவர்கள் தங்கள் செல்வச் செழிப்பினைக் கண்டு மமதையுடனே திரிவர். ஆகவே இந்த உணர்வுகளின் மீதே அதிக உறுதியுடன் விளங்கிடும் இவர்கள் தாமஸ உறுதிகொண்டவர்களாவர். இத்தகு நபருக்குச் சிறந்த உதாரணமாக அறியாமையின் இருப்பிடமாகவும், அச்சம், துயரம், மனக்கலக்கம், மனச் செருக்கு ஆகியவற்றின் இருப்பிடமாக திருதராஷ்ட்ரன் விளங்குகின்றான்.)*

**ஸுகம் தவிதானீம் த்ரிவிதம்**
**ச்ருணு மே பரதர்ஷப ।**
**அப்யா ஸாத்ரமதே யத்ர**
**து:காந்தம் ச நிகச்சதி ॥** (36)

"ஒருவன் எந்தப் பயிற்சியால், முயற்சியால் இன்பத்தை அனுபவித்து இறுதியில் துன்பத்தை அடைகின்றானோ, அந்த இன்பத்தின் மூன்று வகைகளையும் என்னிடம் கேட்பாயாக!".

*(மனிதன் தன் பிறப்பினை இன்பத்தைத் துய்த்துலுக்காகவே உள்ளது என்று நினைக்கின்றான். உண்பதிலும், உறக்கத்திலும், வீட்டிலும், ஊரிலும், காணும் பொருளிலும் இன்பத்தை மனிதன் நாளும் அனுபவிக்கவே விரும்புகின்றான். இவ் இன்பத்தின் முடிவு என்னவோ துன்பத்திற்கே இட்டுச் செல்வதாகும். இருப்பினும் நிலையிலா இன்பத்தினையே மனிதன் நாடி ஓடுகின்றான். மனிதன் இவ் இன்பத்தினை வாழ்க்கை முழுவதும் பருகவே நினைக்கின்றான். இன்பம் சிறிது காலம் இருந்து உடனடியாக மறைந்துவிடுகின்றது. மறைந்த இன்பத்தை தொடர்ந்து அனுபவித்திட மனிதன் மீண்டும் முயற்சிக்கின்றான். ஆகவே அனுபவித்திடும் இன்பத்தில் ஏற்றத் தாழ்வுகள் ஏற்படுவதற்கு முக்குணங்களின் தாக்கமே பெரிதும் காரணமாகின்றன. அதனால் இன்பமானது மூவகையாக அமைகின்றது.)*

**யத்த தக்ரே விஷமிவ ப்ரிணமே**
**அம்ருதோபமம் ।**

தத்ஸுகம் ஸாத்விகம் ப்ரோக்த்
மாத்ம புத்தி ப்ரஸாதஜம் ॥ (37)

''எது முதலில் கடுமையான விஷமாக அனுபவிக்கப் பெற்று இறுதியில் அமிர்தமாக அனுபவிக்கப்படுகிறதோ, எது ஆத்மாவில் நிலைபெற்று தெளிந்தபுத்தியால் தோன்றுகின்றதோ அந்த அனுபவிக்கப்படும் இன்பமே சாத்விக இன்பமாகும்''.

(கடுமையான முயற்சியால் எடுக்கப்படும் நல்ல வினைகளின் இன்பம், ஆரம்பத்தில் நஞ்சாகவே அமையும். ஆனால் இறுதியில் அதன் பயன் அமுதமாக இனித்திடும். ஒருவன் மிதி வண்டியினைப் பயில ஆரம்பிக்கும்போது நிலைதவறிக் கீழே விழுந்து உடம்பில் காயம் ஏற்பட்டு, கற்பதே துன்பமாக அமைவதுண்டு. ஆனால், வண்டியினை நன்கு மிதிக்கத் தெரிந்திட்டபோது இருகைகளை விட்டுக்கூட, அவ்வண்டியினை விரைவாக, எளிதாக ஓட்டிடும்போது தன்னை ஒரு வீரனாகக் காட்டிக்கொண்டு மகிழ்ச்சியின் உச்சியில் மிதப்பதையும் காணுகின்றோம். அதுபோன்றே, இறை உண்மையை அறிந்திட மனிதன் தியானம், தவம், யோகம் எனும் உடல் உள்ளப் பயிற்சியினை மேற்கொள்ளும்போது அவை அவனுக்கு துன்பத்தையே நல்கிடும் வகையில் விளங்கிடும். ஆனால் அந்த இறை உண்மையை தெரிந்து கொள்ளும் போது, ஆத்மானுபவத்தை பருகிடும்போது அந்த பயிற்சிகளே அவனுக்கு இன்பமாக விளங்கிடும். இதுவே சத்துவ இன்பமாகும். இந்த இன்பம் ஆத்மாவிலிருந்து தேர்ந்த பேரறிவிலிருந்து தோன்றிடும்.)

விஷயேந்த்ரியஸம் யோகாத்-
யத்தக்ரே அம்ருதோபமம் ।
பரிணாமே லிஷமிவ தத்ஸுகம்
ராஜஸம் ஸ்ம்ருதம் ॥ (38)

''ஐம்புலன் சேர்க்கையினால் முதலில் அமுதமாக அனுபவிக்கப்பட்டுப பிறகு இறுதியில் நஞ்சு போன்று வெறுக்கப்பட்டும் இன்பமானது ராஜஸ சுகமென்று கூறப்படுகிறது''.

(மனிதன் சிற்றின்பமே பிறவியின் பயன் என்று கருதி இளமையில் காமக் கேளிக்கைகளில் தன் இளமை, செல்வம், தகுதி, பதவி ஆகியவற் றைப் பயன்படுத்தி, உள்ள சுகம் காணுகின்றான். அதுவே பேரமுதமாக அவனுக்குப் படுகிறது. ஆனால் முதுமை நெருங்கும் காலத்து, உடல் சோர்வ டைந்துவிட்டபோது, உள்ளம் மட்டும் தான் இளமையில் அனுபவித்த இன்பத்தை அனுபவிக்க அலைபாய்ந்தாலும், அதனைப் பெறமுடியாமல், வாழ்க்கையை பொருளற்றதாக எண்ணியும், உலகத்தையே வெறுத்திடும் நிலைக்குத் தள்ளப்பட்டும். புலன்கள் தங்கள் செயல்களை செய்யாத நிலையில் வாழ்க்கை அவனுக்கு நஞ்சாக மாறிவிடுகிறது.)

பதக்ரே சானுபந்தே ச ஸுகம்
மோஹனமாத்மன: ।
நித்ராலஸ்யப்ரமா தோத்தம்
தத்தா மஸமுதா ஹருதம் ॥ (39)

''ஆரம்பத்திலும், முடிவிலும் மயக்கத்தை உண்டாக்கிடும் இன்பமே, தூக்கம் சோம்பல், தடுமாற்றம் ஆகியன தரும் இன்பமே தாமஸ இன்பமாகும்''.

(எப்பேற்பட்டாவது இன்பத்தைக் காண வேண்டும், எதனையும் அனுபவித்திட வேண்டும் எனும் மோக மயக்கத்தால் ஏற்படும் சுகம் ஒருவனின் அறியாமையிலிருந்து ஏற்படும் தன்மையாகும். அந்த மயக்கத்தில் ஆழ்ந்து கிடக்கும்போது அவன் தன்னையே மறக்கின்றான். அப்போது அவனுடைய அழகு, தகுதி, கல்வி, பதவி இளமையாவும் ஏளனத்திற்கும், அருவருப்புக்கும் ஆளாகின்றன. மயக்கம் நீங்கியபிறகு. அனுபவித்த வினைமுயற்சியால் மனக்குழப்பம் சோம்பல். தூக்கமே அவனுடன் இறுதிவரை இருந்துவிடுகிறது. தமோ குணங்களினால் இந்த நிலைக்கு தள்ளப்படும் இன்பமே தாமச சுகமாகும். உதட்டைக் காயப்படுத்திரத்தம் வழியச்செய்தாலும் முட்களை தொடர்ந்து சுவைத்திடும்

*ஒட்டகத்தைப் போன்று விளங்கிடும் ஒரு குடிகாரனின் நிலையே இந்த சுகத்திற்கு சரியான உதாரணமாகும்.)*

ந ததஸ்தி ப்ருதிவ்யாம் வாதிவி
தேவேஷுவாபுன: ।
யத்வம் ப்ரக்ருதி ஜைர்முக்தம்
யதேபி:ஸ்யாத் த்ரிபிர்குணை: ॥ (40)

*''இயற்கையால் தோன்றிடும் இந்த மூன்று வகையான குண இயல்புகளிலிருந்து விடுதலை அடையப்பெற்ற உயிர்கள் இந்த மண்ணிலோ அந்த விண்ணிலோ இல்லை''*

*(இங்கே பகவான் இந்த சத்துவ, ரஜோ, தமோ குணங்களின் ஆற்றலை குறிப்பிட்டுக்காட்டுகின்றான். இயற்கையால் பெறப்படும் இக்குணங்களுக்கு அடிமையானவர்கள் சாதாரண மனிதர்கள் மட்டுமல்ல மக்கள் போற்றிடும் தேவர்களும் விதிவிலக்கல்ல. தகுந்த குணப்பயிற்சியால் மட்டுமே, நல்ல உறவுகளால் மட்டுமே மனிதன் தன்னுள் சத்துவ குணங்களை ஏற்படுத்திக்கொள்ளமுடியும்.)*

ப்ராஹ்மண க்ஷத்ரிய விசாம்
சூத்ராணும் ச பரந்தப ।
கர்மாணி ப்ரவி பக்தானி
ஸ்வபாவப்ரபவைர்குணை: ॥ (41)

*''பகைவர்களை எதிர்போனே! பிராமணர்கள், க்ஷத்ரியர்கள், வைசியர்கள் மற்றும் சூத்ரர்கள் ஆகியோரின் வினைகள் யாவும் அவரவர்களுடைய குண இயல்புகளுக்குத் தகுந்தவாறு பிரிக்கப்பட்டுள்ளன''.*

*(சாதாரண கண்ணோட்டத்தில் இச்செய்யுள் கருத்தினைப் பார்த்தால் இன வேறுபாட்டினை உணர்த்திடும் ஓர் ஆபத்தான செய்யுளாகவே விளங்கிடும். ஆனால் இந்து மதத்தின் அடிப்படைக்கொள்கையினைப் புரிந்து கொள்வார்களாயின் பகவானின் உள்ளக்கிடக்கை நன்கு புரிந்திடும். புழுவிலும் பரம்பொருளைக் கண்டுவணங்கலாம் என்று கூறிடும் இந்த மதமா இனவேற்றுமையைத் தோற்றுவிக்கும்? தவறான*

கண்ணோட்டத்தில் இச்செய்யுளைக் காணாமல் உண்மையான செய்தியை இச்செய்யுளில் கண்டு இன்புறலாம்.

முன்செய்த வினைப்பயன்களுக்கேற்ப பிறவிகள் வந்தமைகின்றன என்பது இந்த சமயத்தின் அசைக்கமுடியாத நம்பிக்கையாகும் அந்த வகையிலே மனிதனின் இயல்புகள் அவர்களது முற்பிறவி வினைகளுக்கேற்ப, முக்குணங்களின் தாக்கத்தின் விளைவாக பிறவியின் இயல்புகள் அமைகின்றன. மனிதப்பிறவியின் பெருமை அவர்களது மன இயல்புகளுக் கேற்ப பேசப்பெறும். இந்த உண்மையைத்தான் இச்செய்யுள் சுட்டிக்காட்டுகிறது. உயிர்களின் ஆத்மாக்களிடையே வேறுபாடு இல்லை. ஏற்றத்தாழ்வு இல்லை. ஆனால் முக்குண வேறுபாடுகளின் பின்னணியில் விளங்கிடும் மன இயல் புகளுக்கு ஏற்றவாறு மனிதர்களிடையே வர்ண பேதங்கள் இச்செய்யுளில் கூறப்பட்டுள்ளன. வேறுபாடுகள் என்பது இயற்கையின் கட்டளையாகும். இது இம்மண்ணுக்கு மட்டுமல்ல: உலகத்திற்கே உரிய ஒன்றாகும்.

இங்கே குறிக்கப்படும் அந்தணர்கள் க்ஷத்திரியர்கள், வணிகர்கள், சூத்திரர்கள் யாவரும் குணத்தில் வேறுபட்டு அழைக்கப்படுபவரே தவிர, பிறப்பால் அல்ல.)

**சமோ தமஸ்தப: சௌசம்**
**க்ஷாந்திரார்ஜவமேவ ச ।**
**ஞானம் விக்ஞானமாஸ்திக்யம்**
**ப்ரஹ்மகர்ம ஸ்வபாவஜம் ॥** (42)

''அகம் மற்றும் புறக்கரணங்களை அடக்குதல், தவம், தூய்மை, பொறுமை, நேர்மை, பேரறிவு, நல்ல கல்வியறிவு, இறை நம்பிக்கை ஆகியன உண்மையான அந்தணர்களின் இயல்பு குணங்களாகும்''.

(உலகியல் வாழ்க்கையிலே பிராமணர்கள் - அந்தணர்கள் - பார்ப்பனர்கள் என்போர் ஏதோ ஓர் உயர் குலத்தோர் என்று கருதி, அவர்கள் தங்களை கருதி, அவர்கள் தங்களை உயர்ந்தோர்என்று கருதிக்கொள்வதோ அல்லது அவர்கள்

மட்டுமா உயர்ந்தோர் நாங்கள் என்ன கீழோரா என்று மற்ற இனத்தவர்கள் தங்களைத் தாங்களே தாழ்த்திக்கொண்டு, அவர்கள் மீது பகைமை உணர்வை வளர்த்துக்கொள்வது பகுத்தறிவுக்கு உகந்தது அல்ல. இங்கு தான் இந்து மதமும் தனி மனிதனும் தங்களை இனம் காட்டிக்கொள்கின்றனர். இந்து மதம்குண இயல்புகளினால் மனிதர்களிடையே இனம் பிரித்திட்டபோது, மனிதன் தன் சிற்றறிவினால், சுயநலத்தால் பிறப்பால் இனவேறுபாடும், இனவெறுப்பும் வளர்க்கின்றான். எந்தக் குலத்தில் பிறந்தாலும், அவன் ஒரு பிராம்மணனுக்குரிய குண இயல்புகளை கொண்டு விளங்குவானாயின் அவன் ஒரு பிராம்மணனாகக் கருதப்படுவான். இதுவே வேதாந்தம் கூறிடும் உண்மை யார் பிராம்மணன்? மனத்தையும், புலன்களையும் அடக்குதல் சாதாரண மனிதர்களுக்கு அவ்வளவு எளிதல்ல. அவ்வாறு அடக்கியவன் பிராம்மணனாவான். அத்தகைய்வர் தங்கள் வாழ்க்கையை ஒரு புனிதமிகு தவமாகக கொண்டு மனதாலும், உடலாலும் சொல்லாலும் தூய்மையாகக் கொண்டு விளங்குவர். உலகத்தில் மற்றவர்களால் துன்பம் நேர்ந்த காலத்துபொறுமையுடன் திகழ்ந்திடுவர். சொல்லிலும் செயலிலும் நேர்மையினையே இறுதிவரை கடைபிடிப்பர். சாத்திரங்களில் தேர்ந்த அறிவு கொண்டும், உலகாயுத வாழ்க்ஃகக்கு தேவையான கல்வி அறிவு கொண்டும் வாழ்ந்திடுவர். இறுதியாக இறைநம்பிக்கை அவர்களது வாழ்க்கை உணர்வாக இருந்திடும். இத்தகு குணயியல்புகளை கொண்டோரே உண்மையான பிராம்மணர்களாவர். இப்பிராம்மணர்கள் எந்த குலத்திலும் பிறந்திடலாம். இத்தகையோரே நாளும் பிறரால் வழிபடுதற்குரியர்.)

சௌர்யம் தேஜோ த்ருதிர்தாக்ஷ்யம்
யுத்தே சாப்ய பலாயனம் ।
தானமிச்வரபாவஸ்ச க்ஷாத்ரம்
கர்ம ஸ்வபாவஜம் ॥ (43)

''வீரம், துணிவு, உறுதி, சாதுர்யம், போரில் புறமுதுகு காட்டாமை, தர்மம், இறைமை ஆகிய பண்பு நலன்கள் க்ஷத்ரியர்கலுக்குரிய இயல்புகளாகும்''.

(ஆள்வதற்குரியவன் க்ஷத்திரியன் எனப்படுகிறான். அன்று அரசர்கள் என்றால் இன்று அரசியல் தலைவர்கள் என்று ஓரளவு கொள்ளலாம். அன்றைய அரசன் கத்தியை தீட்டினானென்றால், இன்றைய அரசியல் வாதியான அமைச்சர்கள் தங்கள் புத்தியை தீட்டவேண்டுமென்று பொருளாகும். இவர்கள் அறத்தின் வழிநடப்பவர்களாக இருத்தல் வேண்டும். தர்மத்தின் தலைவர்களாக நடத்தல் வேண்டும். நாட்டிற்கோ, சமூகத் திற்கோ மற்றவர்களால் தீங்குவரின் அவர்களை அஞ்சாது எதிர்த்திடும் வீரம் இருக்கவேண்டும். அதற்கான மனத்துணிவு இருத்தல் அவசியம். சோர்வு அடையப்பெறாமன உறுதி, எடுத்த காரியத்தை விரைவாக எளிதாக முடித்திடும் சாதுர்யம், போரில் அல்லது பிரச்சனைகள் எதிர் நோக்கிடும் போது அவற்றை எதிர்கொள்ளாமல் பின்வாங்கிச் செல்லும் பண்பு இல்லாமை அல்லது தன்னை நம்பியிருக்கும் உயிர்களின் நலம் காத்து அவர்கள் மனம் நோகா வண்ணம் செயற்படும் தலைமை அல்லது இறைமைப்பண்பு இருத்தல் ஆகியன ஒரு க்ஷத்திரி யனின் அடிப்படை இயல்புகளாகும்.)

க்ருஷி கோரக்ஷ்யவாணிஜ்யம்
வைச்யகர்ம ஸ்வபாவஜம் ।
பரிசர்யாத்மகம் கர்ம சூத்ரஸ்யாபி
ஸ்வபாவஜம் ॥ (44)

''வேளாண்மை, கால்நடைளைக் காத்தல், வியாபாரம் ஆகியன வைசிய இனத்தாரின் இயல்புகளாகும். மற்றவர்கள் கூறியபடி வினைகளை ஆற்றவேண்டியது சூத்ரர் எனும் இனத்தாரின் இயல்பாகும்.''

(ஒரு சமுதாயத்தின் மேன்மையில் வைசியர்கள் மற்றும் சூத்திரர்கள் எனும் இனத்தார் பெருபங்கு வகிக்கின்றனர். ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சி வைசியர்கள் எனும் வியாபாரிகளால் காக்கப்படுகின்றது. இன்றைய நிலையில் அன்னிய செலாணியை பெரிதும் ஈட்டுத்தருவது இத்தகு வியாபாரிகளால் நடத்தப்படும் நிறுவனங்களாகும். அதே

போன்று நாடுகளின் அன்றாட உணவுத்தேவையினை பூர்த்தி செய்வது அவர்கள் மேற்கொள்ளும் வேளாண்மைத் துறையாகும். இவ்வேளாண்மை சிறப்புற பல வகைகளில் உதவிடும் கால்நடைகளை பராமரித்து, அவற்றின் இனப்பெருக்கத்தைக் காத்திடும் சிறந்த பணியினையும் இவ்வைசியர்கள் மேற்கொள்கின்றனர் அதாவது சமுதாய, பொருளாதார மேம்பாட்டுக்கு உதவிடும் மக்களே வைசியர்களா கும் அடுத்து, அடுத்தவர் இடும் வேலையினை, தான் வாழ புரிந்திடும் மக்கள் சூத்திரர் எனப்படுவர். அதாவது அடுத்தவர்க்குப் பணிந்து வாழ்வர். இன்று சூத்திரர் என்பது ஏதோ ஒரு கீழான பிறப்பு என்று வழக்கில் வந்துவிட்டது. தங்களை மேலோராகக் கருதப்படுவர்களிடையே அன்று நிலவி வந்த இக் கருத்து- இவ் எண்ணம் இன்று ஒரு சமுதாயப் பிரச்சனையாக சாயம் பூசப்பெற்று சில அரசியல்வாதிகளுக்கு வயிற்றைக் கழுவும் அமுதசுரபியாக விளங்கி வருகின்றது. தொழில் கொண்டு வர்ண பேதத்தினை பகவான் மக்களைப் பிரித்திட, மனிதனோ பிறப்பினைக் கொண்டு இன வேறுபாடுகளை உண்டாக்கிவிட, குழப்பமும், வஞ்சகமும் நிரந்தரமாக நம்மிடையே தங்கிவிட்டது. கூர்ந்து நோக்கினால், இம்மண்ணில் மட்டுமல்ல, உலகத்தின் எல்லா நாடுகளிலும் இந்த நான்கு வர்ணபேதங்களை ஏறிட்டுக் கொள்ளலாம். ஒரு குடும்பத்தில் இருக்கும் நான்கு பிள்ளைகளிடையேயும் இந்த வர்ண பேதங்களை காணமுடியும். வயிற்றுப்பிழைப்பிற்காக, சிந்தனையின்றி கைகட்டி வாய்மூடி, இட்டவேலை முடித்து, கைநீட்டி பணம்பெறும் சூத்திரர், அந்தணர் எனும் இனத்தில்கூட காணமுடியும். நேர்மையோடு, சீரிய சிந்தனையோடு, இறை நம்பிக்கையுடன், தேர்ந்த கல்வி அறிவுடன் விளங்கிடும் பிராம்மணனை சேரியிலும் கண்டெடுக்கலாம். ஆகவே தொழில் கொண்டு வர்ணபேதம் இந்து மதம் கூறியபோது அதில் குலம் கண்டு இனபேதம் ஏறிட்டு வயிற்றைக் கழுவுபவர்கள் ஒரு சில போலி பகுத்தறிவாளர்களே யாகும்.)

ஸ்வே ஸ்வே கர்மண்ய ப்ரத:
ஸம்ஸித்திம் லபதே நர: ।
ஸ்வகர்மநிரத: ஸித்திம் யதா
விந்ததி தச்ச்ருணு ॥ (45)

*''அவர்களுக்கு என்று ஒதுக்கப்பட்ட அல்லது அவரவர்கள் மேற்கொண்ட வினைகளஇல் மகிழ்ச்சியுறும் மனிதன் நிறைவான வாழ்க்கையை அனுபவிக்கின்றான். அவனுடைய வினையில் செயலில் உறுதி கொள்பவன் எவ்வாறு முழு மையை அடைகின்றான் என்பதைக் கூறுகின்றேன் (அர்ச்சுனா) கேட்பாயாக!''.*

*(ஐந்தாவது படிக்கும் மாணவன், தனக்குக் கொடுக்கப்பட்ட பாடங்களை நன்றாக, ஒழுங்காக, ஒருமுனைப்போடு, ஊக்கத்துடன் படித்து, அதனால் அறிவு பெற்று அவன் தேர்ச்சி அடையும்போதுதான் அவன் அடுத்த ஆறாவது வகுப்புக் குப்போக தகுதியுடையவனாகின்றான். அதுபோன்று தனது மனவலிமை மற்றும் உடல் ஆற்றலுக்குத் தகுந்த வினையை மேற்கொண்டு சிறந்த பயிற்சியால் அதனை முடித்திடும் ஒருவனுடைய முயற்சியே அவனுடைய சுயதர்மமம் அல்லது ஸ்வகர்மம் ஆகிறது. இதனால் பெறும் வெற்றியால், அடுத்த உன்னதமான வினையை மேற்கொள்ளும் தகுதி பெறுகின்றான். ஆகவே தனக்கு இடப்பட்ட, தான் மேற்கொண்ட வினையை செய்து முடித்தி டும் போது அவன் உடலாலும் உள்ளத்தாலும் மகிழ்ச்சியின் எல்லையைக் காண்கின்றான்.)*

யத: ப்ரவ்ருத்திர் பூதானாம்
யேன ஸர்வமிதம் ததம் -
ஸ்வகர்மணா தமப்யர்ச்ய ஸித்திம்
விந்ததி மாவை: ॥ (46)

*''யாரிடமிருந்து இந்த உலக உயிர்கள் தோன்றியனவோ, யாரால் இந்த அண்டம் முழுவதும் பரவியுள்ளதோ, அந்தப் பரம்பொருளை சுயவினையால் யார்? ஒருவன் வழிபடு கின்றானோ அவன் மேன்மையான நிலையை அடைகின்றான்.''*

(மக்கள் சேவையே மகேசன் சேவை', 'செய்யும் தொழிலே தெய்வம்' எனும் பொருள் பொதிந்த பழமொழிகள் ஒருவன் தனக்கிடப்பட்ட பணிகளை, வினைகளை நேர்மையுடன் செய்வானாயின் அதுவே அவன் மேற்கொள்ளும் இறைவழி பாடாகும் என்பதைக் கூறிடும் அமுத் மொழிகலாகும். இவ்வுலகத்தில் உயிர்களை பொருள் பொதிந்த பிறவிகளாகவே இறைவன் படைத்துள்ளான். இவ்வுயிர்கள் தங்களுடைய அன்றுடம் மேற்கொள்ளும் வினைகளினால் இந்த இயற்கை தன் கடமைகளை ஆற்றுகின்றது. ஆகவே மனிதன் தனக்குரிய வினைகளை செவ்வனே ஆற்றுவதே அந்த இயற்கையினை, அந்த இயற்கையைப் படைத்திட்ட இறைவனை வழிபடும் சாதனமாகும். சைக்கிள் எனும் மிதிவண்டியில் பல சாகசங்களைப் புரிந்திடும் ஒருவன், அச்சாகசங்களை ஒரு மோட்டார் சைக்கிள் எனும் இயந்திர வண்டியில் புரிவானாயின் விபத்தே அவனுக்குப் பயனாக அமையும். எனவே அவனுக்குத் தெரிந்த, அதாவது நன்குப் பயிற்சி பெற்ற வாகனத்தில் புரியும் சாகசங்களே அவனை இனம் காட்டும். பலரும் மெச்சுவர். ஆகவே அவ்வாகனமும், அவனுடைய பயிற்சியே அவனை முழு மகிழ்ச்சியில் திளைக்க வைக்கும். அந்த வாய்ப்பினை, அந்த ஆற்றலை தந்திட்ட இறைவனை அவன் 'செய்யும் தொழிலே தெய்வம்' எனும் கருத்தில் வணங்குகின்றுன். மேன்மையும், சிறப்பும் பெறுகின்றுன்.)

ச்ரேயான் ஸ்வதர்மோ விகுண:
பரதர்மாத் ஸ்வனுஷ்டிதாத் ।
ஸ்வபாவநியதம் கர்ம குர்வந்-
நாப்னோதி கில்பிஷம் ॥ (47)

''முழுமனதுடன் பின்பற்றும் பரதர்மத்தைவிட, குறையுடைய இயல்புடன் பின்பற்றும் சுயதர்மம் மிகவும் சிறந்தது. இயல்பாக அமைந்த வினையினை மேற்கொள்ப வனுக்குத் தீங்கும் ஒன்றும் நேராது''

(கால்பந்து விளையாட்டில் நன்கு தேர்ச்சிப் பெற்றுப் பல பரிசுகளைக் குவித்திடும் ஒரு விளையாட்டுவீரன்,

தனக்கிருக்கும் மதிப்பினையும், ஆற்றலையும் மனதிற்கொண்டு கூடைப்பந்துகூட தன்னால் விளையாட முடியும் என்று மற்றொரு விளையாட்டில் கவனம் செலுத்தினால், அதில் அவன் தோற்றிடும் வாய்ப்பே அதிகமாக இருக்கும். அதனால் அவன் மதிப்பு குறையவும் கூடும். ஆகவே ஒருவன் தனக்கு இயல்பாக அமைந்த செயல்களை செய்வதே அவனை முழுமையான மனிதனாக விளங்கிடச் செய்யும். மேலும் தனக்கு இயல்பாக அமைந்த வினையை மேற்கொள்ளும்போது அவனுடைய ஆற்றல் ஒரு சில சமயம் குறைந்தாலும், அதனால் அவனுடைய புகழ் குறைவதில்லை. தொடர்ந்து அவ்வினையை மேற்கொள்வதே அவனை மேலும் புகழடையச் செய்யும். இதனை இன்றைய நடைமுறையிலேயே காணலாம். கிரிக்கெட் வீரர் டெண்டுல்கர் ஒரு சில ஆட்டங்களில் அபாரமாக விளையாடாவிட்டாலும், தொடர்ந்து அவர் ஆடுகளத்தில் இறங்கிடும்போது கூட்டமானது கரம் கொட்டி அவரை வரவேற்கிறது. இதுவே அவரை மேலும் நன்முக விளையாட ஊக்குவிக்கின்றது. ஆகவே போர் செய்வதே ஒரு க்ஷத்திரியனின் கடமையாக இருக்கும்போது அர்ச்சுனன் போர் செய்ய முயற்சிக்காது, அதனைத் தவிர்த்தல் அவன் தன் கடமையிலிருந்து வழுவியதாகவே கருதப்படும்.)

> ஸஹஜம் கர்ம கௌந்தேய
> ஸதோஷமபி ந த்யஜேத் ।
> ஸர்வாரம்பா ஹி தோஷேண
> தூமேனாக்னிரிவாவ்ருதா: ॥ (48)

''குந்தியின் புதல்வனே! தோஷத்தைக் கொண்டதாயினும் தன்னுடன் பிறந்ததாக இருந்திடும் வினையை மேற்கொள்ளாமல் இருத்தல் கூடாது. ஏனெனின் நெருப்பினைப் புகை சூழ்ந்து கொண்டிருப்பது போன்று எல்லா வினைகளும் தோஷங்களுடன் சூழ்ந்து உள்ளன''.

(மனிதன் என்பவன் எப்போதும் குறையுடையவனாவான். ஆகவே அவன் மேற்கொள்ளும் செயல்கள் எனும் வினை

களும்கூட குறையுடையவனாகவே திகழ்ந்திடும். ஒரு உயிரின் அழிவின் மீதே மற்ெருரு உயிர் பிறக்கின்றது; வாழ்கின்றது. இது இயற்கையின் விதி. நாம் உண்கின்ழேம். அதுபோது அணு போன்ற பல நுண் கிருமிகள் அழிகின்றன. ஒரு துறவி மேற்கொள்ளும் தவம் எனும் வினை மேன்மையானதாக அமையலாம். ஆனால் அங்கு அவரது உழைப்பு என்பது பெரிதும் இல்லை. அதே நேரத்து பலர் உழைத்திடுகின்றனர். அதுபோது அவரது உழைப்பின்மை அவரது குறைபாடு உடைய செயலாக இருக்கின்றது. ஆனால் தங்களது ஆற்றலுக்குத் தக்கமனித உயிர்கள் செயல்புரிகின்றன. ஆகவே இயல்பாக அமைந்த வினைகளை ஆற்றுவதே அவர்களது கடமையாகும். ஏனெனின் எல்லா வினைகளுமே, அது உயர்ந்ததோ தாழ்ந்ததோ, குறையுடையனவாக விளங்குகின்றன.)

அஸக்த புத்தி: ஸர்வத்ர ஜி தாத்மா
விகதஸ்ப்ருஹ: ।
நைஷ்கர்ம்யஸித்திம் பரமாம்
ஸந்யாஸேனா திகச்சதி ॥ (49)

''எப்போதும் பற்றில்லாத அறிவுடையவனாய், சிந்தனையை தன் வசம் கொண்டு சிதறவிடாதவனாய், ஆசையற்றவனாய் விளங்கிடும் எவனோ, அவனே துறவு நிலையில் வினைகள் இல்லாத மேன்மையான பெருநிலையை அடைகின்ழுன்.''

(மனிதனின் முழுமையான நிலை என்பது அவன் தன்னை அறிதலேயாகும். தன்னை அறியும்போது அவன் இறைவனை காணுகின்ழுன். உலகாயுத ஆசைகளை மறந்து காணும், கல்லையும் வைரத்தையும் ஒன்ருக எண்ணி அவற்றிற்குச் சிறிதும் மதிப்புத்தராத மனப்பக்குவமே பற்றற்ற நிலையாகும். ஒரு பேருந்தில் பிரயாணிக்கும் போதோ அல்லது அப் பேருந்திலிருந்து இறங்கிடும் போதோ பிரயாணிகள் எவ்வாறு அப்பேருந்தினைப் பற்றிச் சிறிதும் சிந்தனையின்றி விளங்குவார்களோ, அதே நிலையில் இவ்வுலகத்தில் பிறந்திட்ட மனிதர்கள் அவ்வுலகத்தில் வாழ்ந்திடும்போதோ இல்லை

அதனைவிட்டு நீங்கிடும்போதோ பற்றற்று துறவுநிலையில் இருப்பவர்கள் விரைவில் அடுத்த பிறவியில்லாது அவ் இறைவனை அடைகின்றனர். பற்றுவிடுவதற்குமுன்பு மனிதன் தன் ஆசையை அடக்குவது அன்றி, ஆசையின்றி இருத்தல் அவசியம். ஆசையே பற்றுக்கு வித்து. தன் வீட்டிலும், பக்கத்து வீட்டிலும் ஒலி (ளி)த்திடும் தொலைகாட்சியினை மறந்து, சிந்தனையை சிதறவிடாமல் தன் படிப்பில் கவனம் செலுத்துவோனே தேர்ச்சியில் முதன்மை பெறுவான். அவ்வாறு வாழ்க்கையில் பாசம், பந்தம், ஆசை, காமம் எனும் கவன ஈர்ப்புகளை மறந்து, ஒரு முனைப்புடன் விளங்கி துறவி மனப்பான்மையில் விளங்கிடும் மனிதனே இறைவனை அறியும் ஆற்றல் பெறுகின்றான்; பிறவியில் லாமல் பெருவாழ்வைப் பெறுகின்றான்.)

ஸித்திம் ப்ராப்தோ யதா ப்ரஹ்ம
ததாப்னோதி நிபோத மே ।
ஸமா ஸேனைவ கௌந்தேய நிஷ்டா
ஞானஸ்ய யா பரா ॥ (50)

''குந்தியின் புதல்வனே! (அர்ச்சுனன்)சித்தியை கைவரப் பெற்றவன் எவ்வாறு பேரறிவின் உயர்ந்த நிலையான பிரம்மத்தை அடைகின்றான் என்பதை நான் உனக்குச் சுருக்கமாகக் கூறுவேன்! அறிந்து கொள்வாயாக!''

(இங்கு சித்தியடையும் என்றால் ஒரு முதிர்ந்த நிலையை அடைதல் என்று பொருள். அதாவது பக்குவப்பட்ட நிலையாகும். ஒரு காயின் பக்குவ நிலை அது பழுத்தலாகும். அதுபோது அதன் சுவை இனிமையைத் தரும். முதன் முதலாக நடிக்க வந்தவன், பாடவந்தவன் மேடையேறும்போதுகேமரா முன்னாலோ, மைக்முன்னாலோ நின்றிடும்போது தன்னைப் பலர் பார்க்கிறார்கள் என்ற உணர்வில் அவனுக்கு நா வறண்டு விடலாம்; சொற்கள் தடுமாறலாம். ஆனால் படங்களில் நடிக்க நடிக்க, பாடல்களைப் பாடப் பாட, அன்றைய மேடை இன்று அவனுக்கு ஒரு பொருட்டாக இருப்பதில்லை. பார்வை

யாளர்கள் அவனுடைய கண்களில் படுவதில்லை. மக்கள் கரவொலிகளே அவனை களம் கண்ட கலைஞனாகக் காட்டு கின்றன. ஆம் நடிப்பின், இசையின் நுணுக்கங்களையெல்லாம் கற்றுத்தேர்ந்த ஒரு முதிர்ந்த கலைஞனாக அவன் மெரு கேற்றப்படுகின்றான். அவன் கலையாற்றல் நம் கண்களுக்கு, காதுகளுக்கு பெரும் விருந்தாக அமைகின்றது. அதுபோல் பக்குவப்பட்ட முதிர்ந்த மன நிலையை அடையப்பெற்றவன், சிந்தனையை கைக்கொண்டவன் அந்த பரமாத்மாவை எளிதில் காணும் பெரும்பேறு பெறுகின்றான் என்பதையே அர்ச்சு னனுக்குக் கண்ணன் கூற விழைகின்றான்.)

புத்யா விசுத்தயா யுக்தோ
த்ருத்யாத்மானம் நியம்ய ச ।
சப்தா தீன் விஷயான்ஸ்த்யக்த்வா
ராகத்வேஷௌ வ்யுதஸ்ய ச ॥ (51)

''தூய்மையான அறிவு கொண்டு அதனால் மன உறுதியு டனும், தன்னை அடக்கியதில் வெற்றி கொண்டும், புலன் இன்பங்களை துறந்தும், விருப்பு வெறுப்பு என்ற உணர்வுகள் இல்லாதும்''.

விவிக்தஸேவீ லக்வாசீ
யதவாக்காய மானஸ: ।
த்யான யோக பரோ நித்யம்
வைராக்யம் ஸமுபாச்ரித: ॥ (52)

''தனித்து வாழ்ந்தும் குறைத்து உண்டும், மனம் வாக்கு, உடல் இவற்றை அடக்கியும், எப்பொதும் இறைவனை தியானம் எனும் யோகத்தில் ஆழ்ந்து ஆராதித்தும் பற்றற்ற நிலையில் உறுதியுடன் இருந்தும்''.

அஹங்காரம் பலம் தர்மம் காமம்
க்ரோதம் பரிக்ரஹம் ।
விமுச்ய நிர்மம: சாந்தோ ப்ரஹ்ம
பூயாய கல்பதே ॥ (53)

''பெரும் விருப்பு எனும் அஹங்காரம் அற்றும், மன அமைதியினை நிறைவேற்றிட பயன் படுத்திடும் பலம் எனும் வன்மை இல்லாதும், நான், எனது என்ற உணர்வில் எழும்பும் செருக்கு இல்லாதும், காமம் மற்றும் குரோதம் எனும் உணர்வுகளுக்கு அடிமையற்றும், அமைதியுடன் எப்போதும் இருந்தும் ஆகிய பண்புகள் இருப்பவனே அந்த பிரம்மம் எனும் இறைவனைக்காணும் தகுதியுடையவன் ஆகின்றான்''.

(மேற்கூறிய மூன்று செய்யுட்களிலும் உள்ள கருத்துக்களை ஒருங்கே இங்கு பார்ப்போம். இம்மூன்று செய்யுட்களில் பரப்பிரம்மமாகிய அந்த இறைவனை அடைவதற்குரிய தகுதிகள் விவரிக்கப்பட்டுள்ளன. மேலோட்டமாகப் பார்த்திடும் போது ஆசை, காமம், கோபம் ஆகியனவே மனிதனை மகாத்மாவாக மாற்றுவதற்கு தடையாக இருந்திடும் தீய பண்புகளாக உள்ளன. இம்மூன்று குணங்களின் விரிவாக மனிதனிடம் உள்ள மற்றைய பலவீனங்களே இம்மூன்று செய்யுட்களில் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன. மனத் தூய்மை என்பது மனிதனிடம் இருக்க வேண்டிய அடிப்படை பண்பாகும். தன்னலமற்ற வினைகளை ஒருவன் மேற் கொள்ளும்போதுதான் மனிதன் செயலாலும், சொல்லாலும் தூய்மையாக விளங்கிடுவான். மனத்தூய்மையே அறிவுத் தூய்மைக்கு வழிவகுக்கும். அறிவுத் தூய்மையானது ஒரு தூய்மையான கண்ணாடி போன்றதாகும். சிறிது அழுக்கு இருந்தாலும் அக்கண்ணாடியில் நன்கு தெரிந்து விடும். அப்பழுக்கற்ற அறிவு உடையவனே தன்னை அடக்கி ஆளும் வலிமை பெருகின்றான். எந்த நிலையிலும் கலங்காத மன உறுதி உடையவனாக விளங்கிடுவான். அன்றாட பொருள்களைத் தவிர, மற்றையப்பொருட்களில் ஆசை வைக்காது இருப்பவனே இறைவனை அறியும் தகுதி பெறுகின்றான். எதிலும் விரு ப்பமோவெறுப்போ கொள்ளாது இருக்கும் நிலையில்தான் மனிதன் இறைவனை நினைத்திடும் ஆற்றலைப் பெறுகின்றான். அப்போதுதான் அவன் எளிமைக்கு உதாரணமாக, அடக்கத்திற்கு

இலக்கணமாக அமைகின்றான். இதுவே மூன்று செய்யுட்களில் முதல் செய்யுள் கூறும் செய்தியாகும்.

இரண்டாவது செய்யுளில் மேலும் இறைவனை அறிதற்குரிய தகுதிகள் கூறப்பெறுகின்றன. எப்போது ஒருவன் தன்னைச் சுற்றிக் கூட்டத்தை வளர்த்துக்கொள்கிறானோ அப்போது அவன் அவனையும் மீறி மற்றைய உலக விஷயங்களில் ஈடுபாடு கொள்கின்றான். அதனால் அவன் சிந்தனையும், அறிவும் உள்ளமும் ஒவ்வொரு கணமும் மாறுபாடு கொண்டு விளங்கிடும். வீண் பேச்சு வீண் உழைப்பு போன்றவையே பலனாக அவனிடம் அமைகிறது. ஆனால் மனிதன் தனித்திருக்கும் போது தன்னையே அவன் எடைபோட்டுக் கொள்ளும் ஒருவாய்ப்பு அவனுக்கு ஏற்படுகிறது. தான் செய்த நல்லன, தீயன திரைப்படம் போல் அவன் மனதில் நிழலாடும். இதனால் அவன் தன்னைத் திருத்திக் கொள்ளும், தன்னை மேம் படுத்திக்கொள்ளும் ஒரு அரிய வாய்ப்பினைப் பெறுகின்றான் . அந்த வாய்ப்பே அவனை ஒரு நல்ல மனிதனாக மாற்றிட வழி வகுக்கிறது. அடுத்து நாக்கிற்கு அடிமையானவன் அதாவது ருசி எனும் சுவைக்கு அடிமையானவன்தன்னையே அழித்துக் கொள்ளும் நிலையை பெறுகின்றான். ஒருவன் வயிறுநிறைய உண்ணும் பழக்கமுடையவனாயின் அவன் சோம்பலில் மொத்த உருவமாக ஆகிவிடுகின்றான். வியாதியின் இருபிடமாக மாறி விடுகின்றான். உண்பதும் உறங்குவதுமே அவனது அன்றாட வாழ்க்கையாகிவிடுகின்றது. அதே சமயத்து ஒருவன் உண்ணும் அளவிளேகுறைத்துக் கொள்வானாயின் உறக்கம் அவனை அடிமையாக்காது. பேசும் போது அன்போடு சீரிய சிந்தனையோடு சொற்களை பயன்படுத்துவான். மனதில் தெளிவும் உடலில் சுறுசுறுப்பும் அவன் உணர்வான். எப்போது தெளிந்த அறிவோடு, குறைந்த சொற்களை அவன் பயன்படுத்துகிறானோ அப்போது அவனிடம் அடக்கம் குடிகொள்கின்றது. உடலும் உள்ளமும் தேவையற்றவீணான விஷயங்களில் அலைபாயாது. அதுபோது அவன் மனம் தியானம் எனும் மௌன நிலைக்கு ஆளாகின்றது. பின்னர் அந்த மௌன நிலையே பற்றற்ற தன்மையை அவனுள்

தோற்றுவித்து, ஆன்மீகச் சூழ்நிலையை அவனுள்ளும், அவனைச் சுற்றியும் உண்டாக்கிவிடுகின்றது.

மூன்றாவது செய்யுளில், இறைவனை அடைவதற்குரிய பண்புகளை தொடர்ந்து சொல்லும்போது, மனிதன் எதிலும் அதிக ஆசை கொண்டு எதனையும் தான் அடைந்தே தீர வேண்டும் என்ற பேராசை எனும் அகங்காரம் அற்று இருத்தலின் இன்றியமையாமை குறிப்பிடப்படுகிறது. அடுத்தது ஆத்ம பலம் எனும் உள்ள வலிமை, காமம் எனும் ஆசையினை அனுபவித்திடத் துடித்திடும் தேகபலத்தினை வெற்றி கொள்ளும் ஆயுதமாக விளங்குவது ஆத்ம பலம். தன் உடல் வலிமை, புகழ், செல்வம் எனும் காரணங்களால் மனிதன் நான், எனது எனும் மனச்செருக்கினை கொள்கிறான். இச்செருக்கினை அழித்தவனே உண்மையான சாதகனாவான். தான், தனது எனும் தன்னுணர்வுகளை எதிர்ப்பவர்களை அழித்திட நினைப்பவன் சினம் எனும் உணர்வுக்குத் தன்னை அடிமையாக்கி கொள்கிறான். இந்த சினமே குரோதம் எனப்படுகிறது. இதனை அடக்கியவன் இறைவனை நெருங்குகிறான். மரணத்தின் போது மனிதன் தன்னுடன் எதனையும் எடுத்துச்செல்வதில்லை. ஒருவர் தன் தேவைகளுக்கு மீறி பொருளோ, ஆசையோ கொள்வானாயின் அதனை அடைய அடைந்ததைக் காப்பாற்ற அவன் தன் மனித நிலையிலிருந்து இழிந்து தன் வாழ்க்கையை ஒரு இயந்திரம் ஆக்கிக் கொள்கிறான். அவ்வாறு இன்றி, வாழ்க்கைக்கு இன்றியமையாத தேவைகளை மட்டுமே ஒருவன் கைக்கொள் வானாயின் அவன், தேவையற்ற உடல் உழைப்பிற்கும் மன உளைச்சலுக்கும் இடம் தரமாட்டான். அதுபோது ஆசை, கோபம் எனும் உணர்வுகளுக்கும் தன்னிடம் குடிகொள்ள வாய்ப்புத் தரமாட்டான். இதுவே அவனை ஒரு யோகிக்குரிய நிலைக்கு உயர்த்திடும். அது போது அவன் பிறர் பொருள்களின் மீது நாட்டம் கொள்ள மாட்டான். இந்த எளிய வாழ்க்கை நிலையே அவனை அமைதியின் உறைவிடமாக மாற்றிவிடும். இத்தகு பண்புகளே அவன் அவ் இறைவனை

அறிந்து கொள்ள, அம்மாயவனை அடைந்திட வழிவகுக்கும் சாதனங்களாக இருந்திடும்.

ப்ரஹ்மபூத: ப்ரஸன்னாத்மா ந
சோசதி ந சகாங்க்ஷதி ।
ஸம: ஸர்வேஷு பூதேஷு
மத்பக்திம் லபதே பராம் ॥ (54)

''பரம்பொருளைப் பற்றிய பேரறிவு பெற்று அதனால் மனத்தெளிவு அடைந்தவன் எதற்கும் துன்பப்படுவதில்லை. ஆசைப்படுவதில்லை. எல்லா உயிர்களிடத்தும் ஒரே மாதிரியான அன்பு கொண்டவன் என்மீது உயர்வான பக்தியை வளர்த்துக்கொள்கிறான்''.

(இறைவனின் விருப்பமே மனிதன் மகானாக விளங்க வேண்டும் என்பதுதான். அதற்கான வாய்ப்பினையும் மனிதனுக்கு இறைவன் ஏற்படுத்தியும் உள்ளான். மனிதன் தன் சிந்தனையால் தான் யார் என்பதையும் இப்பிறவியில் தன் பங்கு என்ன என்பதையும் அறியத்தலைப்படுகிறான். அதற்கு முன்பு அவன் ஆசை, காமம், கோபம், பொறாமை, சோம்பல் போன்ற தீய உணர்வுகளை விட்டொழித்தல் அவசியமாகும். இதற்குப் பிறகே அவனுடைய சிந்தனை சீரியதாகிறது. இந்தநிலையில் அப்பரம்பொருளைப்பற்றிய பேரறிவை உணரத் தலைப் படுகிறான். ஒளியினை நெருங்கிடும் போது அவன் தன்னையே பார்த்துக் கொள்ளும் நிலை ஏற்படுகின்றது. ஆம் இறைவனை நெருங்கும் நிலையில் அவனுள் தெய்வீகம் குடிபுக ஆரம்பிக்கின்றது. அதுபோது இன்பதுன்பம், வெற்றிதோல்வி சிரிப்பு அழுகை போன்ற வேற்றுமை உணர்வுகள் அவனைப் பாதிப்பதில்லை. எங்கும் எதிலும் புனிதத்தையே காண்கின்றான். அந்த நிலையினை அடைந்ததால்தான் இராமானுஜர்தன் முழங்கால்களால் மண்டியிட்டுத் தவழ்ந்து கொண்டே திருமலையை சென்றடைந்தார். இதுவே பக்தியின் உச்சமாகும்.)

பக்த்யா மாமபிஜானாதி யாவான்யஸ்
சாஸ்மி தத்வத: ।
ததோ மாம் தத்வதோ ஞாத்வா
விசதே ததனந்தரம் ॥ (55)

"ஒருவன் என்மீது கொண்டபக்தியினால் மட்டுமே 'நான் எத்தகையவன், நான் யார், என்பதை உள்ளபடி அறிந்து கொள்கிறான். அதற்குப்பின்பு என்னை விரைவாக வந்தடைகின்றான்".

(ஒருவன் தன் பக்தியால் மட்டுமே, தன் அன்பால் மட்டுமே மற்றவரை அறியமுடியும்; மற்றவரை திருத்த முடியும்; அன்பு பக்தி எனும் உணர்வு உயிர்களைப் பிணைத்திடும் ஆற்றல்கொண்டது. இனி, இட ,மொழி, நிற வேறுபாடுகளை மறக்கச் செய்வது அன்பு. மக்களிடையே காட்டப்படும் அன்பு இறைவனிடத்திலே செலுத்திடும்போது அது பக்தியாக பரிணமிக்கிறது. இறைவனிடம் காட்டும் பக்தி மிக மிக, அவன் அவ் இறைவனை அறிந்திடும் ஆற்றல் பெறுகின்றான். இறுதியில் மகானாகப் போற்றப்படுகின்றான்.)

## பகவான் சொன்னது:

ஸர்வகர்மாண்யபி ஸதா குர்வாணோ
மத்வ்யபாச்ரய: ।
மத்ப்ரஸாதாதவாப்னோதி சாச்வதம்
பதமவ்யயம் ॥ (56)

"எப்போது எல்லா வினைகளையும் ஒருவன் செய்தாலும், அவர் என்னைச் சரணடைந்தால் அவன் என் அருளால் நிரந்தரமானதும், நிலையானதுமான என் பதத்தை அடைகின்றான்."

(இறைவனிடம் தன்னை ஒருவர் முழுமையாக ஒப்படைத்திடும்போது, தான் மேற்கொள்ளும் எந்த வினையானாலும் 'செய்பவன் 'நான்' 'வினைப்பயன் என்னுடையது' எனும் எண்ணம் அவனுள் மறைந்தே போகும். தான், தனக்கு என்ற எண்ணத்தில் ஒருவன் வினைகளை (கர்மங்கள்) மேற்கொள்வானாயின், களைப்பு, தோல்வி என்பவை எந்த நேரத்திலும், ஒரே சமயத்தில் அவனை நெருங்கலாம் - நெருங்கக்கூடும். அவ்வாறின்றி அவ் இறைவனுக்காக என்று வினைகளை மேற்கொள்வானாயின், பயன்களைப்பற்றி சிறிதும் கவலைப்படாது, செய்யும் வினைகளில் தொடர்ந்தபற்றும், மன

நிம்மதியும் அவனிடம் அமையும். தன்னுடைய குழந்தைக்குப் பால் ஊட்டுவது முதற்கொண்டு இரவு படுக்கப்போகும் வரை அக்குழந்தையின் ஒவ்வொரு வினாடி தேவையினையும் அக்குழந்தையின் தாய் சிறிதும் வெறுப்பின்றி, தொய்வின்றி, தன்னையே மறந்து ஏன் தன் கணவனையும் மறந்து அவள் அக்குழந்தை பராமரிப்பில் தன்னையே அர்ப்பணிக்கின்றாள். அதே சமயத்து தன்னைப் பற்றி தன் தேவைகளைப்பற்றி அவள் உழைத்திடும்போது விரைவில் களைத்து விடுகிறாள். தொடர்ந்து வினைகளை மேற்கொள்வதில் நாட்டம் செலுத்துவதும் இல்லை. ஆகவே குழந்தை எனும் இறைவனுக்கு தாயாகிய ஜீவாத்மா உழைத்திடும் போது, முக்தி எனும் இன்பத்தை அடைகின்றது. அந்த இன்பமே என்றும் அழியாத, குறையாத, நிரந்தரமான உணர்வாக அமைந்து விடுகிறது.)

**சேதஸா ஸர்வகர்மாணி**
**மயிஸன்யஸ்ய மத்பர: ।**
**புத்தி யோகமுபாச்ரித்ய மச்சித்த:**
**ஸததம் பவ ॥** (57)

''ஆகவே உன் விவேகத்தால் எல்லா வினைகளையும் என்னிடத்தில் ஒப்படைத்து, என்னையே குறிக்கோளாகக் கொண்டு, புத்தி யோகத்தைப் பின்பற்றி, எப்போதும் உன் சிந்தனையை என்மீது வைப்பாயாக''?

(மனிதன் சிந்திக்கத் தெரிந்தவன். அச்சிந்தனை புனிதமானதாக அமையுமாயின் தான் யார், தனது குறிக்கோள் என்ன என்பதைத் தெள்ளத் தெளிவாக அறிந்திடுவான். உலகாயுத வாழ்க்கையை மேற்கொண்டிருந்தாலும் உள்ளத்தால் 'எனது எனக்கே' என்ற சுயநல உணர்வுகளை துறந்து, 'எல்லாம் இறைவன்' எங்கும் இறைவன் எதிலும் இறைவன்' என்று உள்ளத்தின் உயர் எண்ணமே ஒருவன் அவ் இறைவனை அடைய வழிவகுக்கும். உலகாயுத வாழ்க்கையில் வினைகள் ஆற்றி னாலும், அவ்வினைப் பயன்களைப் பற்றிக் கவலை கொள்ளாமல், எல்லாம் அவ் இறைவனுக்கே என்ற உணர்வில் அப்பரமனை எண்ணுதலே ஜீவனாகிய மனிதனின் கடமையாகும். ஆகவே நிஷ்காம்ய கர்மம் (தன்னலமற்ற

வினைகளை மேற்கொள்ளல்பிரேம பக்தி) தெய்வீக அன்பு ஆகியனவே ஒருவனை இறைவனை அறிய வழிவகுக்கும் சாதனங்களாகும்.)

மச்சித்த: ஸர்வதுர்காணி
மத்ப்ரஸாதாத்தரிஷ்யஸி ।
அத சேத் த்வமஹங்காராந்த
ச்ரோஷ்யஸி விநங்க்ஷ்யஸி ॥ (58)

"உன் அறிவை என்பால் வைத்திடுவாய். எனது அருளால் இடையூறுகள் எல்லாவற்றையும் எளிதாகக் கடந்துவிடுவாய் அகங்காரத்தால் என் அறிவுரையைக் கேட்காவிட்டால், நீ அழிவது உறுதி ".

(முன்பு கூறியபடியே 'நான் 'எனது' எனும் செருக்கு கொண்டு திகழ்பவன் உலகாயுத இன்பங்களுக்கு அடிமையாகவே விளங்குவான். அவ் இன்பங்களைப் பெற, பெற்றதை நிரந்தமாக அனுபவித்திட, மேலும் புதிய இன்பங்களைப் பெற்றிட நாளும் உள்ளத்தையும் உடலையும் மாசுபடுத்திக்கொண்டே இருப்பான். அவ்வாறின்றி உள்ளத்தால் ஒரு துறவி நிலையில் வாழ்பவன் இறைவனைச் சிந்திக்கும் ஆற்றல் பெறுகின்றான். அதனால் வாழ்க்கையில் தான் எதிர்கொள்ளும் இடையூறுகளை, இன்னல்களை ஒரு பொருட்டாக கருதமாட்டான். ஒருவனுக்கு அவனுடைய மனதைவிட ஒரு நல்ல குரு, வழிகாட்டி அமையமாட்டான் நல்லறிவே நல்ல மனதைத்தரும். நல்ல மனது உணர்த்திடும் அறிவுரைகளை மதிக்காதவன் வாழ்க்கையில் மிதிபடுவான்.)

யதஹங்கார மாச்ரித்ய ந
யோத்ஸ்ய இதிமன்யஸே ।
மித்யைஷ வ்யவஸாயஸ்தே
ப்ரக்ருதிஸ்த்வாம் நியோக்ஷ்யதி ॥ (59)

"மனச் செருக்கால் போர் புரியமாட்டேன் என்று முடிவு செய்வாயானால், உன் துணிவானது தோல்வியடையும். உன்னுள் இருக்கும் இயல்பே உன்னை (இப்) போரில் ஈடுபடுத்திடும்"

(மனிதன் அவ்வப்போது தான் ஒரு கருவி மாத்திரமே,

தன்னை இயக்குவது, அவ் இறைவன்' என்ற உணர்வை மறந்துவிடுகின்றான். 'என் உடல், என் இன்பம், என் விருப்பம்' என்ற சுயநல உணர்வினால் தன் பிறவியின் பயனை மறக்கின்றான். ஒளியிலிருந்து விலகிச் செல்லச், செல்ல, ஒருவன் இருட்டில் தன்னையே தொலைத்துவிடுகின்றான். அதுபோன்றே இறை உணர்விலிருந்து ஒருவன் தன்னை அந்நியப்படுத்திக் கொள்ளும் போது, அவன் 'தான்' 'தனது' எனும் அகங்காரச் சூழலில் அகப்பட்டுக் கொண்டு, மேலும் பல பிறவிகளுக்குத் தன்னை ஆட்படுத்திக் கொள்கிறான். இது அவனது வீழ்ச்சியின் விளையாட்டு. இங்கு அர்ச்சுனனது குண இயல்பானது வீரம் அவனை அறியாமல் போரில் ஈடுபடச் செய்திடும். 'நான் போர் புரிய மாட்டேன்' என்றும் 'செய்வது நான்,' முடிவெடுப்பது நான்' என்ற மனச்செருக்கையும் அவனது குண இயல்பு வெற்றிகொள்ளும். அதாவது இயற்கையை அர்ச்சுனனால் வெற்றிகொள்ளமுடியாது என்ற அர்ச்சுனனது நிலைமையை பகவான் அவனுக்குக் கோடிட்டுக்காட்டுகிறான்.)

ஸ்வபாவஜேன கௌந்தேய நிபத்த:<br>
ஸ்வேந கர்மணா: ।<br>
கர்தும் நேச்சஸி யன்மோஹாத்-<br>
கரிஷ்யஸ்யவசோ அபிதத் ॥ (60)

"குந்தியின் புதல்வா! (உன்மன) மயக்கத்தால் எதை நான் செய்யமாட்டேன் என்று கூறுகின்றாயோ, அதனையே உன்குண இயல்பின் காரணமாக மேற்கொள்ளும் வினையினால் ஆட்கொள்ளப்பட்டு, (நீ) உன்வசம் இல்லாது மேற்கொள்வாய்"

(ஒருவனது பிறவியின் குண இயல்பு, ஒருவனை விட்டு விலகாத நிழல் போன்று, அவனுடன் இறுதிவரை தொடர்ந்து வினையாற்றும். அந்த வினையை மேற்கொள்ளாது இருப்பது என்பது இறுதிவரை முடியாது. அவ்வாறு அவன் தனது இயல்புக்கு ஏற்றவாறு நல் வினையை மேற்கொள்ளும் போது, அவன் சமுதாயத்திற்கு பயனுடையவனாகத் திகழ்கின்றான் இங்கு அர்ச்சுனன், தன் குண இயல்பான வீரத்தை நல்லோரைக் காப்பாற்ற, தீயோரை அழித்திட பயன்படுத்திடும் போது, அவன் சிறந்த வீரனாக மதிக்கப்படுகிறான்.)

ஈச்வர: ஸர்வபூதானாம் ஹ்ருத்தே
அர்ஜுன திஷ்டதி ।
ப்ராமயன் ஸர்வபூதானி
யந்த்ராரூடானி மாயயா ॥ (61)

''அர்ச்சுனா! அப்பரம்பொருளானவன் இவ்வுலக உயிர்கள் யாவற்றையும் உடல்கள் என்னும் இயந்திரங்களில் வைத்து, தன்னுடைய மாயையினால் அவற்றை இயக்கிவைத்து, தான் அவ்வுயிர்களின் உள்ளத்திலே என்றும் கோயில் கொண்டுள்ளான்''.

(இங்கு நம் கண் முன்னே தேரில் அர்ச்சுனனையும் தேரோட்டியான கண்ணனையும் நிறுத்திக் கொள்ள வேண்டும். தேர் நமது உடல், அர்ச்சுனன் அவ்வுடலின் உயிர். தேரோட்டி இறைவன். இங்கு இறைவன் எவ்விதமான கருவியையும் கையிலேந்தி போரில் நேரடியாக ஈடுபடவில்லை. போர் புரிவது அர்ச்சுனன். போர்புரிய வேண்டிய அவன் நான் 'போர் புரிய மாட்டேன்'' என்று ஏதோ தான் ஒரு முடிவு எடுக்க வேண்டும் என்ற நிலையில் பேசுகிறுன். இது அவனது ஆணவம். போர்க்களத்தில் தேர் இருந்தாலும்'அதற்கு போர் புரிய அர்ச்சுனனுக்கு உதவி புரிகின்றோம்'' என்ற உணர்வு இல்லை. இங்கு தன்னை போர்புரிய வைப்பது தன்னுடைய வினைப்பயன் என்பதை அறியவில்லை. அவனுடைய பழ வினைகளுக்கு ஏற்ப பிறவி எடுத்து அப்பிறவியின் இயற்கை நிலைக்கு, இயல்பு குணங்களுக்கு ஏற்ப, அவன் போரில் ஈடுபடப்போகின்றுன். பொம்மலாட்டக்காரன் தன் விரல் நுனிகளில் நூலைப்பிடித்துக்கொண்டு திரைக்கு முன்னால் பொம்மைகளை ஆட்டுவிப்பது போன்று, திரை எனும் மாயையினால் பொம்மலாட்டக்காரனான இறைவன், ஜீவாத்மாக்களாகிய பொம்மைகளை இயக்கிக் கொண்டிருக்கிறுன். ஆகவே இயற்கை எனும் இறைவனின் ஆணையால், மாயை எனும் சக்கரத்தால் உடலாகிய இயந்திரத்திலுள்ள உயிராகிய ஜீவாத்மா இயங்குகின்றது.)

**தமேவ சரணம் கச்ச**
**ஸர்வபாவேன பாரத ।**
**தத் ப்ரஸாதாத்பராம் சாந்திம்**
**ஸ்தானம் ப்ராப்ஸ்யஸி சாச்வதம் ॥ (62)**

*''அர்ச்சுனா! எல்லா நிலையிலும் அவனையே (பரம் பொருளையே) சரணமாக பற்றிக்கொள். அவனுடைய திருவருளால் நீ மேலான மன அமைதியும், இறுதிப்பயனான அந்த வீடுபேற்றினையும் அடைந்திடுவாய்''.*

*('நான்' எனது' என்னும் உணர்வுகளைவிட்டு, காமம், ஆசை எனும் கொடிய மன உணர்வுகளை துறந்து அதனால் உலகாயுத இன்பங்களை மறந்தானேயானால், அவன் இறைவனை நெருங்கும் தகுதி பெறுகின்றான். எவ்வாறு பாத்திரங்களின் வடிவமைப்புகளுக்கு ஏற்ப அதனுள் இருக்கும் நீரும் உருவம் கொள்கின்றனவோ, உயிர்களும் வினைகளுக்கேற்ப பிறவிகள் எடுக்கின்றன. ஆகவே உயிர்களுக்கு என்று ஒரு தனி விருப்பம் இல்லை. இறைவனை அடைவதே ஜீவனின் முதலும் இறுதியுமான குறிக்கோளாகும். அதனை அடைய இறைவனை சரணடைவது ஒன்றே வழியாகும். அப்போதுதான் கிடைத் தற்கறிய மன அமைதியும், மோட்சம் எனும் முக்தியும் கிடைத்து பிறவியெனும் பெருங்கடலை கடந்திட முடியும்.)*

**இதி தே ஞானமாக்யாதம்**
**குஹ்யாத் குஹ்யதாம் மயா ।**
**விம்ருச்யைத்தசேஷேண**
**யதேச்சஸி ததாகுரு ॥ (63)**

*''இரகசியங்களுக்குள் இரகசியமான ஞானம் எனும் பேரறிவு உனக்கு என்னால் இதுகாறும் கூறப்பட்டது. இவற்றை நீ முழுவதுமாகச் சிந்தித்து, நீ விரும்பியவாறு செயல்படுவாய்''. (இங்கு மற்றைய சமயங்களுக்கு இல்லாத ஒரு பெருமையினை இந்து சமயம் கொண்டுள்ளதை கண்டு மகிழலாம். மற்ற சமயங்களில், அச்சமயத் தலைவர்கள் சொன்னவையாவும் சட்டங்களாக மதிக்கப்பட, அவற்றை அவமதிப்பது என்பது பெரும் பாவமாக, ஏன் தண்டனைக்குரியதாக பின்பற்றப்படும் போது, இந்து சமயம் தான்சொன்னதை மக்கள் யாவரும் சற்றே*

*சிந்தித்து, அவர்கள் விருப்பப்படி ஒழுகும்படி சொல்கின்றது. இந்த சமயச்சுதந்திரமே இந்து சமயத்தை காலகாலமாகக் காத்து வருகின்றது அதனை இச்செய்யுளில் இறைவனின் திரு வாக்கினாலே அறிகின்றோம். வாழ்க்கையின் உண்மைகளை இறைமைக் கோட்பாடுகளை இப்பதினெட்டு அத்தியாயங்களில் பரமாத்மா ஜீவாத்மா உரையாடலின் மூலம் ஜீவாத்மா அறிவுறுத்தப்பட்டுள்ளன. இருந்தாலும் இறைவன்தான் கூறியவற்றை வேதவாக்காக மனிதன் ஏற்கத் தேவையில்லை, அவன்தன் சிந்தனை மூலம் அவ்வுண்மைகளை எண்ணிதனக்கு ஏற்புடையவற்றையே பின்பற்றிட அவனுக்கு முழுச் சுதந் திரத்தை தந்துள்ளான். குழந்தை முதல் கிழவன் வரை, 24 மணி நேரங்களிலும், 365 நாட்களிலும் மனிதன் எதிர்கொள்ளும் பிரச்சனைகளுக்கு இறைவன் தன் கீதோபதேசத்தின் மூலம் விடைதந்துள்ளான். சிந்திக்கத் தெரிந்த அந்த மனிதனை நம்பித்தான் இந்த சுதந்திரத்தை இறைவன் அளித்துள்ளான். இதனை அறிந்தவன் உயருவான்; அறியத்தவறியவன் அழிவான்.)*

## பகவான் சொன்னது:

**ஸர்வகுஹ்யதாம் பூய: ச்ருணு**
**மே பரமம் வச: ।**
**இஷ்டோஅஸி மே த்ருமிதி ததோ**
**வக்ஷ்யாமி தே ஹிதம் ॥** (64)

*''எல்லா வகையிலும் மிகவும் ஆழ்ந்த என்னுடைய மிகச்சிறந்த உபதேசங்களை மீண்டும் நீ கேட்பாயாக நீ என்னுடைய நெருங்கிய நண்பனாகையினால், உனக்குரிய நலமான வற்றையே நான் கூறுவேன்''.*

*(ஞானிகளாலும், முனிவர்களாலும், ஆழ்வார் ஆசார்யர் களாலும் மொழியப்பட்ட வேத, உபநிடத, பாசுரவியாக் யானங்களே இறைவனின் பெருமை பேசப்பெறும் போது - வாழ்க்கை உண்மைகள் உணர்த்திடும்போது அவ் இறைவனே தன் திருவாயால் கூறப்பெற்ற இந்த பகவத் கீதையின் பெருமையினை, சிறப்பினை என்னென்பது! தன்னைப்பற்றி,*

தான் படைத்திட்ட இயற்கையைப் பற்றி, தான் பிறப்பித்த உயிர்களைப்பற்றி அவ் இறைவனே கூறியபோது அவருடைய எண்ணங்களின் அருமையை, அறிவுரைகளின் புனிதத்தை - ஆழத்தை நாம் உணர்ந்து, அனுபவிக்க நேர்ந்தது நமக்குக் கிடைத்திட்டதோர் அரிய வாய்ப்பாகவே கருதுதல் வேண்டும். கிரிக்கெட் ஆட்டத்தில் சுழற்பந்தினை எவ்வாறு வீசவேண்டும் என்பதை அதற்குரிய இலக்கணங்களை ஒரு சாதாரண சுழற்பந்து வீச்சாளரிடமிருந்து தெரிந்து கொள்வதைவிட, அதில் தேர்ச்சி பெற்ற அணில் கும்ப்ளேயிடமிருந்தே நேரிடையாக அதன் நுணுக்கங்களை தெரிந்துகொள்ளும்போது சுழற்பந்து வீச்சு பயிற்சியினை எளிமையாக, தெளிவாக, விரைவாக ஒருவர் பெற்றிட முடியும். அது போன்று இறைவன் நமக்கு வாழ்க்கை உண்மைகளை நேரிடையாக உள்ளதை உள்ளவாறு உணரச்செய்து, நம்மை சித்திக்க வைத்து, நம்மை செயல்பட வைத்துள்ளார். இது நம்மை எல்லாவகையிலும் திருத்தி, உயர்த்திட வேண்டுமென்ற அவர்தம் கருணைக்கு சாட்சியாகும். இங்கு தன்னை (ஒரு) தலைவன், தந்தை எனும் பிற நிலையில் வைத்துக்கொள்ளாமல் நண்பன் என்ற நிலையில் தன்னை ஜீவாத்மாவுடன் உறவு கொள்ளச் செய்து, மனிதன் எவ்விதமான அச்சமோ, தயக்கமோ, எச்சரிக்கையோ கொள்ளாது, இறைவனை தன்னுடன் சாதாரணமாக சுமுகமான - நெருக்கமான நிலையில் உறவாடச் செய்து - உரையாடச் செய்து மனிதனின் சந்தேகங்களை நீக்கி - அவனை அறிவதன் மூலம் தன்னை அறியச் செய்திட்ட இறைவனின் கருணைக்கு ஈடேது!)

மன்மனா பவ மத்பக்தோ மத்யாஜீ
மாம் நமஸ்குரு ।
மாமேவைஷ்யஸி ஸத்யம் தே ப்ரதி
ஜானேப்ரியோ அஸி மே ॥ (65)

"என்னிடத்திலேயே மனம் வைத்தவனாய், என்மீது பக்திகொண்டு என்னையே வணங்குவாய். இறுதியில் நீ என்னையே அடைந்திடுவாய். இதனை சத்தியமாக கூறுகின்றேன். ஏனென்றால் எனக்கு நீ மிகவும் பிடித்தமானவன்".

(கடலிலிருந்து தோன்றிய நதி பின்னர் அக்கடலிலேயே கலப்பது போன்று, அக்கடவுளிலிருந்து பல்வேறு பிறவிகள் எடுத்து இறுதியாக மனிதனாகப் பிறந்த இந்த உயிர் அக்கடவுளிலேயே சங்கமமாவது அவ் ஆண்டவன் கட்டளை யாகும். மனிதப்பிறவியே இறைவனை அடையத்தகுந்த இறுதித் தகுதியாகும். தன்னை அடைய இவ்வளவு பிறவிப்படிகள் ஏறிவந்த மனிதனை இறைவன் மறுபடியும் மீண்டும் பிறவி எனும் கரைக்கு தள்ள விரும்பவில்லை. தானே தன் கைகொடுத்து அவன் மேலேறிவர இறைவன் அவருக்குத் துணை புரியத் துடிக்கின்றான். அதற்காக அவனுடைய உள்ளத்தையும், உடலையும் புனிதமாக்கிடபல வாய்ப்புக்களை இறைவன் மனிதனுக்கு அளித்து வருகின்றான். அதற்காகத்தான் மனிதனை தனக்கு வெகுப்பிடித்தமானவன். பிரியமானவன் என்று வெளிப்படையாக பறைசாற்றுகின்றான். தன்னை அடைய முடியும் என்று மனிதனுக்கு அவ் இறைவனே தன் வாக்கினால் உறுதி அளிக்கின்றான். சத்திய தேவனே தன்னிலை இறங்கிவந்து சத்தியம் செய்கின்றான். இதுவே அவருடைய கருணையின் எண்ணம் எல்லை என்று துணியலாம்.)

ஸர்வதர்மான் பரித்யஜ்ய
மாமேகம் சரணம் வ்ரஜ ।
அஹம் த்வா ஸர்வபாபேப்யோ
மோக்ஷயிஷ்யாமி மாசுச: ॥ (66)

''எல்லா தர்மங்களையும் ஒதுக்கிவிட்டு, என்னிடமே உன்னை முழுமையாக ஒப்படைத்துவிடு. எல்லா பாவங் களிலிருந்தும் உன்னைக் காப்பாற்றுவேன். நீ துன்பம் கொள்ள வேண்டாம்''

(ஒரு தாயின் மடியில் ஒரு தந்தையின் தோளில் தூங்கிடும் குழந்தைக்கு எவ்வாறு எல்லா வகையிலும் பாதுகாப்பும், வசதியும் ஏற்படுகின்றதோ, அதே போன்று இறைவனிடம் தன்னை முழுமையாக- அவனே கதி என்று சரணாகதி செய்திடும் பக்தன், வேதங்களில் இதிஹாசங்களில் ஏன் பகவத் கீதையில் உபதேசிக்கப்பட்ட தர்மங்களையும் பின்பற்ற வேண்டி

யதில்லை. அவற்றைப் பொருட்படுத்தவும் தேவையில்லை. ஏன் என்றால் பக்தன் இச்சரணாகதி மூலம் இறைவனிடம் தன்னை ஒப்படைத்திடும்போது, உள்ளத்தாலும், உடலாலும் அவன் மாசடையும் நிலையில் இருப்பதில்லை. ஆசை, காமம், பொறாமை, தன்னலம் எனும் உணர்வுகள் அழிந்த நிலையிலேயேதான் அவன் சரணடையும் பக்குவ நிலையை அடைகின்றான். இதனை 'பக்தி' எனும் உணர்வால் மட்டுமே அடையமுடியும். அதுபோது இறைவன் ஒரு தாய் - ஒரு தந்தை நிலையில் நின்று நம்மை நம்மிடம் தீய உணர்வுகள் நெருங்காவண்ணம் நம்மைச் சுற்றி ஒரு ஆன்மீக பாதுகாப்பு வேலிபோட்டு விடுகின்றான். நாம் கடலில் கலந்த, ஆற்று நீரினைப் போன்று, இந்த ஆன்மீகவெள்ளத்தில் மூழ்கி விடுகிறோம். பிறகு உலகாயுத ஆசைகள் எனும் முதலையின் வாயில் அகப்பட்டுக் கொள்ளும் ஆன்மா நமக்கு இருப்பதில்லை இதனால் உடலும் உள்ளமும் துன்பங்களுக்குள்ளாவதில்லை)

இதம் தே நாதபங்காய
நாபக்தாய கதாசன ।
ந சாசுச்ருஷவே வாச்யம் ந ச
மாம்யோ அப்யஸூயதி ॥ (67)

''என்னுடைய இந்த அறி(ற)வுரையினை தவமில்லாவதவனுக்கும் பக்தி உணர்வு இல்லாவதவனுக்கும், தொண்டு மனப்பான்மை அற்றவனுக்கும், என்னை இகழ்பவனுக்கும் சொல்லாதே''.

(மிதிவண்டியை மட்டுமே ஓட்டத்தெரிந்தவன் மோட்டார் வண்டியை ஓட்டமுடியாது மோட்டார் வண்டியை மட்டுமே ஓட்டத்தெரிந்தவன் விமானத்தை ஓட்டமுடியாது. இது சாதாரணமாக எல்லோருக்கும் தெரிந்த உண்மை. ஆகவே ஒன்றினைக் கற்றுக் கொள்ளவேண்டுமென்றால், அவன் அதற்கான தகுதியை வளர்த்துகொள்ள வேண்டும். இதில் அவனுடைய அறிவு, ஊக்கம், முயற்சி அடங்கியுள்ளது இவை இல்லாதவன் ஒரு கிணற்றுத் தவளையாகவே இருந்திடுவான். அதேபோன்று கற்றுத்தரப்படும் பொருளின் பெருமையை, சிறப்பை, பயனை கற்பவன் அறிந்துகொள்ள வேண்டும்.

*அறிவதில் நாட்டம் செலுத்துதல் வேண்டும். இல்லையெனின் குருடன் முன் யானை போன்று விளங்காது, குருடன் முன் வண்ணச்சித்திரம் போன்று ஒன்றும் புரியாது குழம்பித்த விப்பான். அவன் முன்னே யானையைப் பற்றியோ, சித்திரத்தைப் பற்றியோ புகழ்ந்து கூறினாலும் அதனால் பயன் ஒன்றும் இல்லை. கடவுள் இல்லை என்று வாதிடும் நாத்திகர்கள் முன் இறைவனின் கருணைத் திறத்தினையோ சமயத்தின் பெருமையையோ எவ்வளவு கூறிட்டாலும் அவையாவும் கூடையில் இட்ட நீர் தங்காதது போன்று, அவன் மனதில் பதியாது. ஒருவனின் மனம் பக்குவ நிலைபெற வேண்டு மென்றால் அவன் வாழ்க்கை ஒரு தவமாக அமைய வேண்டும். அதாவது உயர்ந்த குறிக்கோளுடன் நல்ல பழக்க வழங்கங்களை கொண்டதாக மிளிர வேண்டும். அதுபோதுதான் பக்தி எனும் உணர்வு அவனுள் மலரும். இப்பக்தி முதலில் அன்பு எனும் உணர்வின் மீதே பிறக்கின்றது. அடுத்த மனிதனிடம், மாறுன கொள்கை கொண்டவனிடம் காட்டாத அன்பு, எந்த வகையிலும் ஒருவனை உயர்த்தாது. பக்தி பெருகிடும்போது, அவன் ஒரு தொண்டனாக மாறிவிடுகின்றான். சமுதாயத்திற்கும், சமயத் திற்கு ஓயாது சேவை புரிந்திடும் ஒரு ஜீவனாக வாழ்ந்து விடுகின்றான். அத்தகையோன் படைத்தவனை ஏசமாட்டான்; அவனிடம் குறை காணமாட்டான். இதுவே உண்மையான பக்தனின் இலக்கணம். இத்தகு பண்புகள் இல்லாதவனிடம் இறைவனின் கீதோபதேசங்கள் யாவும் பயனற்றவை. ஆகையால்தான் அவர்களுக்கு தன் அறிவுரை களை கூற வேண்டாம் என்று தன் பக்தனைக் கேட்டுக் கொள்கிறான் இறைவன்.)*

ய இதம் பரமம் குஹ்யம் மத்பக்
தேஷ்வபிதாஸ்யதி ।
பக்திம் மயி பராம் க்ருத்வா
மாமேவைஷ்யத் யஸம்சய: ॥ (68)

*''மிகவும் சிந்திக்கச்சொல்லப்பட்ட தத்துவமாகிய இந்த உபதேசத்தினை (கேட்டவர்கள்) மற்ற பக்தர்களுக்கும் விளக்கி,*

அதன் மூலம் என்மீது பக்தியை வளர்த்துக்கொள்பவன் எவ்வித ஐயமின்றி என்னையே வந்தடைகின்றான்''.

(ஒருவன் தனக்கென்று ஒரு மாங்கனியை வைத்துக் கொள்கிறான். அதுபோது அப் பழம் ஒன்றிற்கு மட்டுமே அவன் சொந்தக்காரனாகின்றான். அவ்வாறின்றி அப்பழத்தை அடுத்த வனுக்கு - பசித்தவனுக்கு தந்திட்டபோது பழத்தின் பயன் முழுமையடைவது மட்டுமின்றி, அப்பழத்தை உண்டவன் தந்தவனுக்கு சொந்தமாகின்றான். இச்சொந்தம் அவன் காட்டிய இரக்கம் அன்பு எனும் காரணத்தால் பிறக்கின்றது. இவ் அன்பே படிப்படியாக பலருள்ளும் பரந்து விரிந்து எல்லோரையும் இணைக்கின்றது. அவருள் சீரிய சிந்தனை உருவாகி, உன்னதமான சமுதாயம் தோன்றிட வழிபிறக்கின்றது. இவ் அன்பின் முதிர்ந்த நிலையே பக்தி எனும் உணர்வாகும். நீருணி எனும் ஊற்றிலிருந்து நீரினை இறைக்க இறைக்கத்தான் நீர் மேலும் ஊற்றெடுக்கும். ஒருவன் வெறும் எம்.ஏ,எம்பி.பி.எஸ்., பி.ஈ. என்று பட்டங்கள் வாங்கினால் மட்டுமே அனைத்தும் தெரிந்ததாகவோ, பொருள் இல்லை. அப்பட்டங்கள் யாவும் அத்துறைகளில் உண்மையாகவே தேர்ச்சிபெறுதற்கான 'அனுமதி' என்றே கொள்ளலாம். ஒரு கல்லூரி விரிவுரை யாளர்கள் பதவி ஏற்றபின்தான் அவர்கள் உண்மையிலேயே படிக்கத் துவங்குகின்றனர் என்றே கூற வேண்டும். மருத்துவர்கள் நோயாளிகளை பரிசோதனை செய்து, அவற்றிற்குரிய மருந்துகளை தேர்ந்தெடுக்கும் போதுதான் அவர்கள் மருத்து வர்களாக உருவாகுகிறார்கள். எம்.பி.பி.எஸ், பட்டம் வெறும் 'அனுமதி' மட்டுமே. அதேபோன்று தாங்கள் கற்ற அறவுரைகளை, சமய உண்மைகளை பிறர்க்கு உபதேசிக்கும் போது அவர்கள் அவ் உபதேசங்களின் வழியில் நடப்பதற்கான பயிற்சியை மேற்கொள்கின்றனர். பிறர்க்குச் சொல்லசொல்ல அவர்கள் சமய இலக்கணங்கள் கூடிய ஒரு இலக்கியமாக திகழ ஆரம்பிக்கின்றார்கள். இதனைத்தான் இறைவனும் எதிர்பார்க் கின்றான். இத்தகையோர்க்குத் தேவையான மனவலிமையும், உடல் ஆற்றலையும் தான் தருவதாக தன் பக்தர்களுக்கு இறைவன் உறுதி அளிக்கின்றான்.)

ந ச தஸ்மான்மனுஷ்யேஷு
கஸ்சின்மே ப்ரியக்ருத்தம: ।
பவிதா ந ச மே தஸ்மாதன்ய:
ப்ரியதரோ புவி ॥ (69)

''நான் அளித்த இந்த உபதேசங்களை யார் ஒருவன் கேட்டு அவற்றை பிறர்க்கும் சொல்கின்றனோ, அத்தகையோனை மனிதருள் எனக்கு மிகவும் பிடித்தமானவனாகக் கருதுவேன். இந்த உலகத்திலே அவனைவிட மிகவும் இனிமையானவன் எனக்கு வேறு எவரும் இல்லை''.

(வாழ்க்கையில் படித்து முன்னேறி சமூகத்தில் ஒரு பெரிய பொறுப்புள்ள பதவியில் அமர்ந்திடும் ஒருவன், வாய்ப்பு ஏற்படும் போதெல்லாம் தன் பள்ளி ஆசிரியன் யாரேனும் ஒருவரையாவது அவன் மனம் நினைத்துப் பார்த்திடும், அவர் பெயரையும் அவன் கூறி மகிழ்ச்சி அடைவான். அதேபோன்று அத்தகு மாணவனை அப்பள்ளி ஆசிரியரும் 'என் மாணவன் அவன்' என்று அவர் மனம் எண்ணி, ஏன் பல முறை பலரிடம் சொல்லி மகிழும் இதுவே ஆசிரியர் மாணவன் உறவு நிலையின் - கல்வியின் சிறப்பு. இந்த உறவு நிலையினை இந்த மகிழ்ச்சியினை பலர் முன் அதேமாணவன் தன் தந்தை முன் தந்தைபிள்ளை உறவு நிலையில் அனுபவித்திட முடியாது. பிறர்சொல்லி அவர்கள் மகிழ்ந்திட முடியுமே தவிர, வெளிப்படையாக உறவு முறை சொல்லி ஆனந்திக்க முடியாது. அத்தகு சிறப்புமிகு ஆசிரியர் - மாணவன் நிலையில்தான் இங்கு இக்கீதோபதேசம் வழங்கப்பட்டுள்ளது. தான் கற்பித்ததைக் கற்று கற்றபின் அதன் வழிநடந்து முன்னேறிய மாணவனைப் பார்த்து கற்பித்த ஆசிரியர் மகிழ்வது போன்று, கிருஷ்ணபகவான் தன் பக்தன் தான் உபதேசித்ததை பிறர்க்கு உபதேசித்தல் மூலம் மகிழ விரும்புகின்றார். அவனையே தனக்கு மிகவும் பிடித்தமானவன் என்று வெளிப்படையாகக் கூறி அவனை உற்சாகப்படுத்தி, தான் கூறிய வாழ்க்கை உண்மைகளை, ஆன்மீக அறவுரைகளை பலரும் கற்றுத் தேர்ந்திட அவர் விரும்புகின்றார். இதனைத்தான் இச்செய்யுள் நமக்கு அறிவுறுத்தும் செய்தியாகும்.)

அத் யேஷ்யதே ச ய இமம்
தர்ம்யம் ஸம்வாதமாவயோ: ।
ஞான யக்ஞேன தேனாஹமிஷ்ட:
ஸ்யாமிதி மே மதி: ॥ (70)

''நம்மிடையே (பகவானுக்கும்- அர்ச்சுனனுக்கும்) நடைபெற்ற இந்த தர்மம் நிறைந்த உரையாடல்களை யார் ஒருவன் நன்கு கற்றறிகின்றானோ, அவனுடைய ஞான வேள்வியினால் நான் ஆராதிக்கப் படுபவனாவேன். இதுவே என்னுடைய கொள்கையாகும்.''

(ஒரு கவிஞனின் கவிதையைமற்றவர்கள் படித்திடும்போது அக்கவிதையின் பொருள் - சொல் நயங்கள், கற்பனைத் திறன்யாவும் அக்கவிதையைச் சிறப்பிக்கின்றன. எழுதிய கவிஞனுக்கும் பெரும் பாராட்டுகிடைக்கின்றது. ஆனால் இச்சிறப்பிற்கு காரணம், கவிதைக்குரிய இலக்கணங்கள் அதில் பின்பற்றப்பட்டுள்ளதால்தான். ஆனால் இலக்கணம் தந்த அறிஞனைவிட அவ் இலக்கணத்தின் உதவியால் கவிதை தந்திட்ட கவிஞன்தான் மக்கள் முன்நிற்கின்றான். அதேபோன்று கீதை எனும் வாழ்க்கை சமயதத்துவத்தை தந்திட்டவன், அத்தத்துவத்தை நடைமுறையில் மனிதன் பின்பற்றிடவே அதன் மூலம் அவ்வாழ்க்கை நிலை உயர்ந்திடவே அவனுடைய பிறவியில் நோக்கம் நிறைவேறிடவே விரும்புகின்றான் என்பதை இச்செய்யுளிலிருந்து அறிந்து இன்புறலாம். தன் உபதேசத்தில் தன் பக்தன் நலம் பெற்றிடவே. பக்தனுக்கு முதன்மை தந்து, அத்தகு பக்தனையே தன்னை ஆராதித்திடும் பெருமை கொண்டவன் என்று கூறுகின்றான்.)

## பகவான் கூறியது:

ச்ரத்தாவானனஸூயஸ்ச
ச்ருணுயாதபி யோ நர: ।
ஸோ அபி முக்த: சுபான் லோகான்
ப்ராப்னுயாத் புண்ய கர்மணாம் ॥ (71)

''நான் கூறிய இவ்வுபதேசங்களை மிகுந்த ஆர்வத்துடன், அவமதிக்காது எந்த மனிதன் குறைந்த பட்சம் இவற்றைச்

கேட்பானாயினும் கூட, அவன் விடுதலையடைந்தவனாய், நல்ல செயல்களை மேற்கொள்வோர் பெறும் மேன்மையான உலகங்களை சென்றடைவான்''

(இங்கு பகவான் கண்ணன் ஆசிரியர் நிலையில் நின்று மனிதனுக்கு அறிவுறுத்துகின்றூர். ஒரு பொருளைப் பயன்படுத்தாது, அப்பொருளின் மதிப்பினை அறிய முடியாது. மேலும் அப்பொருளின் பயனை ஒருவன் தானே அனுபவிக்கும் போதுதான் அதன் முழுப்பயனை அவனால் மேலும் அறிந்திட முடியும். அந்த வகையிலே இறைவன் தந்திட்ட அறிவுரைகளை மனிதன் வாழ்க்கையில் மேற்கொள்ள வேண்டும். அவ்வாறு, மேற்கொள்ளாவிட்டாலும், அவ் அறிவுரைகளை இகழாது அல்லது அவற்றில் குற்றங்குறைகளை காணுது இருந்தாலே போதும். நல்லனவற்றைப் பேச வேண்டும். முடியாவிட்டால் நல்லனவற்றைக் காணவாவது வேண்டும். அதுவும் இல்லாவிட்டால் நல்லவற்றை காதால் கேட்கவாவது வேண்டும். இதனால் மனிதன்எந்த ஒரு காலக்கட்டத்திலாவது, சூழ்நிலையிலாவது தன் நிலையை எண்ணிப்பார்த்திடும் போது, ஒரு சில நல்ல உபதேசங்கள் அவனை நெறிப்படுத்திட உதவிடும். அந்த ஒரு நம்பிக்கைக் கீற்றினை மனதிற் கொண்டுதான் இறைவன், மனிதனை அவன் உயர்ந்திட, ஒரு முறையாவதுஒரு சில வினாடிகளாவது நல்லனவற்றைக் கேளுங்கள் என்று கேட்டுக்கொள்கிறூர். இங்கே படைத்தவனின் பரிதவிப்பைக் காணமுடிகிறது.)

**கச்சிதேதச் ச்ருதம் பார்த்த**
**த்வயைகாக்ரேண சேதஸா ।**
**கச்சிதக்ஞானஸம்மோ ஹ :**
**ப்ரநஷ்டஸ்தே தனஞ்ஜய ॥** *(72)*

''பார்த்தா, முழுமனதுடன் இதனை (இந்த உபதேசங்களை)நீ கேட்டாயா? தனஞ்சயனே,அறியாமை எனும் உனது மயக்கம் மறைந்ததா?

(தான் சொல்லும் பாடங்களை தன் மாணுக்கர்கள் எவ்வித ஐயமுமின்றி புரிந்துகொள்ளும்போதுதான், ஓர்ஆசிரியன் உண்மையான மகிழ்ச்சியினைப் பெறுகின்றூர். அதுவே ஒரு உண்மையான ஆசிரியரின் இலக்கணம். மாணவனின் முகத்திலிருந்தே புரிந்து கொண்டானா, குழம்பியுள்ளானா

என்பதை அறிந்துகொள்ளும் ஆசிரியனே, பதவிக்கு மதிப்பினை தந்திடும் உயர்ந்த நிலைக்கு தகுதியாகிறான். ஒரு மாணவனின் அறிவுவிரிவடைந்திடும் அளவு, அம்மாணவனின் ஆசிரியரின் மதிப்பு உயருகின்றது. ஆகவே சிறந்த மாணவனை உருவாக்குவதில் ஒரு ஆசிரியரின் பங்கும், உழைப்பும் விலைமதிக்க முடியாதன, அத்தகு ஆசிரியர் நிலையில் கண்ணனும் அர்ச்சுனனும் விளங்கி வாழ்க்கை உண்மைகளை விளக்கி நாம்சிறந்திட வழிவகுத்துள்ளனர்.)

## அர்ச்சுனன் கூறுவது:

நஷ்டோ மோஹ: ஸ்ம்பருதிர் லப்தா
த்வத்ப்ரஸாதான் மயா அச்யுத ।
ஸ்திதோ அஸ்மி கதஸந்தேஹ:
கரிஷ்யே வசனம் தவ ॥ (73)

''அச்சுதா! எனது மயக்கம் அகன்றது. உன்னுடைய திருவருளால் என்னை நான் உணர்ந்து கொண்டேன் எனது சந்தேகங்கள் விலகிவிட்டன. (இப்போது) மன உறுதியுடன் இருக்கின்றேன். நீ கூரியபடி நடந்து கொள்வேன்''.

(நீச்சல் கற்றுக் கொள்ளும் முன், ஒருவன் தன் இடுப்பு வரை மட்டுமே நீரில் இறங்குவான். அதற்கு மேலும் மூழ்க தனக்கு பக்கத்தே ஒரு பிடிப்பு இருந்தால் மட்டுமே முயற்சிப்பான். கடல் என்றால் இந்த முயற்சியைக் கூட மேற்கொள்ளமாட்டான். ஏனென்றால் கடலலைகளின் வேகம், கடலின் பரந்த விரிப்பும், கடலோசையும் அவனை பயமுறுத்திவிடுகின்றன. ஆனால் நீச்சல் தெரிந்த ஒருவனுக்கு, அதுவும் கடலருகே வசித்து நாளும் மீன் பிடிக்க நடுக்கடலுக்குச் சென்றுவரும் ஒருவனுக்கு கடல்என்பது ஒரு விளையாட்டு மைதானம். அக்கடலில் நீந்துவதில் அவனுக்கு அச்சம் இல்லை. வேறு துணையோ தேவையில்லை. அந்த நீச்சல் வீரனின் நிலையில் இருக்கும் அர்ச்சுனன் இக்கீதோபதேசத்தை தன் குருவான - நண்பனான கண்ணபெருமானிடமிருந்து கேட்டபின், அவனுள் இருந்த மனமயக்கம் அகன்றுவிட்டது. அழிவு உடலுக்கே அன்றி, ஆத்மாவுக்கு இல்லை என்ற தெளிவு பெற்றான், தான், தனது எனும் அகங்காரம் நீங்கி அவன் தலைவன், நாம் அவன் அடிமை

எனும் உணர்வு கொண்டு விளங்கலானால், உறவு, பாசம், பாவம் கொடுமை எனும் மன உணர்வுகளை அழித்து, இறைவன் ஆட்டுவிக்க நாம் ஆடுகின்றோம், நம்மால் ஒன்றும் இயலாது எனும் பேருண்மையினை அறிகின்றான். எதுவரினும், யார்வரினும் பந்தபாசத்தால் மனங்கலங்காது, உடல் தளராது செயல்பட்டு, மலைபோல் நின்று பிரச்சனைகளை எதிர்கொள்ளும் உடல் மற்றும் உள்ள உறுதியினை அர்ச்சுனன் பெறுகின்றான். இறைவனே கதி என்னும் உண்மையினை அறிந்து, அவனை சரணமடைவதே, முக்திக்கு வழி எனும் மனத்திடபத்தினைப் பெறுகின்றான். இறுதியாக இறைவனே தன்னுள் வீற்றிருக்கின்றான் அங்கிருந்து நமக்கு அவன் ஆணையிட நாம் செயல்பட துணிகின்றோம் என்ற பேருண்மையினை அனுபவிக்கின்றான். இது இறைவனைப் பற்றிய பேரறிவினை அவன் பெற்றதற்கான அரிகுறி. இதனைத்தான் அர்ச்சுனன் முகத்தான் இறைவன் நமக்கு அறிவுறுத்துகின்றான்.)

## சஞ்சயன் கூறியது:

இத் யஹம் வாஸுதேவஸ்ய
பார்த்தஸ்ய ச மஹாத்மன: ।
ஸம்வாத மிமமச்ரௌஷமத்புதம்
ரோமஹர்ஷணம் ॥ (74)

''இவ்வாறு வாசுதேவனுக்கும் (பகவானுக்கும்) மகாத்மாவான அர்ச்சுனனுக்கும் இடையே நடைபெற்ற மெய்ச்சிலிர்க்கும்படியான அருமையான உரையாடலை நான் கேட்டேன்''

(சொன்னவன் இறைவன். கேட்டவன் அர்ச்சுனன். கேட்கப்பட்டதோ வேதங்களின் சாரமான கீதோபதேசம். இம்மூன்றும் ஒருங்கே நிகழ்ந்ததை தன் கண்ணால் கண்டதால் அதனை சஞ்சயன் தன் பிறவியின் பேறாகக் கொண்டான். அப்பேற்றின் சிறப்பினை பார்த்ததன் விளைவாக அவன் மெய்ச்சிலிர்த்தது. மெய்ச்சிலிர்த்தல் அல்லது மயிர்க்கூச்சு

என்பது உளவியல் அடிப்படையிலான உணர்வாகும். அச்சமோ, ஆபத்தோ எதிர்பாராமல் நடந்தால் உடல் நடுங்கும். இதயம் படபடக்கும். இங்கு வாழ்வின் இரகசியத்தை, இறைவனை அடையும் வழியை பகவானே கூறக் கேட்டதால் சஞ்சயனின் உடம்பு சிலிர்த்தது. எனவே நல்லனவற்றைக் கேட்கும் போது பிரச்சனைகளால் தவித்திடும் நமக்கு உதவிடும் வழிவகை தெரியும் போது நம் உடம்பு சிலிர்த்திடும் மயிர்க்கூச்சு ஏற்படும். சஞ்சயன் கூறக் கேட்ட திருதராஷ்ட்ரனுக்கோ இதுபோன்ற உணர்வுத்தாக்கம் ஏற்படவில்லை என்றே கருத வேண்டும். அதனால் அவன் தன் குலத்திற்கு அழிவினையே வரவழைத்துக் கொண்டான்.)

வ்யாஸப்ரஸாதாச் ச்ருதவானே
தத்குஹ்யமஹம் பரம் ।
யோகம் யோகேச்வராத் க்ருஷ்ணத்
ஸாக்ஷாத்கதயத: ஸ்வயம் ॥ (75)

''வியாசரின் அருளால், மேலான இந்த ஆழ்ந்த (கீதோபதேசம் எனும்) யோகத்தை தன் திருவாக்காலேயே யோகேஸ்வரனான கிருஷ்ணபகவான் கூற, நான் அதனை நேரிடையாகக் கேட்கப்பெற்றேன்.''

(தான் கண்ட கண்ணனின் திருவுருவத்தையும், விஸ்வரூப தரிசனத்தையும் எண்ணி எண்ணி அத்தகு வாய்ப்பினைத் தந்திட்ட வியாசரின் கருணைத் திறத்தினையும் சஞ்சயன் சொல்லி, சொல்லி இன்புறுகின்றான். தான் பெற்ற பெரும் பேறுக எண்ணி எண்ணி இன்புறுகின்றான். இதனால் நம் உள்ளத்திலும் இவ்வுபதேசத்தின் மேன்மையை, ஆற்றலை உணர்த்திட சஞ்சயன் முயற்சிக்கின்றான்)

ராஜன் ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய
ஸம்வாதமிமமத்புதம் ।
கேசவார்ஜுன யோ: புண்யம்
ஹ்ருஷ்யாமி சமுஹுர்முஹு: ॥ (76)

''அரசனே! (திருதராஷ்டரன்) கேசவனுக்கும் அர்ச்சுனனுக்கும் நடுவே நிகழ்ந்த தர்மம் நிறைந்த இந்த உபதேச

*உரையாடலைக் கண்டு, கேட்ட நான் அதனை எண்ணி எண்ணி மீண்டும் மீண்டும் மகிழ்ச்சி கொள்கின்றேன்''.*

*(வாழ்க்கையில் எதிர்பாராத ஒரு லாபத்தை, பொருளை அடைந்தவன் நிலையில் இங்கு சஞ்சயன் திகழ்வதை இச்செய்யுள் மீண்டும் தெரிவிக்கின்றது.)*

தச்ச ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய
ரூபமத்யத்புதம் ஹரே : ।
விஸ்மயோ மே மஹான் ராஜன்
ஹ்ருஷ்யாமி ச புன: புன: ॥ (77)

*''அரசனே! ஹரியின் (கண்ணனின்) இந்த அற்புதமான வடிவத்தை நினைந்து நினைந்து இன்னும் எனக்குப் பெரும்வியப்பு ஏர்படுகின்றது. இதனால் எனக்கு மேலும் மேலும் மகிழ்ச்சி ஏற்படுகின்றது.)*

*(திருமலைக்கு நாளும் ஆயிரக்கணக்கான பக்தர்கள் வருகை புரிகின்றனர். சன்னதிக்குள் சென்றதும் ஒருசில வினாடிகளே மூலவரின் முன் நிற்கும் வாய்ப்பு ஏற்படுகின்றது. ஆனால் இச்சூழ்நிலையில் இறைவன் முன் ஐந்து நிமிடங்கள் நின்றிட ஒரு பக்தர்க்கு வாய்ப்பு ஏற்படின், அவருடைய அனுபவம் எப்படி இருக்கும். தான் பெற்ற இந்த அனுபவத்தை கண்ணில் படுகிறவர் எல்லோரிடமும் தன் இறுதிநாள்வரை, சொல்லி சொல்லி மகிழ்வார். தன் வாழ்நாளில் கிடைத்தரியா தன் வாழ்நாளில்கிடைத்தரியா பெரும் புண்ணியமாக எண்ணி எண்ணி மகிழ்வர். இந்நிலையில் அந்த இறைவனே தன் முன் நடந்து, தன் திருவாக்கினால் அருள்மொழிவழங்கிடும் போது சஞ்சயனின் உளப்பாங்கு எவ்வாறு இருக்கும். அதனை ஒருவன் சொல்ல மற்றவர் அனுபவிக்க முடியாது. அந்த உயர்ந்த நிலையில் அரிய வாய்ப்பு பெற்ற நிலையில் சஞ்சயன் திகழ்வதை இச்செய்யுளில் கண்டறியலாம்.)*

யத்ர யோகேச்வர: க்ருஷ்ணோ
யத்ர பார்த்தோ தனுர்தர: ।

தத்ர ஸ்ரீர்விஜயோ பூதிர்த்ருவா

நீதிர் மதிர்மம ॥ (78)

''யோகேஸ்வரனான கிருஷ்ணனும், வில்லினைக் கையிலேந்திய பார்த்தனும் (அர்ச்சுனனும்) எங்கெல்லாம் இருக்கின்றூர்களோ, அங்கெல்லாம் திருவும், பெற்றியும், மேன்மையும் நிலைத்து நிற்கும்: நீதியும் விளங்கிடும் என்பது என்னுடைய (சஞ்சயனுடைய) உறுதியான கருத்தாகும்''

(சஞ்சயன் மூலமாக நமக்கு வாழ்கையின் உண்மை, நமது கடமை இச்செய்யுளில் நன்கு தெரிவிக்கப்பட்டுள்ளன. வாழ்க்கையின் உறுதிப்பொருள்களான அறம், பொருள், இன்பம், வீடு ஆகியனவற்றின் அருமை, பெருமை இக்கீதையில் கண்ணனால் விளக்கப்பட்டுள்ளன. மனிதன் தன் வாழ்க்கையில் பிரச்சனைகளை எதிர்கொள்ளும் போதெல்லாம், அவன் தன் நம்பிக்கையினையும், இறை நம்பிக்கையினையும் விட்டுவிடலாகாது என்பதையும் மனிதனின் சீரிய சிந்தனை மூலம் தீவிர முயற்சிகள் மூலம் இன்னல்களை கடந்து இன்பத்தை காணலாம் என்பதையும் இச் செய்யுள் நமக்கு எடுத்துக் காட்டுகிறது. எல்லாவற்றிற்குமேலாக இறையருள் மட்டுமே மனிதனை உயர்த்தாது. உடன் மனிதனின் நேர்மையான முயர்ச்சியும் தேவை. அப்போதுதான் மனிதன் நினைத்திடும் நற்காரியங்கள் வெற்றியில் முடியும். கண்ணனின் கீதோபதேசத்தை கேட்டபின் அர்ச்சுனன், அன்று நழுவவிட்ட வில்லினை மீண்டும் கையிலேந்தி, நம்பிக்கையுடன், ஈடுபாட்டுடன், நல்முயற்சியுடன் போரில் ஈடுபட்டுவெற்றி கண்டான். ஆனால் அதே கீதோபதேசத்தைக் கேட்ட திருதாஷ்ட்ரன் தன் தவறை திருத்திக் கொள்ளவில்லை. தன் பிள்ளைகளைத் தடுத்து அவர்களை போரில் ஈடுபடாவண்ணம் எவ்விதமான முயற்சியும் எடுக்கவில்லை. ஒரு தந்தை நிலையில், ஒரு அரசன் நிலையில் வைத்து தன்னை நோக்காமல், கடமை மறந்து கர்மத்திற்கு எதிரான போரினை எதிர் கொண்டான். அழிவே அதன் பயனாயிற்று. ஆகவே இத்தகு அறிவுரைப்பெட்டகமாக திகழ்ந்திடும், வாழ்க்கை உண்

*மைகளைக் கூறிடும் தத்துவப் புதையலாக விளங்கிடும். இக்கீதோபதேசம் நமக்கு கிடைத்திட வழிவகுத்த அக்கண்ண பெருமானும் அர்ச்சுனனும் இருக்கும் இடமெல்லாம் நமக்கு பொருளும், உலகாயுத ஆன்மீக வாழ்க்கைக்கு உதவிடும் வெற்றியும் செல்வாக்கும் நிலைத்த நீதியும் என்றென்றும் கிடைத்திடும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. இதனையே சஞ்யன் நமக்கு அறிவுறுத்தும் செய்தியாகும்.)*

**இதி ஸ்ரீ மஹாபாரதே சதஸா-**
**ஹஸ்ர்யாம் ஸம்ஹிதாயாம் ।**
**வையாஸிக்யாம் பீஷ்மபர்வணி**
**ஸ்ரீமத் பகவத் கீதா**
**ஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்**
**யோக சாஸ்திரே**
**ஸ்ரீ க்ருஷ்ணார்ஜுன ஸம்வாதே**
**மோக்ஷஸன்யாஸ யோகோ**
**நாம அஷ்டாதசோ அத்யாய: ॥**

*''வியாசர் இயற்றிய ஒரு லட்சம் செய்யுட்களைக்கொண்ட மகாபாரதத்தின்கண் பீஷ்மபர்வத்தில் பிரம்ம ஞானத்தை கூறுவதும், யோக சாத்திரமாக விளங்குவதும் கிருஷ்ணனுக்கும், அர்ச்சுனனுக்கும் இடையே நடைபெற்ற உரையாடலுமாகத் திகழ்ந்திடும் பகவத் கீதை எனும் உபநிடதத்தின் 18 ஆம் அத்தியாயமாக இந்த மோக்ஷ ஸந்யாச யோகம் உள்ளது''.*

*(பதினெட்டாம் அத்தியாயம் முற்றும்)*